# கழுகு தரை இறங்கிவிட்டது

THE EAGLE HAS LANDED

THE CLASSIC WORLD WAR THRILLER

இரண்டாம் உலகப் போரில்
நடந்த அதிரடி திருப்பங்கள்

ஜாக் ஹிக்கின்ஸ்

கண்ணதாசன் பதிப்பகம்



# கழுகு தரையிறங்கி விட்டது

ஜாக் ஹிக்கின்ஸ்

தமிழில்:

கொரட்டூர் கே.என்.ஸ்ரீனிவாஸ்

கண்ணதாசன் பதிப்பகம்

23, கண்ணதாசன் சாலை,
தியாகராய நகர்,
சென்னை-600017.
தொலைபேசி: 24332682
மதுரை ❖ கோவை ❖ பாண்டி ❖ வேலூர்

முதற் பதிப்பு: ஜனவரி,2012

E-mail: kannadhasanpathippagam@gmail.com
Our Web Site: www.kannadhasanpathippagam.com



**Published in Arrangement with Edvictor, London.,U.K.**

பதிப்பாசிரியர்: காந்தி கண்ணதாசன்

**Price ₹: 200/-**

**KAZHUGU THARAI INRANGI VITTATHU** - *Tamil*
*A Novel of adventure in the World War II*
*Later made as an English Film Titled as*
***"The Eagle Has Landed"***

- Written By : **JACK HIGGINS**
- Translated By : **Dr. KORATTUR K.N.SRINIVAS**
- First Edition : January, 2012
- Publishing Editor : **Gandhi Kannadhasan**
- Published By : **Kannadhasan Pathippagam**
  23, Kannadhasan Salai.
  Thiyagaraya Nagar, Chennai - 600 017.
  Ph: 044-24332682 / 8712

ISBN: 978-81-8402-670-2

- Our Branches :
  - No: 1212, Range Gowder Street, **Coimbatore** - 641001 ☎: 0422 - 2479774
  - 1, Annai Complex, III Street, Vasantha Nagar, **Madurai**-625 003. ☎: 0452 - 2373793
  - 37, Bharathy Street, **Puducherry** - 605 001. ☎: 0413 - 2221241
  - No: 32&33, Old Bus Stand, New Shopping Complex, **Vellore** - 632004. ☎: 0416 - 2223312
- Our Bankers : State Bank of India, T.Nagar, Chennai-17.

Laser : **Sivaa Graphics**, Chennai-94. 📱: 8939475707
Printed by : **ABI Offset**, Chennai-2. Cell: 9941290590

# முன்னுரை

**நவம்பர் 6, 1943, சனிக்கிழமை.**

சரியாய் பகல் ஒரு மணிக்கு, மாநகரக் காவல்துறையின் தலைவருக்கு ஒரு சிம்பிள் தகவல் வந்து சேர்ந்தது. ''கழுகு, தரையிறங்கியது.''

'விரோதி நாடுகளுக்குள் பாராசூட் கொண்டு இறங்கி சண்டை செய்ய பழக்கப்படுத்தப்பட்ட ஒரு ஜெர்மானிய கூட்டம், இங்கிலாந்து நாட்டுக்குள் பத்திரமாக தரையிறங்கி விட்டது' என்பதே இதற்கு அர்த்தம்.

இது, கடற்கரையோரமாய் வார இறுதி நாட்களை அமைதியாய் கழித்துக் கொண்டிருக்கும் பிரிட்டன் பிரதமர் **வின்ஸ்டன் சர்ச்சில்லை** கடத்திக் கொண்டு போக பயிற்சி அளிக்கப்பட்ட கூட்டமாகும்.

ஆச்சரியமிக்க இக்களத்தினை சுற்றி நிகழ்ந்த சம்பவங்களை மீண்டுமொருமுறை உருவாக்கும் முயற்சியே இப்புத்தகம்.

இதிலுள்ள காட்சிகளில் குறைந்தபட்சம் ஐம்பது சதவிகிதம், வரலாற்று நிகழ்வுகளேயாம்.

மீதமுள்ளவற்றில் எத்தனை காட்சிகள் ஊகம் அல்லது கற்பனை என்பதை நேயர்களாகிய நீங்களே ஊகித்துக் கொள்வீர்களாக.........

## மொழிபெயர்ப்பாசிரியரின் நூல் அறிமுகம்

*வரலாற்று நிகழ்வொன்றினை அப்படியே எடுத்துக் கொண்டு, அது நிஜத்தில் எப்படி நடந்ததோ அப்படி யில்லாமல், வேறுமாதிரி நிகழ்ந்திருந்தால் எப்படியிருந் திருக்கும் என்று கற்பனை செய்து, புதுக்கதை ஒன்றினை படைப்பது, எழுத்தாளர்களுக்கு என்றுமே இருக்கும் ஒரு தாகம்.*

*இவர்கள் புதிதாய் படைக்கும் வரலாற்று (கற்பனை) நிகழ்வு, ஒருவேளை அமோக வரவேற்பினை பெற்று விட்டால், இயற்கைக்கு நிகரான ஒரு படைப்பாளியாய் தன்னைத்தானே கருதும் ஒரு திருப்தி எழுத்தாளருக்கு வாய்க்கின்றது இல்லையா!*

*இதனை எதிர்பார்த்துத்தான், வரலாற்றினை அப்படியே சற்று மாற்றிப்போட்டு கதை பண்ணுவது காலகாலமாய் நடைபெறுகின்றது.*

*ஆனால், இதில் வெற்றியடைய அந்த சம்பந்தப்பட்ட வரலாறும் நன்கு தெரிந்திருக்க வேண்டும். புதிதாய் படைக்கும் கதையும் வரலாற்றுக்கு முரணாய் போய் விடாமல் அமைய வேண்டும்.*

*எழுதுவதிலும் கற்பனை பண்ணுவதிலும் அசாத்திய திறமையிருந்தால்தான் இதுசாத்தியம்.*

*ஜாக் ஹக்கின்ஸுக்கு மேற்சொன்ன இரு தகுதிகளும் மண்டிக்கிடக்கின்றன.*

*வின்ஸ்டன் சர்ச்சிலின் கடைசி நிமிடங்களை மட்டும் அழகாய் உருவிக்கொண்டு, அதன் முன்பகுதியில் நல்ல மாற்றங்கள் கொண்டு வந்து, தரமானதொரு த்ரில்லர் கதையை படைத்து விட்டார் அவர்.*

*முதல் பக்கம் முதல் இறுதி பக்கங்கள் வரை கூடிக் கொண்டே போகும் அடுக்கடுக்கான காட்சிகளும், அந்த ஒவ்வொரு காட்சியிலும் மடிந்து மடிந்து வரும் திருப்ப முடிச்சுகளும்,* amazing!

*உலக அளவில் புத்தகப் பிரியர்களால் விமர்சனங்களுக்கு ஆளாகாமல் வெற்றி பெற்றுள்ள* Eagle Has Landed *எனும் ஆங்கில மூலம், இதோ நேயர்களே என் மொழிபெயர்ப்பில் தரையிறங்குகின்றது. உங்கள் கைகளில்.*

*அள்ளஅள்ளக் குறையாத த்ரில்லருக்குள் நுழைவோமா...!*

**அன்புடன்,**

**முனைவர் கே என் ஸ்ரீனிவாஸ்,**Ph.D., **மனை எண்: 252, இரண்டாவது தெரு, கொரட்டூர், சென்னை -600080. மின்னஞ்சல்:** srinivaskns@yahoo.co.in

# 1

நான் பக்கவாட்டு கேட்டினைத் திறந்துகொண்டு கல்லறைக்குள் நுழையும்போது, அங்கு ஒரு மூலையில் யாரோ ஒருத்தன் குழியொன்றைத் தோண்டிக் கொண்டிருந்தான். இதற்குப் பிறகு நிகழ்ந்த அத்தனை சம்பவங்களையும் இக்காட்சி துல்லியமாய் அந்தந்த இடங்களில் பொருத்தித் தந்ததால், இதை நான் சரியாய் ஞாபகத்தில் வைத்துள்ளேன்.

அதிகரிக்க ஆரம்பித்திருந்த மழையைத் தவிர்க்க காலரையொட்டியிருந்த தொப்பியை இழுத்து தலையைப் போர்த்திக் கொண்டேன். அங்கிருந்த கல்லறைகளைக் கடந்து, வழிபண்ணியபடி நான் முன்னேறியபோது தேவாலயத்தின் மேற்கு மூலையிலிருந்த மரக் கூட்டத்திலிருந்து, ஒன்றுக்கொன்று கோபமாய் கத்தியபடி ஆறேழு அண்டங்காக்கைகள் கறுப்பு மூட்டைகளெனச் சிறகடித்து எழுந்தன.

மூலையில் குழிக்குள் இருந்தது யாரோ தெரியாது... ஆனால் அவன் தனக்குத்தானே தணிந்த குரலில் பேசிக் கொண்டிருந்தான். அப்படி அவன் என்ன பேசிக் கொண்டிருந்தான் என்பதை யூகிப்பது இயலாததாய் இருந்தது. சிறு குன்றாய் குவிந்திருந்த புதுமண்ணின்மீது மற்றுமொரு கொத்து மண் வந்து விழ... அதனருகில் நான் போய் நின்றேன். உள்ளே எட்டிப் பார்த்தேன்.

சொன்னேன்: ''இன்னிக்குனு பார்த்து காலைலேயே இப்படி சமாளிக்க முடியாம இருக்கு.''

உள்ளேயிருந்தவன், நீளமான மண்வெட்டியுடன் நிமிர்ந்து பார்த்தான். கசங்கிய துணியாலான தொப்பி போட்டிருந்த முதியவன். துணியெல்லாம் களிமண்ணின் ஈஷல். அவனது இரு தோள்களையும் இணைத்தபடி ஒரு சாக்கு மூட்டை பின்புறத்தில் தொங்கிக் கொண்டிருந்தது. கன்னக்குழிகள் தொய்ந்தும் ஒட்டையுமாயிருந்தன. முகம் முழுக்க நரைத்த முடிகள். மழையால் ஈரமாகியிருந்த அவனுடைய கண்களில், விளங்கிக் கொள்ள இயலாத வெற்றிடம்.

எனவே நான் மீண்டும் விளக்கினேன்: ''மழையை சொன்னேன்.''

இப்போது, ஏதோ புரிந்தது போல ஆயின அவனது கண்கள். கம்மிக்கொண்டு வந்த மேகங்களைப் பார்த்தான் அவன். முகவாயைச் சுரண்டினான். ''இன்னும் மோசமாவதற்குள்ளே முடிச்சுடணும்.''

''இதுல தோண்டுவது உனக்கு கஷ்டமாயிருக்கும்'' என்றேன் நான், அடியிலிருந்து, கிட்டத்தட்ட ஐந்து அங்குல உயரத்துக்கு தண்ணீர் ஊறி விட்டிருந்ததை சுட்டிக் காட்டியபடி.

கையிலிருந்த மண்வெட்டியால் பள்ளத்தின் எதிர்மூலையில் ஒரு வெட்டு வெட்டினான். பூமி வகுந்தது. பீறிட்டது. ''ப்ச்... முடியாது போல தோணுது. இந்த சின்ன கல்லறை காம்பவுண்டுக்குள்ளே மனிதர்களைக் கொண்டு வந்து கொட்டியாச்சு. இடமில்ல.''

பற்களற்ற ஈறுகளை வெளிப்படுத்தி அவன் சிரித்தான். பிறகு குனிந்தான். தோண்டுவதில் மும்முரமானான்.

*நான் கேட்டேன்: "இது கத்தோலிக்க சர்ச் தானே? சரியா?"*

*"ரோமன் கத்தோலிக்."*

*"அப்படின்னா நீ எனக்கு உதவ முடியும். நான் இந்த சர்ச்சுக்குள்ளே ஒரு கல்லறையைத் தேடிக்கிட்டு வந்திருக்கேன். இல்ல, ஒரு நினைவிடம்னுகூட சொல்லிடலாம். கேஸ்கோய்ன் - சார்ல்ஸ் கேஸ்கோய்ன். ஒரு கப்பல் தளபதி."*

*"இப்படியொரு பேரைக் கேட்டதே கிடையாது" என்றான் அவன். "நான் இங்கே சர்ச் வேலையாளா நாற்பத்தோரு வருஷமா இருக்கேன். எப்ப அவனை புதைச்சாங்க?"*

*"1685ஆம் வருஷத்தை ஒட்டி."*

*அவனுடைய 'முகபாவம்' மாறவில்லை. அவன் சாந்தமாகவே பேசினான்: "ஆஹ், அப்படினா அது என் காலத்துக்கு முன்னாடி இருக்கணும். ஃபாதர் வெரேக்கர் - இவருக்கு இதைபத்தி ஏதாவது தெரிஞ்சிருக்கும்."*

*"அவர் உள்ளே இருப்பாரா?"*

*"அங்கே இருக்கணும். இல்லேன்னா மாதா கோயில் ஆபிஸ்ல. அதோ, அங்கே மரக்கூட்டத்துக்குப் பக்கத்துல சுவர் இருக்கு இல்ல... அந்த சுவத்துக்குப் பின்னாடி வரும்."*

*அந்தக் கணத்தில், ஏதோவொரு காரணத்துக்காக, மரங்களுக்கு மத்தியில் பதுங்கியிருந்த காகக்கூட்டம், எங்கள் தலைக்கு மேலே கோரமாய் அலறியது. மழைத்துளிகளுக்கிடையே தாவிப்பறந்து காதுகிழியும்படி கரைந்தன. முதியவன் நிமிர்ந்து மரக்கிளைகளைப் பார்த்தான். அவனது எலும்புவிரலை மேல்திசை நோக்கி ஆட்டினான். பிறகு அவன் விளங்கிக்கொள்ள முடியாத ஒன்றை சொன்னான்: "எப்பப்பாரு சத்தம்போட்டு*

கழுத்தறுக்குதுங்க'' என்றான். ''லெனின்-க்ராட்'க்கே திரும்பித் தொலைய வேண்டியதுதானே...''

நான் திரும்பி நடந்து போயிருக்க வேண்டும்... ஆனால் நின்றேன். விசாரித்தேன்: ''லெனின்-க்ராட்?'' என எனக்கு நானே சொல்லிக் கொண்டேன். ''இதை எதுக்கு சொன்னே?''

''இந்தக் கூட்டம் அங்கிருந்துதான் வருது. லெனின்-க்ராட்'லேயே சுத்திக்கிட்டிருக்கும். அக்டோபர் ஆனா இங்கே வந்துடும். குளிர்க்காலத்துல லெனின்-க்ராட் குளிரை இதுங்களாலே தாங்க முடியாது.''

''அப்படியா? என்றேன் நான்.

இப்போது அவனிடம் கவனிக்கத்தக்க மாற்றம் உண்டானது. காதுக்குப் பின்னாலிருந்து பாதி எரிந்த சிகரெட்டை எடுத்து வாயில் வைத்து ஏற்றினான். ''ரத்தத்தை உறைய வைக்கும் குளிர் இருக்கும் அங்கே. போர்க் காலத்துல நிறைய ஜெர்மானியர்கள் லெனின்-க்ராட்ல செத்தாங்க. சுட்டோ அல்லது வேற வகையிலோ இல்ல. ஜஸ்ட், குளிர்ல உறைஞ்சே.''

இப்போது நான் ரொம்பவும் ஆச்சரியத்திலிருந்தேன். ''இதெல்லாம் யார் உனக்கு சொன்னது?'' என்றேன்.

''பறவைங்களைப் பற்றியா?'' என்றான் அவன். பிறகு சட்டென்று அவன் முழுக்கவும் மாறிப்போனான். அவனது முகம், மறைக்கப்பட்ட ஒருவகை வஞ்சகத்தன்மையால் நிரம்பியது. ''ம், வெர்னர் சொன்னான். அவனுக்கு பறவைங்களைப் பற்றி நல்லாவே தெரியும்.''

''அது யார் வெர்னர்?''

''வெர்னர்?'' - கேட்டவனின் கண்கள் பலமுறை படபடத்தன. அவற்றில் மீண்டும் வெற்றிடத்தன்மை வந்தது. இப்படியானது நிஜம்தானா அல்லது செயற்கையா

*என்பதை சுலபமாய் பிரித்தறிய முடியவில்லை. "வெர்னர். ஆங், வெர்னர்... யெஸ், அவன் ஒரு நல்லபய. எல்லாருமா சேர்ந்து அவனுக்குப் போய் அப்படி செஞ்சிருக்கக் கூடாது."*

*தனது மண்வெட்டி நோக்கி குனிந்தான். என்னை முழுவதுமாக புறக்கணித்துவிட்டு மீண்டும் பள்ளந்தோண்ட ஆரம்பித்தான். நான் அங்கு சிலகணங்கள் கூடுதலாய் நின்றேன். ஆனாலும் அவன் எனக்கு சொல்ல மேற்கொண்டு எதுவுமில்லை என்பது வெளிப்படையாகவே தெரிந்தது. எனவே நான் அங்கிருந்த கல்லறைகளை யெல்லாம் கடந்தபடி முன்பக்க பிரதான கேட் நோக்கி நடந்தேன்.*

*அடைந்ததும், நுழைவில் சற்று தாமதித்தேன். இருள்நிற பலகையினாலான ஓர் அறிவிப்புப் பலகை தென்பட்டது. மங்கிப்போன தங்கநிற எழுத்துக்கள் அதில் இருந்தன.*

Church of Mary and All the Saints,
Studley Constable

*என்று மேலே இருந்தது. பலகையின் அடியில் ஃபாதர் **பிலிப் வெரேக்கர்,*** S.J. *என்றிருந்தது.*

*சிங்கமுகம் கொண்ட பிடி வைத்த கதவு, பழைய ஓக் மரத்தால் ஆக்கப்பட்டிருந்தது. சிங்கத்தின் வாயிலிருந்து ஒரு வளையம் தொங்கியது. கதவினை திறக்க அவ்வளையத்தை திருப்பும்போது அது கர்ணகடூரமாய் கிறீச்சிட்டது.*

*இந்நிலையால் உள்ளே இருளையும், உற்சாகமற்ற சூழலையுமே எதிர்பார்த்தேன். ஆனால் மாறாக பிரகாசமான விளக்குகளின் ஒளியில் பிரம்மாண்டமான அறை தென்பட்டது. மரத்தாலான மேற்கூரைவரை நீண்டிருந்த கனமான தூண்களில் மனித மற்றும் மிருக உருவங்கள் நயமாய் கடையப்பட்டிருந்தன. அங்கு சுவரில்*

பெரியகல்வெட்டு ஒன்றிருந்தது. இந்தக் கோயிலை இதுவரை தலைமையேற்று வழிநடத்திய பாதிரியார்களின் பெயர்கள் அதில். 1132ல் இருந்த, ரஃபே டே கர்ஸே முதல் 1943ல் பொறுப்பேற்றுக் கொண்ட வெரேக்கர் வரை அதில் இருந்தன.

இந்த அறையைத் தாண்டி இருளான ஒரு சின்ன தொழுகையிடம் இருந்தது. கன்னிமேரியின் பிம்பத்துக்கு முன்னால் வைக்கப்பட்டிருந்த மெழுகுவர்த்திகள் மினுமினுத்து ஆடியபோது அவ்வறையின் அரையிருளில் மேரிமாதா மிதப்பதைப் போலிருந்தது. இதனையும் கடந்து ஆசனங்கள் போடப்பட்டிருந்த உட்பகுதியை நான் அடைந்தேன். அது மிக அமைதியாயிருந்தது. செந்நிற விளக்கின் மங்கிய ஒளி மட்டும். பலிபீடத்துக்கு கீழே பெரியதொரு சிலுவையில் பதினைந்தாம் நூற்றாண்டில் செய்யப்பட்ட இயேசுநாதர். உயரமாய் அமைக்கப்பட்டிருந்த ஜன்னல்களில் ட்ரம் அடிக்கும் மழை.

எனக்கு பின்புறத்து கல்தரையில் பாதச்சுவடுகள் கேட்டன. வறண்ட ஆனால் ஸ்திரமான ஒரு குரல் கேட்டது: "என்னால ஏதாவது சகாயம் தேவையா?"

திரும்பினேன். நுழைவாயிலில் ஒரு பாதிரியார் நின்று கொண்டிருந்தார். உயரமான மற்றும் குண்டான மனிதர். சாயம் போயிருந்த பாதிரி அங்கி அணிந்திருந்தார். கெட்டியான நரைத்த கேசத்தை உள்மண்டை தெரியுமளவுக்கு வெட்டிவிட்டிருந்தார். கண்கள் ஆழமாய் இடுங்கியிருந்தன... இதனால் சமீபமாய் நோய்வாய்ப் பட்டிருப்பாரோ என்று தோன்றியது. இறுகிப் போயிருந்த அவருடைய கன்னத்து எலும்புகள் எனது இந்த எண்ணத்தைக் கூட்டின.

*ஆக, அது ஓர் அந்நியத்தனமான முகம். வலியைத் தன்னுடனேயே ஒரு நெருக்கமான நட்பாய் கொண்டு வாழ்ந்து வரும் முகம் அது. தற்சமயம் முன்னுக்கு அவர் நடந்து வந்தபோது, ஊன்றுகோல் ஒன்றை ஊன்றி மிகவும் முன்னால் வளைந்து நடப்பதையும் அப்போது அவருடைய இடக்காலைத் தரையோடு இழுத்துக் கொண்டு முன்னேறுவதையும் கவனித்தேன்.*

*''ஃபாதர் வெரேக்கர்?''*

*''கரெக்ட்.''*

*''சர்ச் வேலைக்காரக் கிழவனை நான் வெளியில பார்த்து பேசிக்கிட்டிருந்தேன்.''*

*''ஆஹ், யெஸ், லேக்கர் ஆர்ம்ஸ்பீ.''*

*''அதுதான் அவன் பேரா? எனக்கு நீங்க உதவிகரமா இருக்கலாம் என்பது அவன் ஆலோசனை.'' நான் என் கையை நீட்டினேன். ''என் பேர் ஹிக்கின்ஸ். ஜாக் ஹிக்கின்ஸ். நான் ஓர் எழுத்தாளர்.''*

*நீட்டிய என் கையைக் குலுக்குமுன் அவர் சற்று தயங்கினார் - அது, ஊன்றுகோலை வலக்கையிலிருந்து இடக்கைக்கு மாற்றுவதால் ஏற்பட்டது. இதுவே காரணமாயினும், அவரது இயக்கத்தில் ஒரு தனிப்பட்ட கூச்சமிருந்தது... அல்லது எனக்கு அப்படிப் பட்டது!*

*''என்ன விதமான உதவி வேணும், மிஸ்டர் ஹிக்கின்ஸ்?''*

*''ஓர் அமெரிக்க சஞ்சிகைக்கு முக்கியமானதொரு படைப்பினை நான் எழுதிக்கிட்டிருக்கேன்'' என்றேன் நான். ''வரலாறு சம்பந்தப்பட்டது. ''க்ளே'' பகுதியில் அமைந்திருக்கும் செயின்ட் மார்கரெட்டுக்கு நான் நேற்று போயிருந்தேன்.''*

*''ஒரு ரம்மியமான சர்ச்.'' சொல்லிக்கொண்டே அருகிலிருந்து ஆசனமொன்றில் அவர் அமர்ந்தார். ''தப்பா நினைக்க வேண்டாம். இப்பெல்லாம் சீக்கிரத்திலேயே நான் அசதியாயிடறேன்.''*

*''அங்கிருக்கும் கல்லறையில ஒரு சமாதியிருக்கு'' என நான் தொடர்ந்தேன். ''இது உங்களுக்கும் தெரிஞ்சிருக்கணுமே? அந்த சமாதி, ஜேம்ஸ் க்ரீவ்ஸ்...''*

*சட்டென்று என் பேச்சை கத்தரித்தார் அவர். ...இவர்தான் சர் க்ளவுட்ஸ்லே ஷாவலுக்கு துணையா நின்னு, ஜனவரி 14, 1676 அன்று, பார்பரியில இருக்கும் ட்ரைபாலி துறைமுகத்துல கப்பல்களை அப்படியே மூழ்கடிக்கக் காரணமாயிருந்தவர்.'' தனக்கு சிரிக்கவரும் என காண்பித்தார் அவர். ''இப்பகுதியில அது ஒரு முக்கியமான சேதி.''*

*''என் ஆராய்ச்சிகளின்படி, ஆரஞ்ச் ட்ரீ எனும் கப்பலின் கேப்டனா க்ரீவ்ஸ் இருந்தபோது அவர்கூட சார்ல்ஸ் கேஸ்கோய்ன் என்பவரும் இருந்திருக்கார். இவரும் பின்னாட்கள்ல கடற்படை கேப்டனா ஆகியிருக்கார். 1683ல் ஆறாத ஒரு காயத்தின் தீவிரத்தால் இவர் இறந்திருக்கார். க்ரீவ்ஸ்தான் இவரை க்ளே சர்ச் வரைக்கும் எடுத்து வந்து புதைச்சிருப்பதா கேள்வி.''*

*''அப்படியா'' என்றார் அவர் சாந்தமாய், எவ்விதமான ஈடுபாடும் காட்டாமல். ஆயினும் அவரது குரலில் பொறுமையற்ற தன்மையின் சாயல் வெளிப்படவே செய்தது.*

*''அவரைப் பற்றின தடயமே க்ளே சர்ச்ல இல்ல'' என்றேன் நான். ''ரெக்கார்ட்ஸ்ல பார்த்தேன். இல்ல? விவ்டன், க்ளேண்ட்ஃபார்ட் மற்றும் ப்ளேக்கெனி சர்ச்கள்லேயும் போய் பார்த்தேன். ம்ம்.''*

''ஆக, அவர் இங்கே இருப்பார்னு நினைச்சுக்கிட்டு வந்திருக்கீங்களா?''

''என்கிட்டேயிருந்த குறிப்புகளை நான் மறுபடியும் புரட்டினேன். சின்ன வயசுல அவர் ஒரு கத்தோலிக்கரா வளர்க்கப்பட்டிருப்பது தெரிஞ்சது. அந்த நம்பிக்கையில அவர் ஒரு கத்தோலிக்க கல்லறையில அடக்கம் பண்ணப்பட்டிருக்கலாமோனு எனக்கு தோணிச்சு. ப்ளேக்கெனி ஓட்டல்ல நான் தங்கியிருக்கேன். அங்கே ஒரு வேலையாள், ஸ்டட்லே கான்ஸ்டபிள்'ல ஒரு கத்தோலிக்க சர்ச் இருப்பதா சொன்னான். இந்த இடம் பற்றிய அறிமுகமே எனக்கு கிடையாது. அங்கேயிங்கே அல்லாடி இங்கே வருவதற்குள்ளே ரெண்டு மணிநேரத்துக்கு மேல ஆகிடுச்சு.''

''அப்படி வந்தும் பிரயோஜனம் எதுவும் இல்லேனே நினைக்கிறேன்'' என்றபடி எழுந்தார் அவர். ''இங்கே, செயிண்ட் மேரீஸ்ல நான் இருபத்தியெட்டு வருஷமா இருக்கேன். இந்த காலகட்டத்துல ஒரேயொரு தடவைகூட சார்ல்ஸ் கேஸ்கோய்ன் எனும் பெயரை யாரும் சொன்னது கிடையாது - நிச்சயமா.''

எனது கடைசி முயற்சியும் வீணாகியதையும் என் துரதிர்ஷ்டத்தையும் நான் வெளிப்படுத்தினேன். ஆயினும் விடவில்லை: ''சந்தேகத்துக்கு இடமில்லாம சொல்றீங்களா? அக்காலகட்டத்து சர்ச் ரெக்கார்ட்ஸ் என்ன சொல்லுது? புதைக்கப்பட்டவர்கள் பட்டியல்ல பெயர் இருக்கலாமே?''

''எனக்கு பரிச்சயப்படாத ஒரு ஆவணம்கூட இங்கே கிடையாதுனு சொல்லிக்க விரும்பறேன்'' என்றார் அவர், குரலில் சற்றே எரிச்சலோடு. ''ஆகவே, எதிலுமே சார்ல்ஸ் கேஸ்கோய்ன் எனும் பெயர் கிடையாதுனு அடிச்சு

சொல்வேன். ஸோ, எக்ஸ்க்யூஸ் மீ. என் மதிய உணவு தயாராகியிருக்கும்.''

அவர் மேற்கொண்டு நடந்துபோனபோது கையிலிருந்த ஊன்றுகோல் இடறிவிட, ஏறத்தாழ விழுந்து விட்டார். அவரது மணிக்கட்டினைப் பிடித்து நான் நிறுத்த, முழுதும் விழுந்து விடாமல் எப்படியோ தனது இடக்காலால் நின்றுவிட்டார். அவர் அதிர்ச்சியடையவில்லை.

''ஐ'ம் ஸாரி.''

இரண்டாவது முறையாக சிரித்தார் அவர். தனது பாதத்தை கோலால் தட்டிக்காட்டினார். ''இடையூறு இது. ஆனா இதோட நான் வாழக் கத்துக்கிட்டேன்.''

மேற்கொண்டு எந்த கமெண்ட்டும் சொல்ல முடியாத விளக்கம் இது. அவரும் எவ்வித கமெண்ட்டையும் என்னிடமிருந்து எதிர்பார்க்கவில்லை. அவரது ஊனமுற்ற பாதத்தால், உட்புறப்பகுதியை நாங்கள் மெதுவாகவே கடக்கும்படியாயிற்று. அப்போது ''குறிப்பிடும்படியான ஒரு ரம்மியமான சர்ச் இது'' என்றேன் நான்.

''ஆமாம். இதுல எங்களுக்கு ரொம்ப பெருமை.'' எனக்காக கதவினை அவர் திறந்து விட்டார். ''மன்னிக்கணும். உங்களுக்கு உதவும்படியா என்னால எதுவும் பண்ண முடியலே.''

''பரவாயில்ல'' என்றேன் நான். ''ஆங்... நான் கல்லறையை ஒரு சுற்றுசுற்றி வந்தால், அதை நீங்க மறுப்பீங்களா?''

''சீக்கிரத்துல திருப்திப்படுத்த முடியாத ஆள் போல'' என்றார். ஆனால் சொன்ன விதத்தில் எவ்வித குதர்க்கமும் இல்லை. ''நான் ஏன் மறுக்கணும்? இண்ட்ரஸ்டிங் கற்கள் சில எங்ககிட்டே இருக்கு. விட்டுடாம மேற்கு மூலையை நீங்க போய் பார்க்கணும். பதினெட்டாம் நூற்றாண்டின்

ஆரம்பக்கட்ட வேலைப்பாடு. க்ளே பகுதியில் வேலைப்பாடுகள் செய்துகொடுத்த அதே லோக்கல் மேஸன் பண்ணினது.''

இம்முறை அவர் கையை நீட்டினார். பதிலுக்கு நானும் குலுக்கியபோது, ''உங்கபேர் எனக்கு ரொம்ப பிரபலமாயிருக்குனு யோசிச்சேன். உல்ஸ்டர் பிரச்சினை எழுதினது நீங்கதானே?''

''கரெக்ட்'' என்றேன். ''உயிரெடுத்துடுச்சு.''

''போர் - எப்பவுமே உயிரெடுக்கும், மிஸ்டர் ஹிக்கின்ஸ்.'' அவர் முகம் வெளிறியது. ''மனிதன், கொடூரமாகும் இடம். குட் டே.''

அவர் கதவை மூடிக்கொள்ள நான் வெளிப்புறத்தின் முன்பகுதிக்கு வந்தேன். விளக்க முடியாத ஒரு சந்திப்பு. சிகரெட் ஒன்றைப் பற்ற வைத்துக்கொண்டு மழைக்குள் இறங்கினேன். முதிய பணியாள் சென்றிருக்க, கல்லறை பகுதி முழுக்கவும் எனக்கு மட்டும் வசமானது. கூடவே, அண்டங்காகங்கள். லெனின்-க்ராட் காகங்கள். இந்த நினைப்பு ஓர் ஆச்சரியமாய் என்னுள் வந்தாலும் வலுக்கட்டாயமாய் இதனை நான் ஓரந்தள்ளி வைத்தேன். பண்ண வேண்டிய வேலை உள்ளது. ஃபாதர் வெரேக்கருடன் பேசியதால் சார்ல்ஸ் கேஸ்கோய்னின் கல்லறையை கண்டுபிடிப்பதில் பெரிய நம்பிக்கை உண்டாகியுள்ளது என்று நான் சொல்ல வரவில்லை. ஆனால், வேறெங்கும் தேடத் தேவையில்லாத அளவுக்கு, உண்மை இங்குள்ளது.

என் பாதையை நான் முறையாய் வகுத்துக் கொண்டேன். மேற்கு மூலையில் இருந்து துவங்கிய நான், அவர் குறிப்பிட்ட கல்லறைக்கற்களைக் கவனித்தபடி நடந்தேன். நிச்சயமாய் அவை ஆர்வத்தைத்

தூண்டுவதாய்தானிருந்தன. எலும்புகள், மண்டையோடுகள், ஆக்ரோஷமாய் பறக்கும் தேவதைகள் ஆகியனவற்றை அணிகலன்களாகக் கொண்டு அவை கடைந்தெடுக்கப்பட்டு வடிவாகியிருந்தன.

அந்த முழுப்பகுதியையும் இடுக்கு விடாமல் சுற்றிவந்து முடிக்க எனக்கு ஒரு மணிநேரமும் - இருபது நிமிடங்களும் பிடித்தன. இறுதியில் நடந்தநடை முழுக்க வீண் என்று புரிந்து கொண்டேன். இக்காலத்திய ஏனைய கல்லறைகளைப் போலல்லாமல் இக்கல்லறை ஒரு முறையோடு ஆக்கப்பட்டிருந்தது. புற்கள் களையப்பட்டிருந்தன. புதர்கள் நறுக்கப்பட்டிருந்தன. மிகவும் படர்ந்து கிடந்த செடிப்பகுதிகள் மிகவும் கம்மி.

ஆக, சார்ல்ஸ் கேஸ்கோய்ன் இங்கு இல்லை. புதிதாக தோண்டப்பட்டிருந்த சவக்குழிக்குப் பக்கத்தில் நின்றபடி எனது இத்தோல்வியை நான் ஒப்புக் கொண்டிருந்தேன். முதிய காவற்காரன் மழைக்கு பயந்து அக்குழியை ஒரு தார்ப்பாயால் மூடியிருந்தான். அதன் ஒரு மூலை குழிக்குள் தொங்கியபடியிருந்தது. அதை இழுத்துச் சரிசெய்து மழைநீர் உள்ளே விழாமல் பண்ண நான் முன்னேறியபோது, அந்நியத்தனமான ஒரு விஷயத்தை கவனித்தேன்.

ஓரிரு கஜங்கள் தள்ளி. கல்லறையின் காம்பவுண்ட் சுவருக்கு மிக அருகில். அங்கிருந்த சிறு கோபுரத்துக்கு அடியில். சவக்குழிக்கு மேல் நடப்படும் ஞாபகார்த்த சிலையொன்று, பச்சைப்புல் கூட்டத்தால் அமைக்கப்பட்டிருந்தது. லோக்கல் மேஸனால் பண்ணப்பட்ட பதினெட்டாம் நூற்றாண்டின் ஆரம்பக்காலத்து வேலைப்பாடென நான் ஏற்கெனவே குறிப்பிட்டிருந்ததைப் போன்றது அது. அதில் மிக நேர்த்தியாய் கடையப்பட்டிருந்த ஒரு மண்டையோடும் இரண்டு குறுக்குஎலும்புகளும் இருந்தன. அக்கல்லறை ஜெர்மியா ஃபுல்லர் எனும் ஒரு வியாபாரிக்கும்

அவனுடைய மனைவி மற்றும் இரு வாரிசுகளுக்காகவும் ஒதுக்கப்பட்டிருந்தது. அது நோக்கி குனிந்து கொண்டிருந்தபோதே அதனடியில் மற்றொரு கல்லும் இருப்பதை நான் கவனிக்கும்படி ஆனது.

ஏதோ ஒன்றின் நுழைவுப் பகுதியில் நின்று கொண்டிருப்பதாய் நான் சட்டென உணர்ந்துவிட, எனக்குள் மளமளவென்று விறுவிறுப்பு கூடியது. ஞாபகார்த்த சிலை நோக்கிக் குனிந்து என் விரல்களை அதனிடம் கொண்டுபோக முயற்சித்தேன். அது மிகவும் கஷ்டமானதாய் அமைந்தது. ஆனால், பிறகு, திடுதிப்பென்று, அது நகர ஆரம்பித்தது.

''வா, கேஸ்கோய்ன்'' என்றேன் நான். ''எங்களுக்கு உன் அறிமுகம் கிடைக்கட்டும்.''

அந்த ஸ்லாப் ஒரு பக்கமாய் நழுவி மண் கூட்டத்தின் மேல் சாய்வாக நிறுத்தப்பட்டபோது, எல்லாமும் வெளிப்பட்டன. என்னைப் பொறுத்தமட்டில், என்னை மிகவும் திகைப்புக்குள்ளாக்கிய என் வாழ்க்கையின் காலகட்டம், இது ஒன்றுதான். அது ஒரு சிம்பிள் கல். அதன் தலையில் ஜெர்மானிய சிலுவைக் குறியீடு. அதில் ஜெர்மன் மொழியில் ஒரு வாசகம் பொறிக்கப்பட்டிருந்தது. எனக்கு வெகுசுமாராய்த்தான் ஜெர்மானிய மொழி வரும். அதை வைத்துக் கொண்டு எழுதியிருப்பதை நான் மொழிபெயர்த்துக் கொண்டேன். அது: *'நவம்பர் 6, 1943 அன்றைய நடவடிக்கையில் கொல்லப்பட்ட கர்னல் கர்ட் ஸ்டைனர் மற்றும் பாராசூட் சண்டை போடவல்ல 13 ஜெர்மானிய வீரர்கள் இதில் அடக்கம் பண்ணப்பட்டுள்ளார்கள்.'*

என் மொழிபெயர்ப்பினை ஒன்றுக்கு இரண்டுமுறை சரிபார்த்துக் கொண்டேன். சரியேதான். ஆனால் இது எனக்கு அர்த்தமாகவேயில்லை. ஒருமுறை கட்டுரை

யொன்றினை நான் எழுதும்போது சேகரித்த தகவலை வைத்துச் சொல்கிறேன்... ஜெர்மன் மிலிட்டரி கல்லறை ஸ்டாஃபார்ட்-ஷைரிலுள்ள கனாக் சேஸ் எனுமிடத்தில் 1967ல் திறக்கப்பட்டபோது முதல் மற்றும் இரண்டாம் உலகப்போர்களில் மரணமாகியிருந்த நான்காயிரத்து தொள்ளாயிரத்து இருபத்தைந்து பேரின் கல்லறை மிச்சங்களும் அங்கு மாற்றப்பட்டன.

'அன்றைய நடவடிக்கையில் கொல்லப்பட்ட'' என்கின்றது கல். கிடையாது. இது அபத்தம். தொடர்பற்றது. யாரோ விவரமாய் செய்திருக்கும் மோசடி. யெஸ்... அப்படித்தானிருக்க வேண்டும்.

இது குறித்து மேற்கொண்டு எனக்குள் ஏற்பட்ட சிந்தனைகள், தொண்டைகிழிய ஒலித்த ஓர் அலறலான கோபக்குரலால் தடைப்பட்டன. ''தேவையில்லாம நீங்க அங்கே என்னத்தைப் பண்ணிக்கிட்டிருக்கீங்க?''

தனக்கென ஒரு பெரிய கறுப்புக் குடையைப் பிடித்துக் கொண்டு கல்லறைகளுக்கு இடையே பாய்ந்தபடி என்னை நோக்கி வந்து கொண்டிருந்தார் ஃபாதர் வெரேக்கர்.

வெரேக்கர் என்னை நெருங்க நெருங்க ''எவ்ளோ இண்ட்ரஸ்டிங்கான விஷயம், பாருங்க'' என நான் குதூகலமாய் அவரை வரவேற்றேன். ''நான் ஒரு விந்தையான கண்டுபிடிப்பை இங்கே செஞ்சிருக்கேன்.''

அவர் என்னருகில் வந்தபோது ஏதோவொரு தப்பு நேர்ந்துள்ளதை நான் உணர்ந்தேன். அவர் முகம் வெளிறிப் போயிருந்ததாலும், தூக்கிப் போடும்படியான ஒரு நரம்பதிர்வில் அவர் இருந்ததாலும், யெஸ்... என்னவோ தப்பு நிகழ்ந்துதான் உள்ளது.

*''அந்தக் கல்லை நகர்த்த உங்களுக்கு எத்தனை தைரியம் இருக்கணும்? சர்ச்சின் புனிதத்தன்மைக்கே களங்கம் உங்களால. பாபச்செயல், பாபச்செயல்.''*

*''பாதகமில்ல'' என்றேன் நான். ''ஆனா இங்கே நீங்களே வந்து, நான் எதைக் கண்டுபிடிச்சிருக்கேன்று கொஞ்சம் பாருங்க.''*

*''நீங்க எந்த கண்றாவியைக் கண்டுபிடிச்சிருக்கீங்க என்பதைப்பற்றி எனக்கு துளியும் அக்கறை கிடையாது. முதல்ல அந்தக் கல்லை சரியா போடுங்க. ம்.''*

*எனக்குள்ளே எரிச்சலாக ஆரம்பித்தேன் நான். ''குழந்தைத்தனமா பேசாதீங்க. இதுல என்ன சொல்லப்பட்டிருக்குனு உங்களால விளங்கிக்க முடியலே? ஜெர்மன் உங்களுக்கு வராதுனா இதன் அர்த்தத்தை நான் சொல்றேன், கேட்டுக்கங்க. 'நவம்பர் 6, 1943 அன்றைய நடவடிக்கையில் கொல்லப்பட்ட கர்னல் கர்ட் ஸ்டைனர் மற்றும் பாராசூட் சண்டை போடவல்ல 13 ஜெர்மானிய வீர்கள் இதில் அடக்கம் பண்ணப்பட்டுள்ளார்கள்.' இதுல இருக்கும் அச்சுறுத்தும் அர்த்தம் உங்களுக்கு பிடிபடலே, ஆங்?''*

*''குறிப்பா ஒண்ணும் பிடிபடலே.''*

*''அப்போ, இதை நீங்க முன்னாடியே பார்த்திருப்பதா சொல்றீங்களா?''*

*''நோ. கிடையவே கிடையாது.'' துரத்திப் பிடிக்கப் பட்டவரைப் போலானார் அவர். பின்வருவதை அவர் சொன்னபோது தப்பிப்பதற்கான ஒருவித அவஸ்தை அக்குரலில் இருந்தது: ''இப்ப ஒரிஜினல் கல்லை உடனடியா நீங்க அது இருந்த இடத்துலேயே வெக்கப் போறீங்களா இல்லையா?''*

அவர் மீது எனக்குத் துளியும் நம்பிக்கையற்றுப் போனது. "யாரிந்த ஸ்டைனர்?" - நான் கேட்டேன். "இதெல்லாம் எதை பற்றி?"

"இதைப் பற்றியெல்லாம் எனக்கு ஒண்ணும் தெரியாதுன்னு நான் ஏற்கெனவே உங்ககிட்டே சொல்லியாச்சு" என்றார் அவர் , அகப்பட்டுக் கொண்ட அவதி மேலும் கூட.

அப்போது எனக்கு ஒன்று நினைவுக்கு வந்தது. "நீங்க 1943-ல இங்கேதான் இருந்திருக்கீங்க. அப்படித்தானே? அந்த வருஷத்துலதான் நீங்க ஃபாதரா ஆகியிருக்கீங்க. சர்ச்சுக்குள்ளே இருக்கும் பலகை இப்படித்தான் சொல்லுது."

அவர் வெடித்தார். "கடைசி முறையா எச்சரிக்கிறேன். எந்த இடத்துல எப்படி எடுத்தீங்களோ, அதேபோலக் கல்லை நீங்க நகர்த்தி வைக்கப் போறீங்களா இல்லையா?"

"நோ" என்றேன் நான். "மன்னிக்கணும். முடியாது."

இப்படி நான் சொன்னதும், சட்டென்று தன்னைத்தானே கட்டுக்குள் கொண்டு வந்தவராய் ஆனார் அவர். "வெரி வெல்" என்றார் சாந்தமாய். "அப்ப உடனே இங்கிருந்து வெளியேறுங்க. அவுட்."

அவருடைய மனநிலையை வைத்துப் பார்க்கும்போது விவாதிப்பதில் பலன் ஏதும் கிடையாது என்பதை நான் உணர்ந்து கொண்டேன். "உங்க விருப்பம் அதுதான்னா - ஓ கே."

நான் நடையைக் கட்டியபோது அவர் கூடுதலாய் கட்டளையிட்டது கேட்டது: "திரும்பி வரக்கூடாது. மீறி வந்தீங்க, துளியும் தயக்கம் காட்டாமல் நான் லோக்கல் போலீஸைக் கூப்பிட வேண்டியிருக்கும்."

பக்கவாட்டு கேட்டினைத் திறந்து கொண்டு வெளியேறினேன். காரில் பயணமானேன். அவர் மிரட்டல்களை நான் பொருட்படுத்தவில்லை. நான்

பரபரப்பிலிருந்தேன். ஆழ்ந்த யோசிப்பிலும். இந்த ஸ்டட்லே கான்ஸ்டபிள் பிரதேசம் பற்றிய எல்லாமும் சிந்திக்க வைக்கின்றன.

அப்படியொன்றும் இங்கு அதிகமாய் சொல்லிக் கொள்ளும்படியாய் எதுவுமில்லை. மதிற்சுவருக்குள் தோட்டங்களுடன் உள்ள சர்ச். ஓடைக்கு அருகாமையில் அங்குமிங்குமாய் தூவினாற் போலிருக்கும் பதினைந்து அல்லது பதினாறு கொட்டகைகள். ராட்சஸ சக்கரத்துடன் கூடிய ஒரு மில். பச்சைப் பசேலென்ற இப்பகுதிக்கு எதிர்ப்புறத்தில் ஸ்டட்லே ஆர்ம்ஸ் எனும் தங்கும் விடுதி.

ஓடைக்கு ஒதுக்குப்புறமாய் ஒதுங்கினேன். சிகரெட் ஒன்றைப் பற்ற வைத்தேன். நடந்த அனைத்தைப் பற்றியும் ஆழ்ந்த சிந்தனைக்குள் இறங்கினேன். ஃபாதர் வெரேக்கர் பொய் பேசுகின்றார். அவர் அந்தக்கல்லை ஏற்கெனவே பார்த்திருக்கின்றார். அதுபற்றி எனக்குள் நான் என்ன தீர்மானமானேனோ அப்படியேதான் அவரும் தீர்மானமாகி உள்ளார். சார்ல்ஸ் கேஸ்கோய்ன் பற்றி ஏதாவது தகவல் கிடைக்கலாம் என்ற நப்பாசையில் தான் இங்கு ஸ்டட்லே கான்ஸ்டபிள் வந்தேன். ஆனால் அதற்கு பதிலாக ஆழ்ந்து சிந்திக்க வைக்கும் ஒரு நியாயமான மர்மத்துக்குள் நான் விழுந்து விட்டேன். ஆனால் இந்த மர்ம முடிச்சினை நான் எப்போது எப்படி அவிழ்க்கப் போகிறேன் என்பதே இப்போதைய கேள்வி!

இக்கேள்விக்கான. பதில் என்கைகளில் அப்போது தானாய் கனிந்து விழுந்தது. சர்ச் வேலைக்காரக் கிழவன் லேக்கர் ஆர்ம்ஸ்பீ அங்கிருந்த இரண்டு குடில்களுக்கு மத்தியிலான குறுகலான பாதையிலிருந்து வெளிப்பட்டுக் கொண்டிருந்தான். இன்னமும் களிமண்ணில் தோய்ந்தே இருந்தான் அவன். தோளில் வழிந்த சாக்குத் துணியும் அப்படியே இருந்தது. ரோட்டினைக் குறுக்காய் கடந்து

ஸ்டட்லே ஆர்ம்ஸ் விடுதிக்குள் அவன் நுழைய, நான் என்னுடைய காரிலிருந்து உடனே குதித்து வெளியேறி, அவனை பின்தொடர்ந்து போனேன்.

அங்கு நுழைவிலிருந்த தகவலின்படி யாரோ ஜார்ஜ் ஹென்றி ஒயில்ட் என்பவர் சொந்தக்காரராகின்றார். கதவைத் திறந்தேன். அது கற்கள் பதிக்கப்பட்ட ஒரு தாழ்வாரம். உயரமான சுவர்கள். இடப்பக்கத்திலிருந்த ஒரு கதவு ஒருக்களித்திருந்தது. அங்கிருந்து கலவையான முணுமுணுப்பு குரல்களும் வெடிச்சிரிப்புகளும் வந்து கொண்டிருந்தன.

அது ஒன்றும் பாரெல்லாம் கிடையாது. ஜஸ்ட் ஒரு விசாலமான பரந்த அறை. கணப்பு முழுவதுமாய் உஷ்ணத்திலிருந்தது. உயரமான பின்பக்கங்கள் கொண்ட நாற்காலிகள் பல இருந்தன. சில மரபெஞ்சுகள். அங்கு ஆறேழு கஸ்டமர்கள் இருந்தார்கள், ஆனால் அவர்களில் ஒருவரும் இளையவர் கிடையாது. சராசரி வயது அறுபது என்று சொல்வேன். இப்போதெல்லாம் கிராமப்புற விடுதிகளில் வாடிக்கையாய் கூடுகின்ற பெருசுகள்.

அனைவரும் அச்சுஅசலான கிராமத்தான்கள். கண்ட கண்ட பருவநிலைகளில் வெற்றுடம்புடன் வேலை செய்தே பிழைப்புநடத்தி வந்துவிட்டதால் முறமென ஆகிவிட்ட மேல்தோல்கள். அழுக்கேறிய தொப்பிகள். அசுத்தமான பூட்ஸ்கள். மூன்று பேர் சீட்டு விளையாடிக் கொண்டிருந்தார்கள். இருவர் அதனைப் பார்த்தபடி. கணப்புக்கு அருகிலிருந்த ஒரு முதியவர் மவுத்-ஆர்கன் வாத்தியத்தை தனக்குத்தானே மிருதுவாய் வாசித்துக் கொண்டிருந்தார். ஒரு நட்பு வட்டத்துக்குள் அந்நியன் ஒருவன் நுழையும்போது, அந்த அத்தனை பேரும் அவனை நோக்கிப் பார்க்கும் வித்தியாசமான பார்வையை இக்கூட்டமும் நான் நுழைந்தபோது என் மேல் திருப்பியது.

''குட் ஆஃப்ட்டர்நூன்'' என்றேன் நான்.

ரெண்டு மூன்று பேர் மிகவும் குதூகலமாய் இதனை ஏற்றுக் கொண்டார்கள். ஆயினும் கருந்தாடியும் நரைத்த முடியுமாயிருந்த ஒரு வளர்த்தியான ஆள் அத்தனை நட்புறவாய்க்காட்டிக் கொள்ளவில்லை. இவனைக் கடந்திருந்த ஒரு டேபிளில், தன் விரலிடுக்கிலிருந்த சிகரெட்டை இயந்திரத்தனமாய் சுழற்றிக் கொண்டு ஆர்ம்ஸ்பீ உட்கார்ந்திருந்தான். அவனுக்கு முன்னாலிருந்த டம்ளரில் மது. அவன் வாயில் சிகரெட்டைப் பொருத்திக் கொள்ளும்போது அவனருகாமைக்குப் போயிருந்த நான் ஒத்தாசையாய் தீ காட்டினேன். ''ஹலோ.''

வெற்றிடமான பாவத்தோடு யாரது என என்னை நோட்டமிட்ட அவனது முகம் பிரகாசமானது: ''ஓ, நீங்களா, மறுபடியும்? அப்படின்னா ஃபாதர் வெரேக்கரைப் பார்த்துட்டீங்களா?''

நான் ஒப்புதலாய் தலையசைத்தேன். ''இன்னும் கொஞ்சம் ஊத்தட்டுமா?''

''நான் மாட்டேன்னு சொல்வதில்லை.'' ஓரிரு மடக்குகளில் தனது டம்ளரை அவன் காலி செய்து விட்டான். ''வழுக்கிக்கிட்டு போயிடுது உள்ளே, ஜார்ஜ்!''

நான் திரும்பி பார்த்தேன். குள்ளமாய், பருமனாய், முழுக்கை போட்டிருந்த ஓர் ஆள் நின்று கொண்டிருந்தான். இவன் சொந்தக்காரன் ஜார்ஜாயிருக்க வேண்டும். இவனும் மற்றவர்களையொத்த வயதிலேயே இருந்தான். ஒரு விஷயத்தில் மட்டும் இவன் தோற்றம் சற்றே குலைந்திருந்தாலும் இவன் ஒருத்தன் மட்டுமே இங்கு பார்ப்பதற்கு கண்ணுக்குக் குளிர்ச்சியாய் தோன்றினான். ஏதோ ஒரு சமயத்தில் மிக அருகிலிருந்த ஒருத்தனால் முகத்தில் சுடப்பட்டிருக்கின்றான் இவன். குண்டுக்காயம்தான்

இது என்று அடித்து சொல்லுமளவிற்கு என் அனுபவத்தில் பல துப்பாக்கி குண்டுக் காயங்களை நான் பார்த்திருக்கின்றேன். இவன் விஷயத்தில் இடப்புற கன்னத்து எலும்பைக்கூட வழித்துக் கொண்டு போகுமளவுக்கு சூடு இடம் பெற்றுள்ளது. அதிர்ஷ்டக்காரன்... தப்பித்திருக்கிறான்.

அவன் நட்பாய் புன்னகைத்தான். "உங்களுக்கு, ஸார்?"

நான் மூக்குமுட்ட குடிக்கமாட்டேன் என்றபடி மிகக் குறைந்த அளவுக்கு எடுத்துக் கொண்டேன். லேக்கர் ஆர்ம்ஸ்பீயின் விரல்களிலிருந்த சிகரெட் அதிக நேரம் உயிர் வாழாமல் போனதால், மற்றொன்றை உடனே நான் நீட்ட அதனை அவன் ஆர்வமாய் பற்றவைத்துக் கொண்டான்.

"எத்தனை நாளா செயின்ட் மேரீஸ்ல நீ வேலைக்காரனா இருப்பதா சொன்னே?"

"41 வருடங்கள்."

இப்போது அவனது இரண்டாவது டம்ளர் மதுவையும் அவன் குடித்து முடித்திருந்தான். "இந்தா, அடுத்த டம்ளர். இந்த ஸ்டைனர் பற்றி எனக்கு சொல்லு."

வாசித்துக் கொண்டிருந்த மவுத்-ஆர்கன் அப்படியே பாதியில் திடுதிப்பென்று நின்று போனது. அனைத்து சம்பாஷணைகளும் முற்றுப் பெற்றன. அவனது முகத்தில் உருவாகவல்ல அதே நரித்தனத்துடன், கிழ லேக்கர் ஆர்ம்ஸ்பீ, அவனுடைய கண்ணாடியின் மேல் விளம்பில் என்னை முறைத்தான். "ஸ்டைனர்?" என்றான். "அந்த ஸ்டைனர் வந்து..."

ஆரம்பிக்கப்பட்ட இவ்வாக்கியத்தை வெட்டும் விதமாய் கையில் ஒரு துண்டுத் துணியுடன் டேபிளுக்குக் குறுக்காய் கை நீட்டினான் ஜார்ஜ் ஒயில்ட்.கோப்பைகளை எடுத்தபடி

டேபிளைத் துடைத்தவன் சொன்னான்: ''நேரமாகிடுச்சு ஸார். கிளம்பலாம், ப்ளீஸ்.''

நான் கைக்கடியாரத்தைப் பார்த்தேன். இரண்டு இருபது. ''நீங்க தப்பா சொல்றீங்க. மூட இன்னும் அரை மணிநேரம் இருக்கு.''

மேஜையிலிருந்த என் மதுக்கோப்பையை எடுத்து அதனை என் கையில் வைத்தான் அவன். ''இது காசு வாங்கி நடத்தப்படாத ஒரு விடுதி சார். நிலைமை மோசமாகிற மாதிரியான சூழ்நிலை உருவாகிட்டா, எங்க வசதிப்படி நாங்க செஞ்சுப்போம். நான் ரெண்டரை மணிக்கு மூடுறதா சொன்னால், அன்னிக்கு ரெண்டரையோட குளோஸ்னு அர்த்தம்.'' அவன் சாந்தமாய் புன்னகைத்தான். ''உங்க இடத்துல நான் இருந்தால், உடனே குடிச்சிட்டு கிளம்பிடுவேன், சார்.''

சூழ்நிலையில் இறுக்கம் உண்டாகியிருந்தது. இறுகி, உணர்ச்சியற்றுப் போயிருந்த முகங்களுடன், உட்கார்ந்திருந்த அனைவரும் என்னையே பார்த்துக் கொண்டிருந்தார்கள். அவர்களுடைய கண்களனைத்தும் என்மீதே ஒரு சிலையின் கண்களைப்போல நிலைகுத்திப் போயிருந்தன. பெருசான உடலோடும் கருந்தாடியும் கொண்டிருந்தவன், டேபிளின் கடைக்கோடி வரை நகர்ந்து போய் அங்கு சாய்ந்து நின்றபடி என்னையே வெறித்தான்.

''அவன் சொன்னது உனக்கு கேட்டுது, இல்ல?'' என்றான் அவன், தணிந்த ஆனால் ஆபத்தான குரலில். ''நல்ல புள்ளையா உடனே குடி. எழுந்து உன் வீடு எங்கேயிருக்கோ அங்கே போய் விழு.''

அந்நிமிடத்தில் சூழ்நிலை மிகவும் மோசமானதாய் எகிறிக் கொண்டிருந்தபடியால், நான் விவாதிக்கவில்லை.

*என் கையிலிருந்த கோப்பை திரவத்தை சற்று அவகாசம் எடுத்து குடித்து முடித்தேன். பிறகு கிளம்பினேன்.*

*ஆச்சரியமாக உள்ளது... நான் கோபப்படவேயில்லை. ஆனால் விளங்காத இந்த அனைத்து நிகழ்வுகளாலும் நான் ஆச்சரியத்திலிருந்தேன். இவையனைத்துக்கும் ஒரு விடை இருந்தாக வேண்டும். அவற்றை அடைய வெளிப்படையான வழிகள் இருப்பதாக எனக்குப் பட்டது.*

*என் காரில் ஏறிக்கொண்டேன். பாலத்தைக் கடந்து, கிராமத்தைக் கடந்து, சர்ச் மற்றும் மாதாகோயில், அலுவலகம் ஆகியவற்றையும் கடந்து போய்க் கொண்டிருந்தேன். ப்ளாக்கெனி பகுதிக்குப் போகக்கூடிய பாதை. சர்ச்சிலிருந்து நூறு கஜதூரம் போல கடந்தபோது மாட்டு வண்டி மட்டும் போகவல்ல பகுதிக்குள் காரை நுழைத்து நிறுத்தினேன். காரின் டிராயருக்குள்ளிருந்த சிறு கேமிராவை எடுத்துக்கொண்டு நடக்க ஆரம்பித்தேன். நான் பயப்படவில்லை.*

*கல்லறைக்குள் நான் போனபோது, ஸ்டைனர் மற்றும் வீரர்களின் கல்லை நான் எப்படி விட்டுவிட்டு வந்திருந்தேனோ அதே நிலையில் அப்படியே இருப்பதை கவனித்தேன். தப்பாகிவிடக் கூடாது என்ற சந்தேகத்தினால், அதில் பொறித்திருந்த எழுத்துக்களை மீண்டுமொரு முறை நான் சரிபார்த்துக் கொண்டேன்... தவறு நேரவில்லை. பலகோணங்களில் அதனை நான் போட்டோ பிடித்துக் கொண்டேன். பிறகு வேகமாய் சர்ச்சுக்குப் போனேன். உள்ளே நுழைந்தேன்.*

*சர்ச்சில்பாடும் காயர்களின் சிகப்பு கோட்டுகள் மற்றும் வெள்ளை மேலங்கிகள் வரிசையாய் மாட்டப்பட்டிருந்தன. இரும்பிலான ஒரு பழைய டிரங்க் பெட்டி இருந்தது. வட்டவட்டமாய் மடிந்து சிறுகுன்றாய் ஆகியிருந்த*

மாதாகோயில் மணியின் கனத்தகயிறு. 22, ஜூலை 1936 அன்று பாப் மைனருக்காக 5058 தடவை கோயில் மணியோசை முழங்கப்பட்டது என்ற குறிப்பு அங்கிருந்த ஒரு பலகையில் இருந்தது. அதை அடித்த ஆறு ஊழியர்களில் லேக்கர் ஆர்ம்ஸ்பீயின் பெயரும் இடம்பெற்றிருந்தது ஈர்க்கும்படியான ஒரு குறிப்பு.

இதைவிட ஈர்க்கும் ஓர் அம்சமாய் அமைந்தன, அங்கிருந்த ஒரு பலகையில் இடம் பெற்றிருந்த வரிசையான ஓட்டைகள். அவை எப்போதோ பிளாஸ்டர் ஆஃப் பாரீஸால் அடைக்கப்பட்டிருந்திருக்க வேண்டும்... இப்போது உதிர்ந்திருந்தன. அவற்றை துப்பாக்கிச் சூட்டால் விளைந்த துளைகள் என்று சொல்லத் தோன்றியது... ஆனால் மாதா கோயிலில் வந்து இப்படி சொல்வது அபாண்டமாயும் இருந்தது.

இவையெல்லாமிருக்கட்டும்... நான் விரட்டிக்கொண்டு வந்தது, இங்கு புதைக்கப்பட்டவர்கள் பற்றிய பட்டியலை. ஆனால் எந்தவிதமான குறிப்பு நோட்டுக்களோ அல்லது ஆவணங்களோ காணப்படவேயில்லை. நான் நின்று கொண்டிருந்த இடத்தில் ஒரு திரைச்சீலையிருந்தது. அதை விலக்கினேன். உடனேயே சுவரில் ஒரு சிறு கதவு பொருத்தப்பட்டிருப்பதைக் கவனித்தேன். அதன் பிடியில் கை வைத்ததும் சிரமமின்றி அக்கதவு திறந்துக்கொள்ள உள்ளே நுழைந்த நான், ஓக் மரச் சுவர்கள் அமைக்கப்பட்டிருந்த ஒரு சின்ன அறைக்குள் நின்று கொண்டிருப்பதை உணர்ந்து கொண்டேன். சில டேபிள்கள், ஒரு மர கப்-போர்ட் மற்றும் ஒரு பெரிய டெஸ்க் ஆகியன அங்கிருந்தன.

முதலில் நான் கப்-போர்டில் முயற்சி மேற்கொண்டேன். ஆனால் உடனேயே கை முழுவதும் எண்ணெய் அப்பிக் கொண்டது. அதனுள்ளிருந்த ஒரு தட்டில், எல்லா வகையான பெயரேடுகளும் வரிசைக்கிரமமாய் அடுக்கி

வைக்கப்பட்டிருந்தன. புதைக்கப்பட்டவர்கள் பற்றிய குறிப்படங்கிய மூன்று பெயரேடுகள் இருந்தன. அவற்றில் இரண்டாவது லெட்ஜர், 1943 சம்பந்தப்பட்டது. அதன் பக்கங்களை விறுவிறுவென திருப்பி முடித்த நான், இம்முயற்சி பெரும் தோல்வியில் முடிந்துவிட்டதை உடனே விளங்கிக் கொண்டு விட்டேன்.

நவம்பர் 1943ல் இரண்டு மரணங்கள் பதியப்பட்டிருந்தன. அவையிரண்டும், பெண்கள். நான் வேகவேகமாய் அவ்வருடத்தின் ஆரம்ப மாதத்திலிருந்து பக்கங்களைத் திருப்பித் தேடினேன். ம்ம். பெயரேட்டினை எடுத்த இடத்திலேயே திருப்பி வைத்தேன். ஆக, என் தேடலுக்கு வெளிப்படையாய் விடை தரவல்ல ஒரேயொரு உத்தி, இப்போது முழுவதுமாய் மூடப்பட்டு விட்டது. அவன் எவனோ... அந்த ஸ்டைனர் இங்கு புதைக்கப்பட்டிருந்தால், அந்தக் கணக்கு நிச்சயமாய் லெட்ஜருக்குள் பதியப் பட்டிருக்கும். இது, தவறவிடப்படக்கூடாத ஓர் ஆங்கிலேய சட்டம். எனில், இது விளக்குவது எதை?

வெளியேறி கதவினை மூடினேன் நான். விடுதியில் நான் பார்த்தவர்களில் இரண்டு பேர் அங்கிருந்தார்கள். ஜார்ஜ் ஓயில்ட் மற்றும் தாடி வைத்த அந்த தடியன். அவன் கையில் இருந்த துப்பாக்கி என்னை கிலேசமாக்கியது.

ஓயில்ட் அமரிக்கையாய் சொன்னான்: ‘‘உங்களை உடனடியா இங்கிருந்து கிளம்பும்படி கேட்டுக்கறேன், ஸார். ப்ளீஸ், சொல்வதை கேட்டுடுங்க. ஏன் புத்திசாலித்தனமா நடந்துக்க மாட்டேங்கறீங்க?’’

‘‘இவங்கிட்டே என்ன பேச்சு வேண்டிக்கிடக்கு?’’ என்றான் தாடிக்காரன். ‘‘போட்டுத் தள்ளிடுவோம்.’’

அவன் சைஸூக்கு ஒத்துவராத அளவுக்கு ஒரு புயலென பறந்து என்னை நெருங்கிய அவன், என் கோட் காலர்களைக்

கொத்தாய் பிடித்து அப்படியே என்னைத் தூக்கினான். அதே கணத்தில் எனக்கு பின்னாலிருந்த சுவர்க்கதவு திறக்கப்பட அதன் வழியாக வெரேக்கர் வெளியே வந்தார். எந்த வானத்திலிருந்து இங்கே வெரேக்கர் குதித்தார் என்பது கடவுளுக்கே வெளிச்சம்... ஆனால் அங்கு அவரை நான் பார்த்ததில் எனக்குள் ஒருவித அமைதி உண்டானது.

''இங்கே என்ன கண்றாவி நடந்துக்கிட்டிருக்கு?'' என்று ஆணையாய் கேட்டார் அவர்.

''இதை ஜஸ்ட் நீங்க எங்ககிட்டே விட்டுடுங்க, ஃபாதர்'' என்றான் தாடிக்காரன். ''இவனை நாங்க கவனிச்சுக்கறோம்.''

''நீ யாரையும் கவனிக்க வேண்டாம், ஆர்தூர் ஸேமோர்'' - வெரேக்கர் சொன்னார். ''இப்ப நீ பின்னால வா.''

தூக்கிய என்னை இறக்காமல் இன்னமும் ஃபாதரையே வெறுமையாய் வெறித்துக் கொண்டிருந்தான் தாடிக்காரன். ஒரு கணத்தில் அவனை என்னால் கண்டந்துண்டமாய் ஆக்கியிருக்க முடியும். ஆனால் அப்படி செய்து அடையப்போகும் லாபம் ஒன்றும் கிடையாது.

வெரேக்கர் மீண்டும் சொன்னார்: ''ஸேமோர்!'' - குரலில் இரும்பின்கனம் இருந்தது.

ஸேமோரின் பிடி மெதுவாய் தளர, வெரேக்கர் பேசினார்: ''திரும்பவும் வராதீங்க, மிஸ்டர் ஹிக்கின்ஸ். அது உங்களுக்கு சாதகமாய் அமையாது என்பதை நீங்க இப்ப விளங்கிக்கிட்டிருக்கணும்.''

''நல்லது.''

கத்தி, கதறி ஆர்ப்பாட்டம் செய்வதில் பயன் கிடையாது என்பது வெளிப்படையானது. ஓட்டமும் நடையுமாய் என் கார் பகுதிக்கு வந்து விட்டேன் நான்.

அங்கு, என் காரின் இன்ஜின் தகடுக்கு மேலே உட்கார்ந்துக் கொண்டு கையில் சிகரெட்டை சுழற்றிக் கொண்டிருந்தான், லேக்கர் ஆர்ம்ஸ்பீ. என்னை பார்த்ததும் இறங்கி நின்றுகொண்ட அவன், "ஆஹ், வந்துட்டீங்களா?" என்றான். "அப்ப, தப்பிச்சுட்டீங்க?"

அவன் முகத்துக்கு வழக்கமான அமுக்கப்பட்ட வஞ்சகம் இப்போது தென்பட்டது. ஒரு சிகரெட்டை வெளியிலெடுத்து அவனுக்கு நீட்டினேன். "ஒண்ணு சொல்லட்டுமா?" என்றேன் நான். "நீ, பார்வைக்கு சிம்பிளாய் தெரிவதைப்போல அத்தனை சாதாரணமானவன் கிடையாது."

என்னைத் துளைப்பதைப்போல பார்த்தான். பிறகு மழைக்குள் ஒரு கொத்து சிகரெட் புகையினை வெளியிட்டான். கேட்டான்: "எவ்ளோ?"

அவன் என்ன கேட்கிறான் என்பது எனக்கு தெரிந்திருந்தாலும், தற்சமயத்துக்கு நானும் விளையாடினேன்.

"எவ்ளோனா? என்ன சொல்றே?"

"உங்களுக்கு ரொம்ப உதவியா இருக்கும். ஸ்டைனர் பற்றிய தகவல்."

காரின் மீது லாவகமாய் சாய்ந்து கொண்டான் அவன். காத்திருந்தான். ஆகவே நான் என் பர்ஸிலிருந்து ஐந்து பவுண்ட் நோட்டு ஒன்றினை வெளியிலெடுத்தேன். அதனை இரு விரல்களுக்கிடையே பிடித்துக் கொண்டு காற்றில் ஆட்டிக் காட்டினேன். அவன் கண்கள் பிரகாசம் கொண்டன. என்னை நெருங்கினான். நான் என் கையைப் பின்னுக்கு இழுத்துக் கொண்டேன்.

"ம்ம். முதல்ல ஏதாவது தகவல் கிடைக்கட்டும்."

"ஆல் ரைட், மிஸ்டர். என்ன தகவல் வேணும்?"

"இந்த கர்ட் ஸ்டைனர் - யாரிவன்?"

அவன் இறுக்கமானான். அதே வஞ்சகத்தனமான நரிச்சிரிப்பு. ''இது ஒண்ணும் பெரிய தகவல் கிடையாதே'' என்றான். ''அவன் ஒரு ஜெர்மானியன். தன்னுடைய கூட்டத்தோட அவன் இங்கே வந்தவன். மிஸ்டர் சர்ச்சில்லைச் சுட.''

ஆச்சரியத்தின் உச்சத்துக்கே போய் விட்ட நான், ஆர்ம்ஸ்பீ முன் ஜஸ்ட் ஒரு ஜடமாய் நின்றவனானேன். அவன் என் கையிடுக்கு நோட்டினைப் பறித்தான். அங்கிருந்து உடனே கிளம்பினான். வேகமாய்.

★ ★ ★

**வா**ர்த்தைகளற்றுப் போனேன், ஆர்ம்ஸ்பீ ஆணித்தரமாய் வைத்திருந்த உண்மையைக் கேட்டு. நம்பமுடியாத ஓர் உண்மையாய் அவன் சொன்னது என்னை அறைந்தது மட்டும் கிடையாது இதற்கு காரணம்... வாழ்க்கையில் நான் ஒரு பாடம் கற்றிருக்கிறேன். நீங்கள் எதை முடியவே முடியாது என்று அசாதாரணப் பட்டியலில் இன்று சேர்க்கின்றீர்களோ, அது அடுத்த வாரமே அற்புதமாய் அரங்கேறி விடும். எனவே, ஆர்ம்ஸ்பீ சொன்ன அசாதாரண சேதியின் அர்த்தம் மட்டும் நிஜம்தான் என்றால், அதன் பின்விளைவுகளை எண்ணியே நான் ஜடமாய் போனேன்.

இருக்க வேண்டும் - இது நிஜந்தான். நான்தான் இந்தநிஜத்தின்மீது கவனம் பொதித்து முக்கியமானதாய் எடுத்துக் கொள்ளாமல் இருந்திருக்கிறேன். ப்ளாக்கெனிக்குப் போனேன். என் ரூமைக் காலி செய்தேன். பில் தொகையைத் தந்துவிட்டு என் ஊருக்குக் கிளம்பினேன்.

பிறகு, என் வாழ்க்கையின் ஒரு வருட காலமானது ஆட்கொள்ளப்பட்டது. வருடம் முழுவதும் நீடித்த பற்பல நேர்காணல்கள். நூற்றுக்கணக்கான கோப்புகளுடன் சிந்தனை. உலகின் பாதிப்பகுதிக்குப் பிரயாணம்

மேற்கொண்டது. ஸான்பிரான்ஸிஸ்கோ, சிங்கப்பூர், அர்ஜென்டைனா, ஹாம்பர்க், பெர்லின், வார்ஸா மற்றும் பெல்ஃபாஸ்ட். இவ்வாறாய் ஆட்கொள்ளப்பட்டது.

முழு நிகழ்வின் அச்சாணியும் - கர்ட் ஸ்டைனர்தான். எனவே அவனைப்பற்றி எந்த துப்பு கிடைத்தாலும், அது எத்தனைதான் சிறியதானதாயிருந்தாலும், அதன் நம்பகத்தன்மையை ஊர்ஜிதப்படுத்திக் கொள்வதற்காக அத்தகவல் உலகின் எந்த மூலையிலிருந்து வந்திருந்தாலும் அந்த மூலைக்கு நான் பிரயாணித்துக் கொண்டிருந்தேன். ஒரு வருடமாய்.



## 2

ஒருவகையில் சொல்லப்போனால் இந்த அத்தனையையும் ''ஒட்டோ ஸ்கார்ஸ்னீ என்பவன்தான் ஆரம்பித்து வைத்தான். செப்டம்பர் 12, 1943 ஞாயிறன்று எதையும் துல்லியமாயும் ஆக்ரோஷமாயும் செய்து முடிக்கவல்ல கொரில்லாப் படையைக் கொண்டுவந்து சேர்ப்பித்து அனைத்தையும் துவக்கி வைத்தான் அவன் - இதனால், 'தானே எப்போதும் சரி' என்றும் 'ஆயுதந்தாங்கிய படைகள் எப்போதும் தப்பு' என்றும் கொக்கரிக்கும் ''அடால்ஃப் ஹிட்லரின்'' சந்தோஷம், வழக்கப்படி ஊர்ஜிதப்படுத்தப் பட்டது.

ஆங்கிலேயப் படைகளிடம் திடீரென்று தாக்கும் குணம் கொண்ட கொரில்லாப் படைகள் உண்டு. போரின் ஆரம்ப காலத்திலிருந்தே இப்படை வெற்றிகரமாக இயங்கி வருகின்றது. இப்படிப்பட்ட ஒரு படை ஜெர்மனி ராணுவத்திடம் ஏன் இல்லை என உடனே தெரிந்து கொள்ள விரும்பினார், ஹிட்லர். இவருடைய இந்த ஆசையை நிறைவேற்றவே ஸ்கார்ஸ்னீ கொண்ட ஒரு யூனிட்டை உயர்மட்டம் அமைத்தது. ஸ்கார்ஸ்னீ, ஓர் இளைய துணைத்தளபதி. இவனுடைய முன்னேற்றங்களை எப்படியாவது முடக்கிவிட ஆயத்தங்கள் நடந்தாலும் எதுவும் பலிக்கவில்லை.

ஸ்கார்ஸ்னீ, அற்புதமான வீரனாக மிளிர்ந்தான். கொடுக்கப்பட்ட இலக்கினை வெற்றிகரமாய் முடித்துவிடும்

*தனித்துவ திறமையை வரமாய் பெற்றிருந்தான். இதனை நிரூபிக்கும் விதமாய் நிகழ்வுகளும் அமைய ஆரம்பித்தன.*

*செப்டம்பர் 3, 1943 அன்று இத்தாலி அடிபணிந்தது. சிம்மாசனத்திலிருந்து நீக்கப்பட்டார். அவரை தைரியமாய் கைதுசெய்தார் மார்ஷல் படோக்லியோ. பின் விடுவிக்கப் பட்டார். இவருக்கு முந்தைய கூட்டாளி கண்டு பிடிக்கப்பட்டு விடுவிக்கப்பட வேண்டும் என்று அழுத்தினார் ஹிட்லர். ஆனால் இது ஓர் அசாதாரண கட்டளையாய் பார்க்கப்பட்டது. இந்த ஐடியாவில் எந்த பயனும் கிடையாது என்று உணர்ந்த க்ரேட் எட்வின் ரோம்மல்கூட, தப்பித்தவறிகூட இந்த வேலை தனக்கு வந்துவிடக்கூடாது என்று எண்ணினான்.*

*ஆனால் இந்த எண்ணங்கள் சரியானதாய் ஆகவில்லை.*

*இந்த இலக்கினை அடையுமாறு தானே முன்வந்து இப்பணியை ஸ்கார்ஸ்னீக்கு கொடுத்தார் ஹிட்லர். ஸ்கார்ஸ்னீயும் தனது முழுசக்தியையும் சிதறாத கவனத்தையும் கொடுத்துத் தன்னை முழுமையாக அர்ப்பணித்துக் கொண்டான். இந்த ஈடுபாட்டால், துரிதகாலத்திலேயே, அப்ருஸ்ஸீயில் இருக்கும் பத்தாயிரம் அடி க்ரேன் ஸாஸ்ஸோவின் உச்சியிலுள்ள ஸ்போர்ட்ஸ் ஓட்டலில், இரு நூறு ஆடவர்களின் காவலில் முஸோலினி இருப்பதைக் கண்டுபிடித்தான்.*

*பாராசூட் கொண்டு சண்டை போடவல்ல ஐம்பது வீரர்களுடன் க்ளைடர் விமானத்தில் வந்து, ஓட்டலுக்குள் புயலென தரையிறங்கிய ஸ்கார்ஸ்னீ, சிரமமின்றி முஸோலினியை விடுவித்தான். அங்கிருந்து ஒரு சிறிய விமானத்தில் ரோமுக்கு அனுப்பப்பட்டார் அவர். கிழக்குப்பகுதியில் ஹிட்லருடைய தலைமையகம், ராஸ்டன்பெர்க் பகுதியில் ஆல்ப்ஸ் லையர் எனுமிடத்தில்*

உள்ளது. மாபெரும் மரக்காட்டுக்குள் இருளும் ஈரமும் கவ்வியிருக்கும் கிழக்குப் ப்ருஸ்ஸியா பகுதியாகும் இது. ரோமிலிருந்து கடல்வழியாய் இங்கு அனுப்பப்பட்டார்.

இந்த வெற்றி, தனது ராணுவத் தொப்பி கொள்ளாத அளவுக்கு மெடல்களை ஸ்கார்ஸ்னீக்கு பெற்றுத் தந்தது... மேற்சொன்னதைப் போன்ற அச்சுறுத்தும் சாகசப்பணிகள் தானாய் தேடிவரும் ஒரு அசகாய பாதையையும் அமைத்துத் தந்து, இவனுடைய காலத்தில் எதையும் சாதிக்கும் ஓர் ஆண்மகனாய் இவன் மட்டுமே விளங்குமாறு வழிபண்ணியும் தந்தது. உலகளவில் திகழும் உயரதிகாரிகளுக்கு, வெற்றியை மட்டுமே குறியாய் வைத்துக்கொண்டு அதனை எப்படியாவது பெற்றுவிடும் ஒழுங்கற்ற அணுகுமுறையில் எப்போதுமே நம்பிக்கை இருந்ததில்லை. ஆகவே அவர்களனைவருமே ஸ்கார்ஸ்னீ மீது ஒரு நன்மதிப்பு இல்லாமலே இருந்தார்கள்.

ஆனால் ஃபுர்ரெர் இப்படி இருக்கவில்லை. இவர், சொர்க்கத்துக்கும் மேலே ஏறியிருந்தார். ஆனந்தக் களியாட்டத்தில் மூழ்கினார். பாரீஸ் வீழ்ந்ததிலிருந்து சந்தோஷ ஆட்டமே இவரிடம் அற்றுப் போயிருந்தது... ஆனால் இப்போது ராஸ்ன்பெர்க்குக்கு முஸ்ஸோலினி வந்து சேர்ந்ததும் கூத்தாடினார் இவர். அவர் வந்து சேர்ந்த தினத்தன்று மாலையே கலந்துரையாடும் வளாகத்தில் இத்தாலியின் எதிர்காலம் குறித்தும் ட்யூஸின் (முஸ்ஸோலினி) எதிர்கால பணிகள் குறித்தும் பேச ஒரு மீட்டிங்குக்கு ஏற்பாடும் செய்தார்.

பைன் மரத்தாலான சுவர்கள் மற்றும் மேற்கூரை கொண்டு கண்ணுக்குக் குளிர்ச்சியாயிருந்தது அறை. ஒரு மூலையில், வட்டவடிவ மேஜை இருந்தது. மையத்தில் பூக்கள் செருகப்பட்டிருந்த ஒரு அழகுத்தொட்டி. டேபிளைச் சுற்றி சக்கரம் வைக்கப்பட்ட பதினோரு

நாற்காலிகள். மற்றொரு மூலையில், பெரிய வரைபடம் வைக்கப்பட்டிருந்த டேபிள். இதனருகில் நின்று கொண்டிருந்த சிறு ஆடவர் கூட்டம், இத்தாலிய முன்னணி பற்றிய நிலைமையை பேசிக்கொண்டிருந்தது. இதில் முசோலினியும் இருந்தார். மேலும், ரீச் பகுதியின் பிரச்சார மந்திரி மற்றும் போரின் முழுபொறுப்பு மந்திரி, ஜோஸப் கோயபெல்ஸ் உயர் ரேங்க் ஆபிசர், மாநில தலைமை போலீஸ் அதிகாரி மற்றும் ரகசிய காவல்படை அதிகாரி ஆகியவை வகிக்கும் ஹைன்ரிச் ஹிம்லர் மிலிட்டரியின் ஹெட், அட்மிரல் வில்ஹெம் கனாரீஸ் உளவுத்துறையின் தலைவர் அப்வெர் ஆகியோரும் இருந்தார்கள்.

ஹிட்லர் அறைக்குள் நுழைந்ததும் அவர்களனைவரும் ராணுவ இறுக்கத்துடன் நின்றார்கள். அவர் கண்கள் டாலடிக்க உல்லாசமான மூடில் இருந்தார். சின்னதாய் அமைந்திருந்த புன்னகை. எப்போதாவது காணக்கிடைக்கும் குதூகலம். முசோலினியிடம் தான் நேராய் போனார். அவரது கைகளை வாஞ்சையுடன் பிடித்துக் குலுக்கினார். அப்படியே பிடித்தபடியே பேசினார்: ''இன்னிக்கு நீங்க மேம்பட்டு தெரியறீங்க, ட்யூஸ். நிச்சயமா முன்னேற்றம் தெரியுது.''

அங்கிருந்த ஏனைய அனைவருக்கும் அந்த இத்தாலிய சர்வாதிகாரி பரிதாபமாய் தெரிந்தார். தொய்ந்துப் போய். அசதியாய். உயிர்ப்பற்று அவருக்குள்ளிருந்த அக்னிக்குஞ்சு கொஞ்சமாய் மீதமிருந்தது.

சொற்பமாய் புன்னகைக்க அவர் முயன்று வாட்டமாய் உதடுகளை நீளமாக்கியபோது ஃபுர்ரெர் பலமாய் கைதட்டினார். ''வெல், ஜென்டில்மென்... இத்தாலியில் நம்முடைய அடுத்த நகர்த்தல் என்னவாயிருக்க வேண்டும்? எதிர்காலம் எப்படியிருக்கு? உங்க கருத்து என்ன, ஹிம்லர்?''

தன்னுடைய மூக்குக்கண்ணாடியைக் கழற்றி அதன் கண்ணாடிகளைத் தனது பலம் கொண்ட மட்டும் அழுத்தி துடைத்தபடி "முழு வெற்றிதான். வேறென்ன?" என்றார் அவர். "அந்த ராஜதுரோகி படோக்லியோ போரில் இடைக்காலச் சமாதானத்துக்கான ஒப்பந்தத்துல கையெழுத்து போட்டுட்ட பிறகு உருவான நிலைமையிலிருந்து, நீங்கதான் புத்திசாலித்தனமா காப்பாத்தினீங்க. இதுக்கு நம்மகூட இப்ப இணைந்திருக்கும் ட்யூஸின் இருப்பே அற்புதமான ஒரு சாட்சி."

முகம் இறுகிய நிலையில் ஆமோதிப்பாய் தலையசைத்தார் ஹிட்லர். கோயபெல்ஸ் பக்கமாய் திரும்பினார். "நீ என்ன சொல்லவரே, ஜோஸப்?"

கோயபெல்ஸின் கருத்த வெறிகொண்ட விழிகள் ஊக்கத்தில் பிதுங்கின. "இதை நானும் ஏத்துக்கறேன், தலைவா. டியூஸை சுயேச்சையாய் விடுதலை செய்திருப்பது உள்நாட்டிலும், வெளிநாட்டிலும் பெரிய கிளர்ச்சியையே ஏற்படுத்தியிருக்கு. நண்பர்களும் எதிரிகளும், ஒட்டு மொத்தமா வியக்கிறாங்க. தர்மரீதியா நாம அடைஞ்சிருக்கும் முதல்தர வெற்றியைக் கொண்டாடும் தருணத்திலிருக்கோம். உங்களுடைய உத்வேகப்படுத்திய வழிகாட்டுதலுக்குத்தான் முதற்கண் நன்றிகள்."

"மேலும், என் ஜெனரல்களுக்கு தேங்க்ஸ் கிடையாது." ஹிட்லர், கனாரீஸ் பக்கமாய் திரும்பினார். சிறு வஞ்சப்புகழ்ச்சி தொனி கொண்ட புன்னகையுடன், கீழே கிடந்த வரைபடத்தைப் பார்த்துக் கொண்டிருந்தார் கனாரீஸ். "நீங்க சொல்லுங்க, அட்மிரல்... உங்களுக்கும் இது ஒரு தர்மரீதியான வெற்றியா படுதா?"

நேரம் காலம் நெருக்கும்போது உண்மையை பேசுவதே சிறந்தது எனும் விலைமதிப்பற்ற நிலைமை உருவாகும்.

ஆனால், ஹிட்லரைப் பொறுத்தமட்டில், அப்படியொரு நெருக்கடி நிலைமை கனிந்துள்ளதா என்று பிரித்தறிதல் சிரமம்.

''அரசே... மால்ட்டா அரண்மனையில், துப்பாக்கி முனை மிரட்டலில் நங்கூரம் பாய்ச்சப்பட்டதைப்போல, இத்தாலிய போர்ப்படை நின்னுக்கிட்டிருக்கு. கார்ஸீகா மற்றும் ஸர்தீனியா பகுதிகளை நாம கைவிட்டுடணும்... நம்முடைய பழைய கூட்டாளிகள் அந்தப்பக்கத்திலிருந்து போர் தொடுக்க ஏற்பாடுகள் செய்து கொண்டிருப்பதாகவும் இப்ப செய்திகள் உள்ளே வந்து கொண்டிருக்கு.''

மரணக்களை கொண்டது, ஹிட்லரின் வெளிறிய முகம். கண்கள் அகண்டன. புருவப்பகுதியில் சன்னமாய் வியர்வைப் படலம் உருவானது. ஆயினும் ''டியூஸ் முன்மொழிந்திருக்கும் New Italian Socialist Republic எனும் புதிய இத்தாலிய சோஷலிஸத்தைப் பொறுத்தமட்டில்...'' என கனாரீஸ் தொடர்ந்து கொண்டிருந்தார்: ''... நடுநிலைமை வகிக்கும் ஒரேயொரு நாடுகூட - ஸ்பெயின் உட்பட - அரசாங்க உறவு வைத்துக்கொள்ள முன்வரலே.'' இங்கு அவர் தோள்களைக் குலுக்கிக் காட்டினார். ''அரசே... என் கருத்தை, இங்கே வருத்தத்தோட தெரிவிச்சுக்க விரும்பறேன் - அவங்க வெச்சுக்கவும் மாட்டாங்க.''

''உங்க கருத்து?'' - இங்கு வெடித்தார் ஹிட்லர். வெறியானார். ''உங்க கருத்து? என்னுடைய ஜெனரல்களுக்கு இணையா நீங்களும் திறமையற்ற ஒரு ஆள்தான். அவங்க சொல்வதை நான் கேட்கும்போது என்ன நடக்குது? ஃபெயிலியர். தோல்வி. எங்கும். எதிலும்.'' சொல்லிவிட்டு, எச்சரிக்கையாகி விட்டவரைப்போல தோன்றிய முஸ்ஸோலினி பக்கமாய் போனார். அவருடைய தோள்களைச் சுற்றி கரவளையமிட்டார். ''மிலிட்டரியின் தலைமையகம் போட்ட கட்டளையினாலேயா இப்ப

இங்கே டியூஸ் வந்திருக்கார்? நோ, நோ. அவங்க ஒரு கமாண்டோ படையை (கொரில்லாபடை) அமைக்கணும்னு நான் வற்புறுத்தினேன் - அதுக்காக இவர் இங்கேயிருக்கார். என் உள்ளுணர்வு படைஅமைக்கப்படுவது ஒண்ணுதான் இப்போதைக்கு சரியான செயல்னு சொல்லுது.''

கோயபெல்ஸ் படபடப்பாய் தோன்றினார். ஹிம்லர், வழக்கப்படி சாந்தமாய். ஆனால் கனாரீஸ் தனது நிலைப்பாட்டில் உறுதியாயிருந்தார். ''நான் உங்களை தனிப்பட்ட முறையில் விமர்சிக்கலே, அரசே'' என்றார்.

சன்னல் பக்கமாய் தற்போது நகர்ந்திருந்த ஹிட்லர், தனது கைகளைப் பின்பக்கம் இறுக்கமாய் பிணைத்து அங்கே வெளியே பார்த்தபடி நின்றார். ''இப்படி நான் பண்ணுவதற்கெல்லாம் எனக்குள்ளேயே உந்தும் ஓர் உள்ளுணர்வு இருக்கு. இந்த நடவடிக்கைகளெல்லாம் எத்தனை வெற்றிகரமா இருக்கும்னும் எனக்கு தெரியும். வீரம் தெறிக்கும் ஆட்கள், கை பூரா. ஆங், அனைவரும் என் டார்லிங்.'' அவர்களை பார்க்க வட்டமடித்து திரும்பினார். ''நான் இல்லாம க்ரேன் ஸாஸ்ஸோ கிடையாது. நான் இல்லாம ஸ்கார்ஸ்னீ வந்திருக்க முடியாது.'' இதனை, ஏதோ பைபிளின் தேவவாக்கினை சொல்வது போல சொன்னார் அவர். ''உங்ககிட்டே நான் கடுமையா நடந்துக்க விரும்பலே, அட்மிரல். ஆனா நீங்களும் உங்களுடைய மக்களும் அப்வெஹ்ர்-ல என்னத்தைச் சாதிச்சீங்க? எனக்கென்னவோ, ராஜதுரோகி டொஹ்னான்யீ போன்றவங்களை உருவாக்குவது மட்டுந்தான் உங்களால் முடிஞ்ச ஒரே காரியம்னு தோணுது.''

அப்வெஹ்ர்-ல் பணியாற்றிய ஹான்ஸ் வான் டொஹ்னான்யீ, தேசத்துரோக செயல்களில் ஈடுபட்டதற்காக கடந்த ஏப்ரலில் கைது செய்யப்பட்டிருந்தான்.

ஆபத்தின் அறிகுறிகள் தென்பட்டதால், முன்னெப் போதையும் விட இப்போது மிகவும் வெளிறிப் போயிருந்தார் கனாரீஸ். "என் பக்கத்தில் எந்தவிதமான உள்நோக்கங்களும் இருந்தது கிடையாது, ஸார்..."

இவரை ஒதுக்கித் தள்ளிய ஹிட்லர், ஹிம்லர் நோக்கி திரும்பினார். "நீங்க, உயர் ரேங்க் அதிகாரி, ஆங்... என்ன நினைக்கிறீங்க?"

"உங்க கருத்து முழுவதையும் நா்ன் ஏத்துக்கறேன், ஸார்" என்றார் உயர்ந்தபட்ச ரேங்க்கினை வகிக்கும் ஹிம்லர். "முழுக்கவும். இருந்தாலும் எனக்குனு சில எண்ணங்கள் இருக்கு. இந்த ஸ்கார்ஸ்னீ... ஆஃப்ப்ட்டர் ஆல் அவன் ஒரு ஜூனியர் பட்டாளத்தான். இன்னொரு பக்கத்தில், இந்த க்ரேன் ஸாஸ்ஸோ சமாச்சாரம்... ஜெர்மன் ஜெனரல் ப்ரேண்டன்-பெர்கர் கூட்டம் அவங்க கையில எடுத்துக்கிட்டு எதிர்கொள்ள வேண்டிய ஒரு விசயமாத்தான் இதை நான் பார்ப்பேன்."

போரின் துவக்கத்தில் சில ஸ்பெசல் இலக்குகளை செய்து முடிக்க அமைக்கப்பட்ட தனிப்பட்ட குழுவான ப்ரேண்டன்-பெர்கர் குழுவினை மேற்கோள் தந்து அவர் பேசினார். இரகசியமான நாசவேலைகளில் ஈடுபட அமைக்கப்பட்ட அப்வெஹ்ர் பிரிவு-2ன் கைப்பிடியில் இக்குழுவின் நடவடிக்கைகள் வைக்கப்பட்டிருந்தன. கனாரீஸின் திறமையான பிரயாசைகள் இருந்தபோதிலும் யாவற்றிலும் சிறந்து விளங்கிய இக்குழு ஏறத்தாழ அனைத்து பகுதிகளிலும் வீணானது.

தற்சமயம் "எக்ஸாக்ட்லி" என்றார் ஹிட்லர். "உங்களுடைய மதிப்புமிக்க ப்ரேண்டன்-பெர்கர்கள் என்ன பெருசா பண்ணிட்டாங்க? ஒரு நொடி பேச்சுக்காவது தாக்குப்பிடிக்குமா? ஆஹ்ஹா..." தனக்குள் மூண்ட

*நெருப்புக்குள் மீண்டும் இறங்கினார் அவர். ஆயினும், இப்படிப்பட்ட கடுமையான தருணங்களிலும்கூட, தப்பின்றி தனது ஞாபகங்களை மீட்ட முடியும் எனும் அவருடைய அசாத்திய திறமை மிளிர்ந்தது. ''இந்தக் குழு - அதான், ப்ரேண்டன்-பெர்கர் கூட்டம் - இது முதலில் துவக்கப்பட்டபோது 'ஸ்பெசல் இலக்குகளுக்கான கம்பெனி' எனும் பெயரில்தான் துவக்கப்பட்டது. இதன் முதல் தளபதி வான் ஹிப்பல், 'பாதாளத்துக்கே போய் சாத்தானைப் பிடிச்சுடலாம் - நாம் வெற்றி அடைந்த பிறகு'னு இக்கூட்டத்தினரிடம் பேசியதாக எனக்கு ஞாபகம். அட்மிரல்... இந்த வார்த்தைகள் பொய்யாயிருக்கு, யெஸ். ஏன்னா, அவங்க ட்யூஸைப் பிடிச்சுக்கிட்டு வரலே, இது நடந்தேற எல்லா ஏற்பாடுகளையும் நான் பண்ண வேண்டியதாகப் போச்சு.''*

*உச்சத்துக்கு போய் விட்டிருந்தது அவருடைய குரல். கண்கள் அக்னியைக் கொட்டின. பொங்கிய வியர்வையால் முகம் நனைந்திருந்தது. ''நத்திங்!'' என கிறீச்சிட்டார். ''எனக்குன்னு நீங்க எதையும் கொண்டு வரலே - நத்திங். ஆனாலும், இருக்கும் வசதிகள் மற்றும் ஆட்களைக் கொண்டு, இங்கிலாந்திலிருந்து சர்ச்சிலைப் பெயர்த்தெடுத்து உங்களாலே இங்கே கொண்டு வந்திருக்க முடியும் - கொண்டு வந்திருக்கணும்.''*

*ஒருவர் முகம் மாற்றி மற்றொருவர் முகத்தினை ஹிட்லர் பார்க்கும்போது அங்கு குண்டுமணியோசை எழாத அமைதி நீடித்தது. ''இல்லையா, பின்னே?''*

*முசோலினி சுட்டு வீழ்த்தப்பட்டவராய் ஆனார். ஆர்வமாய் தலையசைத்தார் கோயபெல்ஸ். பின்வருமாறு பேசி எரியும் நெருப்புக்கு சாந்தமாய் நெய் வார்த்தது, ஹிம்லர்: ''அதனாலென்ன, அரசே. ட்யூஸைக் கொண்டு வந்து நீங்க சாதிச்சிருப்பதன் மூலம், எதுவும் சாத்தியம்*

என்பதும், அசாத்தியமே கிடையாது என்பதும் நிரூபணமாகியிருக்கே...''

''ரொம்ப சரி.'' ஹிட்லர் மீண்டும் சாந்தமாகியிருந்தார். ''டியர் அட்மிரல்... இது, அப்வெஹ்ரால் என்னவெல்லாம் பண்ண முடியும் என்று நமக்குக்காட்ட அமைந்த ஒரு மகோன்னத வாய்ப்பு.''

கனாரீஸ் சிலையானார். ''நீங்க என்ன சொல்றீங்கன்னு புரிந்து கொள்ள.........''

''ஒன்றுமற்ற ஆங்கிலேய கமாண்டோ படை ஆப்பிரிக்காவிலிருக்கும் ரோமல்லின் தலைமையகத்தைத் தாக்கியிருக்கு. இதைப்போன்ற படைகள் பிரெஞ்சுக் கடற்கரையோரங்களைப் பலமுறை வேட்டையாடியிருக்கு. இந்த நிலைமையில் ஜெர்மன் பயலுங்க திறமை கம்மியானவங்கன்னு இப்பப்போய் நான் நினைக்கணுமா?'' கனாரீஸின் தோள்களைத் தட்டியவர் மிருதுவாய் பேசினார்: ''கையிலிருக்கும் விஷயங்களில் மேற்கொண்டு கவனம் வையுங்க, அட்மிரல். எல்லாத்தையும் முன்னோக்கி கொண்டு போங்க. அப்போ, எதையாவது நீங்க செய்வீங்கன்னு நான் நம்பறேன்.'' சொல்லி விட்டு அவர் ஹிம்லர் பக்கமாய் திரும்பினார்: ''நீங்களும் ஒத்துக்கறீங்க, இல்ல?''

தயங்காமல் ''சர்ட்டன்லி'' என்றார் அவர். ''நிச்சயமா அப்வெஹ்ர் குழு இதை சமாளிச்சுடும்?''

தலையில் இடி இறங்கி விட்டதைப் போல அங்கு நின்று கொண்டிருந்த கனாரீஸைப் பார்த்து மெல்லமாய் சிரித்தார். உலர்ந்த உதடுகளை ஈரமாக்கிக் கொண்டு கிணற்றடிக் குரலில் அவர் சொன்னார்: ''உங்க கட்டளைப்படி, அரசே.''

அவரது தோளைச் சுற்றிக் கரவளையமிட்டார் ஹிட்லர். ''குட். எப்பவும்போல உங்களை நான் இப்பவும் நம்பலாம்னு எனக்குத் தெரியும்.'' அனைவரையும்

வரைபடத்துக்கு முன் இழுப்பதைப் போல அதனை நோக்கி கை நீட்டிய அவர், அதனை நெருங்கினார். ''அண்ட் இப்ப ஜெண்டில்மென் - இத்தாலியன் நிலைமை.''

★ ★ ★

கனாரீஸும் ஹிம்லரும் அன்றிரவு பெர்லினுக்கு டார்னியரில் திரும்பிக் கொண்டிருந்தார்கள். அவர்களிருவரும் விமானதளத்துக்கு தனித்தனி கார்களில் ஒரே நேரத்தில் ராஸ்டன்பெர்க்கிலிருந்து கிளம்பினார்கள். 9 மைல் பிரயாணம் அது. கனாரீஸ் 15 நிமிடங்கள் காலதாமதமாய் வந்தார். இறுதியாய் டார்னியரில் அவர் ஏறியபோது சரியான மனநிலையில் இல்லை. ஹிம்லர் ஏற்கெனவே அவருடைய இருக்கையில் இருக்க, சிறு தாமதத்துக்கு பிறகு கனாரீஸ் அவருடன் இணைந்தார்.

குலுக்கல்களுடன் முன்னுக்குப்போய் காற்று மண்டலத்துக்குள் விமானம் நுழைந்ததும், ''ஏதாவது ட்ரபிள்?'' என்றார் ஹிம்லர்.

சாய்ந்து உட்கார்ந்து கொண்டார் கனாரீஸ். ''நன்றி'' என்றார். ''தேங்க்ஸ். நீங்க எனக்கு அங்கே ரொம்ப உதவியா இருந்தீங்க.''

''சேவை செய்வதிலே எப்பவுமே சந்தோசம்'' என்றார் அவர்.

இப்போது அவர்கள் ஆகாயத்தில் இருந்தார்கள். விமான இன்ஜினின் ஒசை ஆழ்ந்த வண்ணமிருந்தது. ''மை காட்... இன்னிக்கு ராத்திரி அவர் கடுமையாக இருந்தார்'' என்றார் கனாரீஸ். ''சர்ச்சில்லைப் பிடிச்சுட்டு வா. இதைவிட பைத்தியக்காரத்தனமான எதையாவது நீங்க கேட்டிருக்கீங்களா?''

''க்ரேன் ஸாஸ்ஸோ இடத்திலிருந்து முசோலினியை ஸ்கார்ஸ்னீ பிடிச்சுட்டு வந்த சாகசத்தாலே, 'இப்படியெல்லாம் செய்ய முடியாது' என்று இனி யாரும் ஒதுக்க மாட்டாங்க. நம்ம தலைவர் இதைப்போன்ற சாகசங்கள் நிச்சயம் நடக்கும்னு நம்பறார் - கை மேல சாட்சி இருக்கே. ஸோ, உங்களுக்கும் எனக்கும் இனி எல்லாம் அவ்வளவு சுலபமா அமையப் போவதில்ல.''

''முசோலினி கேஸ் ஒருவகை'' என்றார் கனாரீஸ். ''ஸ்கார்ஸ்னீ இதுக்காக நடத்திய சாகசத்தையே எல்லாத்துக்கும் கடைப்பிடிச்சுட முடியாது. வின்ஸ்டன் சர்ச்சில் கேஸ் நிச்சயம் வேற மாதிரியானது.''

''எனக்கு ஒண்ணும் புரியிலேப்பா'' என்றார் ஹிம்லர். ''எதிரிகளின் நியூஸ்ரீல்களை நான் பார்த்திருக்கேன். நீங்களும் நிறைய பார்த்திருக்கணும். லண்டன்ல ஒருநாள். மான்செஸ்டர் அல்லது லீட்ஸ்ல மறுநாள். வாயில் ஒரு சுருட்டைப் பொருத்திக்கிட்டு ரோடில் மக்களோட மக்களா அவர் போறார். உலகத்தலைவர்கள் எல்லோரையும் விட மிகக்குறைந்த அளவு பாதுகாப்பு கொண்ட ஒரே தலைவர் இவர்தான்னு சொல்வேன்.''

''இது தப்பான நம்பிக்கை'' என வறட்சியாய் சொன்னார் கனாரீஸ். ''எது எப்படியிருந்தாலும், ஆங்கிலேயர்கள் முட்டாள்கள் கிடையாது. சந்தேகம்னு வந்தா, கண்ணிமைக்கும் நேரத்துல உங்க வயித்திலே குண்டைப் பாய்ச்சிவிடும் துணிவானவர்கள் அவர்கள். இந்த கிழவனையே எடுத்துக்கங்க... கையோட தன்னுடைய கோட் பாக்கெட்டுல ஒரு பிஸ்டலை வெச்சுக்கிட்டுத்தான் போய்க்கிட்டிருப்பார். வம்புனு தெரிஞ்சா, ஒரே சூடுதான்.''

இருவருக்கும் ஒருத்தன் காபி கொண்டு வந்து தந்தான். "அப்ப நீங்க இந்த சமாச்சாரத்திலே தொடர்ந்து மூக்கை நுழைக்க விரும்பலே?" என்று கேட்டார் ஹிம்லர்.

"என்ன நடக்கும்னு, எனக்கு தெரிஞ்சிருக்கும் அதே அளவு உங்களுக்கும் தெரியும்" என்றார் கனாரீஸ். "இன்னிக்கு புதன்கிழமை. இந்த முட்டாள்தனமான ஐடியா முழுவதையும் அவர் வெள்ளிக்கிழமை சுத்தமா மறந்திருப்பார்."

தனது காபியை பருகியபடி ஆமோதிப்பாய் தலையசைத்தார் ஹிம்லர். "நீங்க சொல்வதும் சரின்னே தோணுது."

கனாரீஸ் எழுந்து நின்றார். "மன்னிக்கணும்" என்று விட்டு, "கொஞ்சம் தூங்கலாம் போல இருக்கு" என்றார்.

அடுத்த இருக்கைக்குச் சென்று, அங்கிருந்த கனமான கம்பளியைப் போர்த்திக் கொண்டு, எதிரிலிருந்த மூன்று மணிநேர பிரயாணத்துக்கு தன்னைத்தானே வசதியாக்கிக் கொண்டார்.

அடுத்திருந்த ஹிம்லர், அவரையே, வைத்த கண் எடுக்காமல், கடுமையாய் முறைத்துக் கொண்டிருந்தார். அவர் முகத்தில் எவ்விதமான 'பாவமும்' இல்லை - எவ்விதமான பிரதிபலிப்பும் இல்லவே இல்லை. அவரது வலக்கன்னத்து சதை மட்டும் விடாது துடித்துக் கொண்டிருப்பது தெரியாமலிருந்தால், அங்கு ஒரு உயிரற்ற சடம் இருப்பதாகவே நம்ப முடியும்.

★ ★ ★

கனாரீஸ், பெர்லின்-அப்வெஹர்-ல் உள்ள அவரது வளாகத்தை வந்தடைந்தபோது வைகறை ஆகியிருந்தது. நேராய் தனது அலுவலகத்துக்கே சென்றார் அவர். பணியாளிடம் "காபி" என்றார். பிறகு "நிறைய காபி"

என்றார். அவன் கதவை சாத்திவிட்டு வெளியேறும்போது மீண்டும் அவனை கனாரீஸ் அழைத்தார். ''கர்னல் ரேடில் உள்ளே இருக்காரா?''

''நேற்று ராத்திரி இங்கேயே தூங்கிட்டார்னு நினைக்கிறேன், ஸார்.''

''குட். நான் அவரை பார்க்க விரும்பறேன்னு சொல்லு.''

கதவு மூடப்பட்டது. உடனே திடீரென்று களைத்தார் அவர். டெஸ்க்குக்குப் பின்னாலிருந்த நாற்காலியில் அப்படியே தன்னை போட்டுக் கொண்டார். அந்த டெஸ்க்கில் பளிங்கால் செய்யப்பட்ட ஒரு பேப்பர் வெயிட் இருந்தது... அதில் வெண்கலத்தால் ஆன, பொய்பேசாத, பொய்கேளாத மற்றும் அதர்மத்தைப் பார்க்காத மூன்று குரங்குகள் இருந்தன.

அவற்றின் தலைகளை மிருதுவாய் தட்டி விட்டு, ''நான்தான்!'' என்றார் அவர்.

தன்னை தன் கட்டுக்குள் கொண்டு வர ஆழ்ந்த சுவாசத்தை மேற்கொண்டார் அவர். இந்த பைத்தியக்கார உலகத்தில் கத்திமுனையில் நடக்கும் ஆபத்தான கட்டங்களும் இவருக்கு நேர்ந்ததுண்டு. இவர் கற்பனைகூட பண்ணியிராத சமாச்சாரங்களையெல்லாம் தனது சந்தேகப்பட்டியலில் சேர்க்க வேண்டியிருந்தது. இதற்கு உதாரணங்கள் சொல்ல முடியும். ஸ்மொலென்ஸ்க்கிலிருந்து ராட்டன்ஸ்பெர்க் வந்து கொண்டிருந்த ஹிட்லர் பிரயாணித்த விமானத்தைப் பொடிப்பொடியாக்க இரண்டு ஸீனியர் அலுவலர்களால் முயற்சிக்கப்பட்டது, ஒன்று. மற்றொன்று, 'என்ன நடக்கலாம்?' என்ற கேள்வியின்மீது ராஜதுரோகி டொஹ்னான்யீயும் அவனுடைய கூட்டாளிகளும் உருவாக்கும் பயக்கலவரம்.

*காபி, க்ரீம் போன்றவற்றை தட்டில் வைத்துக் கொண்டு வந்த பணியாளிடம் ''வைத்து விட்டுப் போ' என்றார் அவர். ''நானே பார்த்துப்பேன்.''*

*பணியாள் சென்றான். கனாரீஸ் கோப்பையில் காபியை ஊற்றும்போது கதவில் கொட்டு விழுந்தது. வந்தவர், பரேட் மைதானத்தில் இருப்பதைப் போலவே யூனிபார்முடனும், பார்க்கும் பார்வையில்கூட ராணுவ தீட்சண்யத்துடனும் இருந்தார்.*

*''ஹா, நீங்களா மேக்ஸ்'' என்றார் கனாரீஸ். ''காபி சாப்பிடுங்க. வரவர, ஒவ்வொரு முறை நான் ராஸ்டன்பெர்க் போய் திரும்பும்போதும் எனக்கு ஒரு துணை வேணும் எனும் எண்ணம் கூடிக்கிட்டே போகுது.''*

*மேக்ஸ் ரேடிலுக்கு வயது 30. ஆனால் பத்து பதினைந்து வயது கூடுதலாய் தெரிந்தார். 1941 போரில் வலக்கண்ணையும் இடக்கையையும் அவர் இழந்து விட்டார். இவ்வாறு வீட்டுக்குள் வந்து விழுந்துவிட்ட தினத்திலிருந்து கனாரீஸூக்கு ஒத்தாசையாய் இருந்து வருகின்றார். ஊனமாவதற்கு முன் பிரிவு 3-ன் தலைவராய் இருந்தார் ரேடில். அப்வெஹ்ர் பகுதியின் மைய தளவாடமாக இருந்தது இது. மிகவும் கடினமான இலக்குகளை செய்து முடிப்பதற்காகவே நிறுவப்பட்ட பிரிவாகும், 3. மேலும், மற்ற பிரிவுகளுக்குள்ளும் மூக்கை நுழைக்கும் பிரத்யேக அனுமதி ரேடிலுக்கு அளிக்கப்பட்டிருந்தது... இதுவே தன்னைச் சார்ந்த ஏனையவர்களின் வெறுப்பினை சம்பாதிக்கும்படியும் இவருக்கு ஆனது.*

*கனாரீஸ் சொன்னதற்கு இப்போது பதில் தந்தார் ரேடின்: ''நிலைமை என்ன அத்தனை மோசமாவா இருக்கு?''*

''படுமோசம்'' - அவரிடம் கனாரீஸ் சொன்னார். ''நடக்கும் பீரங்கியா இருக்கார் முசோலினி. இந்த கோயபெல்ஸ் வழக்கம்போல நடந்துக்கிறார் - பள்ளிக்கூடத்துப் பையனைப் போல இப்படியும் அப்படியும் தாவிக்கிட்டே இருக்கார்.''

சக்திமிகும் மனிதர்களைப் பற்றி அட்மிரல் இப்படி விமர்சிக்கும்போது எப்போதும் ஏற்படும் ஒரு தயக்கமும் பின்வாங்கலும் இப்போதும் ரேடிலுக்குள் விளைந்தன. ஒவ்வோர் அலுவலகத்திலும் என்னென்ன போன்கள் வருகின்றன என்பது தினசரி கண்காணிக்கப்பட்டாலும், இதையும் மீறி என்ன நடக்கின்றது என்பது பற்றி ஒருவராலும் நிச்சயப்படுத்தி பேச முடியாது.

கனாரீஸ் தொடர்ந்து கொண்டிருந்தார்: ''இந்த ஹிம்லர் வழக்கம்போலவே சவமா நின்னார். ஃபுர்ரெர் இருக்காரே, அவர்...''

அவசரமாய் வெட்டினார் ரேடில்: ''இன்னும் கொஞ்சம் காபி, அட்மிரல்?''

கனாரீஸ் மறுபடியும் உட்கார்ந்து கொண்டார். ''அவர் என்ன சொல்றார்னு உங்களுக்கு தெரியுமா, மேக்ஸ்?'' என்றார். ''சர்ச்சிலைக் கொண்டு வரணுமாம்.''

அதிர்ந்து போய் முழித்தார் ரேடில். ''குட் காட். கிறுக்குப் பிடிச்சிடுச்சா அவருக்கு?''

''யாருக்குப்பா தெரியும்? ஒரு நாள் ஆமாம்கிறார். அதே சமாச்சாரத்துக்கு மறுநாள் இல்லேங்கிறார். அவரை உயிரோட கொண்டு வரணுமா இல்லே சவமா கொண்டு வரணுமா என்பதைப் பற்றி அவர் ஒண்ணும் கோடிகாட்டல. 'தேவைப்பட்டால், நரகத்திலிருந்து சாத்தானையும் கொண்டு வா.' இதுதான் அவர் சொன்னது - உணர்ச்சிவசமாய்.''

''மற்றவங்க? இதை அவங்க எப்படி எடுத்துக்கிட்டாங்க?'' - ரேடில் கேட்டார்.

''வழக்கம்போலவே அமைதியாகவே இருந்தார் கோயபெல்ஸ். ஹிம்லரை விளங்கிக்க முடியல. இவருக்கு ஆதரவா எப்பவும் ஃபுர்ரெர். இதை எப்படி செய்து முடிப்பதுன்னு இப்போதைக்கு ஆராயணும்னார். ஃபீஸீபிள் ஸ்டடி பண்ணணுமாம் - 'சாத்தியக்கூறுகளின் பட்டியல்.' இப்படித்தான் அவர் சொன்னார்.''

''ஓ'' என்ற ரேடில் கேட்டார்: ''இந்த விஷயத்துல ஃபுர்ரெர் ஸீரியஸா இருப்பதா நீங்க நினைக்கிறீங்களா?''

''அஃப்கொர்ஸ் நாட்.'' சொல்லிவிட்டு கட்டிலின் விளம்புவரை போய் உட்கார்ந்து கொண்டவர், தன்னுடைய ஷூவின் லேஸினை அவிழ்க்கலானார். ''இதையெல்லாம் அவர் அப்பவே மறந்திருப்பார்'' என்றும் கூடுதலாய் விளக்கினார். தன்னுடைய கோட்டினை அவிழ்த்து விட்டுக் கனமான மேலங்கியால் தன்னை போர்த்திக் கொண்டவர், ''ஹிம்லர் மட்டுந்தான் ஒரே தலைவலின்னு நான் சொல்லுவேன்'' என்றார். ''என் காலை வாரிவிடுவதற்காகவே மனுசன் காத்துக்கிட்டிருக்கான். நீங்களே பார்த்துக்கிட்டிருங்க - சரியான அவகாசம் வாய்க்கும்போது, எனக்கு சொல்லப்பட்ட இந்தக் கட்டளையை நான் சரியா கையிலெடுத்து முடிக்கலேன்னு குத்திக்காட்டி மாட்டி விடறானா இல்லையான்னு.''

''ஸோ, இப்ப இதுல நான் என்ன பண்ணணும்னு நினைக்கிறீங்க?''

''ஹிம்லர் என்ன ஆலோசிச்சாரோ, அதை. ஒரு ஃபீஸீபிள் ஸ்டடி. என்னவோ நாம நிஜமாகவே இதுக்காக திட்டம் போட்டுக்கிட்டிருப்பதைப் போல காட்டும் ஒரு பெரிய ரிப்போர்ட். உதாரணத்துக்கு, இப்ப சர்ச்சில்

*கனடாவுல இருக்கார், இல்லையா? நீர்மார்க்கமாக திரும்பிக்கிட்டிருக்கலாம். ஒரு சரியான பகுதியில் சரியான நேரத்திலே, இன்னொரு கப்பல் மூலமா நாம் அவருடைய கப்பலை நெருங்க முடியுமானு பார்த்ததைப் போல ஒரு ரிப்போர்ட் தயாரிக்கலாம்! ஃபுர்ரெர் இதை நம்புவார் - மிராக்கில்ஸ் மேல அவருக்கு நம்பிக்கை அதிகம். சரி, நான் படுக்கறேன். ஒன்றரை மணிநேரத்துக்கு அப்புறம் என்னை எழுப்பும்படி க்ரோஜ்ஜெல்கிட்டே சொல்லிடு.''*

*சொன்னவர் தான் போர்த்தியிருந்த போர்வையை உடல் முழுக்க மூடுமாறு இழுத்து விட்டுக்கொண்டு படுத்துக்கொள்ள, ரேடில் வெளியேறினார்.*

*தன் அலுவலகத்துக்கு திரும்பியிருந்த ரேடில் தன்னுடைய டெஸ்க்கில் சாய்ந்தமர்ந்து, பவேரியா பகுதி மலைப்பிரதேசத்தில் பாதுகாப்பாய் இருக்கும் தனது மனைவி மற்றும் மூன்று பெண்களின் புகைப்படத்தினை வருத்தமும் இயலாமையும் கலந்து பார்த்தார். ரேடிலுடைய மனநிலைமையை சட்டென படித்து விடவல்ல ஹோஃபர், இவரிடம் ஒரு சிகரெட்டையும் கொஞ்சம் நிரப்பப்பட்ட மது கோப்பையையும் தந்தான்.*

*''ரொம்ப கடுமையா இருக்கா நிலைமை?''*

*''ரொம்ப கடுமையா இருக்கு.''*

*இப்படி சொல்லிவிட்டு மதுவைக் குடித்த ரேடில், கடுமையான விஷயத்தை சொன்னார்.*

★ ★ ★

*இப்படியே எல்லாம் நின்று போயிருக்கும், ஓர் அசாதாரண நிகழ்வு நடக்காமலிருந்திருந்தால். கனாரீஸுடன் உரையாடல் நடந்து சரியாய் ஒரு வாரம் கழிந்தது. 22ஆம் தேதி காலைப்பொழுது. மூன்று நாட்கள்*

பாரீஸ் போய் வந்ததால் கூடியிருந்த பேப்பர்களின்மீது தனது முழு கவனத்தையும் ரேடில் புதைத்து போராடிக் கொண்டிருந்த சமயம்.

நல்ல மூடில் ரேடில் இல்லை. ஆகவே, கதவை திறந்து கொண்டு ஹோஃபர் நுழைந்தபோது சிடுசிடுவென மாறிப்போன அவர், ''ஒரு தடவை சொன்னா உனக்கு ஏறாதா? என்னை தனியா அமைதியா விடுன்னு சொன்னேன் இல்ல... இப்ப என்ன?'' என்று எரிந்தார்.

''மன்னிக்கணும் ஸார். ஒரு ரிப்போர்ட் என் கவனத்துக்கு வந்தது. அது உங்களையும் ஈர்க்கும்னு நான் நினைச்சேன்.''

''எங்கிருந்து அது வந்தது?''

''அப்வெஹ்ர், ஒன்று.''

வெளிநாடுகளிலிருக்கும் வேவு பார்ப்பவர்களைக் கையாளும் துறை இது. தனக்குள் உருவான சின்ன ஈடுபாட்டை ரேடிலால் பிரித்தறிய முடிந்தது. கையிலிருந்த கோப்பினை தனது நெஞ்சோடு அணைத்துக் கொண்டு ஹோஃபர் அங்கேயே காத்திருந்தான். தன் கையிலிருந்த பேனாவை ஒரு பெருமூச்சுடன் கீழிறக்கிய ரேடில், ''ஆல் ரைட். அதைப் பற்றி சொல்லு'' என்றார்.

அவருக்கு முன்னால் கோப்பினை வைத்து திறந்தான் ஹோஃபர். ''இங்கிலாந்திலிருக்கும் ஏஜெண்ட்டிடமிருந்து வந்திருக்கும் இது ஒரு லேட்டஸ்ட் ரிப்போர்ட். சங்கேத பேர்: ஸ்டார்லிங்.''

ஒரு சிகரெட்டை எடுப்பதற்காக முன்னால் வளைந்து வந்த ரேடில், முதல் தாளில் இருந்த பெயரினை நோட்டமிட்டார்: ''மிஸஸ் ஜோன்னா க்ரே.''

''கடற்கரையையொட்டி நார்ஃபால்க் பகுதியிருக்கு. இதன் வடக்குப்பகுதியில் இருக்கா இவ. கிராமம். ஸ்டட்லே கான்ஸ்டபிள் இதன் பேர்.''

''ஓ, ஓ'' என்றார் ரேடில் திடுமென்று, விளைந்த உற்சாகத்தோடு. ''ஒபே நிர்மாணம் பற்றிய தகவல்களை சேகரித்துத் தந்த பொண்ணுதானே இவ?'' என்ற ரேடில் கோப்பின் முதல் சில பக்கங்களைப் புரட்டினார். முகஞ்சுளித்தார். ''இது ஒரு கழுத்தறுக்கும் சமாச்சாரமாச்சே. எப்படி சமாளிச்சா அவ?''

''ஸ்பெயின் நாட்டு தூதரகத்தோட அவளுக்கு எக்ஸலெண்ட் தொடர்பிருக்கு. அரசாங்க லக்கேஜூகளுக்குள்ளே இவளுடைய சமாச்சாரங்களை அவங்க போட்டுடறாங்க. ஜஸ்ட் ஒரு தபால் போல ஆகிடுது அது. மூணு நாட்களுக்குள்ளே நாம அதை டெலிவரி எடுத்துடறோம்.''

''அசகாயம்'' என்றார் ரேடில். ''எத்தனை நாளைக்கு ஒரு தடவை அவ ரிப்போர்ட் பண்றா?''

''மாசத்துக்கு ஒருமுறை. அவளுக்குன்னு ஒரு ரேடியோ கனெக்ஷனும் இருக்கு. ஆனா அதை அவள் அதிகமா பயன்படுத்துவதில்லை. இருந்தாலும், அவளுக்கான இந்த தொடர்பை வாரத்துக்கு மூணு முறை தயாரா வெச்சிருக்கா அவள் - ஒருவேளை அவளைத் தொடர்புக் கொள்ள வேண்டிய அத்தியாவசியம் ஏற்பட்டால். அவளுக்கான தொடர்பை உண்டு பண்ண இந்த பக்கம் இருக்கும் நபர், கேப்டன் மேயர்.''

''ஆல் ரைட்'' என்றார் ரேடில். ''எனக்கு கொஞ்சம் காபி தா. நான் இதை படிக்கிறேன்.''

''இண்ட்ரஸ்டிங்கான பகுதிகளை நான் சிகப்பு மையால் குறிச்சிருக்கேன், ஸார். மூணாம் பக்கத்தில் இதை நீங்க பார்க்கலாம். இப்பகுதியின் பிரிட்டிஷ் சர்வே மேப் ஒண்ணையும் பெரிய சைசில் தந்திருக்கேன்.'' இவற்றை சொல்லிவிட்டு அவன் வெளியேறினான்.

முக்கிய தகவல்களை உள்ளடக்கிய சிறந்த ஆவணமாய் இருந்தது அது. பக்கங்களைப் புரட்டியபடி மூன்றாம் பக்கத்துக்கு வந்தபோது சிகப்பு மையால் அடிக்கோடிட்டுக் காட்டப்பட்ட தகவல்கள், ரேடிலின் அடிவயிற்றுக்குள் பரபரப்புச் சாறினை ஊறும்படி செய்தன.

சிம்பிளான தகவல்தான். நவம்பர் ஆறாம் தேதி சனிக்கிழமையன்று வாஷ் எனும் பகுதிக்கு அருகிலுள்ள ராயல் ஏர்ஃபோர்ஸ் பாம்பர் கமாண்ட் பகுதியை பிரிட்டன் பிரதம மந்திரி வின்ஸ்டன் சர்ச்சில் பார்வையிடப் போவதாக ஏற்பாடு. இதற்கு பிறகு, அன்றைய தினமே, கிங்ஸ் லின் பகுதியில் ஒரு பேக்டரியை பார்வையிட்டு விட்டு அங்கிருக்கும் பணியாளர்களுக்கு நடுவே அவர் உரையாற்றப் போவதாய் ஓர் ஏற்பாடு.

இதற்கு பிறகு வந்தது அந்த இண்ட்ரஸ்டிங் பகுதி. நேராய் லண்டனுக்கு திரும்புவதற்கு பதிலாக ஸ்டேட்லே க்ராஞ்சிலிருக்கும் சர் ஹென்றி வில்லோக்பீயின் வீட்டில் வார இறுதி நாட்களைக் கழிக்க அவர் விரும்புகிறார். இது, ஸ்டேட்லே கான்ஸ்டபிள் கிராமத்தின் கோடியில் ஐந்து மைல்கள் தள்ளியிருக்கின்றது. இது முழுக்க முழுக்க ஒரு தனிப்பட்ட விஸிட். காரணங்கள் ரகசியம். இத்திட்டம் பற்றி கிராமத்தில் இருக்கும் ஒருத்தருக்கும் எதுவும் தெரியாது. ஆனால், சர் ஹென்றி, ஒரு ரிடையர்ட் கப்பற்படை கமாண்டர், அவருடைய தனிப்பட்ட தோழியான ஜோன்னா க்ரே மீது வைத்திருந்த நம்பிக்கையால் இவரிடம் மட்டும் சொல்லி விடுவதை தவிர்க்க முடியாதவரானார்.

சில கணங்கள் ரிப்போர்ட்டை முறைத்தபடி ரேடில் உட்கார்ந்த பிறகு, முன்னாலிருந்த சர்வே மேப்பினைப் பிரித்தார். அந்த கணத்தில் அவரது அறைக்கதவு திறக்கப்பட்டு காபியைக் வந்தது. ஹோஃபர் ட்ரேயை டீ-பாயில் வைத்தான். ஒரு கோப்பை காபி கலந்தான். அதை

ரேடிலுக்கு தந்துவிட்டு எவ்விதமான முகபாவமும் காட்டாது அமைதியாய் நின்றான்.

நிமிர்ந்து பார்த்தார் ரேடில். ''ஆல் ரைட். வா. அந்த இடம் எங்கேயிருக்குன்னு காட்டு. உனக்கு தெரியும்னு நினைக்கிறேன்.''

''நிச்சயமா, ஸார்.'' வாஷ் பகுதியின் மீது தனது விரலைப் பதித்த அவன், அதனை அப்படியே தெற்கு கடற்கரையோர பகுதியில் நகர்த்திக் கொண்டு போனான். ''ஸ்டேட்லே கான்ஸ்டபிள். இதோ இங்கே கடற்கரையோர ப்ளாக்கெனி மற்றும் க்ளே. இவையெல்லாம் சேர்ந்து ஒரு முக்கோணமாகுது. தனிமைப்படுத்தப்பட்ட ஒரு பகுதி - படு பட்டிக்காடு. பரந்துப்பட்ட கடற்கரையும் ஏராளமான உப்பளங்களும் நிறைந்த தனிமை கடற்கரை.''

வரைபடத்தையே சற்று நேரம் பார்த்துக் கொண்டிருந்த ரேடில் ஒரு முடிவுக்கு வந்தார். அதன்பின் சொன்னார்: ''போ. கிளம்பு. ஹன்ஸ் மேயரை என்கிட்டே கூட்டிட்டு வா. அவரோட நான் கொஞ்சம் பேசணும். எதைப் பற்றினு துளி துப்புகூட தந்துடாதே.''

''நிச்சயமா, ஸார்.''

கதவை அடைத்து விட்டு ஹோஃபர் போனதும் அறையே திடுமென்று ஆளரவமற்ற அமைதி கண்டது. நடக்கும் எல்லாமும் அவருக்கு நிறைவற்றதாய் தோன்றின. ஃப்யூரர், ஹிம்லர், கனாரீஸ் - போதாக்குறைக்கு இப்போது இந்த சர்ச்சில் விவகாரம். அற்பமான நடவடிக்கைகள். கிழக்குப் பிராந்தியத்தில் ஆயிரக்கணக்கான நல் ஆன்மாக்கள் மரித்துக் கொண்டிருக்க, எவ்விதமான பலனும் கிட்டாத சமாச்சாரத்தைப் பிடித்துக் கொண்டு இங்கு தொங்கிக் கொண்டிருக்கிறார்கள்.

சுய பரிசோதனை. அதனால் காரணம் விளங்காது விளைந்த கோபம். அந்நேரம் பார்த்து கதவில் விழுந்த தட்டுதல்கள்.

''ஆஹா, வந்திருப்பது மேயர். வந்ததற்கு நன்றிகள்'' என்றார் ரேடில்.

வந்தவர் ஐம்பது வயதிலிருந்தார். உலகப்போரின் போது நீர்மூழ்கிப்-படகு கமாண்டராக விளங்கியவர். ஜெர்மன் கடற்படையிலிருந்த மிக இளைய தளபதி. 1922 முதல் உளவுத்துறையில் முழுவதுமாய் இணைந்து இயங்கிக் கொண்டிருப்பவர். நேரில் தெரிவதை விட மிகவும் கூர்மையும் சாதுர்யமும் மிக்கவர்.

''ஹலோ ஸார்'' என்றார் அவர், அடக்கமாய்.

''உட்காருங்க, மேன், உட்காருங்க.'' ரேடில் ஒரு நாற்காலியை சுட்டிக்காட்டினார். ''உங்களுடைய ஒரு தரகர் மூலமா வந்துள்ள சேதியை நான் இப்ப படிச்சுக்கிட்டிருந்தேன். டார்லிங் ஆச்சரியப்படுத்தும் தகவல்கள்.''

''ஆ, யெஸ்.'' மேயர் தனது மூக்குக் கண்ணாடியைக் கழற்றி அதனைத் தனது பட்டுக் கைக்குட்டையால் பளபளப்பாக்கலானார். ''ஜோன்னா க்ரே. குறிப்பிடும்படியான ஒரு பொண்ணு.''

''அவங்களைப் பற்றி எனக்கு சொல்லுங்க.''

மேயர் தயங்கினார். அவர் முகத்தில் சிறு சுளிப்பு. ''உங்களுக்கு என்னவெல்லாம் தெரியணும், ஸார்?''

''எவ்ரிதிங்!'' - ரேடில் சொன்னார்.

எதற்காக என்று கேட்க சற்றே தயங்கினார் மேயர். ஆனால் அப்படி கேட்பதற்கு பேசாமல் இருந்து விடுவதே மேல் என்று ஆனார். மூக்குக்கண்ணாடியை மீண்டும் அணிந்து கொண்டு பேச ஆரம்பித்தார்.

★ ★ ★

மார்ச் 1875ல் ஆரஞ்ச் ஃப்ரீ ஸ்டேட்டிலிருக்கும் சிறு நகரமான வியர்ஸ்காப் எனுமிடத்தில் ஜோன்னா வான் ஊஸ்டன் என்ற பெயரில் பிறந்தார், ஜோன்னா. இவரது தந்தை ஒரு விவசாயி. டச்சு சீர்திருத்த சர்ச்சின் பாதிரி. பிரிட்டிஷ் எதேச்சாதிகாரத்திலிருந்து தப்பிக்க பத்து வயது இருக்கும்போதே இடம் பெயர்தலில் தைரியமாய் பங்கேற்றவர்.

இருபது வயது ஆகும்போது டிர்க் ஜேன்ஸன் என்ற விவசாயியை மணந்து கொண்டார் இவர். 1898ல் ஒரு பெண்குழந்தை பிறந்தது.

மே 1900ல் கமாடோ சண்டையின்போது இவருடைய தந்தையார் கொல்லப்பட்டார். இந்த மாதத்திலேயே சண்டை ஓய்ந்தாலும் பல கருத்து வேறுபாடுகள் கொண்ட சிக்கலான வருடங்களாய் தொடர்ந்து வந்த இரண்டு வருடங்கள் அமைந்தன. கொரில்லா படையில் சேர்ந்து சண்டைக்கெல்லாம் போனார் ஜோன்னாவின் கணவர்.

11 ஜூன் அன்று ஜேன்ஸனை தேடிக்கொண்டு வந்தது பிரிட்டிஷ் படை. மலைப்பிரதேசத்தில் ஏற்பட்ட மோதலில் உண்டான காயங்களுக்குத் தகுந்த சிகிச்சை கிடைக்காதால் இரண்டு மாதங்களுக்கு முன்பே அவர் இறந்துவிட்ட சேதி அறியாத ஜோன்னாவை வந்து துளைத்தெடுத்தது அனைத்துக்கும் காரணமான பிரிட்டிஷ் படை. ஜோன்னாவும் அவருடைய தாயாரும் குழந்தையும் மட்டுமே வீட்டிலிருந்தார்கள். பதில் தர மறுத்தார் ஜோன்னா. உடனே விசாரணை என்ற பெயரால் அழைத்து செல்லப்பட்டார் அவர். அங்கு இருமுறை மானபங்கப்படுத்தப்பட்டார்.

இது குறித்து ஜோன்னா தந்த கம்ப்ளெயிண்ட்டை மறுத்த பிரிட்டிஷ் கமாண்டர்கள், கொரில்லா தாக்குதலில்

ஈடுபட்டோரின் வயல்களை எரித்தார்கள். அவர்கள் வசித்த பகுதிகளை அழித்தார்கள். இத்தகையவர்களை ஒதுக்கப்பட்டவர்களாய் வகைப்படுத்தினார்கள்.

இப்படிப்பட்டவர்களை வைத்திருந்த முகாம்கள் படுமோசமாய் பராமரிக்கப்பட்டன. வியாதிகள் பெருகின. சிகிச்சைகள் மறுக்கப்பட்டன. எனவே ஆயிரக்கணக்கானோர் மாண்டார்கள். ஜோன்னாவின் தாயார் மற்றும் குழந்தை உட்பட. இவரேகூட இறந்திருக்கக்கூடும் - இவர் தங்கியிருந்த முகாமுக்கு அழைத்து வரப்பட்ட இங்கிலீஷ் டாக்டர் சார்ல்ஸ் க்ரே தகுந்த சிகிச்சை தராமல் போயிருந்தால். முகாம்கள் பராமரிப்பின்றி பலர் உயிரிழக்கிறார்கள் என்ற கதறல் ஆங்கிலேய ஏகாதிபத்தியத்தை அச்சுறுத்தும் அளவுக்கு உயர்ந்ததால் இந்த ஏற்பாடு நடந்தது.

பிரிட்டிஷ்காரர்கள் மீது ஜோன்னாவுக்குள் ஏற்பட்டிருந்த கடுங்கோபம் இப்போது அமுக்கப்பட்ட பச்சாதாபமானது. இருந்தாலும், சார்ல்ஸ் க்ரேவே முன்வந்து வழிமொழிந்த போது, அவரை மணந்து கொள்ள சம்மதித்தாள் ஜோன்னா. இருபத்தியெட்டு வயதில் வாழ்க்கையே சின்னா பின்னமாக்கப்பட்டு இருந்தாள் ஜோன்னா. கணவன், குழந்தை என எல்லோரையும் பலி கொடுத்து விட்டு கையில் தம்புடி இல்லாமல் தெருவில் நின்ற காலமது.

இவரைவிட பதினைந்து வயது மூத்தவரான சார்ல்ஸ், ஜோன்னாவை சந்தேகமற விரும்பினார். கருணையாகவும் இரக்கத்துடனும் நடந்து கொண்டார். உள்ளுக்குள்ளேயே கனன்று கொண்டிருந்த எரிச்சல் மற்றும் பரபரப்பான பொறுமையின்மையுடனேயே, காலம் செல்லச்செல்ல சார்ல்ஸ் மீது ஒருவித ஈர்ப்பினை வளர்த்துக் கொண்டார் ஜோன்னா.

லண்டன் பைபிள் சொஸைட்டி, ரொடீஷியா, கென்யா, சூலூ போன்ற பகுதிகளிலிருந்து வந்த அழைப்புகளை ஏற்றுக் கொண்டு போய் வந்தார் டாக்டர். 1925ல் வாதம் தாக்கியதால் இறந்துபோனார். அவருடைய அனைத்து சேமிப்புகளும் சேர்ந்து வெறும் நூற்றைம்பது பவுண்டுகள் மட்டுமே ஜோன்னாவுக்கு வந்தன - ஐம்பது வயதில், பரந்து கிடந்த உலகை தனிமையில் எதிர்க்கொள்ள.

இக்காலகட்டத்தில் தென்னாப்பிரிக்காவை பிரிட்டிசாரின் கைப்பிடியிலிருந்து விடுவிக்க நடைபெற்ற எக்ஸ்ட்ரிமிஸ்ட் கூட்டங்களில் பங்கேற்கலானார் இவர். அப்போது ஒருமுறை ஜெர்மானிய இன்ஜினீயரான ஹன்ஸ் மேயர் என்பவரை சந்தித்தார். இவரைவிட பத்து வயது இளையவர் ஆனாலும் கவர்ச்சியால் கவரப்பட்டவர். தன்னுடைய முதல் திருமணத்திலிருந்து இன்று வரை, முதன்முறையாக ஜோன்னா உணர்ந்த, எதிர்ப் பால் ஈர்ப்பாய் இது அமைந்தது.

நிஜத்தில், ஜெர்மானிய கப்பல் உளவுத்துறையின் தரகராவார் மேயர். தென்னாப்பிரிக்காவில் உள்ள கப்பல் தளங்கள் பற்றிய அனைத்து தகவல்களையும், எத்தனை பெற முடியுமோ அத்தனையையும் பெறுவதற்காக கேப் டவுன் பகுதியில் பணியில் அமர்த்தப்பட்டிருந்தார் இவர். எதிர்பாராவிதமாக, ஜோன்னாவுக்கு வேலை தந்தவர் அட்மிரால்ட்டிக்காக (இங்கிலாந்து ராஜாங்கத்துக்காக) வேலை செய்தவராகின்றார். எவ்வித காரணமும் இல்லாமல், அவருடைய சில தஸ்தாவேஜூக்களைக் கொண்டு வந்து மேயரிடம் தந்தார் ஜோன்னா... அவற்றை நகலெடுத்துக் கொண்டு திருப்பி தந்தார் மேயர்.

இவர் மனம் விரும்பியவருக்கு இதனைச் செய்வதில் மகிழ்ந்தார் ஜோன்னா. ஆனால் இதைவிடவும் உயரிய காரணமொன்று இவருடைய மகிழ்ச்சிக்கு இருந்தது. முதன்முறையாக இங்கிலாந்துக்கு எதிராக இடி இறக்குகிறார்

ஜோன்னா. தான் பட்டதற்கெல்லாம் ஒரு கூலி கிடைப்பதாய் உணர்ந்தார்.

ஜெர்மனிக்குத் திரும்பிப்போன மேயர் தொடர்ச்சியாய் இவருக்கு கடிதங்கள் போட்டுக் கொண்டிருந்தார். அப்போது, 1929ல், தன் வாழ்க்கையின் முதல் அதிர்ஷ்ட கட்டத்தினை ஜோன்னா அனுபவிக்கும்படி நேர்ந்தது.

நார்விச் நாட்டின் வக்கீல் கம்பெனி ஒன்றிடமிருந்து ஒரு தகவல் வந்தது இவருக்கு. இவருடைய மறைந்த கணவரின் மாமி ஒருத்தி காலமாகி விட்டதாகவும், அவர் ஸ்டேட்லே கான்ஸ்டபிள் பகுதிக்கு வெளியே ஒரு வீட்டை இவருக்காக எழுதி வைத்திருப்பதாகவும், ஒரு வருடத்துக்கு ஏறத்தாழ 4000 பவுண்டுகள் வருமானம் இவருக்கு கிடைக்குமாறு ஏற்பாடு செய்திருப்பதாகவும் சொன்னது அந்த தகவல்.

ஒரேயொரு நெருடல் இருந்தது. அந்த வீட்டின் மீது காலமான மாமிக்கு அதிக ப்ரீதி இருந்தபடியால் அந்த வீட்டில் தங்கி அனுபவிக்கலாமே தவிர வேறொன்றும் செய்ய முடியாது என்று ஸ்ட்ராங்காய் சொன்னது உயில்.

இங்கிலாந்தில் போய் வாழ்வதா? இந்த நினைப்பே ஜோன்னாவின் நரம்புகளைத் திருகியது. ஏழ்மையில் வயதான காலத்தில் இங்கேயே வாழ்வதும் உசிதமாகாது. ஸ்டேட்லே கான்ஸ்டபிள் பகுதி குறித்த புத்தகம் வாங்கி வீடு இருந்த பிரதேசத்தை நன்கு அறிந்து கொண்டார் ஜோன்னா.

வேறு வழியின்றி அந்த வீட்டில் போய் குடியேறிவிடுவது என்று இவர் எடுத்த முடிவு, இவருடைய வாழ்க்கையில் எடுத்த முடிவுகளிலேயே மிகச் சிறந்த ஒன்றாய் ஆனது. ஐந்து படுக்கை அறைகள் கொண்ட விசாலமான வீடு அது. ஒதுக்கப்பட்ட கிராமம் என்றில்லாமல் பத்தொன்பதாம் நூற்றாண்டின் வளர்ச்சியில் ஸ்டேட்லே கான்ஸ்டபிள்

கிராமமும் வளர்ச்சி அடைந்திருந்தபடியால், அங்கு, ஜோன்னா ஒரு முக்கியமான பெண்மணியாய் அறியப்பட்டார். பணம் படைத்தவர் என்று அடையாளம் காணப்பட்டதால், கூடுதல் முக்கியத்துவம்! அங்கிருந்த எல்லையற்ற கடற்கரையும் உப்பளங்களும் இவர் மனதினை ஈர்த்துவிட்டபடியால், தன் வாழ்க்கையில் இப்போது போல் எப்போதும் சந்தோஷமாய் இருந்தது கிடையாது என்ற அளவுக்கு மாறிப் போனார் ஜோன்னா.

அவ்வருடத்தில் இங்கிலாந்துக்கு வந்த மேயர் இவரை பலமுறை வந்து சந்தித்துப் போனார். நீண்ட நடை போனார்கள். எல்லாவற்றையும் மேயரிடம் காண்பித்தார் இவர். அடிவானம் வரை போகும் கடற்கரைகள், உப்பள குன்றுகள், என எல்லாமும். கேப் டவுன் பகுதிக்கு தகவல்களை அனுப்பி வைக்க எப்படி முடிந்தது என்று மேயரும் கேட்கவில்லை... இப்போது என்ன பண்ணிக் கொண்டிருக்கிறீர்கள் என்று ஜோன்னாவும் கேட்டுக் கொள்ளவில்லை.

கடிதப் போக்குவரத்து வைத்துக் கொண்டார்கள். அவரை பார்க்க 1935ல் பெர்லின் சென்றார் ஜோன்னா. ஜெர்மனியின் நேஷனல் சோஷலிஸம் என்ன செய்து கொண்டிருக்கிறது என்று காட்டினார் அவர். பெரும் ராலிகள், எங்கெங்கும் காணப்பட்ட சீருடை சிப்பந்திகள், அழகுப் பையன்கள், சிரித்துக் கொண்டாடும் பெண்கள் மற்றும் பிள்ளைகள் என தனக்கு காட்டப்பட்ட எல்லாவற்றையும் ஜோன்னா வியந்தார். இது ஒரு புது உலகம் என்று ஒப்புக்கொண்டார். இப்படித்தான் கலகவலவென இருக்க வேண்டும் என்று ஏற்றுக் கொண்டார்.

பிறகு ஒருநாள் நல்ல மாலைப் பொழுதின்போது தான் தற்போது அப்வெஹ்ருடன் இருப்பதாகவும், இவர்களுக்காக

இங்கிலாந்தில் பணியாற்ற ஜோன்னா தயாரா என்றும் அவரிடம் சாந்தமாய் கேட்டார் மேயர்.

இது பற்றி சிந்திக்க தேவையில்லாதவராய் சட்டென்று சம்மதம் சொன்னார் இவர். அதுவரை அவர் உடல் அடைந்திராத ஆனந்த கிளர்ச்சியை அப்போது ஜோன்னாவின் உடல் கண்டது. ஆக, அறுபது வயதில், இந்த உயர்தட்டு பெண்மணி, உளவாளியானாள். இவரது படிக்கும் அறையின் சுவருக்குப் பின்னால் ஒரு சின்ன தந்தியில்லா ட்ரான்ஸ்மீட்டர் அமைத்துத் தரப்பட்டது. இவர் எதைக் கேட்டாலும் உடனே 'அரசு சார்ந்தது' என்ற முத்திரையோடு பண்டில் கட்டி அனுப்பிவிடும் ஸ்பெயின் தூதரகத்துடன் நல்ல இணைப்பு.

தனக்கு தரப்பட்ட வேலையை இவர் துல்லியமாய் செய்து தருவது வாடிக்கையானது. இங்கிலாந்தின் இரண்டு தரைவழி இணைப்புகளை இணைத்து இயங்கும் ஒபே பற்றிய இவரது உளவுகள் போற்றப்பட்டன. ஒன்று 'எலி' என்று அழைக்கப்பட்ட டோவர் பகுதி. மற்றது 'பூனை' என்று அழைக்கப்பட்ட க்ரோமர் பகுதி. கேமிரா கொண்டு படமெடுத்துவிடும் அளவுக்கு உளவில் கைதேர்ந்தவரானார்.

24 மணி நேரத்துக்குள் 'அரசு சார்ந்தது' என்ற முத்திரையோடு ஒபே தகவல்கள் இங்கிலாந்தை விட்டு ஸ்பெயின் பண்டிலில் வெளியேறிவிடும். முப்பத்தாறு மணிநேரத்துக்குள் அது மேயரின் கைகளில் தவழும்.

★ ★ ★

**ஹ**ன்ஸ் மேயர் முடித்ததும், சொல்பவற்றை சுருக்கமாய் எழுதிக் கொண்டிருந்த ரேடில் தனது பேனாவைக் கீழே வைத்தார். ''அதிசயிக்கத்தக்க பெண்மணி'' என்றார். ''பாராட்டப்பட வேண்டிய பெண். எனக்கு ஒரு

விஷயத்தை மட்டும் விளக்குங்க - அவங்க எவ்ளோ ட்ரெயினிங் எடுத்துக்கிட்டாங்க?''

''போதுமான அளவுக்கு, ஸார்'' என்றார் மேயர். ''1936லிருந்து 1937வரை அவங்க ரீச் பகுதியில வந்திருந்தாங்க. அப்பல்லாம் சில விஷயங்களை நிறைவேற்றுவதற்காக அவங்களுக்கு கட்டளைகள் தரப்பட்டன. சங்கேத வார்த்தைகள், ரேடியோவை பயன்படுத்துவது, பொதுவா கேமிராவை எப்படி உபயோகிப்பது, நாசவேலைகள் பற்றிய அடிப்படை. இதிலெல்லாம் ட்ரெயினிங் பெற்றாங்க. ஆனா மேற்கொண்டு ரொம்பவும் ஆழமான பயிற்சி கிடையாது. மேலும், அவங்களை உடல் சார்ந்து போரிடும் பணிக்கு நாங்க வெச்சுக்கல.''

''ம். எனக்கு அது விளங்குது. ஆயுதங்களைப் பயன்படுத்துவது பற்றியெல்லாம்?''

''அதுக்கெல்லாம் அதிக தேவை ஏற்படலே. அவங்களுக்கு பத்து வயசிருக்கும்போதே நூறு கஜம் தள்ளியிருக்கும் ஒரு மானின் கண்மணிகளைத் துல்லியமா சுட்டுடுவாங்க.''

உத்திரத்தைப் பார்த்தபடி முகஞ்சுளித்த ரேடில், கேட்ட விளக்கத்துக்கு ஒப்புதலாய் தலையசைத்துக் கொண்டார். மேயர் தற்காலிகமாய் கேட்டார்: ''என்னை அழைச்சதுல ஸ்பெஷலா ஏதாவது இருக்கா? அதாவது, நான் உதவி தருவதைப் போல?''

''இப்போதைக்கு இல்லை'' - அவரிடம் ரேடில் சொன்னார். ''ஆனா இன்னும் கொஞ்ச காலத்துலேயே உங்க உதவியை நான் அதிகம் நாட வேண்டி வரும். அப்போ நான் விளக்கறேன். இப்போதைக்கு ஜோன்னா க்ரே குறித்த அனைத்து கோப்புகளையும் நீங்க இந்த அலுவலகத்துக்கு அனுப்பி வெச்சீங்கன்னா, போதுமானதாக

இருக்கும். மேற்கொண்டு அனுமதி தரப்படும்வரை எவ்விதமான ரேடியோ தொடர்புகளும் வேண்டாம்.''

மேயர் செயலிழந்தார். தன்னை கட்டுக்குள் வைத்துக் கொள்வதில்கூட திணறினார். ''தயவுசெஞ்சு, மிஸ்டர் ரேடில். ஜோன்னாவுக்கு எந்தவிதமான ஆபத்துக்களும்...''

''கடுகத்தனையும் கிடையாது'' - ரேடில் உடனே சொன்னார். ''உங்க கவலை எனக்கு புரிகிறது. என்னை நம்புங்க. மேற்கொண்டு எதையும் சொல்லும் நிலைமையில இப்ப நான் இல்ல. அதிகபட்ச ரகசியம், மேயர்.''

மன்னிப்புக்கோரும் அளவுக்கு சமாதானமானார் மேயர். ''நிச்சயமா எனக்கு அது தெரியும் ஸார்... என்னை மன்னிக்கணும். அந்தப் பெண்மணியின் நெடுநாளைய நண்பன் எனும் விதத்துலதான்...''

அவர் வெளியேறினார். அவர் கிளம்பியதும் அருகிலிருந்த கிடங்கிலிருந்து பல கோப்புகளையும் ஒருசில சுருட்டப்பட்ட வரைபடங்களையும் தூக்கிகொண்டு ஹோஃபர் வந்தான். ''நீங்க கேட்ட தகவல்கள், ஸார். கடலோர பகுதிகளை உள்ளடக்கிய பிரிட்டிஷ் ராஜாங்க வரைபடங்கள் சிலவற்றையும் நானா கொண்டு வந்திருக்கேன். எண்கள்: 108 மற்றும் 106.''

''ஜோன்னா க்ரே பற்றி மேயரிடம் என்னவெல்லாம் இருக்கோ அதையெல்லாம் உன்னிடம் தருமாறு நான் சொல்லியிருக்கேன். ரேடியோ தொடர்பு இனி கிடையாதுன்னும் சொன்னேன்'' என்றார். ''இப்போதிலிருந்து நீ உன் கட்டுக்குள் கொண்டு வந்துக்கோ.''

ஒரு சிகரெட்டை பற்ற வைத்துக் கொண்ட ரேடிலிடம் ''அப்ப நாம இப்பவே ஆரம்பிச்சுடலாமா, ஸார்'' என்றான் ஹோஃபர்.

ஒரு கொத்து புகை மேகத்தை வெளியிட்ட ரேடில் உத்திரத்தைப் பார்த்தபடி கேட்டார்: "ஜங்க் சொன்னவை பற்றி உனக்கு பரிச்சயமிருக்கா?"

"நான் போருக்கு முன்னாடி சாராயம் வித்துக்கிட்டிருந்தவன்னு, சாருக்கே நல்லா தெரியும்!"

"இவர் Synchronicity பற்றி பேசறார்."

"???"

"ரெண்டு சமாச்சாரங்கள். ஒண்ணா நடக்கவே சாத்தியமற்ற விஷயங்கள். ஆனால், அர்த்தமுள்ள வகையில ரெண்டும் ஒண்ணா இடம் பெற்று விடுவது."

"ஸார்..."

"யெஸ். இதே விஷயத்தை உதாரணமாக எடுத்துக்க. எப்படியோ அகப்படாமல் காப்பாற்றப்பட்டுக் கொண்டேயிருக்கும் ஃபுர்ரெர் சொல்றார். ஓர் அவசர கூட்டம் கூட்டறார். சர்ச்சிலை எப்படியாவது பிடிச்சுடணும் என்பது அந்தக் கூட்டம் தீட்டும் வேகமான திட்டம். உயிரோடவோ அல்லது பிணமாகவோ - இதை பற்றி குறிப்பிடப்படலே. இப்ப அப்வெஹ்ர் அறிக்கை. Synchronicity கடற்கரையிலிருந்து ஏழெட்டு மைல்கள் தள்ளி ஆளரவமற்றிருக்கும் ஓர் இடத்துலே சர்ச்சில் ஒரு வாரம்போல வந்து தங்கப் போகிறார். நான் என்ன சொல்ல வரேன்னு விளங்குதா? வேற எந்த நேரத்துலே மிஸஸ் க்ரேயின் ரிப்போர்ட் கிடைச்சிருந்தாலும், இது எவ்வகையிலும் நமக்கு பிரயோசனமா இருந்திருக்காது."

"அப்படினா, நாம மேற்கொண்டு முன்னேறலாம்னு சொல்றீங்களா, சார்?"

"அப்படித்தான் விதி போவதுபோல தெரியுது" என்றார் ரேடில். "ஸ்பெயின் இராசாங்க பார்சல் வழியாக மிஸஸ்

க்ரேயின் ரிப்போர்ட் வந்து சேர எவ்வளவு காலம் ஆகும்னு நீ சொன்னே?''

''மேட்ரிட்ல அந்த பார்ஸலை வாங்க யாராவது காத்திருக்கும் பட்சத்துல மூணு நாட்கள், சார். சூழ்நிலை கடுமையாயிருக்கும் காலத்திலும் நிச்சயமா ஒரு வாரத்துக்கு மேலே ஆகாது.''

''அடுத்து ரேடியோ தொடர்பு ஏற்படுத்தணும்?''

''இன்னிக்கு சாயங்காலம், சார்.''

''குட். அவங்களுக்கு இந்த தகவலை அனுப்பு.'' மீண்டும் உத்திரத்தை அண்ணாந்து பார்த்தார் ரேடில், தன் சிந்தனைகளைக் கோவையாய் அடுக்கித் தரும் தீவிர சிந்தனையோடு. ''ஆறு நவம்பரன்று வரும் விருந்தாளியைப் பற்றி அறிய மிக்க மகிழ்ச்சி. அவரை சந்திக்க சில நண்பர்களுடன் வர விருப்பம். தேவையான தகவல்களுடன் உங்களுடைய குறிப்புகளை சீக்கிரம் அடைய விருப்பம்.''

''இவ்ளோதானா, ஸார்?''

''அப்படித்தான் நினைக்கிறேன்.''

★ ★ ★

**அ**து ஒரு புதன்கிழமை. பெர்லினில் மழை பெய்து கொண்டிருந்தது. ஆனால், மறுநாள், ஸ்டட்லே கான்ஸ்டபிளின் பக்கவாட்டு கேட் வழியாக ஃபாதர் பிலிப் வெரேக்கர் நொண்டியபடி வெளியேறி கிராமம் நோக்கி நடையை செலுத்திய காலைப் பொழுது, சூரியன் தகதகத்த பொழுதாய் அமைந்தது. ஒரு முழுமையான வசந்தக்காலத்து காலைப் பொழுது அது.

இந்த காலகட்டத்தில், நல்ல நெட்டையான மற்றும் குண்டான இளைஞராயிருந்தார் வெரேக்கர். வயது, 30. அவர் அணிந்திருந்த கறுப்பு மேலங்கியால் அவருடைய

உடல் மேலும் குண்டாய் தெரிந்தது. பிடித்திருந்த ஊன்றுகோலையே மிகவும் நம்பி நொண்டியபடி நடந்த அவருடைய முகத்தில் வலியின் வேதனையும், தீவிரமும் இருந்தன. மிலிட்டரி மருத்துவமனையிலிருந்து நான்கு மாதத்துக்கு முன்னால்தான் அவர் டிஸ்சார்ஜ் செய்யப்பட்டிருந்தார்.

மாணவனாய் அபரிமித புத்திகூர்மை கொண்டு விளங்கியிருந்தாலும், தனது குடும்பத்தின் மனத்தாங்கலுக்கு வழிவகுத்துத் தந்துவிட்டு, பாதிரியார் பாதையை தேர்ந்தெடுத்துக் கொண்டார் இவர். ஜீஸஸ் சொஸைட்டியில் சேர்ந்து விட்டார்.

1940ல்பட்டாளத்தில் சேர்ந்த இவரை பாராசூட் படையில் போட்டார்கள். நவம்பர் 1942ல், ஒரு முறை மட்டும், துனிஸியா பகுதியில் பாராசூட்டிலிருந்து குதித்து போரிடும் பணியில் ஈடுபடுத்தப்பட்டார்.

180 பேர் தப்பித்தார்கள். 260 பேர் மாண்டார்கள். வெரேக்கர் முதல் பட்டியலில் வந்தாலும் இடதுகால் முட்டியில் குண்டு துளைத்து எலும்பை நெம்பி எடுத்து விட்டது. ஆஸ்பத்திரி வந்தடைந்து சிகிச்சை துவங்குமுன்பே செப்டிக் ஆகிவிட்டதால், அந்தக்காலையே வெட்டியெடுக்கும் நிலை உருவானது. பட்டாளத்துக்கு தேவையற்றவர் ஆனார்.

இப்போதெல்லாம் சுகமானவராய் தோன்ற வெரேக்கரால் முடிவதில்லை. வலி தீர்ந்தபாடில்லை. இருந்தாலும் பார்க் காட்டேஜ் நெருங்கி அங்கு தனது சைக்கிளை நகர்த்தியபடி ஜோன்னா க்ரே வெளியே வருவதை பார்த்தபோது, நன்றாய் இருப்பவராய் காட்டிக் கொண்டுதான் நெருங்குகின்றார்.

''எப்படியிருக்கீங்க, பிலிப்?'' - அவர் கேட்டார். ''பல நாட்களா உங்களை நான் பார்க்கல.'' அவர் கூடவே வந்திருந்த செல்ல நாய் சைக்கிளோடு ஒண்டிக்கொண்டது.

''ஓ, ஐம் ஆல் ரைட்'' என்றார் வெரேக்கர். ''போரடிச்சுக்கிட்டிருக்கேன். வேற என்னத்தை சொல்ல? கடைசியில உங்களை நான் பார்த்ததிலிருந்து, வேற ஒரு தகவலும் இல்ல. என் சகோதரி பமீலா. அவளைப் பற்றி நான் பேசினது நினைவிருக்கா? என்னைவிட பத்து வருஷம் சின்னவ அவ. பெண் விமானப்படையில இருக்கா. WAAF.''

''அஃப்கோர்ஸ் அதெல்லாம் ஞாபகமிருக்கு'' - மிஸஸ் க்ரே சொன்னார். ''என்ன ஆச்சு?''

''இங்கிருந்து 15 மைல் தூரத்திலிருக்கும் பேங்க்பார்ன் பகுதியின் பாம்பர் குண்டு வெடிக்கும் பிரிவுக்கு அவ மாற்றப்பட்டிருக்கா. இதனால அவளை நான் சந்திக்கும் வாய்ப்பு கிடைக்கலாம். இந்த வாரக்கடைசியிலே அவ வரா. அறிமுகப்படுத்தி வைக்கிறேன்.''

''அதை நான் எதிர்பார்க்கிறேன்.'' தனது சைக்கிளில் ஏறிக் கொண்டாள்.

''இன்னிக்கு ராத்திரி, செஸ்?'' - நம்பிக்கையுடன் கேட்டார் அவர்.

''ம். எட்டு மணிபோல வாங்க. இங்கேயே சாப்பிடுங்க. இப்ப நான் கிளம்பணும்.''

ஓடையோரமாய் சைக்கிளை மிதித்து ஜோன்னா நகர, தொடர்ந்து ஓடியது அவரது நாய். அவருடைய முகம் இப்போது சீரியஸானது. முந்தைய மாலைப்பொழுதில் அவரை அடைந்திருந்த ரேடியோ சேதி ஒரு அதிர்ச்சியாய் ஜோன்னாவை தாக்கியிருந்தது. இரவு தூங்கவில்லை. தான் தப்பாய் புரிந்து கொள்ளவில்லை என்பதை ஊர்ஜிதப்படுத்திக்

கொள்ள, வந்திருந்த மோர்ஸ் கோடினை மூன்று முறை படித்து ஸ்திரப்படுத்திக் கொண்டார்.

சர்ச்சிலைக் கடத்த வேண்டும் - அவர் பாதுகாவலர்களின் பிடிகளை அவர்களது முகத்துக்கெதிராகவே ஏமாற்றி கடத்த வேண்டும்.

சப்தமாய் சிரித்து விட்டார். குன்றினில் சைக்கிளை இறக்கியபோது ஒரு கார் பின்புறத்திலிருந்து ஹார்ன் எழுப்பியபடி இவரைக் கடந்து போய் சாலையோரமாய் நின்றது. தினசரி குடித்துக் குடித்து ஊதிப்போயிருந்த அந்த ஆசாமி கர்னல் சீருடையில் இருந்தார்.

''மார்னிங், ஜோன்னா'' என்றார் உற்சாகமாய். காரிலிருந்து இறங்கினார். அது ஹென்றி. ''சனிக்கிழமை இரவு சில பேர் வராங்க. சீட்டாட்டம் இருக்கும். அப்புறம் விருந்து. ஸ்பெசலா வேற ஒண்ணுமில்லை. நீயும் வந்து சேர்ந்துக்க பிரியப்படுவேன்னா, ஜீன்.''

''ஜீனுக்கு நன்றி. யெஸ்'' - சொன்னார் ஜோன்னா. ''அந்த பெரிய விருந்துக்கு இப்பவே அவ தயாராகிக்கிட்டு இருக்கணுமே...''

சட்டென தாக்கப்பட்டவராய் ஆனார் ஹென்றி. குரலை தாழ்த்திக் கொண்டார். கேட்டார்: ''விஷயத்தை நீங்க வேற ஒருத்தர்கிட்டேயும் சொல்லலியே?''

தானும் நிலைமைக்கேற்றாற்போல அதிர்ச்சியடைந்தவராய் காட்டிக்கொள்ள முனைந்தார் திருமதி க்ரே: ''அஃப்கோர்ஸ் நாட். இது இரகசியம்னு என்கிட்டே சொன்னீங்களே, மறந்துட்டீங்களா?!''

''நான் யார்கிட்டேயும் சொல்லியிருக்கவே கூடாது, தெரியுமா? ஆனா, நீங்க நம்பத் தகுந்தவங்கனு கருதினேன்.'' ஜோன்னாவைக் கரவளையமிட்டார். ''எனக்காக அடுத்த

சனிக்கிழமை பற்றிய சமாச்சாரத்துக்கு அமைதி காத்திடு, தாயே. ஒருத்தருக்கு தெரிஞ்சாலும் ஊர் முழுக்க பரவிடும்.''

ஜோன்னா சாந்தமாய் சொன்னார்: ''நான் உங்களுக்காக எதையும் செய்வேன்னு உங்களுக்கேத் தெரியும்.'' பிறகு சொன்னார்: ''பிரதம மந்திரி வருவதை பற்றி நீங்க ரொம்பவும் கிளர்ச்சியிலே இருக்கணுமே...''

''நிச்சயமா. இது ஒரு பெரும் கௌரவம்'' - பிரகாசமானார் ஹென்றி. ''ஆங் சொல்லுங்க... எங்கே கிளம்பிக்கிட்டிருக்கீங்க?''

இதே கேள்வி எப்போது வருமென்றுதான் ஜோன்னா காத்திருந்தார். ''வழக்கம்போலத்தான் - வெளியிலே பறவைகளைப் பார்க்கப் போறேன். அப்படியே நகரத்துக்குள்ளே போகலாம். இன்னும் முடிவு பண்ணலே. சில புதுப்பறவைகள் வந்திருப்பதாக பேச்சு.''

''ரொம்ப முக்கியம் இப்ப இது'' என்றவரின் முகம் இறுகியது. ''நான் சொன்னது மட்டும் நினைவிருக்கட்டும், ஓ கே?''

''சூழ்நிலைலே மாற்றங்கள் இருந்துக்கிட்டேயிருக்கும்னு எனக்குத் தெரியும்'' என்றார் ஜோன்னா. லோக்கல் பாதுகாப்புக்கு, குறிப்பாக கடற்கரையோர பகுதிகளின் பொறுப்பானவரிடம் பேசிக்கொண்டிருப்பதை உணர்ந்திருந்த ஜோன்னா, ''முடிஞ்சா இன்னொரு முறை என்னோட காட்டேஜுக்கு வாங்க. அந்த மேப்பையெல்லாம் கூடவே எடுத்துக்கிட்டு வாங்க. வந்து, இன்னொரு முறை எனக்கு விளக்கிடுங்க'' என்றார்.

ஹென்றி கண்கள் மின்னின. ''நான் வரணும்னு நினைக்கிறீங்களா, நீங்க?''

''அஃப்கோர்ஸ். இன்னிக்கு மத்தியானம் நான் வீட்டுலே இருப்பேன்.''

''லஞ்சுக்கு பிறகு'' என்றார் அவர். ''ரெண்டு மணியையொட்டி நான் அங்கே இருப்பேன்.''

சட்டென்று கைகுலுக்கிவிட்டு வெகு துரிதமாய் கிளம்பி விட்டார் ஹென்றி.

சைக்கிளை மிதித்துக் கொண்டு முன்னால் ஜோன்னா. பின்னால் செல்லப்பிராணி. புவர் ஹென்றி... குழந்தையைப் போல. கையாள்வது வெகு சுலபம்.

அரைமணி நேரம் கழிந்த பிறகு கடற்கரையிலிருந்து வளைந்து திரும்பிய ஜோன்னா, ஓர் அகழி போன்ற அணையிருந்த திசையில் சைக்கிளை விரட்டிக் கொண்டிருந்தார். தனிமையான சதுப்புப் பகுதியான இதற்கு ஹாப்ஸ் எண்ட் என்பது லோக்கல் பெயர். மிகவும் அந்நியமான மற்றும் வேற்றுலகம் போன்ற பகுதி. பறவைகளும் அன்னங்களும் குளிர்க்காலங்களில் வந்து கூடும் சரணாலயம்.

இப்பிரயாணத்தின் பாதிவழியில் ஒரு காட்டேஜ் தென்பட்டது. சில பைன் மரங்கள் அதனை மறைத்திருக்க, கதவுகளும் சன்னல்களும் முழுக்கவும் மூடப்பட்டிருந்தன. அதனை பார்த்தாலே ஏதோவொரு ஒதுக்கப்பட்ட தனிமை அமைப்பு அறைந்தது. இப்பகுதி பாதுகாவலனின் வீடு இது. ஆனால் **1940** முதல் இங்கு காவலர்கள் யாரும் கிடையாது.

அங்கிருந்த மரங்கள் ஒன்றில் தனது சைக்கிளை சாய்த்து நிறுத்தி விட்டு இறங்கினார். கடல் நோக்கி சென்ற கால் மைல் பகுதி, முன்னால் நீண்டு, இறுதியில், பெரிதாய் வளையும் ஓர் ஆள்காட்டி விரலைப் போல வளைந்தது. கால்வாய்களும், மண்குன்றுகளும், சதுப்பும் புதரும் மட்டுமே.

தனது கேமிராவில் இதனை பல கோணங்களில் படம்பிடித்துக் கொண்டார் ஜோன்னா. இது முடிந்ததும்

தூக்கியெறிய ஒரு குச்சியைக் கொண்டு வந்து அவளது கால்களுக்கு நடுவே போட்டது செல்லநாய். “இதுவும் சரிதான்” என்ற ஜோன்னா அதன் காதுமடல்களை ஆர்வமாய் தடவி விட்டார்.

அவளுக்கு இடப்பக்கத்தில் ஒரு கான்க்ரீட் வீடும், மெஷின்கன் வைக்க ஒரு தாங்கியும் இருந்தன. இவை சிதிலமடையும் நிலையில் இருந்தன. இவையெல்லாம் ராணுவ பகுதி என்று 1940ல் அறிவிக்கப்பட்ட பகுதிகள்.

தன் நாய் நோக்கி குனிந்த ஜோன்னா இப்போது சொன்னார்: “இது என்னனு தெரியுமா, பேட்ச்? இதைத்தாண்டி உள்ளே வந்தால் இங்கிலீஷ்காரங்களுக்கு பிடிக்காதுனு அர்த்தம். ஸோ... நீ போய் குச்சி எடுக்கும் வேலையை இதுக்கு மேல வெச்சுக்காதே...”



# 3

ஜோன்னாவின் ரிப்போர்ட், தொடர்ந்த செவ்வாயன்று வந்தது. ஹோஃபர் அதற்கு சிகப்பு பட்டி கட்டினான். நேராய் ரேடிலிடம் கொண்டு போனான். அதனை திறந்த அவர் உள்ளிருந்த சமாச்சாரத்தை நோட்டமிட்டார்.

அதனுள் ஹாப்ஸ் எண்ட் பிரதேசத்தின் சதுப்பு நிலங்களும் கடற்கரையின் அருகாமைகளும் புகைப்படங்களாயிருந்தன. அவை, சங்கேத குறிப்புகளால் கோடி காட்டப்பட்டிருந்தன. ரேடில் அந்த ரிபோர்ட்டை அப்படியே கொண்டு வந்தவனிடம் சமர்ப்பித்தார்.

''முக்கியமானது. முதலிடம் தரணும் இதுக்கு. இந்த சங்கேத குறிப்புகளை மொழி பெயர்க்கணும். அப்படி பண்ணும்போது கூடவே இரு.''

அப்வெஹ்ர் மொழி பெயர்த்தார். இருபது நிமிடங்களில் வேலை முடிந்ததும் அது உடனே கலோனலின் கைகளில் தரப்பட்டது. அவர் படித்து முடிக்கும்வரை பணியாள் பொறுமையுடன் அமைதி காத்தான். பிறகு அதனை ஒரு புன்னகையுடன் டேபிளுக்கு குறுக்காய் தள்ளினார் ரேடில். ''இதை படி கார்ள், ஜஸ்ட் படி. ரியலி எக்ஸலண்ட். என்ன ஒரு பெண்மணி அவ.''

சிகரெட்டை பற்ற வைத்துக்கொண்ட அவர் அவனிடமிருந்து பதில்வருவதற்காக படபடப்பாய் காத்திருந்தார்.

''சாத்தியம் போலத்தான் தெரியுது.''

''சாத்தியம்? இதுதான் நீ சொல்லத் தக்க பெஸ்ட் பதிலா? ஹேய், இது ஒரு நிச்சயமான வெற்றிடா. சத்திய வெற்றி.''

கடந்த சில மாதங்களாய் இல்லாத அளவுக்கு இப்போது பெருத்த பரபரப்பானார் அவர். காயத்திலுள்ள அவருக்கு இது ஆகாது. குறிப்பாய் அவருடைய இருதயத்துக்கு கூடாது. அப்போது அவருடைய கைகளில் திடீர் நடுக்கம் தோன்ற, மூச்சுக்காற்றிற்காக திணறி அப்படியே இருக்கையில் சாய்ந்து விட்டார்.

உடனடியாய் மருந்து பாட்டிலை டேபிள் டிராயரிலிருந்து எடுத்த ஹோஃபர் அதனை திறந்து உடனடியாய் அவரது உதடுகளில் சாய்த்தான். ரேடில் அதனை அருந்தினார். கோரமாய் இருமினார். பிறகு தனது கட்டுக்குள் வந்து கொண்டார்.

வறட்சியாய் சிரித்த அவர், ''நான் இப்படி அடிக்கடி உணர்ச்சி வசப்பட்டுடக் கூடாது, இல்லையா கார்ள்?'' என்றார். ''கிடைக்க அரிதான இம்மருந்து இன்னும் ரெண்டே பாட்டில்கள்தான் இருக்கு. இந்தக்காலத்துல, அரிய தங்கம் போன்றது இது.''

''சார் இந்த அளவுக்கு உணர்ச்சி வசப்படக் கூடாது'' என்றான் ஹோஃபர். ''நீங்க செய்யக்கூடாதது இது.''

ரேடில் இன்னும் கொஞ்சம் பிராண்டியைக் குடித்தார். சொன்னார்: ''எனக்கும் தெரியும், கார்ள். ஆனா நீயும் கவனிச்சே இல்ல? இது ஒரு ஜோக்கா இருந்தது - கோவத்துல ஃப்யூரெர் உளறின ஜோக். இன்னிக்கு கேட்டுட்டு நாளைக்கு மறந்து விடுவது. முடியுமானு பார்க்க ஒரு திட்டம் போடுங்கன்னு இந்த ஹிம்லர் சொன்னது - ஜஸ்ட், அட்மிரலைத் திருப்திப்படுத்த. உடனே அட்மிரலும் ஒரு

திட்டத்தை பேப்பர்ல எழுதிக்கிட்டு வரும்படி என்கிட்டே சொன்னார். என்னத்தை எழுதுவது? ஏதோ நாமும் நிச்சயமான முயற்சியிலே இருப்பதாகக் காட்டிப்பதைப் போன்ற ஒரு திட்டம். அவ்வளவே.''

எழுந்து கொண்ட அவர் ஜன்னல் வரை போனார். "ஆனா இப்ப நிலைமையே மாறிடுச்சு கார்ள், மாறிடுச்சு! இனி இது ஜோக் கிடையாது. நிச்சயம் செய்து முடிக்கவல்லது!"

இதற்கு ஆமோதிப்பாய் ஹோாஃபர் பேசியதும், "ஆனாலும் குட் காட்'' என்ற ரேடில் சொன்னார்: "எனக்கு பயமா இருக்கு. அட்மிரல்டி வரைபடங்களையும் சர்வே மேப்பையும் கொஞ்சம் கொண்டு வா.'' அவரிடம் இப்போது நடுக்கமிருந்தது.

அவற்றை கொண்டு வந்த ஹோாஃபர் டெஸ்க்கில் பரப்ப, அதிலிருந்த ஹாப்ஸ் எண்ட் பிரதேசத்தை தனது புகைப்படங்களுடன் ஒப்பிடலானார் ரேடில். பிறகு பேசினார்: "இதைவிட ஒருத்தன் வேற எதை எதிர்பார்க்கணும்? பாராசூட்டுகள் வந்திறங்க ஓர் அருமையான பிரதேசம். அங்கு அடிக்கும் கடலலைகள், இப்படி தரையிறங்கியதற்கான எந்தவொரு சுவடும் இல்லாமல் அனைத்தையும் அந்த வார இறுதிக்குள்ளே அடியோடு அடிச்சுக்கிட்டு போயிடும்.''

"இருந்தாலும் கடலோர ரோந்துப் படையின் கண்கள்ளிலே மண்ணைத் தூவிட்டு குண்டு சுமக்கும் ஒரு விமானத்தை அங்கே தரையிறக்க முடியும்னா நினைக்கிறீங்க?'' - பதவிசாய் தனது கருத்தை முன்வைத்தான் ஹோாஃபர்.

"இது பிரச்சினைதான்'' என்ற ரேடில், "நான் ஒத்துக்கறேன்'' என்றார். தொடர்ந்தார்: "ஆனா, கையிலிருக்கும் சர்வேயை வெச்சுப் பார்க்கும்போது, நாம

கெடு வைத்திருக்கும் கரையோரப் பகுதியிலே குறைந்த உயரத்தை டிடெக்ட் பண்ணும் ரேடார் கருவிகள் ஏதும் இல்ல. ஆக, 600 அடிக்கு கீழே எது பறந்தாலும் அதை டிடெக்ட் பண்ண முடியாது என்பது விளங்குது. அதனாலே இவ்வகையான திட்டமெல்லாம் இப்போதைக்கு தேவையில்லே. பின்னாலே பார்த்துக்கலாம். எது சாத்தியம் என்பது பற்றிய ஒரு திட்ட அறிக்கை - அதுதான் இப்போதைக்கு நமக்கு தேவை, கார்ள். அக்கடற்கரை பகுதியிலே தரையிறங்க முடியும்னு, ஒரு பேச்சுக்கு நீ ஒத்துக்கிற, இல்லையா?''

''ஆரம்ப விவாதத்துக்கு, யெஸ் ஒத்துக்கறேன். ஆனா இதெல்லாம் எப்படி நடைமுறைபடுத்தவது? U-படகு மூலமாகவா?''

தன்னிடமிருந்த வரைபடத்தை இப்போது குனிந்து சற்றுநேரம் பார்த்த ரேடில், ''ம்ம். ப்ராக்டிக்கலா அது முடியாது'' என்றார். ''நிறைய பேரை அடைக்க முடியாது. கடற்கரையை ஒட்டி இல்லாம சற்று தள்ளி நாம சந்திக்கணும். உடனடியா, நேரடியா நடக்கிற காரியமா இருக்கணுமே ஒழிய, மற்ற வழிகள் செல்லுபடியாகாது. சிம்பிளா முடிக்கணும். நாம குறிச்சிருக்கும் பகுதியிலே E-படகு நடவடிக்கைகள் ஜாஸ்தி. அதுங்களுக்குள்ளே நாம ஒருத்தரா நழுவி ஏன் காரியத்தை நடத்த முடியாது? வரைபடத்தை பார்த்தால் அங்கே ஏதும் சுரங்கங்கள் இருப்பதாகவும் தெரியலே. இது சுலபமா நமக்கு கை கொடுக்கும்னு படுது.''

''இதுக்கு கப்பற்படையின் ஆலோசனை தேவைப்படும்'' என்றான் ஹோாஃபர் எச்சரிக்கையாய். ''அந்த கடற்கரை பகுதியின் அலைகள் ஆபத்தானவைனு ரிப்போர்ட்லே சொல்லியிருக்காங்க, மிஸஸ் க்ரே.''

''அப்படிப்பட்ட பகுதிகள்லே மோதுவதற்கு பழக்கப்பட்டவங்கதானே கடற்படை வீரர்கள்? உனக்கு திருப்தியில்லாத வேற ஏதாவது விஷயங்கள் இருக்கா?''

''மன்னிக்கணும், ஸார். இந்த முழு இலக்கையும் வெற்றிகரமா நடத்தி முடிக்க காலஅவகாசம் ஒரு முக்கியமான அளவுகோல்னு எனக்குப் படுது. இதை நாம எப்படி சமாளிக்கப் போறோம்னு எனக்கு விளங்கலே.'' ஸ்டட்லே க்ரேஞ்ச் பிரதேசத்தை வரைபடத்தில் குத்திக்காட்டி பேசினான் ஹோஃபர். ''இது இலக்கு பகுதி. படைகள் தரையிறங்கும் பகுதியிலிருந்து கிட்டத்தட்ட எட்டு கல் தொலைவு. பழக்கப்படாத பிரதேசம் என்பதையும் இருள் கவ்விக் கிடக்கும் என்பதையும் மனதில் கொள்வோம். இப்பகுதியை அவர்கள் அடைய இரண்டு மணிநேரம் பிடிக்கும் என்பது என் கணிப்பு. எவ்வளவுதான் குறைந்த நேரம் அங்கேயிருந்தாலும், திரும்புவதற்கும் இதே கால அவகாசம் பிடிக்கும். ஆக என் கணிப்பு, எல்லாம் சேர்த்து ஆறு மணிநேரங்கள். செக்யூரிட்டியை மனசுலே வெச்சுக்கிட்டு நடுராத்திரிதான் தரையிறங்கணும்னு நாம முடிவெடுத்துக்கிட்டால், E-படகுல திரும்பும்போது கீழ்வானம் சிவந்திருக்கும். இது ஏற்றுக் கொள்ளத்தக்கதே கிடையாது. இருளிலேயேதான் அப்படகு திரும்பியாகணும்.''

ரேடில் இருக்கையில் பின்னால் சாய்ந்தமர்ந்தார். முகம், உத்திரம் நோக்கி. கண்கள், மூடியபடி. ''தெளிவா சிந்திக்கிறே, கார்ள். நீயும் கத்துக்க ஆரம்பிச்சுட்டே.'' நிமிர்ந்தமர்ந்தார். ''நீ சொல்வது அப்பழுக்கற்ற நிஜம். அதனாலத்தான், வந்து குதிப்பது, அதுக்கு முன்னாள் ராத்திரியே நடந்தாகணும்.''

''சார்?'' என்றான் ஹோஃபர் முகமெங்கும் ஆச்சரியத்துடன். ''எனக்கு விளங்கலே.''

''ரொம்ப சிம்பிள். சர்ச்சில் ஸ்டட்லே க்ராஞ்சுக்கு சனிக்கிழமை மத்தியானமோ அல்லது சாயங்காலமோ வந்து சேர்வார். அந்த இரவுப்பொழுதை அங்கேயே கழிப்பார். நம்ம பார்ட்டி முந்தைய நாள் இரவு, அதாவது ஐந்தாம் தேதி அங்கே தரையிறங்கும்.''

கேட்ட ஹோஃபரின் முகம் சுளித்தது. ''ம், இதன் அனுகூலம் விளங்குது, ஸார். எதையாவது கருத்தில் கொள்ளாமல் விட்டிருந்தால் அதை ஈடுகட்ட இந்த அவகாசம் உதவும்.''

''கவனிக்க - இதனால, E-படகு பிரச்சினையும் இல்லாம போயிடும். சனிக்கிழமை பத்து அல்லது பதினோரு மணிக்கே படகுகளை கிளப்பிடலாம்.'' ரேடில் சிரித்தார். இன்னொரு சிகரெட்டை எடுத்துக் கொண்டார். ''இதுவும் சாத்தியம்தான்னு நீ ஒத்துக்கிறே, இல்லே?''

''சனிக்கிழமை இரவு முழுக்க பதுங்கியிருக்கும் சமாச்சாரத்துல கடுமையான பிரச்சினைகள் எழலாம்.'' ஹோஃபர் மீண்டும் சுட்டிக்காட்டினான். ''அதுவும் ஒரு குறிப்பிட்ட நபர்கள் அடங்கியிருக்கும் இந்தக் கூட்டத்தை ஒளிச்சு வைப்பதுல சிக்கல்கள் உண்டு.''

சிரித்துக் கொண்ட ரேடில் ''கேட்க வேண்டிய கேள்விதான்'' என்று அங்கீகரித்துவிட்டு கேட்டார்: ''ஒரு பதில் வேணும் எனக்கு உன்கிட்டேயிருந்து. ஒரு வேப்ப மரத்தையே பதுக்கி மறைச்சு வைக்கணும்னா, அதுக்கு இந்த பூமியில் உள்ள மிகவும் பாதுகாப்பான இடம்?''

''அடர்த்தியான வேப்ப மரங்கள் கொண்ட ஒரு தோப்புன்னு சொல்லலாம்.''

''எக்ஸாக்ட்லி. ஆளரவமற்ற ஒதுக்குப்புறமா இது போன்ற பகுதியிலே, ஓர் அந்நியன், தனித்து கண்டு

பிடிக்கவல்ல ஒரு பொருளாத்தான் தெரிவான். அதுவும் போர் காலத்துல சொல்லவே வேணாம். விடுமுறைக்கு வந்ததாகவும் சொல்ல முடியாது. போர் நேரத்துல, த குட் ஆங்கிலேயர்கள், விடுமுறையை வீட்டுலேயே கழிச்சுடுவாங்க. நீ மிஸஸ் க்ரேயுடைய ரிப்போர்ட்டைப் பார்த்தேனா தெரியும்... அதிலே அவங்க சொல்லியிருக்காங்க: ஒவ்வொரு வாரமும் அறிமுகமில்லாதவர்கள் கிராமத்து தெருக்களில் வந்து போவதாகவும், இப்படி வரும் ஒவ்வொருவரையும் சந்தேகப்பட்டு கேள்விகள் கேட்பது கிடையாதுனும் சொல்லியிருக்காங்க.'' ஹோஃபர் ஆச்சரியப்பட்டுப் போக, ரேடில் தொடர்ந்தார்: ''சீருடையற்ற பட்டாளத்தான்கள். விளையாடுவான்கள்.'' குறிப்பிட்டுவிட்டு டேபிளிலிருந்த மிஸஸ் க்ரேயின் ரிப்போர்ட்டை எடுத்தார் அவர். ''இதோ, இதுல பக்கம் மூணுல, மெல்த்தாம் ஹவுஸ் எனும் இடத்தைப் பற்றி சொல்லியிருக்காங்க, மிஸஸ் க்ரே. ஸ்டேட்லே கான்ஸ்டபிளிலிருந்து எட்டு மைல்கள் தள்ளியிருக்கு இது. படை வீரர்களை தயார் பண்ணும் பயிற்சியகமா இது கடந்த வருடங்களிலே பயன்படுத்தப்பட்டிருக்கு. போலந்து, செக் நாட்டு ஆட்களுக்கு பயிற்சி கொடுக்கப்பட்டிருக்கு. பிரிட்டிஷ் பட்டாளத்துக்காரனுங்களுக்கேகூட இங்கே ரெண்டு வருசம் பயிற்சி நடந்திருக்கு.''

அந்த ரிப்போர்ட்டை ஹோஃபர் பக்கமாய் அவர் தள்ள, அவனும் அதனை படித்துப் பார்த்தான்.

''அகப்படாமல் நழுவ இங்கிலீஷ் சிப்பாய்ங்க சீருடை இருந்தால் போதும்... மாட்டிக்காம அப்பகுதியைக் கடந்துட முடியும். அல்லது போலந்து நாட்டு சீருடையில போகலாமே...''

''இதுல ஒரு விஷயத்தை கவனிக்கணும். போலந்து படையிலே ஆங்கிலேய வீரர்களும் இருந்திருப்பதாக மிஸஸ்

க்ரே சொல்றாங்க - வெறுமனே ஆங்கிலம் பேசுபவர்கள் மட்டும் இருந்ததா சொல்லல. இது ரெண்டுக்கும் வித்தியாசம் இருக்கு என்பதை, சார் கோவிச்சுக்காம கவனிக்கணும்.''

''அதுவும் சரிதான்'' என்ற ரேடில் சிந்திக்கலானார்.

''வாராந்திர மீட்டிங் இருக்கு'' என்றான் ஹோஃபர். ''அது துவங்க இன்னும் பத்து நிமிசம்தானிருக்குனு நினைவுபடுத்த விரும்பறேன்.''

''தேங்க் யூ'' என்றவர் எழுந்து இடுப்பு பெல்ட்டை இறுக்கிக் கொண்டார். ''நம்முடைய 'சாத்திய திட்டம்' முழுக்க எல்லாவற்றையும் கணக்குல எடுத்துக்கிச்சுனு சொல்லலாம், இல்லையா?''

''ஒரு விசயத்தை தவிர, சார்'' என்றான் ஹோஃபர் மறுபடியும்.

கதவு வரை போயிருந்த ரேடில் நின்றார். திரும்பினார். ''என்னது அது, கார்ள்? என்னை ஆச்சரியப்படுத்து...''

''இந்த ஆட்டத்தின் தலைவன், சார். அசாதாரண தகுதிகளும் திறமைகளும் கொண்ட ஒருவனாத்தான் அவன் அமையணும்.''

ரேடில் புன்னகைத்தார். ''எனக்காக கார்ள். அப்படியொரு ஆளை தேர்ந்தெடுத்து நீ எனக்கு கொடு. உனக்கு நான் நாற்பத்தியெட்டு மணிநேரம் அவகாசம் கொடுக்கறேன்.'' வேகமாய் கதவை திறந்து கொண்டு அவர் வெளியேறிப் போனார்.

★ ★ ★

இது முடிந்ததும் மியூனிச் எனும் பகுதிக்கு உடனடியாய் போகும்படி ஆனது ரேடிலுக்கு. மறுபடியும் தனது டிர்பிட்ஸ் உஃபர் அலுவலகத்துக்கு திரும்ப அவருக்கு

வியாழக்கிழமை ஆனது. முந்தைய இரவு தூங்காமல் வேலையிருந்ததால் மிகுந்த அசதியிலிருந்தார் அவர். அப்பகுதியில், முன்னெப்போதும் இல்லாத அளவுக்கு பாதுகாப்பு கெடுபிடிகள் வேறு பலப்படுத்திருந்தது.

உடனடியாய் காபி கொண்டு வந்து தந்த ஹோாஃபர், கோப்பை ஒன்றில் பிராண்டியை நிரப்பலானான். ''டிரிப் நல்லாயிருந்ததா, ஸார்?''

''ம்.'' சொன்ன ரேடில் தொடர்ந்தார்: ''நேற்று நாங்க தரையிறங்கும்போதுதான் விறுவிறுப்பான விஷயம் நடந்தது. அமெரிக்கன் போர்விமானம் ஒண்ணு எங்களை வட்டமடிச்சது. கலவரமானோம். அப்பத்தான் அதன் வால்ல ஒரு ஸ்வஸ்திக் சின்னத்தை நாங்க கவனிச்சோம். இதுதான் விபத்துக்குள்ளான அந்த விமானம். சரி செஞ்சு சோதனையோட்டம் பார்த்திருக்காங்க.''

''அசாதாரணம் ஸார்.''

ரேடில் ஒப்புதலாய் தலையாட்டினார். ''இது எனக்கு ஒரு ஐடியா தந்தது. நார்ஃபால்க் கடற்கரை பற்றி நீ எழுப்பிய பிரச்சினை சம்பந்தப்பட்ட ஐடியா.'' அப்போதுதான் தனது டேபிளில் இருந்த பச்சைநிற புதுக் கோப்பினை அவர் கவனித்தார். ''என்னது இது?''

''நீங்க கொடுத்த வேலை ஸார். தேடிக்கண்டுபிடிக்க சொன்ன ஆள். கொஞ்சம் பள்ளந்தோண்டி தேட வேண்டியதாச்சு. மிலிடரியில ஆயுதந்தாங்கிய போராளிகளைப் பற்றி விவாதிக்கும் நீதிமன்ற கேஸ்களைக் கிளறினேன். இன்னிக்கு மத்தியானம் அவனுங்க இங்கே இருப்பாங்க.''

''நீதிமன்றக் கேஸ்கள்?'' - கேட்டார் ரேடில். ''இந்த வார்த்தைகளே எனக்கு பிடிக்கலியே.'' சொல்லியபடி கோப்பினை திறந்தார். ''யார் இவன்?''

''இவன் பேர் ஸ்டைனர். கர்னல் கர்ட் ஸ்டைனர்'' என்றான் ஹோஃபர். ''அவரை பற்றி நீங்க அமைதியா படிக்க வசதியா, நான் கிளம்பறேன். அது ஒரு இண்டரஸ்டிங் கதை.''

★ ★ ★

இண்ட்ரஸ்டிங் என்று சொல்வதைவிட ஆச்சரிய அதிசயமானது எனலாம்.

மேஜர் ஜெனரல் கார்ள் ஸ்டைனருக்கு ஒரே மகனாய் கர்ட் ஸ்டைனர் பிறந்தது 1916ல். தாயார், ஓர் அமெரிக்க பிரஜை. சின்ன பிராயத்தில் யார்க்ஷைரில் வாழ்ந்திருக்கிறார். லண்டனில் படித்த இவர், தாயார் கார் விபத்து ஒன்றில் 1931ல் காலமானதும் தந்தையுடன் ஜெர்மனி திரும்பியுள்ளார். ஆயினும் 1938 வரை உறவுகளை சென்று பார்க்க யார்க்ஷைர் வந்து சென்றுள்ளார்.

ஓவியனாக உருவாக, தனது தந்தையின் வேண்டு கோளுக்கிணங்க கலைக்கல்லூரியில் சேர்ந்தாலும், ஓவியம் ஒத்துவராவிட்டால் பட்டாளத்தில் சேர்ந்துவிடுவதாய் ஏற்பாடு இருந்தது. ஒத்துவராமல் போய்விடவே 1936ல் பட்டாளத்தில் சேர்ந்திருக்கிறார். மிலிட்டரி பணி போரடிக்கவே, பாராசூட் கொண்டு தரையிறங்கும் கூட்டத்தில் இணைந்திருக்கிறார்.

இது, இயற்கையாகவே இவருக்கு கைவந்த ஒரு கலையாய் இருப்பது, உடனேயே புரிந்து - போயிற்று. போலந்து, நார்வே என பாராசூட்டில் பறந்து சாதனைகள் செய்வதில் முன்னேறியுள்ளார். 1940ல் மேற்கொண்ட பாராசூட் தரையிறக்கத்தின் போது எதிர்பாராது விபத்து நேர்ந்துவிட கையில் படுகாயம் உண்டானது ஸ்டைனருக்கு.

*இதற்கு பிறகு பறந்தது, போரின்போதுதான். இதை நினைக்கும்போதே ரேடிலுக்கு முதுகுத்தண்டில் ஐஸ்கட்டிகள் பிராண்டின. 'ரஷ்யாவை மறக்கத்தான் முடியுமா?' - தனக்குத்தானே கேட்டுக் கொண்டார்.*

*ஆயினும், தாக்கும்படையின் தலைவனாக திகழ்ந்த ஸ்டைனர், உட்கார்ந்த இடத்திலிருந்தபடியே 300 பேர் கொண்ட குழு ஒன்றினை வழிநடத்தினார். இதுபோல பல படைகள், பல இலக்குகள், பல சண்டைகளை வழி நடத்தியுள்ளார் ஸ்டைனர். விருதுகளும் வந்துள்ளன. இதற்காக கோர்ட்வரை சென்று திரும்பியுள்ள கதைகளும் இவருடைய கோப்பில் உள்ளன.*

*கோப்பினையே சற்றுநேரம் கவனித்துக் கொண்டிருந்த ரேடில் அழைப்பு மணியை அடித்தார். ஓடிவந்த ஹோஃப்பரிடம் "என்ன நடந்தது வார்ஸாவில்?" என்றார். "வார்ஸா பற்றி இருக்கே..."*

*"எனக்கு முழுசா தெரியாது, சார். கோர்ட் விசாரணை பற்றிய முழு விவரமும் இன்னிக்கு மத்தியானத்துக்குள்ளே நான் எதிர்பார்க்கிறேன்."*

*"ஆல் ரைட்" என்றார் ரேடில். "சேனல் தீவு பற்றியும் இருக்கு. கணவாய் தீவுகள்ல என்ன பண்ணிக்கிட்டிருந்தாங்க?"*

*"எனக்கு தெரிஞ்ச வரைக்கும், இந்த* Operation SwordFish *கூட்டம், ஒரு தற்கொலைப் படையாகும். கணவாய் பக்கமாய் வரும் கப்பல்களை அழிப்பது இவங்க வேலை."*

*"இதை எப்படி இவங்க சாதிக்கிறாங்க?"*

*"கடலுக்கு மேலேயோ அல்லது உள்ளேயோ இயங்கும்* Torpedo-*தான் இவங்க ஆயுதம். படுவேகமா பாயும் சிறு தானியங்கி விமானம் போன்றது. இதை கப்பல் நோக்கி ஏவி அதை நொறுக்கிடுவானுங்க. இதனுள்ளே இக்கூட்டத்தின் ஒருத்தன் போகலாம்... போனால், அவனும் குளோஸ்."*

''கடவுளே, கடவுளே'' என்றலறினார் ரேடில். கோப்பைப் பார்த்தபடி அப்படியே அமைதியாய் உட்கார்ந்து விட்டார். இருமிய ஹோஃபர் சொன்னான்: ''இவர் நமக்கு சாத்தியப்படுவார்னு நினைக்கிறீங்களா?''

''ஏன், இருக்கக்கூடாதா?'' - கேட்டார் ரேடில். ''அட்மிரல் இங்கே இருக்காரா இப்ப?''

''நான் பார்த்துட்டு வரேன்.''

''இருந்தார்னா, எப்படியாவது இன்னிக்கு மத்தியானம் நான் அவரை சந்திக்க ஒரு அப்பாய்ண்ட்மெண்ட் வாங்கித்தா. இதுவரைக்கும் என்னெல்லாம் பண்ணியிருக்கோம்னு சொல்லணும். ஒரு பக்கம் ரிப்போர்ட் ரெடி பண்ணு. நீயே எழுதிக்கோ. இதெல்லாம் வேற ஒருத்தருக்கும் தெரியக்கூடாது என்பது முக்கியம். நம்ம டிபார்ட்மெண்ட் உட்பட.''

★ ★ ★

இதே தருணத்தில், கர்னல் கர்ட் ஸ்டைனர், ஆங்கிலக் கணவாயின் உறைநிலைக்குக் கீழே போயிருந்த கடும் குளிர் நீரில் முன்னேறிக் கொண்டிருந்தார். வாழ்க்கையில் அவர் பார்த்திராத குளிர்.

இவருக்கு குறிக்கப்பட்டிருந்த பகுதி ப்ரே துறைமுகத்தின் வடகிழக்குப் பகுதியில் அல்டார்னி தீவில் இருந்தது. ஆனால் முன்னால் இருக்கும் எதையும் பார்க்கவே முடியாத வண்ணம் உறைபனி மூடியிருந்தது. இடப்பக்கத்து ஒட்டோ லெம்கேவையும் வலப்பக்கத்து ரிட்டர் நியூமேனையும் கயிறொன்று இவருடன் இணைத்து இறுக்கியிருந்தது.

பயங்கரமான வெடிபொருட்களைச் சுமந்துகொண்டு ஜோஸப் ஜான்ஸன் எனும் கப்பல் பொஸ்டனிலிருந்து ப்ளைமுத் எனும் இடம் நோக்கி நகர்ந்து கொண்டிருந்தது.

லேண்ட்ஸ் எண்ட் பகுதியில் அடித்த புயலால் அதன் ஸ்டீரிங் பாதிக்கப்பட, செல்ல வேண்டிய திசை நோக்கி அதனால் நகர முடியவில்லை. திண்டாடியது. தள்ளாடியது. காப்பாற்ற ஸ்டைனர் அழைக்கப்பட்டிருந்தார்.

மெதுவாய் ஜோஸப் ஜான்ஸனை அணுகியபோது ரிட்டர் "நெருங்கிட்டோம், ஸார் " என்றார். "அந்த கப்பலிலிருந்து பேச்சு சத்தத்தை என்னால கேட்க முடியுது."

பட்டாளத்தாரரான லெம்கேவும் இவர்களை அடைந் திருந்தார். "என்னாலேயும் கேட்க முடியுது" என்றார்.

இருவரையும் அமைதியாகும்படி கை உயர்த்தி சைகை காட்டிய ஸ்டைனர் உன்னிப்பாய் கவனிக்கலானார்.

அடிக்கும் குளிரில் பற்கள் தந்தியடித்தபடி, "நெருங்கிட்டோம்" என்றார் மீண்டும் லெம்கே. "வாய்விட்டு பேச வேண்டாம்" என்று அடக்கினார் ரிட்டர்.

அப்போது திடுமென்று ஒரு கொத்துக் காற்று சீறி அடிக்க, மலையென இருந்த பனி அப்படியே நகர்ந்து அதற்கு பின்னாலிருந்த காட்சியைக் காட்டியது. ஜோஸப் கப்பல் வடமேற்கு திசையில் திரும்பி அப்படியே நகரலாயிற்று. ஸ்டைனர் மின்னலென இயங்கினார். "ஆல் ரைட். அம்பது அடி நெருங்கியதும், சீறிப்பாயும் தானியங்கி குண்டான ட்ராபெடோவை இயக்குங்க. எந்த முட்டாளதனமான ஹீரோ ஆட்டங்களும் வேண்டாம், லெம்கே. யாரும் மெடல் தரப்போவதில்லை. கரணம் தப்பினா, சவப்பெட்டிதான்."

சொல்லிக் கொண்டிருக்கும்போதே இவர்களுக்கு முன்னால் இருபது அடிகள் போல முன்னேறியிருந்தார் லெம்கே. "மடையன்" என எண்ணிக் கொண்டார் ஸ்டைனர்.

அங்கு ஜான்ஸன் கப்பலில் இரண்டு பேர் கையில் துப்பாக்கியுடன் நின்று கொண்டிருக்க, இன்னொரு அலுவலர் கையில் மெஷின் கன்னுடன் வெளியே வந்தார். அற்சமயம் கப்பல் வேகம் பிடிக்கத் துவங்கியது. மீண்டும் பனிப்போர்வை விழ ஆரம்பித்திருந்தபடியால், இன்னும் சற்று நேரத்தில் கப்பல் மறுபடியும் கண்களுக்கு அகப்படாமல் ஆனாலும் ஆகிவிடலாம்.

லெம்கேவை நிறுத்தி வைக்க ஸ்டைனரால் ஆகவில்லை. அக்கப்பலின் துப்பாக்கி மனிதன் தனது இலக்கினை குறித்து அவனது ட்ராபெடோவை இயக்கி விட்டான்.

சட்டென நியூமேன் பக்கம் திரும்பிய ஸ்டைனர் ''ம், இப்பவே!'' என கத்தினார். இங்கிருந்தும் சுடப்பட்டது.

ஜோஸப் கப்பலின் இருபதடி அருகாமையிலிருந்து திரும்பி ஓடிவர லெம்கே முயற்சிக்க, அங்கிருந்த சிப்பாய்கள் தங்களால் இயன்ற அளவு தவிர்த்து விடாமல் சுடுவதில் இறங்கினார்கள். பனி இறுகியிருந்ததால் நடப்பது சரிவர தெரியவில்லை. ஆனாலும், ஒருகணம், லெம்கே சரிந்து மறைந்தது போலிருந்தது. ஆனால் மறுகணமே அவரை அங்கு காணவில்லை.

அடுத்த நொடியே மற்றொரு ட்ராபெடோ குண்டு கப்பல் நோக்கி சீறி விரைந்தது. தீவு முழுக்க குண்டுகளின் பேரோசை எதிரொலித்து அடங்கும் வண்ணம் அக்கப்பல் வெடித்தது.

சிதறிய துண்டுகள் எங்கெங்கிலும் பரவின. அதில் ஒன்று தன்னை தாக்கியதாய் உணர்ந்த நியூமேன் தலையில் கைவைத்து பார்த்தார். அங்கு ரத்தம் பீறிட்டது. அவர் நினைவு தப்பியது. தோள் தந்து உதவ முன்வந்தது, ஸ்டைனர்தான்.

*சிறிது நேரம் கழித்து நியூமேனுக்கு நினைவு திரும்பியது. குளிரில் வெடவெடத்து துடித்த அவரை நெருங்கினார் ஸ்டைனர். "அப்பத்தான் யூனிவர்ஸிடியிலிருந்து வெளியே வந்திருந்த முரட்டு இளைஞன். 18 வயசு. எப்பவும் கட்டுக்கட்டாய் கவிதைகள். பாக்கெட் முழுக்க. நான் காயப்பட்டிருந்தபோது மெனக்கெட்டு மருந்து தேடி வந்து தந்த ஜீவன்."*

*"உங்களை அப்படியே நான் விட்டிருக்கணும்" என்றார் ரிட்டர். "அதுக்கு பிராயச்சித்தமா என்னை எந்த நிலைக்கு தள்ளியிருக்கீங்க பாருங்க. எனக்கு விளங்காத ஒரு தொழில் முதல்ல ரஷ்யால. இப்ப இங்கே." கண்களை மூடிக்கொண்ட அவர் பிறகு மிருதுவாய் சொன்னார்: "சாரி சார். ஆனா என்னால முடியல. என்ன பண்றது?" குரலில் தளர்ச்சி இருந்தது.*

*"பேசாம உட்காருவோம்" என்றார் ஸ்டைனர். "பனி விலகியதும் ப்ராண்டிட் நிவாரண படகை எடுத்துக்கிட்டு வருவார்."*

*"ஒரு சிகரெட் வேணும்." சொன்ன நியூமேன் உடனே இறுக்கமானார். வராண்டா வழியே எதையோ பார்த்த அவர் "அதை கவனிங்க" என்றார்.*

*ஸ்டைனர் சடுதியில் வெளியே போனார். அலைகள் எழும்பியும் சுருண்டும் வெகுண்டிருந்தன. ஜோஸப் கப்பலுடன் நடந்த போரில் மிஞ்சிய ஒரு கார்பெட் மிதந்தது.*

*"அப்ப, அந்த கப்பலை நாம ஜெயிச்சுட்டோம்" என்றார் நியூமேன். எழுந்திருக்க முயன்றார். "அங்கே ஓர் ஆசாமி இருக்கான், ஸார். நல்லா கவனிங்க. மஞ்ச தற்காப்பு உடைல."*

மல்லாக்க மிதந்துக் கொண்டிருந்தான் அவன். கண்கள் மூடியிருந்தன. வழி செய்தபடி அவனை நோக்கி போனார் ஸ்டைனர். பாதுகாப்பான பின்புறத்துக்கு அவனை இழுத்துக் கொண்டு போன அவர், அப்படியே கிடத்தி விட்டார். அங்கு அவன் கண்களை திறந்தான். முறைத்தான். பிறகு அவன் தலையை ஆட்டினான். பேச முயன்றான்.

''என்னது?'' - கேட்டார் ஸ்டைனர்.

''ப்ளீஸ்'' என்றான் அந்த பையன். ''என்னை விட்டுடுங்க.''

அவன் கண்கள் மறுபடியும் மூடிவிட்டன. அவனை தரதரவென்று இழுத்துக் கொண்டு ஸ்டைனர் தற்சமயம் கப்பலின் மேற்பகுதிக்கு முன்னேறுவதை நியூமேன் கவனித்தார். அங்கு ஸ்டைனர் வெகுநேரம் நின்றார். பிறகு அந்த பையனை மிருதுவாய் தண்ணீருக்குள் தள்ளி விட்டார். கண்களுக்கு தட்டுப்படாமல் அவன் மறைந்த பிறகு ஸ்டைனர் மீண்டும் உள்ளே வந்தார்.

''என்ன செஞ்சீங்க?'' - தளர்ச்சியாய் இருந்தாலும் அதிகாரமாய் கேட்டார் நியூமேன்.

''முட்டிக்குக் கீழே அவனுடைய ரெண்டு கால்களும் பிஞ்சிப் போயிடுச்சு.''

இருவரும் அங்கு அமைதியானார்கள். குளிர் கூடியிருந்தது. மழை வலுத்தது. பனி துரிதமாய் விலகியது. இருபது நிமிடங்களுக்கு சற்று அருகில் எஞ்சினின் ஓசை ஒன்று கேட்டது. பரபரப்பான ஸ்டைனர், நீர்ப்புகா துப்பாக்கிக்குள் குண்டு போட்டு சுட்டார்.

அருகில் வந்ததும்தான் அது நிவாரணப் படகு என்பது தெரிந்தது. சேர்ஜெண்ட் ப்ராண்டிட் குதித்து உள்ளே இறங்கியபோது அவரை ஏற்றுக் கொள்ள ஸ்டைனரும் நியூமேனும் சென்றார்கள்.

''கொன்னுட்டீங்க சார், நீங்க'' என்றார் வந்தவர். ''லெம்கேக்கு என்னாச்சு?''

''ரொம்ப ஹீரோ ஆட்டம் ஆடிட்டான். என் கட்டுப்பாட்டுக்குள் இல்லாத தூரம் முன்னேறிட்டான். ஆங், ஆங், நியூமேன்கிட்டே ஜாக்கிரதை. தலைல நல்ல அடி.''

''சிப்பாய் அல்ட்மேன், தன்கூட ரேடில் மற்றும் மேயர் ஆகியோரைக் கூட்டிட்டுப் போயிருக்கார். தேடுதல் வேட்டையை நடத்தத்தான். அவனை பற்றிய ஏதாவது தகவல் கிடைக்கலாம். அவனுக்கு லக் ஜாஸ்தி.''

ஸ்டைனர் அசதியாய் உணர்ந்தார். இதுவரை உணர்ந்திராத ஓர் அசதி. ஐந்து வருடப் போர்.

கப்பலை திருப்பிக்கொண்டு அவர்களனைவரும் ப்ரே பகுதி நோக்கி முன்னேறினார்கள். துறைமுகம் முழுவதும் கப்பல்கள் நிறைந்திருந்தன.

அங்கு ஓர் இளைய சிப்பாய் கலகலப்பான முகம் கொண்டு, வந்த இவர்களை வரவேற்க இறுக்கமாய் ஒரு சல்யூட் வைத்து நின்றான்.

பதிலுக்கு மரியாதை செய்த ஸ்டைனர், ''மெனி தேங்க்ஸ், கொனிக்'' என்றார்.

பின்னால் ப்ராண்டிட் தொடர, நியூமேனைக் கைத்தாங்கலாய் பிடித்துக்கொண்டு மேல்தளத்திற்கு சென்றார்கள்.

அங்கு முதல் ஆளாய் வெளியே வந்தது, தீவின் கமாண்டண்டாக இயங்கும் ஹான்ஸ் நியூஹாஃப். போர் வீரன். போர்க்களத்தில் ஏற்பட்ட தாக்குதலில் இவரது நுரையீரல் சிகிச்சைக்கும் அப்பாற்பட்டு பழுதானது. முகமும் எதிரி சுட்ட குண்டினால் பழுதுபட்டுப் போனது.

*ஹான்ஸின் பின்னால் அவருடைய மனைவி இருந்தார். இல்ஸீ நியூஹாஃப், அழகின் உச்சம். திரையுலகத் தாரகையாய் வெற்றிக்கொடி கட்டியவர். கோயபெல்ஸின் நண்பர். ஃபெர்ரெர் வியக்கும் நபர். காமம் தாண்டிய தூய அன்பின் வெளிப்பாடாய் ஹான்ஸுடன் இணைந்தார் இவர். இருவருக்குள்ளும் நிலவும் கதகதப்பான புரிந்து கொள்ளுதல் வியப்பானது. இதன் காரணமாகவே, துளியும் தடுமாற்றமின்றி முன்னேறி ஸ்டைனரின் கன்னத்தில் நட்பாய் முத்தம் கொடுக்க இல்ஸீயால் முடிந்தது. ''உங்களுக்கு என்னாச்சோன்னு எங்களை துடிக்க வெச்சுட்டீங்க.''*

*கைகுலுக்கிய ஹான்ஸ் ''திறமையா கையாண்டுட்டீங்க'' என்றார். ''உடனே உங்களை நான் பெர்லினுக்கு அனுப்பி வெக்கிறேன்.''*

*''தப்பித்தவறிகூட அதை செஞ்சுடாதீங்க. என்னை மறுபடியும் ரஷ்யாவுக்கு அனுப்பி வெச்சுடப் போறாங்க.''*

*கீழே சிறு அரவம் கேட்க அனைவரும் எட்டிப் பார்த்தார்கள். மற்றுமொரு படகு அங்கு வந்து இறங்கியது. துணியால் மூடப்பட்ட உடல் ஒன்று அதிலிருந்தது. ராணுவ வீரன் அல்ட்மேன் அதில் வந்திருந்தார். அவர், ''சார்?'' என்றார் கட்டளைக்கு காத்திருந்து.*

*ஸ்டைனருடன் இணைந்து கொண்ட நியூமேன், ''லெம்கே'' என்று நெஞ்சடைக்க சொன்னார். ''எத்தனை போர்க்களங்கள்ல இணைந்திருப்போம். ஆனால் முடிவோ, இப்படி.''*

*''ஒரு துப்பாக்கி குண்டுல உங்க பேர் எழுதியிருந்தால், அது நடந்தே தீரும்'' என்றார் சார்ஜெண்ட் ப்ராண்டிட்.*

★ ★ ★

ரிப்பன்ட்ராப் மற்றும் கோயபெல்ஸ் ஆகியோருடன் மீட்டிங்கில் இருந்தார் கனாரீஸ். மதியம் ஆரம்பித்த மீட்டிங் மாலை ஆறு மணிக்கு முடிந்தபோதுதான் அவரால் ரேடிலை சந்திக்க முடிந்தது. மிலிடரியில் ஆயுதந்தாங்கிய போராளிகளைப் பற்றி விவாதிக்கும் நீதிமன்ற கேஸ்களை ஸ்டைனர் கேட்டிருந்தார். அதுபற்றிய எந்த அறிகுறியும் இல்லை.

ஆறடிக்க ஐந்து நிமிடம் இருந்தபோது ஹோஃபர் கதவை தட்டிவிட்டு ரேடிலின் அலுவலக அறைக்குள் நுழைந்தான். ''அவங்க வந்துட்டாங்களா?'' - ஆர்வமாய் முன்வந்தார் ரேடில்.

''மன்னிக்கணும் சார். இல்ல.''

''ஏன்?'' - கோபமானார் ரேடில்.

''ரெக்கார்டுகள் ப்ரின்ஸ் அல்ப்ரெச்-ட்ரஸ்ஸே'ல இருக்கு போல தெரியுது.''

''நான் உன்கிட்டே கேட்டிருந்த விஷயத்தை பற்றி தகவல் சேகரிச்சுட்டியா?''

''இதோ, சார்.'' ரேடிலிடம் அழகாய் தட்டச்சு செய்யப்பட்டிருந்த ஒரு தாளை அவன் நீட்டினான்.

சீக்கிரமாய் அதனை பார்த்தார் ரேடில். ''எக்ஸலெண்ட். ரியலி எக்ஸலெண்ட்.'' புன்னகைத்துக் கொண்ட அவர், ஏற்கெனவே விறைப்பாய் மடிப்புக் கலையாமலிருந்த அவருடைய சீருடையை சீர்செய்தார். ''இப்ப நீ டியூட்டியில இல்ல, இல்லையா?''

''நீங்க திரும்பும்வரை நான் காத்திருக்கணும்னா, எனக்கு ஆட்சேபணையில்ல, சார்.''

இதற்கு புன்னகைத்த ரேடில் அவனை தோளில் தட்டிக் கொடுத்தார். ''ஆல் ரைட், நாம இதை துவங்குவோம்.''

★ ★ ★

ரேடில் உள்ளே நுழைந்தபோது அட்மிரலுக்கு தேநீர் வழங்கப்பட்டுக் கொண்டிருந்தது. ‘‘ஆஹ், வாங்க மேக்ஸ்’’ என்றவர், ‘‘உங்களுக்கு ஒரு கப்?’’ என்றார்.

‘‘தேங்க் யூ.’’

அட்மிரல் மிகவும் களைத்துத் தோன்றினார். அவரது கண்களில் களைப்பின் தாக்கம் தெரிந்தது. ‘‘ரொம்ப களைச்சுப் போய் தெரியறீங்க’’ என்றார் ரேடில்.

‘‘நீங்களும் அப்படித்தான் தெரிவீங்க - இந்த ரிப்பன்ட்ராப் மற்றும் கோயபெல்ஸ்கூட ஒரு மதியம் முழுக்கப் பேசியிருந்தால்! ஒவ்வொரு சந்திப்பின்போதும் இவங்க ரெண்டு பேரும் தாங்க முடியாம நடந்துக்கிறாங்க. கோயபெல்ஸைப் பொறுத்த வரைக்கும் ‘போரை நாம நிச்சயம் ஜெயிச்சுடுவோம்’ என்பது கருத்து. ம், இதைவிட ஒரு முட்டாள்தனம் எங்கேயாவது உண்டா?’’

இதற்கு என்ன பதில் தருவது என்று ரேடிலுக்குத் தெரியாதபோது ‘‘அதிருக்கட்டும்... என்ன காரணத்துக்காக நீங்க என்னை பார்க்க வந்திருக்கீங்க?’’ என்று அவரே முன்னேறி காப்பாற்றினார்.

ஹோஃபரின் தட்டச்சு செய்யப்பட்ட தாளை மேஜையில் ரேடில் வைக்க அதையே முறைத்தார் கனாரீஸ். பிறகு ஆச்சரியமாய் தலைநிமிர்ந்தவர், ‘‘என்னது இது?’’ என்றார்.

‘‘நீங்க கேட்ட, ‘சாத்தியக்கூறு திட்ட அறிக்கை’, அட்மிரல்.’’

‘‘ஆங்’’ என்ற அட்மிரல் மீண்டும் அதையே வைத்தகண் எடுக்காமல் பார்த்தார். ‘‘வெரிகுட், மேக்ஸ். பேப்பர்ல பார்க்க நல்லாயிருக்கு. ஆனா, நிஜத்துல சாத்தியமாகுமா? எதுக்கும் கைக்கு எட்டும் தூரத்துல வெச்சுக்கங்க. இந்த

ஹிம்லர் பய ஃபெர்ரர்கிட்டே சொல்லி அவன் கேட்டால் உடனே கொடுக்கும்படி வெச்சுக்கங்க.''

''அவ்ளோதானா, அட்மிரல்?'' என்றார் ரேடில். ''இதுல நான் மேற்கொண்டு எதையும் பண்ண வேண்டாம்னா சொல்றீங்க?''

தவிர்க்கமுடியாத ஆச்சரியத்துடன் நிமிர்ந்தார் அட்மிரல்: ''மை டியர் மேக்ஸ்... உங்களுக்கும் விசயம் விளங்கல. நம்ம சுப்பீரியர்கள் நம்மிடம் சொன்ன விசயத்தின் முட்டாள் தனத்தைப்போய், நீங்க இத்தனை முக்கியத்துவம் தந்தா எடுத்துக்கணும்? பைத்தியக்காரத்தனம்! சரி... உங்களுடைய அத்தனை துள்ளல்களையும் வெச்சு செய்துள்ள இந்த அறிக்கையை இப்போதைக்கு ஒருபக்கம் வைங்க. கொஞ்ச காலத்துல, இத்திட்டத்திலுள்ள கஷ்டங்களெல்லாம் தளர்ந்தோட அனுமதிங்க. பொறுத்திருங்க. அப்போ, உங்க சுப்பீரியனுங்க அத்தனை பேரும், இந்த திட்டத்தை அப்படியே கைவிட்டுடுவாங்க'' என்றவர் பின்வருமாறு முடித்தார்: ''இதைப்போன்ற ஒரு பைத்தியக்காரத்தனமான கடத்தலைக் கையிலெடுக்க இந்த ஃபெர்ரர் பயகூட யோசிப்பான் என்பதே நிஜம்.''

ரேடில் விடவில்லை. ''இது சாத்தியம்தான், அட்மிரல். நான் சரியான ஆசாமியைத் தேர்ந்தெடுத்திருக்கேன்.''

''நீங்க செஞ்சிருப்பீங்கன்னு எனக்கு தெரியும், மேக்ஸ். ஒரு வேலைனா அதை சுத்தமா செய்யக்கூடியவர் நீங்கன்னு எனக்கு தெரியும்.'' இப்போது அழகாய் சிரித்தார் அவர். ''இதை நீங்க ரொம்பவும் மனசுல எடுத்துக்கிட்டு இருக்கீங்கன்னு எனக்கு விளங்குது. ஹிம்லர் பற்றி நான் சொன்ன கமெண்ட் உங்களை வருத்தப்படுத்தியிருக்கணும். கவலை வேண்டாம். நான் அவரை பார்த்துப்பேன். என்ன

செஞ்சிருக்கீங்கன்னு அவனுங்க எகிறினால், அவங்களைத் திருப்திப்படுத்த உங்க கைல ரிப்போர்ட்டுகளா நிறைய இருக்கு. அதோட விட்டுடுங்க.''

இதை நிராகரிப்பதாய் தலையசைத்து உணர்த்தி விட்டு அட்மிரல் தனது பேனாவை எடுத்துக் கொண்டபோது, "ஆனா அட்மிரல்...'' என்று இழுத்த ரேடில் "நிச்சயமா இது, இது...'' என்றார்.

''போர்ல நாம இழந்துவிட்ட பிறகு இப்பப்போய் சர்ச்சிலைக் கொல்வதா? அது என்ன வகையில் நமக்கு உதவப்போகுது?'' என கோபப்பட்டார் அட்மிரல். பிறகு சொன்னார்: ''நாம ரெண்டு பேரும் பல வருடங்களாக பழகறோம், மேக்ஸ்.''

''யெஸ், சார்.''

''ஆகையால இதுல என்னை நம்புங்க. நான் என்ன செய்றேன்னு எனக்கு தெரியும்.''

''கரெக்ட், சார்'' என்றார் ரேடில் நறுக்குத் தெறித்தாற் போல். பின்னால் நடந்து நகர்ந்தார். வலக்காலால் தரையை உதைத்தார். சல்யூட் வைத்தார். வெளியேறி விட்டார்.

தற்சமயம் தனக்கு வைக்கப்பட்டிருந்த காபிக் கோப்பையை கனாரீஸ் எடுத்தபோது அது மிகவும் குளிர்ந்து போயிருந்தது.

★ ★ ★

**ஹோ**ஃபர் மேஜையிலிருந்த தாள்களை நேர்செய்து கொண்டிருந்தபோது தனது அலுவலகத்துக்குள் நுழைந்தார் ரேடில். ஆர்வமாய் நெருங்கிய பணியாள், ரேடிலின் முகத்தில் தொனித்த பிரதிபலிப்பை கவனித்தான். ''இது, அட்மிரலுக்குப் பிடிக்கலியா, சார்?''

''இதுல சில பைத்தியக்காரத்தனமான லாஜிக்குகள் இருக்குன்னு சொன்னார், ஹோஃபர். சொல்லப்போனால், அது, அவரை ரொம்பவுமே வியப்புக்குள்ளாக்கியதைப் போல தெரிஞ்சது.''

''இப்ப என்ன பண்ணுவது, சார்.''

''ஒண்ணும் கிடையாது'' என்றார் ரேடில் களைப்பாய். ''அவங்க கேட்ட Feasible Study, இதோ பேப்பர்ல இருக்கு. மறுபடியும் இதைப் பற்றி அவங்க கேட்காமலேகூட போயிடலாம். வேற ஏதாவது வேலையை பார்ப்போமே...''

சிகரெட்டுக்கு கைநீட்டிய ரேடிலிடம் ''உங்களுக்கு ஏதாவது சாப்பிடக் கொண்டு வரட்டுமா?'' என்றான் ஹோஃபர், கனிவாய் அதே சமயம் ஜாக்கிரதையாய்.

''வேண்டாம், கார்ள். நீ வீட்டுக்குப் போ. காலைல பார்ப்போம்.''

''சரி, சார்.'' சல்யூட் வைத்தவன் தயங்கினான்.

''கிளம்பு, கார்ள். நீ ஒரு குட் மேன். தேங்க் யூ.''

தனியான ரேடிலின் கைகள் சின்னதாய் நடுங்கின. தாளா இழப்பை உணர்ந்தார் அவர். தனிப்பட்ட இழப்பாகவே எடுத்துக் கொண்டார். ''ப்ச்...'' என்றவர், ''இந்த முழு சமாச்சாரத்தையும் நான் ரொம்பவும் சீரியசா எடுத்துக்கிட்டேன்... அதான்.''

நிமிர்ந்தமர்ந்த அவர் க்ரே தந்திருந்த கோப்பினைப் பிரித்துப் படிக்க ஆரம்பித்தார். சற்றுநேரத்தில் மிலிட்டரி சர்வே மேப் வரை வந்தவர் அதனை பிரித்தார். சட்டென்று நிறுத்தினார். அவருக்கு போதும்போதுமென்று வந்தது. இந்த ஆபீஸும் அப்வெர்ரும். ச்சே. கோப்பையும் மேப்பையும் பெட்டிக்குள் திணித்து உள்ளே வைத்தார். மேல் கோட்டை எடுத்துக் கொண்டார். எழுந்தார்.

வெளியே வழக்கத்துக்கு மாறாய் மிக அமைதியாய் இருந்தது. அதனை அனுபவிக்க முடிவு செய்தார். இப்போது எவ்வித ரோந்துகளும் இருக்காது, எனவே யாராவது வழிமறிப்பார்கள் என்ற பயமும் அவருக்கு ஏற்படவில்லை. காருக்கு பதிலாக நடந்தே வீட்டுக்குப் போக முடிவெடுத்தார். தலை வேறு வெடித்து சிதறுவது போலிருக்க, வெளியே சிறிதாய் தூறிக்கொண்டிருந்த மழையும் அவருக்கு புத்துணர்ச்சி தருவதாய் அமைந்திருந்தது.

நடந்து கொண்டிருக்கும்போதே ஒரு கார் இவளைக் கடந்துபோய் நின்றது. அதன் பின் சீட்டிலிருந்து வந்த இளைஞன் ''கர்னல் ரேடில்?'' என வினவினான். ''நல்லவேளை நீங்க வீட்டுக்குப் போவதற்குள் உங்களை பிடிச்சுட்டோம். உங்க பொன்னான நேரத்துல கொஞ்சம் எங்களுக்கு ஒதுக்கித் தந்தால் உள்நாட்டு ரகசிய காவல்துறை மகிழும்.'' சொன்னவன் சட்டென்று அவர் கை பெட்டியை வாங்கிக்கொண்டு ''நான் தூக்கிட்டு வரேன்'' என்றான்.

உலர்ந்துபோன தனது உதடுகளை ஒரு முறை நாக்கு ஒட்டி ஈரப்படுத்திய ரேடில், புன்னகைக்க முயற்சித்தார். ''வந்து... வந்து... ஓ கே'' என்ற அவர் மெர்ஸிடீஸின் பின்பக்கம் ஏறினார்.

உள்ளே வண்டியை ஓட்டியவனிடம் ஒரு போலீஸ் மெஷின் கன் இருப்பதை கவனித்தார் ரேடில். தனக்குள் எழுந்த பயத்தைக் கட்டுப்படுத்தும் வண்ணமாய் நீண்ட ஆழ்ந்த சுவாசத்தை மேற்கொண்டார் அவர்.

''சிகரெட், சார்?''

''தேங்க் யூ'' என்ற ரேடில் கேட்டார்: ''நாம எங்கே போறோம்?''

"ப்ரின்ஸ் அல்ப்ரெஷ்ட்ஸ்ட்ராஸ்." சிகரெட் பற்ற வைக்க தீக்குச்சி நீட்டியவன், "நாசி ஜெர்மனியின் ரகசிய போலீஸ் தலைமை அலுவலகம்."



# 4

ப்ரின்ஸ் அல்ப்ரெஷ்ட்ஸ்ட்ராஸ்ஸின் முதல் தளம். அலுவலகத்துள் அனுமதிக்கப்பட்டதும் அங்கு ஹிம்லர், இரகசிய போலீஸின் முழு சீருடையில் ஒரு கறுப்பு சாத்தானை போல நின்று கொண்டிருப்பதை ரேடில் பார்த்தார். நுழைந்த ரேடிலை நிமிர்ந்து பார்த்த அவருடைய கண்களில் இறுக்கமும் ஒட்டுறவற்ற போக்கும் இருந்தன.

ரேடிலை உள்ளே அழைத்து வந்து விட்டவனிடம், ''தேங்க் யூ, ரோஸ்மேன்'' என்றார் அவர். ''வெளியே காத்திரு. அப்புறமா நீ தேவைப்படுவே.''

அவன் வெளியேறியதும், ''நீங்க ஒரு தீறமைசாலினு சொன்னாங்க, ரேடில்'' என்றார் ஹிம்லர். ''விருதெல்லாம் வாங்கியிருக்கீங்களாம்...''

''ஆமாம், ஸார்.'' தன்னுடைய சிகரெட் பெட்டியை எடுத்து அதனை திறந்தார் ரேடில்.

''அட்மிரல் கனாரீஸூக்காக நீங்க உழைச்சிருக்கீங்கனும் கேள்விப்பட்டேன்...''

டேபிளில் வைக்கப்பட்டிருந்த சூட்கேஸையே இப்போது ஹிம்லர் வெறிக்கும்போது, அமைதி காத்தார் ரேடில். கச்சிதமான ஒளியில் அந்த அறை அழகாகவே காட்சியளித்தது.

"இப்பல்லாம் எனக்கு தெரியாம டிர்பிட்ஸ் உஃபர்'ல எதுவும் நடப்பதில்ல" என்றார் ஹிம்லர். "ஆச்சரியமாயிருக்கா? ஒரு உதாரணம் வேணும்னா தரேன். இங்கிலாந்திலிருக்கும் அப்வெஹ்ர் ஏஜெண்ட்டான மிசஸ் க்ரே என்பவரிடமிருந்து உங்களுக்கு ஒரு ரிப்போர்ட் வந்திருக்கு... அதுல ஆச்சரிப்படும்படியா வின்ஸ்டன் சர்ச்சில் பற்றியெல்லாம் இருக்கு."

"எனக்கு இதுக்கு என்ன சொல்றதுனே தெரியல" என்றார் ரேடில்.

"இதைவிடவும் ஆச்சரியமா ஒண்ணு இருக்கு. அந்தம்மாவுடைய கோப்புகள் அனைத்தையும் நீங்க அப்வெஹ்ரிடமிருந்து உங்க கஸ்டடிக்கு வாங்கிக் கிட்டிருக்கீங்க. மிசஸ் க்ரேயுடன் பல வருடங்களா தொடர்பிலிருந்த அந்த மேயர் என்பவரை நீங்க பணியிலிருந்து விலக்கியிருக்கீங்க." இப்போது அந்த சிறு பெட்டியின் மீது தன் கையை பதித்தார் ஹிம்லர். "போதும் விளையாட்டு, ரேடில். நான் இப்ப எதைப் பற்றி பேசிக்கிட்டிருக்கேன்னு உங்களுக்கு தெரியும். ம், என்கிட்டே சொல்ல என்ன வெச்சிருக்கீங்க? கம் ஆன்."

மேக்ஸ் ரேடில் ஒரு நேரடியான நபர். இவ்விஷயத்தில் வேறு வழியே கிடையாது என்பது அவருக்கு தெரியும். "இந்த பெட்டியில உங்களுக்கு தெரிய வேண்டிய அனைத்து விஷயங்களையும் நீங்க பார்க்கலாம் - ஒன்றை தவிர."

"பாராசூட் படையிலிருந்த கர்னல் கர்ட் ஸ்டைனருடைய நீதிமன்ற கேஸ்கள் பற்றி, ரைட்?" தனக்கருகிலிருந்த கோப்பு அடுக்கிலிருந்து முதல் ஃபைலை எடுத்து அதனை ரேடிலிடம் தந்தார் ஹிம்லர். "ஒரு நல்ல பண்டமாற்றம்! இதை நீங்க வெளியே போய் படிக்கணும்னு விரும்பறேன்." சொன்னவர், முன்னாலிருந்த சின்னப் பெட்டியைத் திறந்து

அதனுள்ளிருக்கும் சமாச்சாரங்களை எடுக்க ஆரம்பித்தார். ''நீங்க தேவைப்படும்போது நான் ஆள் அனுப்பறேன்.''

எதற்காகவோ கையை தூக்கிய ரேடில், மேற்சொன்ன வார்த்தைகளை கேட்டதும், உடனே அதனை ஒரு சல்யூட்டாக ஆக்கிக் கொண்டார். கதவை திறந்துகொண்டு வெளியேறினார்.

வெளியே வந்தவரிடம் ''என்ன கிளம்பிட்டீங்களா?'' என்றான் ரோஸ்மேன்.

''முடியாது போலிருக்கு'' என்றபடி ஓர் இருக்கையில் உட்கார்ந்த ரேடில் ''இதை நான் இப்ப படிக்கணும்'' என்றார்.

''காபி இருக்கானு பார்க்கறேன்'' என்றான் ரோஸ்மேன் சாந்தமாய். ''நீங்க இன்னும் கொஞ்ச நேரம் எங்ககூட இங்கே இருக்க வேண்டியிருக்கும்னு தோணுது.''

அவன் வெளியே போனான். ரேடில் ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டார். கோப்பை பிரித்தார்.

★ ★ ★

ஐரோப்பாவில் நாஜி கூட்டம் ஆக்கிரமித்திருந்த பகுதி வார்ஸோ. போலந்தில் உள்ள இவ்விடம் வார்ஸோ கெட்டோ என்றழைக்கப்பட்டது. 19 ஏப்ரலன்று, பூமிப்பந்திலிருந்து இப்பகுதியை அழித்தெடுத்து, இச்செய்தியை மறுநாள் 20 அன்று பிறந்தநாள் கொண்டாடும் ஹிட்லருக்கு பிறந்தநாள் பரிசாக வழங்க வேண்டுமென்பது ஹிம்லரின் அவா.

இதற்கு போலீஸ் மேஜர் ஜெனரலான ஜர்ஜன் ஸ்ட்ரூப்பினை நியமித்தார் அவர். ஜூ இனத்தைச் சேர்ந்த ஒருவரையும் விட்டு வைப்பதில்லை என்ற இலக்குக்கு தன்னை அர்ப்பணித்துக் கொண்டு உழைத்தார் ஜர்ஜன்.

*வார்ஸா கெட்டோ முழுவதும் அழிந்தது என்பதை நிறைவேற்றி முடிக்க அவருக்கு 28 நாட்கள் பிடித்தன.*

*ஸ்டைனரும் அவருடைய சகாக்களும் 13ஆம் நாள் காலையில் வார்ஸோ வந்தடைந்தனர். பெர்லின் போகும் ரயிலில் வந்தார்கள் இவர்கள். பிரயாணத்தின் இடையே ஒரு மணிநேரமோ அதற்கு சற்று அதிகமாகவோ ரயில் நிற்க வேண்டி வரும். இச்சமயத்தில் எல்லோரும் உள்ளேயே தங்கிவிட, ஸ்டைனர் மட்டும் வெளியே வந்தார். சற்று காலாற நடக்கலாம் என்ற எண்ணத்தில். ரிட்டர் நியூமேனும் அவருடன் அங்கு இணைந்து கொண்டார்.*

*அங்கு வெளியே வந்த ஸ்டைனரின் தோளை ஓர் இறுக்கமான பிடி பிடித்து திருப்ப, விறைப்பான மேஜர் உடையிலிருந்த ஒருவரை நேருக்கு நேராய் பார்த்தபடி நின்றார் ஸ்டைனர். மிலிட்டரி போலீஸ். ''என் பேர் ஸ்டைனர்'' என்றார் பதிலுக்கு. ''பாராசூட் வீரன்.''*

*இவருடைய தோளைத் தொட்டவர் உடனடியாய் விலகிக்கொண்டு பெரிய சல்யூட் வைத்தபோதிலும், ''சட்டம், எல்லாருக்கும் பொதுதானே சார்'' என்றும் சொன்னார்.*

*''உன்பேர் என்ன?'' - கட்டளையாய் கேட்டார் ஸ்டைனர்.*

*''ஒட்டோ ஃப்ராங்க்.''*

*''நல்லது. ரெண்டு பேரும் யார்யார்னு அறிமுகம் ஆகியபிறகு, இங்கே இப்ப என்னதான் நடந்துக்கிட்டிருக்குனு உன்னால சொல்ல முடியுமா?''*

*''வார்ஸோ கெட்டோ முழுக்க வேரோடு அழிச்சுப்போட ஒடிக்கிட்டிருக்காங்க.''*

*''யார் ஒடுவது?''*

''ஒரு ஸ்பெஷல் குழு. ஜர்ஜன் ஸ்ட்ரூப் தலைமை. வீடு வீடா போய் துளைக்கிறாங்க. சின்னப் பதுங்குப் குழிகள், ஒதுங்குப்புறங்கள்னு எதையும் விட்டு வைக்கல. இன்னியோட பதிமூணு நாள் ஆகிடுச்சு. அகப்படுபவர்களை எரிச்சுடறோம். கறையானை அழிக்க ஒரே சிறந்த வழி.

''அதுக்கான கமாண்டர் பேர் ருடால்ஃப் ஹோஸ், சார். ஆயுள் கைதி. ஆனா 1928 நடுவுல விடுவிக்கப்பட்டான். எதுக்கு? கொல்ல. ஸ்பெஷலா நிர்மாணிக்கப்பட்ட கேஸ். கூடாரத்துல ஆயிரக்கணக்கான ஜூஸ் இன மக்களைக் கொல்வான். பிறகு ஒரு பெரிய ஓவன்ல போட்டு எரிச்சுடுவான்.''

பாதி குடித்தும் குடிக்காமலும் இருந்தார், இந்த ஓல்ட் மேஜர். ''இதுக்காகத்தான் நாம போராடுவதா, ஸார்? நாளைக்கே உலகத்துக்கு உண்மை தெரிஞ்சா நம்மை என்ன பேசும்? நம்மை குற்றவாளிகள்னு கை நீட்டாதா? நாம துணை போனதால், ஜெர்மனியும் குற்றமுள்ள நாடுனு பேசாதா?''

ப்ளாட்பாரத்தின் மறுபக்கத்தில், ஆணா பெண்ணா என்று பாகுபாடுபடுத்திப் பார்க்க இயலாத அளவுக்கு இழுத்து வரப்பட்டிருந்த மனிதக் கூட்டம் இருந்தது. இதனை ஸ்டைனர் பார்த்துக் கொண்டிருந்தபோதே அவர்கள் அனைவரும் தத்தமது உடைகளைக் களைய ஆரம்பித்தார்கள்.

இதனைக் கவனித்துக் கொண்டிருந்த காவலாளி ஒருவனிடம் ''என்ன நடக்குது அங்கே?'' என்று கேட்டார் ஸ்டைனர்.

''ஜூஸ்'' என்றான் அந்த போலீஸாள். ''துப்பாக்கி எதுவும் இல்லையானு நடக்கும் தேடுதல் இது. எல்லாம் இன்னிக்கு சாயந்திரத்துக்குள்ளே கொல்லப்பட்டுடுவாங்க.''

சில குரூர சிரிப்புகளும், சோக அழுகைகளும் அந்த இடத்திலிருந்து கலவையாய் வந்தன. தாளமுடியாமல் நியூமேன் பக்கம் ஸ்டைனர் திரும்பியபோது, ரயிலின் பின்பக்கத்தைப் பார்த்து முறைத்தபடி போலீஸ்கார னொருவன் நிற்பதை கவனித்தார் ஸ்டைனர். பதினாலு வயது மதிக்கத்தக்க பெண்ணொருத்தி. முகமெங்கும் புகையின் கருப்புக்கறை. கலைந்த கேசம். கிழிந்த கோட் ஒன்றினை போர்த்தியிருந்தாள். ட்ரெயின் கிளம்பும்போது அதனை தொற்றிக்கொண்டு தப்பித்து விடவேண்டும் என்பதே அவளுடைய ஒரே இலக்கென்பது தெரிந்தது.

அதே சமயம் அவளை கவனித்துவிட்ட காவலாளி ஓடிப்போய் அவளைப் பற்றியிழுத்தான். தலைமுடியைக் கொத்தாக்கி சுருட்டினான். துடித்த அவள், திமிறிக் கொண்டு சுழன்று தப்பித்து வாசல் நோக்கி ஓட அங்கு போலீஸ் மேஜர் ஃப்ராங்க்கிடம் அகப்பட்டாள். "கீழ்த்தர ஜூஸின பேயே... வா உனக்கு மரியாதைனா என்னனு கற்றுத்தரேன்."

ஸ்டைனர் முன்நோக்கி பாய்ந்தார். "நோ, வேண்டாம்" என்று நியூமேன் தடுக்க நினைத்தாலும், காலந்தாழ்ந்தது.

ஃப்ராங்க்கின் சட்டைக் காலரைப் பிடித்திழுத்து, அவரை நிலைதடுமாறச் செய்து ஏறத்தாழ கீழே தள்ளியவர், அந்தப் பெண்ணைத் தனக்குப் பின்னால் நகர்த்திக் கொண்டார்.

தனது பெல்ட்டைக் கழற்றப்போன ஃப்ராங்குக்கு முன் தன்னுடைய பாக்கெட்டிலிருந்த துப்பாக்கியை எடுத்து குறி வைத்த ஸ்டைனர், "தலை சிதறிடும்" என்றார்.

மளமளவென்று மிலிட்டரி ஆட்கள் மெஷின் துப்பாக்கியை ஏந்தியபடி இவர்களை நெருங்குகையில், ஃப்ராங்க்கின் சட்டையை பிடித்து தன்னுடன் இணைத்துக்

கொண்டார் ஸ்டைனர். "துப்பாக்கிகளை இறக்கினால், இவருக்கு நல்லது."

அதே சமயம், அருகிலிருந்த பெண்ணைப் பார்க்காமல், கேள்வி மட்டும் கேட்டார்: "குழந்தை... உன் பேர்?"

"ப்ராணா."

அந்தச் சமயத்தில் ஒரு என்ஜின் மிக மெதுவாக இவர்களருகில் நகர்ந்துக் கொண்டிருந்தது.

"வெல் ப்ராணா... கவனி. கரி சுமந்துபோகும் இந்த பெட்டிகளில் ஒண்ணைப் பிடிச்சுக்கிட்டு நீ ஏறிடும். இதுதான் உனக்கு நான் பண்ணமுடிந்த உதவி."

அவள் குதித்தோடும்போது, "யாராவது துப்பாக்கியைத் தூக்கினால்... இவன்தலை அவுட்" என்றார் ஸ்டைனர்.

அவள் பெட்டி ஒன்றை பிடித்தாள். குதித்தேறினாள். சேதமில்லை. ட்ரெயின் நகர்ந்தது. மறைந்தது. முழு அமைதியில்.

"அடுத்த ஸ்டேஷன்லேயே அவளைப் பிடிக்கிறாங்களா இல்லையானு பாருங்க" என்றார் ஃப்ராங்க்.

அவரை தள்ளிவிட்ட ஸ்டைனர், அவரிடமிருந்த ஆயுத்தையும் அபகரித்தார். அவருடைய மற்ற ஆட்கள் கைகளில் துப்பாக்கி ஏந்தியபடி அப்படியே தயாராய் நின்றார்கள்.

அத்தருணத்தில், ஆயுதந்தாங்கிய ஒரு போலீஸ் கும்பல் மட்டும் பிளாட்பாரத்துக்குள் நுழையாமல் இருந்திருந்தால், எந்த அசம்பாவிதம் வேண்டுமானாலும் அங்கு நடந்திருக்கலாம். கும்பல் உள்ளே நுழைந்து 'ஏ' போல நின்ற ஒருசில நொடிகளிலேயே போலீஸ் மேஜர் ஜெனரல் ஜர்ஜன் ஸ்ட்ரூப் உட்பட இன்னபிற அதிகாரிகளும் நுழைந்தார்கள்.

*''என்ன நடந்தது, ஃப்ராங்க்?''*

*''அதோ, அவனையே கேளுங்க, ஸார்'' - கோபத்தால் முகம் கருகிப்போக சொன்னார் அவர். ''ஜெர்மன் பட்டாளத்தானாம். ஒரு ஜூவிஷ் தீவிரவாதியை, இதோ இப்ப எங்க கண்களுக்கு முன்னாலயே தப்பிக்க வெச்சுட்டான்.''*

*ஸ்ட்ரூப் திரும்பி ஸ்டைனரைப் பார்த்தார். ''யார் நீ?'' - கட்டளையாய் கேட்டார்.*

*''கர்ட் ஸ்டைனர் - அங்கீகரிக்கப்பட்ட தளபதி - பாராசூட் வீரன்.'' சொன்ன அவர் கேட்டார்: ''நீங்க?''*

*தனது பொறுமையை என்றும் இழந்தவராய் ஸ்ட்ரூப் நடந்து கொண்டதே கிடையாது. அமைதியாகவே சொன்னார்: ''இப்படி என்கிட்டே பேசுவது ஆகாது, ஸார். நான் ஒரு போலீஸ் மேஜர்ஜெனரல் - இது உங்களுக்கேகூட தெரியும்.''*

*''என்னப்பாவும் அப்படி இருந்தவர்தான்'' - ஸ்டைனர் அவரிடம் கேட்டார்: ''அதோ அங்கே நடக்கும் அராஜகத்துக்கு நீங்கதான் தலைவரா?''*

*''யெஸ்.''*

*தனது மூக்கை புறங்கையால் நீவிக்கொண்டே ''நினைச்சேன்'' என்ற ஸ்டைனர் சொன்னார்: ''நீங்க எனக்கு எதை ஞாபகப்படுத்தறீங்க தெரியுமா?''*

*''நோ. சொல்லு: எதை?''*

*''குச்சியால் அவ்வப்போது நான் நோண்டியெடுத்து வெளியே வீசும் ஷூவில் ஒட்டியுள்ள அழுக்கை.''*

*அவரை நோக்கி முன்னுக்கு வந்த தனது படையினரை அப்படியே நிற்கும்படி சைகையிலேயே ஆணையிட்டார்*

ஜெனரல். காட்சி, ஐஸ்கட்டி போல அப்படியே உறைந்து முடிந்தது.

★ ★ ★

**மி**லிட்டரியில் ஆயுதந்தாங்கிய போராளிகளைப் பற்றி விவாதிக்கும் நீதிமன்ற கேஸ்கள் அடங்கிய கோப்பினை படித்து முடித்துவிட்டு அப்படியே உட்கார்ந்து விட்டார் ரேடில். 'ஸ்டைனரின் தந்தையாருடைய புகழ், தூக்கில் தொங்க வேண்டிய கட்டத்திலிருந்து அவரைக் காப்பாற்றியிருக்க வேண்டும்' - நினைத்துக் கொண்டார் ரேடில்.

ரோஸ்மேன் அவனுடைய இருக்கையில் உட்கார்ந்தபடி அப்படியே தூங்கிப் போயிருந்தான். ஆனால் உள்ளேயிருந்து அழைப்பொலி கேட்டதும் துள்ளியெழுந்து உள்ளே போக அவன் தாமதிக்கவில்லை. போன வேகத்தில் திரும்பியவன், ''உங்களை கூப்பிடறார்'' என்றான்.

ஹிம்லர் இன்னமும் நாற்காலியிலேயே இருந்தார். ''வார்ஸோவில் நடந்த அந்த சின்ன சாகசத்தைப் பற்றி என்ன நினைக்கிறீங்க?''

''குறிப்பிடும்படியான நிகழ்வு'' - ரேடில் எச்சரிக்கையாய் சொன்னார். ''ஓர் - ஓர் அசாதாரண கதை.''

''நாம வாழ்க்கையில சந்திக்கவே முடியாத ஒரு வீரதீர நிகழ்வும்பேன் நான்'' என்றார் ஹிம்லர். ''உயர் சாதுரியம், வீரம், விவேகம்... தீரமான பட்டாளத்தான் அவன். ஒரு சின்ன ஜூ இனப்பொண்ணுக்காக தன்னுடைய எதிர்காலம், பதவி உயர்வுகள், ஏன்...? உயிரையே பணயம் வெச்சிருக்கான்.''

இதற்கு பதிலை எதிர்பார்ப்பவரைப் போல ஹிம்லர் நேராய் ரேடிலைப் பார்க்க, அவரோ மறுபடியும் "அசாதாரண முயற்சி" என்றே சொன்னார்.

ஒப்புதலாய் தலையசைத்த ஹிம்லர், இந்த பேச்சை அப்படியே ஒதுக்கும்விதமாய் முன்னுக்கு வந்து, தனக்கு முன்னாலிருந்த வரைபடத்தை பார்த்தார். பேசினார்: "இந்த க்ரே பொண்ணு தந்திருக்கும் ரிப்போர்ட்டுகள் பிரமாதமாயிருக்கு. ஒப்புயர்வற்ற உளவாளி." மேப்பினைக் கூர்மையாய் கவனித்த அவர் கேட்டார்: "இருந்தாலும்... இது சாத்தியப்படுமா?"

தயக்கமின்றி "அப்படித்தான் நான் நம்பறேன்" என்றார் ரேடில்.

"அட்மிரல்? அவர் என்ன நினைக்கிறார்?"

இதற்கு பொருத்தமான ஒரு பதிலை தர யோசித்தார் ரேடில். "பதில் தர கடினமான ஒரு கேள்வியிது."

"விசுவாசமோ?!" என்ற ஹிம்லர் "என்ன நடந்திருக்கும்னு என்னால ஊகிக்க முடியும்" என்றார். "அட்மிரல் கனாரீஸ் உங்களுடைய இந்தத் திட்டத்தை முகத்துக்கு நேராகவே நிராகரிச்சிருப்பார் என்று நம்ப என்னிடம் ஆதாரங்கள் இருக்கு."

ரத்தம் உறைந்து போக, ரேடில் அவரை கண்ணகல பார்த்தார். ஹிம்லர் அமெரிக்கையாய் தொடர்ந்து கொண்டிருந்தார்: "இது அவருடைய பொதுவான இலக்கா இருக்காது, யெஸ். இருந்தாலும்... அந்த அவருடைய பொதுவான இலக்கு, ஜெர்மனியைக் கைப்பற்றுவதும் கிடையாது. நிச்சயமா சொல்றேன்."

'அப்வெஹ்ரின் தலைவரே நாட்டுக்கு எதிராய் இயங்கிக்கிட்டிருக்காரா?' இந்த நினைப்பே பூதாகாரமாய்

விளங்கியது. ஆனாலும் அட்மிரலின் அமிலத்தன்மையான அணுகுமுறையும் இப்போது கூடவே ரேடிலின் நினைவுக்குள் வந்தது. உயரதிகாரிகள் - ஃபுர்ரெர் உட்பட - அனைவரையும் அவர் எடுத்தெறிந்து உதாசீனமாய் பேசியதை இப்போது நினைத்துக் கொண்டார்.

தற்சமயம் அழைப்பு மணியை ஹிம்லர் அடிக்க, அதற்கு பதிலாக ரோஸ்மேன் வந்தான். "இப்ப நான் ஒரு முக்கியமான போன்கால் பண்ண வேண்டியிருக்கு. இவருக்கு இந்த இடத்தை சுத்திக்காட்டு. ஆங்... இங்கிருக்கும் சிறைப் பகுதிகளை நீங்க பார்த்ததுண்டா?"

"நோ."

கூடவே, பூமிப்பந்தில் தான் பார்க்கவே விரும்பாத ஒரு பகுதி இங்கிருக்கும் சிறைகள்தான் என்றும் சொல்லியிருப்பார். ஆயினும், விருப்பமில்லாவிட்டாலும் சிறைப்பகுதியைப் பார்க்கத்தான் வேண்டும் என்று அவருள் ஒரு முடிவு இருந்ததால், ரோஸ்மேனைத் தொடர்ந்தபடி வெளியேறினார்.

★ ★ ★

**கீ**ழ்த்தளத்தில் அவர்கள் நடந்து போன வராண்டா, நேராக பின்புறத்துக்கு கொண்டு போய் விட்டது. ஆயுதம் ஏந்திய இரண்டு காவலாளிகளால் கண்காணிக்கப்பட்ட பெரிய இரும்புக் கதவொன்று அங்கிருந்தது. "சண்டைக்கு தயாரா இருக்கீங்களோ?" - கேட்டார் ரேடில்.

இந்தக் கிண்டலுக்கு அவர்களிருவரும் முறைத்தார்கள்.

கதவு திறக்கப்பட்டது. அவ்வறை பிரகாசமாய் ஒளியூட்டப்பட்டிருந்தது. வெண்ணிறச் சுவர்கள். அசாதாரண அமைதி. இடமும், வலமும் கதவுகள் இருந்தன. "நாம இங்கே ஆரம்பிப்போம்" என்றான் ரோஸ்மேன்.

அதற்குள் நுழைந்தார்கள். விளக்கைப் போட்டான் அவன். "இங்கே என்ன நடக்கும்?" என்றார் ரேடில்.

"அதோ... தொங்கும் அந்த வளையங்களில் ஆசாமி தொங்க விடப்படுவான். பிறகு அதில் மின்சாரத்தைப் பாய்ச்சுவாங்க. மின்சாரம் நன்றாய் கடத்தப்பட சுவர்களில் தண்ணீர் கொட்டுவாங்கன்னு நினைக்கிறேன். இதன் விளைவு அசாத்தியமா இருக்கும். அருகில் போய்ப் பார்த்தீங்கன்னா உங்களுக்கே விளங்கும்."

சுவரை நெருங்கிப் போய்ப் பார்த்து கண்ணகல கண்ணகல விரித்தார் ரேடில்.

"பெரிய ஜெனரல்களே இங்கே வந்து மண்டியிட்டு கெஞ்சியிருப்பதை நான் பார்த்திருக்கேன்" என்றான் ரோஸ்மேன். தற்சமயம் அறையின் கதவு வரை திரும்பியிருந்த அவன், "அடுத்த அறையை காட்டட்டுமா?" என்றான்.

"நத்திங். தேங்க் யூ" என்றார் ரேடில். "எனக்கு என்ன காட்டணும்னு முடிவுல இருந்தீங்களோ...? அதை காட்டிட்டீங்க. உங்க இலக்கு முடிஞ்சாச்சு. என்னை நீங்க திருப்பிக் கூட்டிட்டுப் போகலாம்."

"உங்க இஷ்டம்." திரும்பியவன், விளக்கினை அணைத்தான். வெளியேறினார்கள்.

★ ★ ★

**தி**ரும்பி அலுவலகத்துக்குள் ரேடில் நுழைந்தபோது, ஹிம்லர் எதையோ கவனமாய் எழுதிக்கொண்டிருப்பதைப் பார்த்தார். நுழைந்தவரை நிமிர்ந்து பார்த்த அவர், சாந்தமாய் பேசினார்: "பண்ண வேண்டிய எல்லாமுமே மகாபாதக விஷயங்களா இருக்கு. வயித்தைக் கலக்குது.

*எந்த வடிவிலிருந்தாலும் என்னால வன்முறையை அனுமதிக்கவே முடியாது. ச்சே... ஒரு புது உலகத்தைப் பிணங்களின் மீதுதான் உருவாக்க வேண்டும் என்பது, சார்... என்னைப் பொறுத்தவரைக்கும் ஒரு சாபம்.''*

*''என்னிடமிருந்து நீங்க என்ன எதிர்பார்க்கிறீங்க?'' - சட்டென்று கேட்டார் ரேடில்.*

*இதற்கு ஹிம்லர் சிரித்தார் - சின்னதாய். பழிவேகம் கொண்டவராய் தனது முகத்தை ஆக்கிக்கொண்டு சொன்னார் : ''சிம்பிள். இந்த ''சர்ச்சில்'' பிஸினஸ்தான். இதை நான் முடிக்க விரும்பறேன்.''*

*''ஆனா அட்மிரல் அப்படி நினைக்கல.''*

*''தேவையான அளவு உங்களுக்கு சுதந்திரம் வழங்கப்பட்டிருக்கு, இல்லையா? உங்க அலுவலகத்தை உங்களுடைய இஷ்டப்படி நடத்த... தேவைப்படும் இடங்களுக்கு - பாரீஸ், மியூனீச் - இப்படி இடங்களுக்கு போய் வர...?!'' - பேசிவிட்டு தோள்களைக் குலுக்கினார் அவர். ''என்ன நடக்குது என்பதை அட்மிரலுக்குத் தெரியாம நீங்க ஏன் பண்ணிடக்கூடாது? இதுல நீங்க பண்ண வேண்டிய எல்லா சமாச்சாரங்களையும், வழக்கமா நீங்க பண்ற மற்ற விஷயங்களோட காதும் காதும் வெச்சா மாதிரி சேர்த்தே பண்ணிடலாமே...''*

*''ஆனா சார்... ஏன் இப்படி இந்த இலக்கை நாம செஞ்சு முடிக்கணும் - அவருக்கு தெரியாம?''*

*''ஏன்னா, இந்த விஷயத்துல அட்மிரல் முழுக்கவும் தவறு என்பது என்னுடைய முதல் பாயிண்ட். இந்த திட்டம் நீங்க போடும் திட்டத்தின்படி வெற்றி பெற, ஒவ்வொண்ணும் அதனதன் இடத்துல நாம நினைக்கிற மாதிரி அமையணும். அப்படியொரு வெற்றி கிடைத்தால் - அதாவது சர்ச்சிலைக் கொல்வதிலோ அல்லது உயிருடன் கடத்துவதிலோ நமக்கு*

வெற்றி கிடைத்தால் - ஆஹ், அது ஒரு உலகப் பரபரப்பா அமையும்.''

''இது, அட்மிரலுடைய வழியில் போனால், நிச்சயம் கிடைக்காது'' என்றார் ரேடில்.

''இதை தெரிஞ்சும் நீங்க அவருக்கு சப்போர்ட் பண்ணிக்கிட்டிருக்கணுமா, ரேடில்?'

''நான் இருக்கும் இக்கட்டான ஒரு நிலைமையையும் ஸார் நினைச்சுப் பார்க்கணும். அட்மிரல் உடனான என்னுடைய உறவு எப்பவும் பிரமாதமாத்தான் இருந்திருக்கு. அதனால, என்னுடைய தனிப்பட்ட விசுவாசம், கேள்விகளுக்கு அப்பாற்பட்டது. இதிருக்கட்டும்... ஒண்ணு எனக்கு தெரியணும்: இந்தத் திட்டத்தை செயல்படுத்தி முடிக்க எனக்கு என்ன அதிகாரம் இருக்கு?''

தனது டேபிள் டிராயரிலிருந்து ஒரு பெரிய கவரை எடுத்தார் ஹிம்லர். அதிலிருந்து ஒரு கடுதாசியை எடுத்து அதனை அவரிடம் தந்தார். அக்கடிதத்தின் தலையில் ஜெர்மானியக் கழுகு குறியீடும், தங்கத்தால் பொறிக்கப்பட்ட இரும்பு சிலுவையும் இருந்தன.

நாட்டின் தலைவரிடமிருந்து.

மிகவும் ரகசியமானது.

ரீச்சுக்கு மிகவும் முக்கியமான ஒரு சமாச்சாரத்தில், என் தனிப்பட்ட வழிகாட்டுதல்களின் பேரில் இயங்கிக் கொண்டிருக்கின்றார் கர்னல் ரேடில். அனைத்து அதிகாரிகளும், மிலிட்டரி ஆட்களும், அவர்கள் எத்தனை பெரிய பதவி வகிப்பவராய் இருந்தாலும், ரேடிலுக்குத் தேவையான அனைத்து உதவிகளையும் அளித்தே தீர வேண்டும்.

அடால்ஃப் ஹிட்லர்.

ரேடில் ஸ்தம்பித்தார். தன் கையில் இப்படியொரு நம்புதலுக்கு அப்பாற்பட்ட டாகுமெண்ட்டை அவர் இதுவரை பிடித்ததில்லை. இப்படியொரு சாவி கையில் இருக்கும்போது, நாட்டின் எந்தக் கதவையும் திறக்க முடியும்... எதுவும் மறுக்கப்படாது. விளக்கவொண்ணா பரபரப்பு அவர் உடலெங்கும் பரவியது.

ஹிம்லர் தன் இரு கைகளையும் ஆர்வமாய் தேய்த்துக் கொண்டார். ''ஆக, உங்க ப்ராப்ளம் தீர்ந்தாச்சு. அதிகாரம் வந்தாச்சா?''

இதற்கு ''நிச்சயமா சார்'' என்று சொல்வதைவிட வேறெந்த பதிலும் இல்லை.

''குட்.'' ஹிம்லரின் சந்தோஷம் வெளிப்படையாகவே தெரிந்தது. ''ஸ்டைனரை தெரிந்தெடுத்தது சரியே. இந்த வேலைக்குகந்த ஒரு ஆள். தாமதிக்காம உடனடியா அவரை போய் பார்க்குமாறு கேட்டுக்கிறேன்.''

''ஆனா...'' என்ற ரேடில் ஜாக்கிரதையாய் ஆலோசித்தார்: ''சமீபத்திய மாற்றங்களை வெச்சுப் பார்க்கும்போது அவர் அத்தனை சுலபமா ஒத்துப்பார்னு தோணலை.''

''ஒத்துக்கொள்வதை தவிர இந்த விஷயத்துல அவருக்கு வேற வழியில்ல'' என்றார் ஹிம்லர். ''சந்தேகத்தின் அடிப்படையில், நாலு நாட்களுக்கு முன்னாடி அவருடைய தகப்பனார் கைது செய்யப்பட்டிருக்கார்.''

''காட். ஜெனரல் ஸ்டைனர்?''

''யெஸ். கிழம், ஆர்வக்கோளாறுல ஏதோ பண்ணியிருக்கு. தற்சமயம் அவர் பெர்லின் கொண்டு வரப்பட்டிருக்கார்.''

''அதாவது - அதாவது, ப்ரின்ஸ் அல்ப்ரெஷ்ட்ஸ்ட் ராஸ்க்கா?''

''பின்னே? யெஸ். இதை வெச்சே அவரை நீங்க சம்மதிக்க வெச்சுடலாம். ஓ.கே., அடுத்த சமாச்சாரம். உங்களுடைய திட்ட அறிக்கையில மாறுவேடம் பற்றி சொல்லியிருக்கீங்க. அதை விளக்கணும். ஐ லைக் தட்.''

சாந்தமாய் இதற்கு பதில் தர ஆரம்பித்தார் ரேடில்: ''பிரிட்டிஷ்காரங்களுக்கு நிறைய படை வகைகள் இருக்கு - இது உங்களுக்கே நல்லா தெரியும். இவற்றில் ஸ்டார்லிங் எனும் பிரிட்டிஷ் ஆபிஸர் அமைத்த படைதான் மிகவும் வெற்றிகரமா இயங்கியிருக்கு. ஆப்பிரிக்கா தாண்டி இயங்கும் படை இது - The Special Air Service"

''ஆஹ், ஆமாம். பாண்டம் மேஜர்னு இவரை சொல்லுவாங்க. மதிப்பாய் பார்க்கப்படுபவர்.''

''இவர் இந்த ஜனவரி மாதம் பிடிக்கப்பட்டுவிட்டார், ஸார். ஜெர்மனியின் கோல்டிட்ஸ்ல இவர் தற்சமயம் இருப்பதா தெரியுது. ஆனா இவர் ஆரம்பிச்சு வெச்ச பணி, தொடர்கிறது... அது மட்டுமில்ல, விரிவுபடுத்தி பரவியும் இருக்கு. இவரின் தனிப்பட்ட வெற்றியிது. இப்போதைக்கு உள்ள தகவலின்படி இப்படை பிரிட்டனுக்கு திரும்பப் போகுது... யூரோப்புக்குள்ளே அத்துமீறி நுழையப்போகுது. இவங்களுக்குனு இங்கும் தனிப்பட்ட போலந்து பாராசூட் படையும் இருக்கு.''

''இதிலிருந்து நீங்க சொல்ல வரும் பாயிண்ட்?''

''ராணுவத்தின் மற்ற பிரிவினருக்கு, இவங்களைப் பற்றி அதிகம் தெரியாது. இவங்க ஒரு ரகசியப்படை எனும் அளவுடன் நிக்குது. அதனால, மற்றவர்களால் இவங்க கண்டுபிடிக்கப்படலாம் என்பது ரொம்ப கம்மி.''

''அப்படின்னா, இந்தப் படையின் போலந்து அங்கத்தினர்களா, நீங்க நம்ம படையினரை செருகிடுவீங்களா?''

''எக்ஸாக்ட்லி, சார்.''

''சீருடை?''

''இப்படையில் ஏறத்தாழ அனைவரும் வழக்கமான ராணுவச் சீருடையைத் தான் அணியறாங்க. ஆங்கிலேய பாராசூட் வீரர்களுக்கான சிகப்பு சீருடை, ப்ளஸ் பேட்ஜ்ஜையும் அணிவதுண்டு. இறக்கை வைக்கப்பட்ட கத்திதான் அடையாளம். அதுல - யார் துணிகிறார்களோ, அவரே வெல்பவர்-னு பொறிக்கப்பட்டிருக்கும்.''

''உபகரணங்கள்? ஆயுதங்கள்?''

''நோ ப்ராப்ளம். இரவு நேரத்துலதான் இந்தப் பட்டுவாடா நடக்குது. ஆயுதங்கள், தேவைப்படும் ரேடியோக்கள், பணம் உட்பட. எல்லாம் அப்வெஹ்ரிலிருந்து வரும்.''

''இத்தனையிருந்தும் இன்னும் நாம போர்ல தோற்றுக்கிட்டிருக்கோம்.'' எழுந்து போய் கணப்பருகில் நின்று கைகளை உஷ்ணப்படுத்திக் கொண்டார் அவர். ''எதிரி யூனிஃபார்மை நாம உடுத்திக் கொள்வதுல இருக்கு, அத்தனையும், இல்லையா?''

''ட்ரூ.''

ஆக, முன்னேறும் படை, இந்த பிரிட்டிஷ் சீருடைக்கு அடியில வாடிக்கையான சீருடையை அணிந்திருக்கும். இதனால், ஜெர்மானிய படைவீரர்களா போராடுவதாய் தெரியுமே தவிர தீவிரவாதிகளா தெரியாது. தாக்குவதற்கு ஜஸ்ட் கொஞ்சம் முன்னாடி, இந்த மாறுவேடத்தை அவங்க அவிழ்த்துவிடலாம்... சரிதானே?''

''சரியே, சார்.''

''குட். இனி, மேற்கொண்டெழும் அனைத்துமே, வெறுமனே வரிசைப்படுத்த வேண்டிய நிகழ்வுகள்தான்னு

சொல்வேன். மேலும் ஏதாவது என்கிட்டே கேட்க விருப்பமா?''

''சர்ச்சிலைப் பற்றியே...'' என்றார் ரேடில். ''அவரை உயிரோட கொண்டு வரணுமா?''

''முடிந்தால்'' என்றார் ஹிம்லர். ''வேறு வழியில்லா விட்டால், பிணமாய்.''

''புரிகிறது.''

''எனில், இந்த பிஸினஸை, நான் ஜாக்கிரதையா உங்க கைகள்ல ஒப்படைச்சுடறேன். ஸ்பெஷல் தொலைபேசி எண்ணை ரோஸ்மேன் உங்களிடம் தருவார். இதன் முன்னேற்றம் பற்றி தினசரி எனக்கு தெரியப்படுத்திடணும்னு விரும்பறேன்.''

''உங்க விருப்பப்படியே.''

விலைமதிப்பற்ற அக்கடுதாசியைப் பொக்கிஷமாய் மடித்து எடுத்துக் கொண்டார் அவர். வேகமாய் நடந்து, கதவு திறந்து, வெளியேறினார்.

★ ★ ★

தனது அப்பார்ட்மெண்ட்டுக்குப் போகும் எண்ணத்தை மாற்றிக் கொண்ட ரேடில், டிர்பிட்ஸ் உல்ஃபர் அலுவலகத்துக்கு வந்தார். அங்கிருந்த சிறு படுக்கையில் படுத்துக் கொண்டார். நன்றாய் தூங்கினார் என்று சொல்ல முடியாது. ஒவ்வொருமுறை கண்களை மூடும்போதும் மூக்குக்கண்ணாடிக்குப் பின்னாலிருந்து ஈவிரக்கமின்றி முறைத்து கற்பனைக்கப்பாற்பட்ட செயல் பற்றி பேசிய ஹிம்லர்தான் அவருடைய நினைவுக்கு வந்தார்.

நீண்ட சிந்தனைகளுக்குப் பிறகு ஒரு முடிவுக்கு வரும்படி ஆனார். அப்போது மணி ஐந்து. இவ்விஷயத்தை நடத்திக்

காட்டி விடுவது. தனக்காக இல்லாவிட்டாலும், தனது மனைவி ட்ருதி மற்றும் குழந்தைகளுக்காக.

இதற்கு பிறகு தூங்கிய ரேடிலை, எட்டு மணிக்கு காபியுடன் வந்து எழுப்பினான் ஹோஃபர்.

''நேற்றைய தினம் ரொம்ப மோசமா இருந்ததோ?'' - கேட்டார் ரேடில்.

''அப்படி சொல்லிட முடியாது. எட்டு குண்டோசைகளைக் கேட்டேன்.''

''என் சட்டை பாக்கெட்டுல நீ ஒரு கடுதாசியைப் பார்க்கலாம். அதை நீ இப்ப படிக்கணும்னு நினைக்கிறேன்.''

அவன் அதை செய்து முடிக்கும்வரை வெளியே பெய்து கொண்டிருந்த மழையை நோட்டமிட்டபடியிருந்தார். பிறகு அவன், ''இதுக்கென்ன அர்த்தம், சார்?'' என்றபடி வந்தான்.

''சர்ச்சில் சமாச்சாரம்ப்பா. அது தொடருது. ஃபுர்ரெர் தொடரணும்னு நினைக்கிறார். இதை, ஹிம்லர் வாயிலிருந்தே நான் நேற்று கேள்விப்பட்டேன்.''

தானும் பயந்து விட்டதை முகத்தில் நிஜமாய் காட்டினான் ஹோஃபர். அக்கடிதத்தை அவனிடம் இருந்து பெற்றுக்கொண்ட ரேடில், ''ஒரு பெரிய வலைக்குள்ளே, நழுவ முடியாமல் சிக்கிக்கும்படி, மிகவும் சின்னவர்களான நீயும், நானும் மாட்டிக்கிட்டிருக்கோம்.'' என்றார். பிறகு ''இந்த நிலைமையில...'' என்றவர் கேட்டார்: ''ஆங்... சொல்லு: நீ என்னை நம்பறியா?''

ஹோஃபர் துள்ளி விட்டான். ''உங்களை நான் எக்காலத்திலும் சந்தேகப்பட்டதே கிடையாது, சார்.''

''குட். அப்படினா நாம காட்டப்படும் வழிகாட்டுதலின்படி நடக்க ஆரம்பிக்கணும். முழு ரகசியத்தைக் காப்பாற்றியபடி.''

"நீங்க என்ன சொல்றீங்களோ, அப்படியே சார்."

"குட் ஹோரஃபர். அப்ப எல்லாத்தையும் கொண்டு வா. நம்மிடமுள்ள அனைத்து தகவல்களையும் கொண்டு வா. நாம மறுபடியும் ஒருமுறை அவற்றை பார்ப்போம்."

ஜன்னல் வரை போய் அதனை திறந்து வெளியே பார்த்தார். நேற்றைய குண்டுகளினால் எங்கும் புகை சூழ்ந்திருந்தது. இவர் பார்த்த நகரத்தின் ஒரு பகுதி சிதிலமடைந்திருந்தது. அதில் ஒரு பரபரப்பினை அவர் உணர்ந்தது, அந்நியத்தனமானது.

★ ★ ★

தங்களுக்கு முன்னாலிருந்த கோப்புகளைப் பார்வையிட்டபடி, "ஓர் "ஆண்" வேணும்னு கேட்டிருக்காங்க" என்றார் ரேடில். விளங்காமல் பார்த்த ஹோரஃபரிடம் "மிஸஸ் க்ரே கேட்டிருப்பதை சொல்றேன்" என்றார்.

"ஆஹ்..." என்ற அவன், "நல்லா வாட்டசாட்ட மானவனா தரணும்" என்றான். "கேடயமா பயன்படுத்த."

"அது மட்டும் பத்தாது" என்ற ரேடில், குறிப்பிட்டார்: "நல்ல சாதுர்யமான மூளையும் அவசியம்."

"ஓ, இது ஒரு அசாதாரண எதிர்பார்ப்பு."

"அப்படித்தான். இருந்தாலும், நம்பத்தகுந்த ஓர் ஆசாமி இப்ப அவசியமாகுது."

"இதுக்கு நாம கன்ஸிடர் பண்ண, ஏழெட்டு ஏஜெண்ட்டுகள் இருக்காங்க. ஸ்நோ ஒயிட் ஆசாமியை ஓர் உதாரணமா தரேன். கப்பற்படையில ரெண்டு வருஷமா இருக்கார் இவர். இவரிடமிருந்து நம்பத்தகுந்த தகவல்களை நாங்க வாடிக்கையா பெற்றுக்கிட்டிருக்கோம்."

ரேடில் மறுப்பாய் தலையசைத்தார். "அப்படிப்பட்ட யாரும் வேணாம்" என்றார் பொறுமையிழந்தவராய். "இவையெல்லாம், மற்ற வேலைகளுடன் போட்டு கலக்கப்படக் கூடாத ரகசிய வேலைகள். வேறு யாராவதும்?"

கேட்டு விட்டு ஜன்னல்வரை நடந்து போனார் ரேடில். அங்கு தனது ஒரு காலால் தாளமிட்டபடி நின்றார். அவருக்கு கோபம் கிடையாது - அதைவிட கவலை. ஜோன்னா க்ரேவுக்கு வயது 68. எத்தனை நம்பத்தகுந்த மற்றும் எத்தனை அர்ப்பணிப்பு மிகுந்தவராய் இருந்தாலும், அவருக்கு ஓர் ஆண் தேவைப்படுகின்றது. ஹோஃபர் சொன்னதைப்போல - ஒரு கேடயம்.

இதனிடையே ரேடில் பார்த்து வந்த சிறைகள் இப்போது நினைவுக்கு வந்து அவரைக் கட்டுப்பாடின்றி நடுங்க வைத்தன.

இப்போது ஹோஃபர் பதில் சொன்னான்: "அஃப்கோர்ஸ்... ஐரீஷ் படைகள் இருக்கு."

"என்ன சொன்னே?"

"ஐரீஷ், சார். ஐரீஷ் சுதந்திரப் படை.

"ஒப்பேறாத படை" என்றார் ரேடில். "இது முழுக்க ரொம்ப நாட்களுக்கு முன்னாலேயே ஒதுக்கப்பட்டாச்சு. பிரயோஜனமில்லைனு. முழுக்கவும் தோல்வி."

"அப்படி கிடையாது, சார்."

தற்சமயம் ஒரு கோப்பினைக் கொண்டு வந்து ஹோஃபர், ரேடிலிடம் தந்தான். அவர் முகத்தை சுளித்துக் கொண்டு அதனை வாங்கினார். திறந்தார்.

"ஓஓஓ... இவர் இன்னும் இங்கேதான் இருக்காரா? யூனிவர்ஸிடில?"

''அப்படித்தான் கேள்விப்பட்டேன், ஸார். தேவைப்படும்போது மொழிபெயர்ப்பு செஞ்சு தருவதா கேள்வி.''

''இப்ப தன்னை என்னனு கூப்பிட்டுக்கிறான்?''

''டெவ்லின். லையம் டெவ்லின்.''

''கூட்டிட்டு வா இவரை!''

''இப்பவேவா, ஸார்?''

''சொன்னதைக் கேட்டே, இல்ல? ஒரு மணிநேரத்துல இவர் இங்கே இருக்கணும். பெர்லினைத் தலைகுப்புற திருப்பிப் போட்டு தேட வேண்டி வந்தாலும், அதுக்கு என்னுடைய அனுமதி உண்டு. போ.''

தனது இரு கால்களையும் இணைத்து சல்யூட் வைத்த அவன், கிளம்பியிருந்தான்.

★ ★ ★

இப்போது ரேடிலை மிகவும் ஈர்த்தது, தன்னை டெவ்லின் என்று அழைத்துக் கொண்டிருக்கும் ஆசாமிதான். அப்வெஹ்ருக்காக அயர்லாந்து வரை பாராசூட் படையெடுத்த இவர், அங்கு வெற்றி பெற்றதோடு மட்டுமில்லாமல், சேதாரமில்லாமல் மறுபடியும் ஜெர்மனிக்கே திரும்பியது, ஒரு பெரும் வெற்றியாகும்.

அயர்லாந்தில் ஓர் ஏழைக்குடும்பத்தில் 1908ல் பிறந்தார் டெவ்லின். பெரிய நிருபராகவும் பத்திரிகையாளராகவும் வர வேண்டும் என்பதே இவருடைய அவா. ஆரம்பத்தில் சில கவிதைகளும் எழுதி வெற்றி பெற்றார். ஆனால் 1931ல் இவருடைய மாமாவை மாதா கோவிலில் வைத்து ஒரு முகமூடிக் கூட்டம் அடித்து உதைத்து ஒரு கண்

பாழாகும்படி நடந்து கொண்ட பிறகு, தன்னைச் சுதந்திரப் போராட்டத்தில் முழுக்கவும் ஈடுபடுத்திக் கொண்டார் இவர்.

இதற்காக நிதி திரட்டும் விதமாய் 1932ல் இவர் போராடியபோது காயப்பட்டார். பத்து வருடங்கள் சிறைதண்டனை வழங்கப்பட்டது. 1934ல் தப்பிய இவர் 1935-வாக்கில் போராளிகளின் கூட்டம் ஒன்றுக்கு தலைமை தாங்கி இயக்கலானார்.

அதற்கு பிறகு நியூ யார்க், லண்டன் போன்ற பகுதிகளில் சுதந்திரப் போராட்டத்துக்கான உழைப்புகளில் தன்னைப் பலவாறாக திணித்துக் கொண்டு உழைத்தார். ஸ்பெயினில் த்தானாய் வலுவுக்குப் போய் இணைந்து கொண்டும் போராடினார். அங்கு இத்தாலி படையால் அடிக்கப்பட்டு கைது செய்யப்பட்ட இவர் ஆயுள் தண்டனைக்கு உள்ளானார்.

ஆயினும், 1940ல், அப்வெஹ்ருக்காக உழைக்க இவர் பெர்லின் அழைத்து வரப்பட்டார்.

அயர்லாந்திலிருந்து கொயர்ட்ஸை வெளியேற்ற அப்வெஹ்ர் மேற்கொண்ட அனைத்து நடவடிக்கைகளும் வீணாயின. அப்போதுதான், வேறுவழியின்றி டெவ்லினை அழைத்த அயர்லாந்துப் படை, பாராசூட் கொண்டு அயர்லாந்துக்குள் போகுமாறு பணித்தது.

இதுவும் தோல்வியாக, அங்கு அகப்பட்டுக் கொண்ட இவர் துப்பாக்கி சுட்டதில் நினைவிழந்து போனார். அங்கும், அனுமதிக்கப்பட்ட ஆஸ்பத்திரியில் தங்கிவிடாமல் தப்பித்தவர், லிஸ்பன் சென்ற பிரேஸில் படகில் எப்படியோ இடம்பிடித்து, ஸ்பெயின் வழியாக நேராய் டிர்பிட்ஸ் உஃபர் அலுவலகத்தில் வந்து விழுந்தார்.

இங்கு மொழிபெயர்ப்பும், அவ்வப்போது பெர்லின் பல்கலைக்கழகத்தில் ஆங்கிலஉரையும், செய்துக் கொண்டிருக்கின்றார்.

★ ★ ★

**ப**கல் நெருங்கிக் கொண்டிருந்த தருணம். ஹோஃபர் ஆபிஸூக்குத் திரும்பி வந்தான். ''நான் அவரை கூட்டிட்டு வந்திருக்கேன்'' என்றான்.

நிமிர்ந்து பார்த்த ரேடில், பேனாவை கீழே வைத்தார். தான் என்ன பேசுவது என்பது குறித்து தனக்குள் ஒத்திகை பார்த்துக் கொண்டார். இது நன்றாய் நடக்க வேண்டும். இது நன்றாய் முடிய வேண்டும். டெவ்லினை ஜாக்கிரதையாய் கையாள வேண்டிய நிலைமை இது.

கதவு க்ளிக் என ஓசை எழுப்பியது. திறந்தது.

லையம் டெவ்லின் இவர் எதிர்பார்த்ததை விடவும் சிறுசாய் இருந்தான். வாழ்க்கையையே ஒரு துரதிர்ஷ்டமாய் அனுபவித்த ஒருவன், எனவே, 'வெறுமனே சிரித்துக் கொண்டே காலத்தை கடத்துவதுதான் சிறந்தது என்று ஆகிவிட்டதை, டெவ்லின் முகம் பிரதிபலித்தது.

தனது மேஜையை விட்டகன்று சுற்றிப்போய் அவரை நெருங்கிய ரேடில், ''மிஸ்டர் டெவ்லின்'' என்றார். ''என் பேர் ரேடில் - மேக்ஸ் ரேடில். இங்கு நீங்க வந்திருப்பதற்கு நன்றிகள்.''

அற்புதமான ஜெர்மன் மொழியில் ''பரவாயில்ல'' என்றார் அவர். ''இங்கு வருவதை தவிர வேறு வழி கிடையாது என்று புரிஞ்சுக்கிட்டேன். ஸோ... இதுதான் பிரிவு மூன்றா?''

*''உட்காருங்க.'' ஒரு நாற்காலியையும் ஒரு சிகரெட்டையும் அவருக்கு அளித்தார் ரேடில். பிறகு குடிக்க கொஞ்சம் தந்தார்.*

*''நீங்க ரொம்ப உபசரிக்கிறீங்க'' - சொன்னார் டெவ்லின். ''இப்ப எனக்கு என்ன வேலை வெச்சிருக்கீங்க? கடைசி முறை நான் டிர்பிட்ஸ் உஃபர் வந்தபோது என்னை 5000 - அடி உயரத்திலிருந்து குதிக்க சொன்னாங்க. அதிலிருந்து உயரம்னாலே எனக்கு அலர்ஜியா இருக்கு.''*

*''ஆல் ரைட், மிஸ்டர் டெவ்லின்'' என்றார் ரேடில். ''உங்களுக்கு ஆட்சேபணை இல்லைனா... நாங்களும் உங்களுக்குத் தர ஒரு வேலை வெச்சிருக்கோம்.''*

*''எனக்கு வேற வேலை இருக்கு.''*

*''பல்கலைக்கழகத்துல? ம்ம்... உங்களைப் போன்ற ஒரு திறமையான ஆசாமிக்கு அதெல்லாம் வெறும் வெத்து வேட்டு வேலை.''*

*பலமாய் சிரித்தார் டெவ்லின். ''என்ன சொல்ல வரீங்க? மறுபடியும் என்னை அயர்லாந்துக்கு அனுப்பலாம்னு நினைக்கிறீங்களா? அப்படியொரு நினைப்பிருந்தால், ப்ளீஸ் அதை விட்டுடுங்க. என்னால நிச்சயமா அனுமதிக்க முடியாது. போதுமெனும் அளவுக்கு நான் சிறைச்சாலையை அனுபவிச்சாச்சு.''*

*''நோ, மிஸ்டர் டெவ்லின்'' என்றார் ரேடில். ''நீங்க மறுபடியும் அயர்லாந்துக்கு வாழப்போகணும்னு நாங்க சொல்ல வரலே'' என்றார். ''நாங்க அர்த்தப்படுத்துவதே வேறு.''*

*''அப்ப உங்களுக்கு என்ன வேணும்?''*

*''முதல்ல நான் உங்களை ஒரு விஷயம் கேட்க விரும்பறேன். நீங்க இப்பவும் IRA எனும் ஐரீஷ் அமைப்பை ஆதரிக்கிறீங்களா?''*

*''அதன் வீரன் நான்'' என்று திருத்தினார் டெவ்லின். ''எங்களுக்குள்ளே ஒரு ஸ்லோகனே இருக்கு, ரேடில். முன்வைத்த காலை பின் வைக்காதே.''*

*''ஆக உங்களுடைய முழு குறிக்கோளே இங்கிலாந்தை ஜெயிப்பது.''*

*''அதாவது ஒருங்கிணைந்த, சுதந்திரம் பெற்று தனிக்காலில் நிற்கும் நாடாய் குறிப்பிட்டீங்கன்னா - யெஸ். எனக்கு அதுதான் நிரந்தர ஆனந்தம்.''*

*ரேடில் புதிர்போட்டவராய் ஆனார். ''அப்ப ஏன் சண்டையிடக் கூடாது?''*

*''ப்ச்... கம் ஆன் கலோனல்'' என்றார் டெவ்லின். ''தனக்கு பொழுதுபோகாதபோது கடவுள் கண்ட ஒரு தீக்கனாதான், இவ்வுலகம். தூங்கும்போது நல்ல மூடுல அவர் தூங்காததால உருவானது இதுனுகூட நான் நினைச்சதுண்டு. அதிருக்கட்டும்... இதுல குண்டு போட்டு துளைப்பதை பற்றிய உங்க அபிப்ராயம் என்ன?''*

*''உங்களுடையது?''*

*''நோ. எனக்கு சம்மதம் கிடையாது. பெண்கள், குழந்தைகள், பிரஜைகள் - இவங்களெல்லாம் என்ன பாவம் செஞ்சாங்க? போர்னு முடிவாகிட்டு, அதுதான் ஒரே தீர்வுனும் ஆகிவிட்டால், நீ மட்டும் மோது. பரிதாபமானவர்களை ஏன் கொல்லணும்?''*

*கடுகடுவென முகம் இறுகினாலும் சடுதியில் சாந்தமானார். அவருக்கே உரிய பலமான சிரிப்பை உதிர்த்தார்.*

*''உங்களுடைய கருத்துக்கு அப்பாற்பட்டவர்கள் ஆங்கிலேயர்கள்'' என்ற ரேடில் ''நீங்க ஆங்கிலேயர்களை அடிவரை எதிர்ப்பவர்னு நினைக்கிறேன்'' என்றார்.*

''அப்படி கிடையாது. ஆங்கிலேயர்கள் அல்ல என் எதிரிகள். ரத்தவெறி பிடிச்ச அந்த பிரிட்டிஷ் எதேச்சாதிகாரம்தான் என் முழுமுதல் எதிரி.''

''ஆக மொத்தத்துல, அயர்லாந்து விடுதலை அடையணும்னு நீங்க துடிக்கிறீங்க?''

''யெஸ்.''

''இதற்கு இருக்கும் ஒரே வழி, ஜெர்மனி இந்தப் போரில் ஜெயிப்பது ஒன்றுதான் ஒரேவழினு ஒத்துக்குவீங்களா?''

''ம். ஆமாம்.''

''அப்ப எதுக்காக இங்கே பெர்லின்ல உக்காந்துக்கிட்டிருக்கீங்க.''

''எனக்கு வேறு எந்த வழியும் தட்டுப்படல. அதனால.''

''ஆனா வழியிருக்கு, டெவ்லின்'' - கர்னல் ரேடில் சாந்தமாய் குறிப்பிட்டார். ''எனக்காக, நீங்க இங்கிலாந்து போகலாம்.''

விக்கித்துப் போய் ரேடிலைப் பார்த்தார் அவர். ''காட். இந்த மனுஷனுக்கு பைத்தியம் பிடிச்சுடலியே...''

''நோ, மிஸ்டர் டெவ்லின். நான் சுயநினைவுலதான் இருக்கேன்.''

சொன்ன ரேடில், ஒரு கோப்பினை அவர் பக்கமாய் நகர்த்தினார். எழுந்தார். வெளியேறிப் போனார்.

★ ★ ★

**அ**ரைமணி நேரம் கழித்தும் டெவ்லினிடமிருந்து எவ்விதமான அறிகுறியும் வராததால் கதவை திறந்து கொண்டு ரேடிலே உள்ளே வந்தார். மேஜை மீது காலைத் தூக்கிப் போட்டுக் கொண்டு உட்கார்ந்திருந்த டெவ்லினின்

ஒரு கையில் ஜோன்னா க்ரே தந்திருந்த கோப்பும், மறு கையில் காபி கோப்பையும் இருந்தன.

டெவ்லின் பேசினார்: ''இது, சின்ன வயசுல நான் கேள்விப்பட்ட ஒரு கதையை நினைவுபடுத்துது. 1921-போரையொட்டிய காலத்துல நடந்த ஒண்ணு. எம்மட் டால்டன் என்பவரை சார்ந்தது இது. ஆர்மி ஜெனரல். இவரை பற்றி கேள்விப்பட்டிருக்கீங்களா?''

''கிடையாது'' - தனது பொறுமை எல்லை மீறுவதை கட்டுப்படுத்திக் கொண்டு சொன்னார்.

''நாங்க, அதாவது ஐரீஷ்காரங்க, லவ்லீமேன் அப்படினு சொல்வோம் அவரை. மிலிட்டிரியில பல அவார்டுகள் வாங்கியவர். பிறகு அவர் வந்து IRA இயக்கத்துல சேர்ந்தார்.''

''மன்னிக்கணும் மிஸ்டர் டெவ்லின். இதுக்கும் நம்ம விஷயத்துக்கும் என்ன சம்பந்தம்?''

இதை டெவ்லின் கேட்டதாய் தெரியவில்லை. ''டியூப்ளின் சிறைச்சாலைல ஒருத்தர் இருந்தார். மெக்ஈயன் என்பது அவர் பெயர். இவரும் லவ்லீமேன்தான். ஆனாலும் இவருக்கு வாய்த்தது தூக்குமேடையே. எம்மட் டால்டனுக்கு வேற ஐடியாக்கள் இருந்தன. ஆயுதமடங்கிய ஒரு பிரிட்டிஷ் காரைத் திருடினார். தன்னுடைய பழைய மேஜர் சீருடையை எடுத்து மாட்டிக்கிட்டார். சில பசங்களையும் அப்படியே சீருடைக்கு மாற்றி கூட அழைச்சுக்கிட்டார். ஏமாற்றி நேரா சிறைக்குள்ளே போனார். அப்புறம் கவர்னர் அலுவலகத்துக்குள்ளேயே போயிட்டார். இதையெல்லாம் நீங்க நம்புறீங்களா?''

இப்போது தன்னையும் மீறி ஆர்வமானார் ரேடில். ''அவங்க மெக்ஈயனைக் காப்பாற்றினாங்களா?''

''பேட் லக். கவர்னர் இவங்களுடைய கோரிக்கையை நிராகரிச்சுட்டார்.''

*''அப்ப இந்த ஆட்களுக்கு - என்ன ஆச்சு?''*

*''சிறு துப்பாக்கி சண்டை. தப்பிச்சுட்டாங்க.'' தற்சமயம் ஜோன்னா க்ரேயின் ரிப்போர்ட்டைப் பார்த்து சுட்டிக் காட்டினார். ''இதைப் போலவே.''*

*''அது, இதுலேயும் நடக்கும்னா நினைக்கிறீங்க?'' - ரேடில் ஆர்வமாய் முன்னேறினார். ''சாத்தியம்னா நினைக்கிறீங்க?''*

*''வேடிக்கையாபடுது'' - கோப்பை தூக்கிப் போட்டார். ''அயர்லாந்துக்காரனுங்களுக்கு பைத்தியம் பிடிச்சுடுச்சுனு நினைச்சேன். படுக்கையிலிருக்கும் ''க்ரேட் சர்ச்சிலை'' நட்ட நடுராத்திரியிலே கடத்துவதாம்... அப்படியே தப்பிச்சுடுவதாம்.'' பலமாய் சிரித்தார் அவர். ''ஆனா இப்ப அதே விஷயத்தை மறுபரிசீலனை செய்யத் தோணுது. உலகத்தையே ஆச்சரியத்தில் ஆழ்த்தும்படி இதை பண்ணிக் காட்டலாம் போலத் தோணுது.''*

*''அப்ப இது உங்களுக்கு பிடிச்சிருக்கா?''*

*''இந்த சிறு வாய்ப்பையிழக்க நான் விரும்பல - நீங்களும் இதுல ஸீரியஸா இருந்தால்.''*

*இப்போது சற்று பயந்துப்போன ரேடில் ''அப்ப நீங்க போக ஒத்துக்கறீங்களா?'' என்றார். ''ஏன்?''*

*''அருமையான பல்கலைக்கழகத்து வேலையை விட்டுட்டு நான் வரேன். சோறு, தண்ணியில்லாமல், கிழக்கின் குளிரில் நடுநடுங்கி உயிரைப் பணயம் வைக்க.''*

*''அதான் ஏன்னு? கேட்கிறேன். ஐரீஷ்காரங்க கிறுக்கனுங்கன்னு சொல்ல கேட்டிருக்கேன். இப்ப ஒத்துக்கறேன்.''*

*''நான் குறிப்பிடும் ஜெனீவா வங்கியில டெபாஸிட் பண்ணப்படும் இருபதாயிரம் பவுண்டுகள் இருக்கே...''*

ஏமாற்றமாய் உணர்ந்தார் ரேடில். "ஆக, நீங்களும், எங்களைப் போலவே விலைபேசப் படறீங்க, இல்லையா?"

"எங்க இயக்கம் எப்போதுமே அதிகபட்ச நிதிப்பற்றாக்குறையில இருக்கும், ஸார்."

"வெரி வெல்" என்றார் ரேடில். "ஏற்பாடு பண்றேன். நீங்க இங்கிருந்து கிளம்பும்முன், பணம் கட்டியாச்சுனு உங்களுக்கு நிரூபணம் வந்து சேர்ந்துடும்."

"நன்று. அப்புறம்?"

"இன்னிக்கு அக்டோபர் ஒன்று. நம்ம கைல மீதி இருப்பவை சரியாய் ஐந்து வாரங்கள்."

"இதுல என் பணி என்னென்ன?"

"முதல்தர உளவாளி, மிஸஸ் க்ரே. ஆனா அவங்க வயசு 68. அவங்களுக்கு ஓர் ஆண் தேவைப்படறான்."

"அங்கே இங்கே போய் செய்யும் வேலைகளுக்காக? கடினமான வேலைகளை செய்து முடிக்க?"

"எக்ஸாக்ட்லி."

"என்னை எப்படி அங்கே கொண்டு போய் சேர்ப்பீங்க? அதைபற்றி இன்னும் சிந்திக்கலேனு சொல்லிடாதீங்க..."

"இந்த விஷயத்தைப் பற்றி நான் ஆழமா சிந்திச்சிருக்கேன்" என்ற ரேடில் சிரித்தார். "இந்தத் திட்டம் எப்படியிருக்குனு பாருங்க. நீங்க ஐரீஷ்காரர். பிரிட்டிஷ் ராணுவத்துல பணியாற்றியிருக்கீங்க. படுகாயமடைந்ததால், மெடிக்கல் அடிப்படையில் வெளியேற்றப்பட்டிருக்கீங்க. உங்க முன்நெற்றியிலிருக்கும் வடு இதற்கு சாட்சியாக இருக்கும்."

"இது மிஸஸ் க்ரே விஷயத்துல எப்படி பொருந்துது?"

"அவங்க உங்களுடைய ஒரு பழைய குடும்ப நண்பர். உங்களுக்காக நார்ஃபால்க் பகுதியிலே ஒரு வேலை

*வாங்கித் தராங்க. இந்தக் கதையின் மீதியை நாங்க சந்தேகத்துக்கு அப்பாற்பட்டு எழுதிக்கிறோம். நீங்க என்ன நினைக்கிறீங்க?''*

*''நல்லாத்தானிருக்கு. ஆனா நான் எப்படி அங்கே போய்ச் சேர்வேன்?'*

*''நாங்க உங்களை தென்அயர்லாந்துக்கு பாராசூட்டுல கொண்டு போய் இறக்கிடறோம். உல்ஸ்டர் எல்லையை யொட்டி எவ்வளவு நெருக்கமா இறக்கிவிட முடியுமோ அத்தனை நெருக்கமா. எவ்வித சுங்கச்சோதனையும் இல்லாமல் பார்டரையொட்டி கடந்துபோய் விடுவது சுலபம்னு எனக்கு தெரியும்.''*

*''இதுல பிரச்சினை கிடையாது'' என்றார் டெல்வின். ''பிறகு?''*

*''அங்கிருந்து நார்ஃபால்க் போக படகு, ட்ரெயின் எல்லாம் தயாராயிருக்கும், உங்களுக்கு.''*

*சர்வே வரைபடத்தை தன்னை நோக்கி இழுத்துக் கொண்டார் அவர். ''ஆல் ரைட்'' என்றார் இறுதியாய். ''நான் எப்ப போய் சேர்வேன்?''*

*''ஒரு வாரம் அல்லது அதிகபட்சம் பத்து நாட்கள். இப்போதைக்கு நீங்க முழு பாதுகாப்பை கடைப்பிடிக்கணும். பல்கலைக்கழகத்து பணியை ராஜினாமா செய்துட்டு அங்கு தரப்பட்டுள்ள வீட்டை விட்டு உடனே வெளியேறிடணும். யார் கண்ணிலும் படாமல் ஒதுங்கிடுங்க. மாற்றுக் குடியிருப்பை ஹோஃபர் உங்களுக்காக ஏற்பாடு பண்ணித் தருவான்.''*

*''அப்புறம்?''*

*''இந்த கூட்டத்துக்கான தலைவனை நான் தேடணும். சேனல் தீவுக்கு எத்தனை சீக்கிரத்துல என்னால ஃப்ளைட் ஏற்பாடு பண்ண முடியும் என்பதைப் பொறுத்தது இது.*

*நீங்களும் வரலாம். பல விஷயங்கள் நமக்குள்ளே பொதுவா இடம்பெறப் போகுது... ஒத்துக்கறீங்க, இல்ல?''*

*''ஒத்துக்காமல்? பல ஒழுக்கமற்ற வழிகளில் பிரயாணித்தாலும், அவையெல்லாம் போய் சேர்வது பாவமென்ற கல்லறையைத்தானே?'' - தன் கோப்பைக்குள் மீதமிருந்த காபியை ஊற்றி முடித்தார்.*



# 5

ஞாயிறு மதியம். ரேடிலும், டெவ்லினும் ஜெர்ஸியிலிருந்து ஸ்டார்க் விமானத்தில் கிளம்பினார்கள். அரைமணி நேரப் பிரயாணம்தான். கடலிலிருந்து குறைந்த அளவு உயரமான 700 அடி உயரத்தில் பறந்தது ஸ்டார்க். சேனல் தீவுகளின் வடக்குப் பகுதியிலிருக்கும் அல்டெர்னி பகுதி, அவர்களுக்கு முன் ஒரு வரைபடமாய் விரிந்தது.

தீவின் துறைமுகம், ப்ரே பே ஆகும். மூன்று மைல்கள் நீளமும், அரை மைல் அகலமும் கொண்டது. உயரமான மலைமுகடுகள். இவை விரிந்து தரையிறங்கியபோது பரவும் மணற்குன்றுகள். மறுபுறத்தில் பள்ளத்தாக்குகள். மற்றபடி எங்கெங்கும் பசுமை.

மலைமுகடுகளில் புற்களால் ஆக்கப்பட்டிருந்த ஓடுதளத்தில் இறங்கி அடங்கியது விமானம். மிகச்சிறிய தளம். குட்டியான ஒரு ரேடார் மட்டுமே. விமான ஓடுதளம் என அறிய முடியாத ஒரு அமைப்பு.

கட்டுப்பாட்டு அறைக்கு அருகே ஒரு கறுப்புக் கார் இருந்தது. அதன் டிரைவர், ஆயுதந்தாங்கிய ஒரு ராணுவத்தான். அதை நெருங்கி ரேடிலும், டெவ்லினும் நடந்தபோது அவன் விரைந்து முன்வந்தான். ''கர்னல் ரேடில்?'' என்று விசாரித்தான். ''உங்களை வரவேற்பதாய் முதலில் சொல்லிவிடச் சொன்னார், கமாண்டர்.

ஃபெல்ட்கொம்மேண்டான்டூர் பகுதிக்கு உங்களை நான் கூட்டிட்டுப் போகணும்.''

''வெரி வெல்'' என்றார் ரேடில்.

உடனடியாய் இருவரும் கிராமம் போல் தெருக்கள் கொண்ட ஒரு பிரதேசத்துக்கு கூட்டிச் செல்லப் பட்டார்கள்.

''அற்புதமான இடமாய் படுது'' என்றார் ரேடில்.

''ஒரு சிலருக்கு.'' பெருமளவு கான்க்ரீட் கொட்டி நூற்றுக்கணக்கில் வேலை செய்து கொண்டிருக்கும் ராணுவ என்ஜினீயர்களைப் பார்த்தபடியே சொன்னார் டெவ்லின்.

செயின்ட் ஆண் எனும் இப்பகுதியில் பிரெஞ்சு, ஆங்கிலேயர்கள் என்று கலந்தடித்து வீடுகள் இருந்தன. போரில் இப்பகுதி சிதிலமடைந்துள்ளதற்கு, குண்டுகளின் உதிரிகளும், உதிர்ந்த கட்டிடங்களும் உதாரணமாய் நின்றன.

15, ஃபெல்ட்கொம்மேண்டான்டூர், தீவிலுள்ள ஜெர்மனி அலுவலக கட்டிடம். அதனுள் கார் வளைந்து நுழைந்தபோது நியூஹாஃப் முன்வந்தார். ''கர்னல் ரேடில்? ஹேன்ஸ் நியூஹாஃப். இப்பகுதியின் தற்காலிக தலைவர். உங்களை சந்தித்ததுல மகிழ்ச்சி.''

''இவர் என்னுடைய நண்பன்'' என்றார் ரேடில்.

டெவ்லின் பற்றி மேற்கொண்டு எவ்வித அறிமுகமும் செய்ய அவர் முன்வரவில்லை. ஹேன்ஸின் கண்களில் ஒரு தயக்கம் சற்றே விளைந்தது. டெவ்லினின் உடை மற்றும் ராணுவத் தோற்றம் ஆகியவற்றால் வந்த ஒரு பரபரப்பு. நாஸியின் அதிகார போலீஸான கெஸ்டபோவாக இருக்கலாம் என்ற சந்தேகமே காரணம். தனது பிரயாணங்களின் போது இப்படிப்பட்ட நாஸி காவலர்களை இவர் பார்த்திருக்கிறார்.

இவர்கள் தற்சமயம் நுழைந்த அறைக்குள் குமாஸ்தாக்கள் பணியிலிருந்தார்கள். மானேஜர் அறையாகயிருக்கலாம் என்று தோன்றிய அறையை ஒரு மிலிட்டிரி ஆசாமி காவல் காத்தான். நியூஹாஃப் உள்ளே செல்ல வழியமைத்தான். ஆங்காங்கே சில இருக்கைகள் இருந்தன. மற்றபடி அது ஓர் அலுவலக அறையாகவே அமைக்கப்பட்டிருந்தது. இரண்டு நாற்காலிகள் கொண்டு வரப்பட்டன. ரேடில் ஒன்றில் உட்கார்ந்தார். டெவ்லின் ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டு அப்படியே ஜன்னலோரம் போய் நின்று கொண்டார்.

சிறு தயக்கத்துடன் "குடிக்க ஏதாவது தரட்டுமா?" என்ற நியூஹாஃப்பிடம் "நேரா விஷயத்துக்கு போயிடலாமே" என்றார் ரேடில்.

"நிச்சயமா."

தனது கோட்டுக்குள் இருந்து ஒரு கவரை எடுத்து அதன் கடிதத்தை வெளியில் உருவினார் ரேடில். "தயவுசெய்து இதை கொஞ்சம் படிங்க."

சின்ன முகச்சுளிப்புடன் அதனை வாங்கிக் கொண்ட நியூஹாஃப், கண்களை அதில் மேயவிட்டார். "ஃபுர்ரெர்ரே சொல்லிட்டார்" என்றார். "என்னிடமிருந்து நீங்க என்ன எதிர்பார்க்கிறீங்கன்னு எனக்கு விளங்க வில்லை."

"உங்க முழு ஒத்துழைப்பு, கர்னல் நியூஹாஃப்" என்றார் ரேடில். "இதுக்கு மேல சொல்வதற்கு ஒன்றுமில்லை. உங்களுக்கு கீழே இயங்கும் ஒரு படை இங்கேயிருக்கு, இல்லையா? ஆபரேஷன் ஸ்வார்ட் ஃபிஷ்."

"யெஸ் ஸார்" என்ற கர்னல் முகம் இறுகுவதை சட்டென்று கவனித்தார் டெவ்லின். "அப்படியே. பராசூட் கமாண்டர் ஸ்டைனர் தலைமையில்."

*"நானும் கேள்விப்பட்டேன்" என்றார் ரேடில். "கர்னல் ஸ்டைனர். நியூமேன் எனும் ராணுவத்தான். மற்றும் 29 பேர்."*

*"சிறு திருத்தம். 14 பேர்."*

*ரேடில் விழித்தார். "என்ன சொல்றீங்க? மற்றவங்களுக்கு என்ன ஆச்சு?"*

*"செத்துட்டாங்க" என்றார் நியூஹாஃப், சராசரியாய். "ஆபரேஷன் ஸ்வார்ட்ஃபிஷ் ஆளுங்க என்ன பண்ணுவாங்கன்னுதான் உங்களுக்கே தெரியுமே..."*

*கடிதத்தை வாங்கி உள்ளே வைத்துக்கொண்டே, "படையினருக்கு, இன்னிக்கு ஏதாவது வேலையிருக்கா?" என்றார் ரேடில்.*

*"அது, ரேடாரிலிருந்து வரும் கட்டளைகளைப் பொறுத்தது."*

*"அப்ப வேண்டாம்" என்றார் ரேடில். "இங்கு எனது முதல் கட்டளை இது." கடிதத்தை தூக்கிக் காட்டினார்.*

*நியூஹாஃப் புன்னகைத்தார். "உங்க கட்டளைக்கு கீழ்ப்படிவதில் நான் மகிழ்கிறேன்.'*

*"இருக்கட்டும்" என்ற ரேடில் கேட்டார்: "கர்னல் ஸ்டைனர் என்ன உங்க தோழரா?"*

*"என் பெருமை" என்றார் நியூஹாஃப். "அவர்கூட நீங்க பழகினால், நான் சொல்வதை உளமார உணரலாம். அசாதாரண மனிதன்."*

*"ஓ.கே. அவரை நான் இப்ப எங்கே பார்க்கலாம்?"*

*"துறைமுகத்துக்குள்ளே நுழைவதற்கு முன்னால் ஒரு ஓட்டல் இருக்கு. அதைத்தான் ஸ்டைனரும் அவருடைய ஆட்களும் தலைமையகமாக பயன்படுத்தறாங்க. உங்களை நான் அங்கே கூட்டிட்டுப் போறேன்."*

''தேவையில்ல'' என்றார் ரேடில். ''நான் அவரை தனியா சந்திக்க விரும்பறேன். அதென்ன ரொம்ப தொலைவா?''

''கால் மைல்.''

''குட். அப்ப நடந்துடறோம்.''

நியூஹாஃப் எழுந்து கொண்டார். ''எவ்வளவு காலம் இங்கே இருப்பீங்கன்னு ஏதாவது திட்டமிருக்கா?'

''காலைல என்னை அழைச்சுக்கிட்டு கிளம்புவதுதான் முதல் வேலைனு நான் கட்டளையிட்டிருக்கேன். பதினொரு மணிக்கு முன்னால நாங்க ஜெர்ஸி விமானதளத்தில் இருக்க வேண்டிய அவசியமிருக்கு.''

''நான் உங்களுக்கும், உங்களுடைய நண்பருக்கும் தங்க ஏற்பாடு செய்யறேன்'' என்றவர் கேட்டார்: ''இன்னிக்கு ராத்திரி எங்களுடன் சாப்பிடலாமே? என் மனைவி உங்களுக்கும் கர்னல் ஸ்டைனருக்கும் சேர்த்து விருந்தளிக்க மகிழ்வாள்.''

''மகிழ்கிறேன்'' என்றார் ரேடில். ''காத்திருப்பேன்.''

வெளியே இருவரும் இறங்கி நடக்க ஆரம்பித்ததும் ''உங்களுக்குள்ளே என்ன புகுந்துக்கிட்டிருக்கு? கொஞ்சம் ஓவரா போவதுபோல தோணுது...'' என்றார் டெவ்லின்.

''என்ன செய்ய?'' என அசடு வழிந்தார் ரேடில். ''ஒவ்வொரு முறை அந்தக் கடிதத்தை நான் எடுக்கும்போதும் வித்தியாசமாகிடறேன். ஒரு நினைப்பு - ஆங்... பவர் கொண்ட ஒரு மமதை.''

இருவரும் நடந்து போய்க்கொண்டிருக்கும்போது அதே கறுப்புக் கார் இவர்களை கடந்து பறந்தது. ''நம் வருகையை பற்றிய எச்சரிக்கையை அனுப்பியிருக்கார், நியூஹாஃப். அவர்கூட இப்படி செய்யக்கூடியவரானு? எனக்கு ஆச்சரியமா இருக்கு.''

''நான் ஒரு நாஸி போலீஸோனு அவருக்கு பயம்.''

''இருக்கலாம்.''

★ ★ ★

ஈரமான கறுப்பு நீச்சல் கோட் அணிந்திருந்த ரிட்டர் நியூமேன், பாதுகாப்பு படகுடன் முடுக்கப்பட்டிருந்த torpedo குண்டுடன் அதனை இயக்கும் தொனியில் உட்கார்ந்திருந்தார். கார் விரைந்து நுழைந்தது. சூரிய வெளிச்சம் கூசாமலிருக்க ஏதுவாய் கையை நெற்றியில் குடையாக்கி அவர் நிமிர்ந்தபோது மேஜர் ப்ராண்டிட் நின்று கொண்டிருந்தார்.

''உங்க அவசரத்துக்கு என்ன காரணம்?'' - கேட்டார் நியூமேன்.

''ட்ரபிள்'' என்றார் மேஜர். ''ஜெர்ஸியிலிருந்து யாரோ ஒரு ஆபிஸர் பறந்து வந்திருக்கார். கர்னல் ரேடில்னு பேர். தலைமையிடத்திலிருந்து வந்திருக்கார். தகவல் வந்திருக்கு.''

''ஆபிஸர்?'' என்றபடி சிந்தித்த அவர், ''எங்கேயிருந்து வரார்?'' என்றார்.

''பெர்லின்! கூட தோழர்னு சொல்லிக்கிட்டு இன்னொருத்தர். ஆனா அப்படி அவரைப் பார்த்தா தெரியல.''

''நாஸி காவலர்?''

''அப்படித்தான் அவர் பாவனை சொல்லுது. இங்கே இப்ப அவங்க வந்துக்கிட்டிருக்காங்க. நடந்து.''

சட்டென்று எழுந்து மேல்நோக்கி பாய்ந்து ஏறினார் அவர். ''நம்ம பயலுங்களுக்கு இது தெரியுமா?''

ஒப்புதலாய் தலையசைத்தார் ப்ராண்டிட். அவர் முகம் தேடுதலில் இருந்தது. ''இது பிடிக்கல. வம்பு பண்ணினால்,

ரெண்டு பேரையும் அப்படியே கடலுக்குள்ளே தள்ளிவிடக்கூட அவங்க தயங்க மாட்டாங்க.''

''ஓ'' என்றார் நியூமேன். ''அப்ப எத்தனை சீக்கிரம் முடியுமோ அத்தனை விரைவா நீ பாருக்குப் போயிடு. அவனுங்களைப் பிடிச்சு வை. நான் கார்ல போய் கர்னலைப் பிடிக்கிறேன். நியூஹாஃப்புடன் அவர் ஒரு நடை போயிருக்கார். கடற்கரை வரைக்கும்.''

கடற்கரையில், ஸ்டைனரும், இல்ஸீ நியூஹாஃப்பும் கடற்கரைப் பாறையில் இருந்தார்கள். கார் வந்து அங்கு நின்ற ஓசைக் கேட்டு ஸ்டைனர் திரும்பிப் பார்த்தார்.

வந்த நியூமேனின் முகத்தை பார்த்த ஸ்டைனர், ''இந்த அருமையான நாளில், ஏதாவது சோக செய்தியா, ரிட்டர்?'' என்றார்.

''கர்னல் ரேடில் - பெர்லினிலிருந்து வந்திருக்கும் ஆபிஸர். உங்களைத் தேடி வந்திருக்கார். கூடவே ஒரு நாஸி காவலன் இருப்பதுபோல தெரியுது.''

துளிக்கூட தடுமாறவில்லை ஸ்டைனர். ''இன்றைய இனிமையை இது கூட்டுது.''

கீழே இறங்க முயன்ற இல்ஸீக்காக தனது கையை கொடுத்த அவர் சில கணங்கள் அவளை தன்னுடன் நெருக்கமாய் அணைத்தார். அவளுடைய முகம் முழுவதும் எச்சரிக்கை படலம் பூத்திருந்தது.

''உங்களால எதையுமே ஸீரியஸா எடுத்துக்க முடியாதா, ஸ்டைனர்?''

''நாம செத்திருக்கலாம் எனும் எண்ணத்துல எத்தனை தலைகள் விழுந்து கிடக்குனு எண்ணுவதற்கு அவங்க வந்திருக்கலாம். ப்ரின்ஸ் அல்ப்ரெஷ்ட்ஸ்ட்ராஸ்ல அப்படித்தான் முடிவு கட்டியிருப்பாங்க.''

★ ★ ★

துறைமுகத்துக்கு வரும் தெருவின் ஓரமாய் அந்த பழைய ஓட்டலிருந்தது. ப்ரே பே'யின் கடற்கரை மணல் பின்னணியில் அமைந்திருந்தது அது. ரேடிலும், ஐரீஷ்காரரும் அதை நெருங்குகையில் அது விளக்கவொண்ணா அமைதியில் இருந்தது.

எனவே "பார்க்க நல்லாயிருக்கு, பார்" என்ற டெவ்லின் "ஆனா திறந்திருக்கா?" என்றார்.

ரேடில் நுழைவுக்கதவை தள்ளினார். அது திறந்து கொண்டது. உள்ளிறங்கியதும் அது ஓர் இருளடைந்த பாதை என்பது தெரிந்தது. அவர்களுக்கு பின்னால் ஒரு கதவு திறக்கும் க்ளிக் ஓசை கேட்டது. "இப்படி உள்ளே வாங்க" என்றது ஒரு மிருதுவான குரல்.

ஹன்ஸ் அல்ட்மேன், ஏதோ இவர்கள் வெளியேறுவதை தடுக்கும்படியாய் அங்கு கதவில் சாய்ந்தபடி நின்றான்.

"உங்க பேர்?" - கரகரப்பாய் கேட்டார் ரேடில்.

இதற்கு அல்ட்மேன் பதில் தரவில்லை. ஆனால் 'சலூன் பார்' என எழுதப்பட்டிருந்த கதவை அவன் காலால் தள்ளித் திறந்தான். ரேடிலுக்கு என்னவோ புரிந்தது - ஆனால் என்ன என்பது விளங்காமல். எனவே அவ்வறைக்குள் முன்னேறினார்.

சற்று பெரியதாகவே இருந்த அதனுள் பத்துக்கும் மேற்பட்ட பாராசூட் வீரர்கள் அங்குமிங்குமாக சிதறிக் கிடந்தார்கள். ரேடில் அதன் மையத்தில் போய் நின்றார். கையில் பெட்டியுடன். அனைவரும் இதனைக் கண்டு கொள்ளாமல் ஏகாந்தத்தில் இருந்தார்கள்.

அங்கு 'பாரினை' சுத்தம் செய்துக் கொண்டிருந்த சார்ஜண்ட் ஸ்டார்ன் பேசினார்: "நல்லா கவனிங்க. மறுபடியும் சொல்ல மாட்டேன். கர்னல் எங்கேயும் போக மாட்டார்." மறுப்பாய் தலையசைத்தார். "பெர்லினிலிருந்து

நீங்க இங்கே வந்திருப்பதே தப்பு, சார். படைவீரர்கள் எவ்வளவு கொந்தளிச்சிருக்காங்கன்னு உங்களுக்கு தெரியாது. நீங்களொரு தப்பான இடத்துக்கு வந்திருக்கீங்க.''

இதற்கு ''எக்ஸலெண்ட்'' என்றார் ரேடில். ''நிலைமையை நீங்க முழுக்கவும் தப்பா அறிந்து வெச்சிருக்கீங்க. உங்க ரேங்க்குல இருக்கும் ஒருத்தர் இப்படி ஏமாறக்கூடாது.''

தனது பெட்டியைக் கீழே வைத்தார். தனது கோட் பட்டனை களைந்து திறந்து விட்டார். அதில் ராணுவத் தலைமை க்ராஸ் உள்ளே தெரிந்தது. ஸ்டார்னின் முகம் சுண்டியது. ரேடில் நேரடியாய் தாக்குதலில் இறங்கினார்.

''அட்டென்ஷன்!'' - குரல் அதிர்ந்தது. ''எல்லாரும், யெஸ்.'' சட்டென்று அனைவரும் இணங்கினர். அதே நொடியில் வேகமாய் திறந்த கதவு வழியே ப்ராண்டிட் நுழைந்தார். ''நீங்களும்தான், மேஜர்'' என்றது ரேடிலின் கர்ஜனை குரல்.

அனைவரும் விறைத்தனர். குண்டுமணியோசை இல்லை. இந்த புது திருப்பத்தை ரசித்த டெவ்லின் ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டான்.

அத்தருணத்தில் திறந்திருந்த கதவின் வழியே மெலிதான இருமல் வந்தது. ஸ்டைனர் வந்தார். அவரருகில் இல்ஸீ.

''இதை பெருசா எடுத்துக்க வேணாம், கர்னல் ரேடில். எல்லாம் ஆர்வக்கோளாறு. தவறான கற்பனையால் விளைந்த பரபரப்பு. அப்படியே இது போகட்டும். நான் கவனிச்சுக்கறேன், ஐ ப்ராமிஸ் யூ.'' தற்போது ரேடிலை நெருங்கிய அவர், ''கர்ட் ஸ்டைனர்'' என அறிமுகப்படுத்திக் கொண்டார்.

''ஹலோ கர்னல் ஸ்டைனர்'' என்ற ரேடில், ''உங்களுடைய இந்த ரௌடிக் கூட்டத்தை சட்டுனு அடக்கி

சரியான இடத்துல வெச்சதை நான் என்ஜாய் செஞ்சேன்'' என்றார்.

''அப்படினா, அது ஒரு எக்ஸலெண்ட் பங்களிப்பு'' என்றார் மிஸஸ் இல்ஸீ.

தேவையான அறிமுகத்தை ஸ்டைனர் செய்து முடித்த போது மிஸஸின் கையில் முத்தமிட்டார் ரேடில். ''ஆங்... நாம இதுக்கு முன்னாடி எங்காவது சந்திச்சிருக்கோமா?''

''நிச்சயமா'' என்ற ஸ்டைனர், பக்கத்தில் காத்திருந்த நியூமேனையும் முன்னுக்கிழுத்து ''ரிட்டர் நியூமேன்'' என்றார்.

ரிட்டரை ரேடில் நோட்டமிடும்போது ''இந்த ஜென்டில்மேன்?'' என்று டெவ்லின் பக்கம் தாவினார் ஸ்டைனர்.

''இங்கிருக்கும் எல்லாருமே நான் என்னவோ gastapo ஆள்னு நினைச்சுக்கிட்டிருக்கீங்க. ம்ம். கிடையாது. நானும் கர்னல். டெவ்லின்.''

வேகமாய் ''என் தோழன்'' என விளக்கினார் ரேடில்.

''நீங்க வருவது?'' - சாந்தமாய் கேட்டார் ஸ்டைனர்.

''அப்வெஹ்ர் தலைமையகத்திலிருந்து. ஒரு அவசர விஷயம். அதைபற்றி பேசியாக வேண்டியிருக்கு. உங்ககூட தனியா பேசணும்.''

இல்ஸீயை ரிட்டரிடம் ஒப்படைத்து விட்டு ''இதோ இப்படி'' என்று வழி சொல்லி முன்னேறினார் ஸ்டைனர். டெவ்லினைப் பார்த்து ஒப்புதலாய் தலையசைத்தார் ரேடில். இவ்விருவரும் அவரை தொடர்ந்தனர்.

'பாரில்' இருந்தோரால், அங்கு பியானோவும் பாடலும் கலந்திசைக்க ஆரம்பித்தன.

★ ★ ★

டெவ்லினும் ரேடிலும் கம்பியில் சாய்ந்துக் கொண்டு கீழே பாய்ந்த தண்ணீரில் கண்பதித்திருந்தார்கள். மங்கிய சூரிய ஒளியில், களங்கமற்றும் ஆழமாயும் அது தகதகத்தது. சற்று தள்ளியிருந்த ஒரு குட்டையான தூணில் ஸ்டைனர் உட்கார்ந்திருந்தார். ரேடிலின் பெட்டிக்குள்ளிருந்த சமாச்சாரத்தில் அவர் மூழ்கியிருந்தார்.

''கர்னல் ரேடில்'' என்றழைத்தார் ஸ்டைனர்.

இதற்கு அவரை நோக்கி ரேடில் நகர, பின்தொடர்ந்தார் டெவ்லின். சில அடிகள் பின்னால் தங்கிய இவர், சுவரில் சாய்ந்தபடி நின்று கொண்டார்.

''முடிச்சாச்சா?'' - கேட்டார் ரேடில்.

''ஓ, யெஸ்.'' எல்லா ஆவணங்களையும் மீண்டும் பெட்டிக்குள் வைத்தார் அவர். ''இந்த விஷயத்துல ரொம்ப ஸீரியஸா இருக்கீங்களோ?''

''ம்.''

முன்னுக்கு வந்த ஸ்டைனர் ரேடில் கோட்டிலிருந்த பட்டாளத்து ரிப்பினைத் தட்டினார். ''அப்படினா, யாரோ ரஷ்ய ஆளுங்க உங்களை மூளைச் சலவை செஞ்சிருக்கணும்னு நான் சொல்வேன்.''

தற்போது தனது கோட்டிலிருந்து அந்த உறையை எடுத்து அதன் தாளை உருவிய ரேடில், ''இதை நீங்க கொஞ்சம் படிச்சா தேவலாம்னு நினைக்கிறேன்'' என்றார்.

எவ்வித உணர்ச்சியும் காட்டாமல் அதனை படித்த ஸ்டைனர், திருப்பித் தரும்போது தனது தோள்களைக் குலுக்கிக் கொண்டு ''ஸோ வாட்?'' என்றார்.

''ஹே, ஸ்டைனர்'' என்றார் ரேடில். ''நீங்க ஒரு ஜெர்மானிய ராணுவத்தான். நாம ரெண்டு பேருமே ஒரே உறுதிமொழியைத்தான் எடுக்கிறோம். நாட்டுக்கும்

*தலைவனுக்கும் சேவை செய்வது அதன் சாராம்சம். இது, ஃப்யுர்ரெர்கிட்டேயிருந்தே நேரடியா வந்திருக்கும் ஒரு கட்டளை.''*

*''ஒரு மிகமுக்கியமான விஷயத்தை நீங்க மறந்துட்டதைப் போல தோணுது'' என்றார் ஸ்டைனர் ரேடிலிடம். ''நான் தண்டிக்கப்பட்டவர்கள் பட்டியல்ல இருக்கேன். என் மரணதண்டனை சஸ்பெண்ட் பண்ணப்பட்டிருக்கு. எனக்கு தரப்பட்டிருக்கும் விநோதமான பணியின் காரணமாக என்னுடைய பதவி இன்னமும் பறிக்கப்படாமல் இருக்கு.'' தனது பையிலிருந்து எடுத்து ரேடிலின் வாய்க்கு ஒரு சிகரெட்டைப் பொருத்திய ஸ்டைனர், ''எப்படியோ, எனக்கு அடொல்ஃப்பைப் பிடிக்கலை. கெட்டவன் அவன்.''*

*இதனை ஒதுக்கினார் ரேடில். ''நாம சண்டையிட்டாகணும். போர்தான் வழி. வேற வழி கிடையாது.''*

*''இந்த ஒப்பேறாத ஆளுக்காக?''*

*''வேற என்னதான் நாம செய்யறது?''*

*''நம்மால ஜெயிக்க முடியாது.''*

*ரேடில் நரம்பதிர படபடப்பானார். ''ஆனா அவங்களுடையக் கருத்துக்களை மாற்றிக் கொள்ளும்படி நாம நிர்ப்பந்திக்கலாமில்லையா? இதுபோன்ற ஈவிரக்கமற்ற கொலைகளுக்கு பதிலா ஏதோவொரு வகையில் வரும் தீர்வு பரவாயில்லையே...''*

*''இதுக்கு சர்ச்சிலைக் கொல்வது உதவுமாக்கும்?''*

*''இது, நமக்கு இன்னமும் பலமிருக்கு என்பதை அவங்களுக்கு உணர்த்தும். க்ரேன் ஸாஸ்க்கொவிலிருந்து முஸ்ஸோலினியைக் கடத்தியது எப்படி! உலகம் முழுக்க அது பெரும் அலைகளை உருவாக்கியதே...''*

''எனக்கு கிடைத்த தகவலின்படி ஜெனரல் ஸ்டூடண்ட் மற்றும் இன்னபிற பாராசூட் வீரர்களின் பங்களிப்பு அதுல இருந்திருக்கு'' என்று சுட்டிக்காட்டினார் ஸ்டைனர்.

''கடவுளே'' என்றார் ரேடில் பொறுமையிழந்து. ''இங்கிலாந்துக்குள் ஜெர்மானியப் படைகள் இறங்குவது - ஆஹ், எப்படியிருக்கும் நினைச்சுப் பாருங்க. ம், நீங்கதான் இது சாத்தியம் என்பதையே கவனிக்க மாட்டேங்கறீங்க...''

''அப்படி கிடையாது'' என்றார் ஸ்டைனர் அமைதியாய். ''கவனிங்க. நான் இப்பப்பார்த்த ஆவணங்கள் கரெக்ட் எனும் பட்சத்திலும், இது குறித்து நீங்க பிழையற்ற ஹோம் வொர்க் முடிச்சாச்சு எனும் பட்சத்திலும் - இந்த முழு சமாச்சாரமும் கடிகாரம் காட்டும் நேரம் போல பிசகில்லாமல் முடியும். ஆனா இதுவல்ல பிரச்சினை.''

சக்தியனைத்தும் இழந்தவராய், ''பின்னே எது?'' என்றார் ரேடில். ''உங்களுடைய நீதிமன்றக் கண்றாவிகளுக்காக ஃபுர்ரெர்ரின் செருப்பை நக்கிக்கொண்டிருப்பதுதான் முக்கியமா படுதா? ஸ்டைனர்... நீங்களும் உங்க ஆட்களும் இங்கேயிருந்தால் செத்துப் போயிடுவீங்க. எட்டு வாரங்களுக்கு முன்னாடி 31 பேர். இப்ப? 18? நீங்க, உங்களுக்காகவும் உங்களைச் சார்ந்தோருக்காகவும், வாழக் கிடைத்துள்ள இந்தக்கடைசி சந்தர்ப்பத்தைக் கைபில் எடுத்துக்கோங்க, ப்ளீஸ்.''

''இல்லேனா இங்கிலாந்தில் சாகச் சொல்றீங்க...''

மறுப்பாய் தலையசைத்தார் ரேடில். ''நேரா நுழையறோம். முடிக்கிறோம். கிளம்பறோம். ஓவர். நீங்களே இப்ப சொன்னதைப்போல - கடிகாரத்தின் பிசகாத நேரம்போல.''

''இதுலவிருக்கும் மாபெரும் சிக்கல் என்னன்னா'' என்று சொன்ன டெவ்லின், ''இதுல ஏதாவது ஒண்ணு சின்னதா

பிசகினாலும் அவ்வளவுதான்... முழு திட்டமும் சிதைஞ்சுடும்'' என்றார்.

இதற்கு ''சரியா சொல்றீங்க டெவ்லின்'' என்ற ஸ்டைனர் கேட்டார்: ''சொல்லுங்க... நீங்க எதுக்காக போறீங்க?''

''சிம்பிள்'' என்றார் டெவ்லின். ''வீரதீர சாகசக் காரர்களில் மீதமிருக்கும் ஒரே ஜாம்பவான் - நான்தான்.''

''எக்ஸலெண்ட்'' - கலகலவென்று சிரித்தார் ஸ்டைனர். ''அப்பசரி... நானும் ஒத்துக்கறேன்னே வெச்சுக்கங்க. விளையாட்டுக்கு தயார். மாபெரும் ஒரு விளையாட்டு. ஆனா இதனால பிரயோஜனம் ஒண்ணும் கிடைக்கப் போவதில்லை'' என்றபடி அவர் தொடர்ந்தார்: ''இங்கிருக்கும் என் ஆட்கள், இங்கேயேயிருந்தால் செத்துடுவாங்க என்பதால, அவங்களைக் காப்பாற்ற வேண்டிய கடமைக்காகவாவது இதனை நான் ஒத்துக்கணும் என்பது ரேடிலின் வாதம். வெளிப்படையா சொல்றேனே... இங்கே நான் யாருக்கும், எதுக்கும் கடமைப்பட்டு வாழலை.''

''உங்க அப்பாவுக்குக் கூடவா?'' - சொன்னது, ரேடில்.

அங்கு அமைதி. கடலலை மட்டும் கீழே பாறையில் அடித்து ஓசை எழுப்பியது. ஸ்டைனரின் முகம் வெளிறியது. கண்கள் இருண்டன. திடீரென்று அவர் முகம் ஆபத்தான ஒன்றானது. மெதுவாய் ரேடிலை நெருங்கினார். ''பாஸ்டர்ட்'' என்றார். ''நீங்க எல்லாருமே பேஸ்டர்ட்'' என்றார்.

சட்டென்று ரேடிலின் மென்னியைப் பிடித்து விட்டார். துரிதமாய் ஓடிவந்த டெவ்லினால் அவருடைய அனைத்து சக்திகளையும் திரட்டி முயன்றபோதுதான் இறுக்கியிருந்த ஸ்டைனரின் கைகளை விலக்க முடிந்தது. ''அவரை விடு, முட்டாள். உன்னை மாதிரியே அவரும் ஒரு பூட்ஸ் காலால் நசுக்கப்பட்டுக்கிட்டிருக்கார் - தெரியுமா? முட்டாளே... நீ

யாரையாவது சுட விரும்பினால், ஹிம்லரைச் சுடு. உனக்கு தேவையான ஆள் அவன்தான்.''

மூச்சுக்காற்றுக்கு திணறிய ரேடில் அப்படியே கைத்தாங்கலாய் சுவரில் சாய்ந்து கொண்டார். மிகவும் சோர்ந்து போனார். தற்சமயம் கரிசனமாய் ரேடிலின் தோளில் கை போட்ட ஸ்டைனர் ''என்னை மன்னிச்சுடணும்'' என்றார். ''நான் நிலைமை தெரிஞ்சு நடந்துக்கிட்டிருக்கணும்.''

ரேடில் சூம்பிப் போயிருந்த தனது கையினை உயர்த்தினார். ''இதை பாருங்க ஸ்டைனர். அப்புறம், இதோ காயமடைந்த என் கண். இன்னும், கண்களுக்குப் புலப்படாமல் உள்ளே உடைந்துள்ள பல பாகங்கள். அதிர்ஷ்டமிருந்தால் இன்னும் ரெண்டு வருஷம் நான் உயிருடன் இருக்கலாம்னு சொல்றாங்க. நான் பயப்பட வில்லை சாக. என் பயமெல்லாம் என் மனைவி மற்றும் குழந்தைகள் மேல்தான். ராத்திரி தூக்கத்திலிருந்து தூக்கிவாரிப் போட்டு எழுந்துக்கிறேன், அவங்களுக்கு என்ன ஆகிடுமோ எனும் பயத்துல. இந்த ஒரே காரணத்துக்காகத்தான் - நான் இப்ப இங்கே வந்திருக்கேன்.'

ஸ்டைனர் மெல்லமாய் ஒப்புக் கொண்டார். ''யெஸ், அஃப்கோர்ஸ், விளங்குது. நாம எல்லாருமே ஒரே இருட்டறையில்தான் கிடக்கிறோம் - ஒரு வழி திறக்காதா எனும் எதிர்பார்ப்புல.'' நீண்ட பெருமூச்சு விட்டார். ''ஓ.கே., நான் திரும்பிப் போறேன். என் ஆளுங்ககிட்டே சொல்றேன்.''

அவர் நடந்துபோக ஆரம்பித்ததும் ரேடில் பேசினார்: ''ஸ்டைனர்... உங்ககிட்டே நான் உண்மையானவனா நடந்துக்க விரும்பறேன். ஆகவே மனசு திறந்து கடைசியா

ஒண்ணு சொல்லிடறேன். நுணுக்கமான எங்க திட்டங்களை உங்க முன்னால் நான் வைத்திருந்தாலும், டெவ்லின் சொன்னதைப்போல, சர்ச்சில் உயிருடன் கிடைக்கிறாரோ அல்லது பிணமாக கிடைக்கிறாரோ? - அது, போரை நிறுத்திடாது. ஆனா அவங்களுக்கு ஓர் ஆட்டத்தை ஏற்படுத்தும். அமைதி ஒன்றுதான் ஒரே சிறந்த வழின்னு அவங்களை சிந்திக்க வைக்கும்.''

மனதில் வாங்கிக்கொண்டு முன்னேறினார் ஸ்டைனர்.

★ ★ ★

சலூன் பார், மிக கலகலப்பாயிருந்தது. அல்ட்மேன் ஒருபக்கம் பியானோ வாசித்துக் கொண்டிருந்தார். மற்றவர்கள் இல்ஸீயைச் சுற்றி நின்று கொண்டிருந்தார்கள். ஜின் குடித்துக் கொண்டிருந்த அவர், உயர்தட்டு மக்களின் சுவையற்ற வாழ்க்கைக் கதைகளை சொல்லிக் கொண்டிருந்தார். வெடிச்சிரிப்பு அறையெங்கும் நிறைந்த ஒருகணத்தில் உள்ளே நுழைந்தார் ஸ்டைனர். ரேடிலும், டெவ்லினும் தொடர்ந்து நுழைந்தார்கள்.

ஆச்சரியமாய் அறையைப் பார்த்த அவர் ''இங்கே என்ன அமர்க்களம் நடந்துக்கிட்டிருக்கு?'' என்றார்.

அனைவரும் நகர்ந்தார்கள். ப்ராண்டிட்டுக்குப் பின்னால் நின்று கொண்டிருந்த ரிட்டர் நியூமேன் பேசினார்: ''பழைய தரைவிரிப்பு ஒண்ணு இருக்கு. அதுக்கடியில் ஒரு கதவு மறைந்திருந்ததை அல்ட்மேன் கண்டுபிடிச்சிருக்கான், சார். அதை திறந்தால், இதுவரை நாமறிந்திராத ஒரு சிறை. திறக்கப்படாத ரெண்டு சிகரெட் பாக்கெட்டுகள் இருந்திருக்கு. ஒவ்வொண்ணிலும் ஐந்தாயிரம்.''

அனைவரையும் தன் இருகைகளையும் உயர்த்தி அமைதியாகும்படி சொன்னார் ஸ்டைனர். ''போதும்,

நிறுத்துங்க எல்லோரும். முக்கியமான விஷயம் பேச வேண்டியிருக்கு. பிஸினஸ் பற்றியது.'' அவர் இல்ஸீ நியூமேன் பக்கமாய் திரும்பினார். ''மன்னிக்கணும், மை லவ். இது ரகசியமான ஒரு சமாச்சாரம்.''

ஒரு பட்டாளத்தானின் மனைவியாய் பழகிப் போயிருந்த இல்ஸீ, வாதிக்கவில்லை. தன் ஜின் கோப்பையுடன் அவர் வெளியேறினார்.

அனைவரும் கட்டுக்குள் வந்தார்கள். அங்கு அமைதி நிலவியது. என்ன சொல்லப்போகிறார்? என்று காத்திருந்தார்கள். அவர்களனைவருக்கும், ''இட்ஸ் ஸிம்பிள்'' என்றார் ஸ்டைனர். ''இங்கிருந்து தப்பிக்க ஒரு வாய்ப்பு வந்திருக்கு. ஒரு ஸ்பெஷல் முயற்சி.''

''எதை செய்து?'' என்று கேட்டார் அல்ட்மேன்.

''உங்களுடைய பழைய வியாபாரத்தை செய்துதான். உங்களுக்கு எதில் பயிற்சி தரப்பட்டிருக்கோ, அதையே செய்து.''

அங்கு உடனடி பரபரப்பு விளைந்தது. ''அப்படினா நாம மறுபடியும் குதிக்கணுமா என்ன?'' என்றொரு முணுமுணுப்பு எழுந்தது.

''அதைத்தான் நான் சொல்ல வந்தேன்'' என்றார் ஸ்டைனர். ''ஆனா, யாருக்கு விருப்பமோ அவங்க மட்டும் முன்வந்தால் போதும். தனிப்பட்ட முடிவெடுக்கலாம் - இங்கிருக்கும் ஒவ்வோர் ஆடவனும்.''

''ரஷ்யா?'' - ப்ராண்டிட் கேட்டார்.

ஸ்டைனர் மறுப்பாய் தலையசைத்தார். ''இதுவரை ஜெர்மானிய ராணுவம் போர் செய்திராத ஓரிடம்.'' சொல்லிவிட்டு அவர் பார்த்த ஒவ்வொரு முகமும் எதிர்பார்ப்பும், இறுக்கமும், பரபரப்பும் கொண்ட

கலவையாயிருந்தது. மிருதுவாய் அவர் கேட்டார்: ''உங்களில் எத்தனை பேருக்கு ஆங்கிலம் பேசத் தெரியும்?''

முகத்திலறைந்தாற்போல அனைவரும் வாயடைத்துப் போக, ''ஓ, சார்...'' என்று தன்னை கட்டுக்குள் இழுத்துக் கொண்ட அல்ட்மேன் ''சொல்லுங்க...'' என்றார்.

ஸ்டைனர் தனது தலையை மறுப்பாய் அசைத்தார். ''இதைப்போல இதுக்கு முன்னால நான் எப்பவும் ஸீரியஸா இருந்ததில்ல. நான் இப்ப சொல்லப்போவது, முதல்தர ரகசியம் - என்று நான் குறிப்பிடத் தேவையில்லைனு நினைக்கிறேன். இன்னும் ஐந்து வார காலத்துக்குள், நள்ளிரவுப் பொழுது ஒன்றில், இங்கிலீஷ் கடலோரப் பகுதியிலுள்ள தனிமையான வடக்குக் கடலில், நாம இரவுநேரத்துல இறங்க வேண்டியிருக்கும். ஹாலந்தை ஒட்டிவரும் பகுதியிது. திட்டமிட்டபடி எல்லாம் முடிந்து விட்டால் நாம மறுநாளே திரும்பி விடலாம்.''

''அப்படி முடியாவிட்டால்?'' - நியூமேன் கேட்டார்.

''செத்துடுவீங்க. ஸோ, நோ ப்ராப்ளம்.'' தன்னை சுற்றிலும் ஒருமுறை பார்த்த அவர் கேட்டார்: ''வேற ஏதாவது?''

''இந்த போருக்கான காரணம் என்னன்னு நாங்க தெரிஞ்சுக்கலாமா, சார்'' - கேட்டார் அல்ட்மேன்.

''க்ரேன் ஸாஸ்கோவில், பாராசூட் வீரர்கள் செய்த அதேமாதிரியான ஒரு சாகசத்துக்காக. இவ்ளோதான் என்னால சொல்ல முடியும்.''

''வெல், எனக்கு இந்த தகவல் போதும்'' என்றார் ப்ராண்டிட், அறையை ஒருமுறை நோட்டமிட்டுக் கொண்டே. ''நாம போனால், சாகலாம். இங்கிருந்தால், நிச்சயம் சாவோம். என்ன?''

''நான் ஒத்துக்கறேன்'' என்று எதிரொலித்த நியூமேன் இறுக்கமாய் நின்றார்.

எல்லோரும் இப்படியே செய்தார்கள். தனது மூளையின் ஓர் இருண்ட பிரதேசத்தில் சஞ்சரித்துக் கொண்டிருந்த ஸ்டைனர் அப்படியே வெகுநேரம் நின்றார். ''இப்போதைக்கு இப்படியே நிற்கட்டும்.''

அல்ட்மேன் பியானோவுக்குப் போய் அதில் "We March against gland" என்பதை வாசித்தார்.

அப்போது எட்டிப்பார்த்த இல்ஸீ ''இப்ப நான் உள்ளே வரலாமா?'' என்றார்.

உள்ளே வரச்சொன்ன அவர் பாடுமாறு கேட்டுக் கொள்ளப்பட்டார். அங்கு திருவிழா போல ஆனது.



டெரஸ் பகுதி முழுக்கவும் இருண்டிருந்தது. டின்னருக்கு பிறகு சிகரெட் பிடிக்க என்று ஸ்டைனரும் ரேடிலும் அங்கு சென்றாலும், தனிமையை வேண்டியே அவர்கள் சென்றார்கள் என்பதே நிஜம். ஜன்னல்கள் மூடி தடிமனான திரைச்சீலைகள் போடப்பட்டிருந்தாலும், கீழறையிலிருந்து, டெவ்லின், இல்ஸீ மற்றும் அவருடைய கணவர் ஆகியோரின் உல்லாச சிரிப்பொலிகளை இங்கு கேட்க முடிந்தது.

''வசீகரமானவர்'' என்றார் ஸ்டைனர்.

ஒப்புக்கொண்டார் ரேடில். ''அவரிடம் இன்னபிற குணங்களும் இருக்கு. நிறைய பேருக்கு இவரை பிடிக்கும். நான் இன்னிக்கு மத்தியானம் உங்களை விட்டுட்டுக் கிளம்பின பிறகு ரெண்டு பேருக்கும் சாதகமான உரையாடல் நடந்திருக்கும்னு நம்பறேன்.''

''நாங்க ஒருவரையொருவர் நல்லா புரிஞ்சுக்கிட்டோம்னு நீங்க சொல்லலாம்'' என்றார் ஸ்டைனர். ''வரைபடத்தை

*ரெண்டு பேரும் நுணுக்கமா ஆராய்ந்தோம். முன்கூட்டியே இப்படி தகவல் தரும் ஒருத்தரா இவர் இருப்பது, ஓர் அதிர்ஷ்டம்.''*

*''எனக்கு தெரிய வேண்டிய ஏதாவது இருக்கா?''*

*''யெஸ். யங் வெர்னர் ப்ரிகெல், இந்த ஏரியாவுக்கு ஏற்கெனவே போயிருக்காராம்...''*

*''ப்ரிகெல்?'' என்று கேட்டார் ரேடில். ''யாரது?''*

*''போலீஸ். ராணுவ ரேங்க். 21. மூன்று வருட அனுபவம். பால்டிக் பகுதியின் பார்த் என்ற இடத்திலிருந்து வரார். அந்தப்பகுதியின் சில கடற்கரை பிரதேசங்கள், அப்படியே நார்ஃபால்க் கடற்கரை போலவே இருக்கும்னு சொல்றார் இவர். ஏகப்பட்ட தனிமை பீச்சுகள். மணற்குன்றுகள் மற்றும் பறவைகள்.''*

*''பறவைகள்?''*

*இருளில் புன்னகைத்தார் ஸ்டைனர். ''யங் வெர்னரின் வாழ்க்கையில் பறவைகள் ஒரு பிரிக்க முடியாத அம்சம்னு நான் சொல்லிக்கணும். ஒரு தடவை, லெனின்-க்ராட் அருகே, ஸ்டார்லிங் பறவைக்கூட்டத்தை தொந்தரவு பண்ணிட்ட காரணத்தால, மெஷின்கன் தாங்கிய* Partisan ambush *ஆட்களிடமிருந்து நாங்க காப்பாற்றப்பட்டோம். அப்பத்தான், அப்பறவைகள் இங்கிலாந்திலிருந்து எப்படி இடம்பெயர்ந்து அந்த இடம் வரைக்கும் வருகின்றன என்றெல்லாம் அவர் எனக்கு விளக்கினார்.''*

*''வியப்பாயிருக்கு.'' எதையோ மனதில் ஓட்டிக்கொண்டு சொன்னார் ரேடில்.*

*''இதுதான் 1937ல் அவரையும் அவரது தந்தையாரையும் நார்ஃபால்க்கின் வடக்குப்பகுதி வரை இழுத்துக்கிட்டுப் போயிருக்கு. பறவைகள். அந்த முழுகடற்கரையுமே இப்பறவைகளினால் பிரபலமானவை.''*

''ஆஹ், ஒவ்வொருத்தருக்கு ஒவ்வொரு விருப்பம்'' என்றார் ரேடில். ''யாருக்கு இங்கிலீஷ் பேசவரும் என்ற கேள்வி எதுக்கு? விடை கிடைச்சதா?'

''லியொடெனனட்-நியூமேன், செர்ஜெண்ட் அல்ட்மேன், யங் ப்ரிகெல் - இவங்கெல்லாம் நல்லா இங்கிலீஷ் பேசறாங்க. அஃப்கோர்ஸ், உச்சரிப்பு தொனியில் மாற்றமிருக்கு. இதை தவிர்க்க முடியாது. மீதியில், ப்ராண்டிட் மற்றும் க்ளக் - பரவாயில்லை. இந்த ப்ராண்டிட் ஹாம்பர்க்கிலிருந்து ஹல் வரை போகும் கார்கோ கப்பல்களில் சின்னவனா இருக்கும்போது வேலை செஞ்சிருக்கார்.''

ரேடில் ஆமோதிப்பாய் தலையசைத்தார். கேட்டார்: ''சொல்லுங்க... இந்த நியூமேன் உங்களை ஏதாவது கேள்விகள் கேட்டாரா?''

''இல்ல. ஆனா அவர் தெரிஞ்சுக்க ஆர்வமா இருக்கார். பாவம் இல்ஸீ... ஒருவகை கவலையில் இருக்காங்க. என்ன நடக்குதுனு தெரியாத காரணத்தால், என்னை காப்பாத்தறேன் பேர்வழினு இதையெல்லாம் அவங்க வெளில சொல்லி விடாம இருக்கணும் - இதை நான் கவனிச்சுக்கறேன்.''

''குட்'' என்றார் ரேடில். அப்ப நீங்க தயாரா உட்கார்ந்துக்கிட்டு காத்திருங்க. ஒரு வாரம் பத்து நாட்களுக்குள்ளே ஹாலந்தில் எந்த இடத்துல தளத்தை அமைக்கலாம் என்பது பற்றிய அடுத்தகட்ட நகர்த்தல்களுக்கான கட்டளைகள் உங்களுக்கு வரும். ஒரு வாரத்துல டெவ்லின் அங்கே போவார். இப்போதைக்கு, நாம உள்ளே போகலாமா?''

ஸ்டைனர் அவருடைய கையை பிடித்துக் கேட்டார்: ''என் அப்பா?''

''அந்த விஷயத்துல எனக்கு அதிகாரம் இருக்குனு சொல்லி உங்களை நம்ப வைக்க நான் விரும்பல. இதுக்கு ஹிம்லர்தான் முழுபொறுப்பும். என்னால் ஒண்ணே ஒண்ணு பண்ண முடியும் - அதை நிச்சயம் நான் செய்வேன். அது: நீங்க எந்த அளவுக்கு உண்மையாகவும் ஒத்துழைப்பாகவும் நடந்துக்கிட்டீங்கன்னு அவருக்கு நிச்சயம் நான் எடுத்து சொல்வேன்.''

''உண்மையா சொல்லுங்க - இது மட்டும் போதுமா?'' என்றார் ஸ்டைனர். ''உண்மைனா என்னன்னு ஓர் அறிதலே அவருக்கு கிடையாது.''

இதற்கு ரேடில் இடைமறித்தார்: ''உங்களுக்கு?'' என்றார். ''உங்களுக்கு இருக்கா?''

''ம்ம். இல்ல. இது ஒரு விளக்க முடியாத வார்த்தை. கொடுத்த வாக்கைக் காப்பாற்றுவதும், நண்பனுக்கு உதவுவதும் உண்மைனு அறியப்பட்டுக்கிட்டிருக்கு. இதெல்லாம்தான் முழு விசுவாசமா?''

''எனக்கு தெரியலை, மை ஃப்ரண்ட்'' என்றார் ரேடில். ''ஆனா ஒண்ணு சொல்லிக்கறேன். அந்த ராணுவ வட்டத்துக்கு நீங்க ரொம்ப நல்லவரா இருக்கீங்க. இதுல சந்தேகம் கிடையாது.'' அவரை சுற்றி கரவளையமிட்டவர், ''வாங்க போகலாம் உள்ளே'' என்றார்.

உள்ளே இல்ஸீ, கர்னல் நியூஹாஃப் மற்றும் டெவ்லின் ஆகியோர் சீட்டாட்டத்தில் இருந்தார்கள். ''சீட்டுகள் முக்கியமில்லை'' என்று பேசிக் கொண்டிருந்தார் இல்ஸீ. இருவரும், அவர்களை நோக்கி நடந்தார்கள். ''இவை வெறும் உபகரணங்கள்.''

''பிறகு? என்ன முக்கியம்?''

''அவை சொல்லும் ஆருடம். வெல், உங்க எதிர்காலம், ஏழாவது சீட்டுல இருக்கு'' என்றார் இல்ஸீ. எண்ணி,

ஏழாவது சீட்டை அவரிடமிருந்து உருவினார். அது ஒரு எலும்புக்கூடு. ஏர் ஒன்றினை பிடித்திருந்தது. இந்த சீட்டு உருவப்படும்போது தலைகீழாயிருந்தது.

''என்ன இப்ப இதுக்கு?'' என்றார் டெல்வின், முக்கியத்துவம் தராமல்.

''யெஸ். மரணம்'' என்றார் இல்ஸீ. ''ஆனா தலைகீழாய். அதனால் இப்படியே அர்த்தப்படுத்திக்க வேண்டாம்.'' சீட்டையே அரைநிமிடம் முறைத்துக் கொண்டிருந்த அவர் பிறகு வேகமாய் பேசினார்: ''நீங்க நெடுங்காலம் வாழ்வீங்க, மிஸ்டர் டெவ்லின். கூடிய சீக்கிரமே ஒருவித தேக்க நிலைமை உங்களுக்கு உருவாக ஆரம்பிக்கும். உங்களுடைய இறுதிக்கட்ட காலத்துல, புரட்சி... அதனால கொல்லப் படலாம். அமைதியாய் நிமிர்ந்து பார்த்தார் இல்ஸீ. ''என்ன, திருப்தியா?''

''நீண்ட காலம் வாழ்வேன் என்பது திருப்தியா இருக்கு'' என்று உற்சாகமான டெவ்லின் ''மீதியை நான் பார்த்துக்கறேன்'' என்றார்.

''எனக்கு?'' என்றார் ரேடில்.

சீட்டுக்களை எண்ணினார். இம்முறை இருந்த ஏழாவது சீட்டு, ஒரு நட்சத்திரம். இதுவும் தலைகீழாய். அதையே மறுபடியும் சற்று நீண்டநேரமாய் பார்த்தார். ''உங்க ஆரோக்கியம் நல்லாயில்ல'' என்றார்.

''தட்ஸ் ட்ரூ.''

''ஏய்... உங்களுக்கு இதுக்கான அர்த்தம் தெரியும்னு நினைக்கிறேன்'' என்றார், நிமிர்ந்த இல்ஸீ.

சின்னதாய் சிரித்துக் கொண்டு ''யெஸ். தெரியும்'' என்றார் ரேடில்.

அங்கு ஒரு சில்லிட்ட இறுக்கம் நிலைகொண்டது. ஸ்டைனர் முன்னுக்கு வந்தார். ''ஆல் ரைட் இல்ஸீ. எனக்கு?''

அனைத்து சீட்டுக்களையும் ஒன்றாக்கி எடுத்தார் இலிஸீ. ''கிடையாது. இன்னிக்கு இரவுக்கு இது போதும்'' என்றார்.

''முடியாது'' என்றார் அவர். ''எனக்கும் தெரிஞ்சாகணும்.'' சீட்டுக்களை அவர் எடுத்தார். ''ம், எடுங்க.''

தயக்கமாய் இல்ஸீ எடுத்தார். ஏழாவது சீட்டை உருவினார். அதன் படத்தினை நீண்ட நேரமாய் பார்த்துக் கொண்டேயிருந்தார். பிறகு அதனை மற்ற சீட்டுக்களின் இடையில் தலைகீழாக வைத்தார். ''லக்கி, கார்டு'' என்றார். ''உங்களுக்கு பக்கபலம் கூடப்போகுது. நல்ல அதிர்ஷ்டம். வெற்றி தேடித்தரவல்ல ஓர் உளவாளி. திடீர் வெற்றி.'' பளபளப்பாய் சிரித்தார். ''ப்ளீஸ், இப்ப என்னை விட்டுட முடியுமா? கொஞ்சம் காபி சாப்பிட்டுக்கிறேன்.''

அவர் தேநீருக்காக அகன்றதும், தலைகுப்புறப் போடப்பட்ட சீட்டினை எடுத்து பார்த்தார் ஸ்டைனர். அது தூக்கில் தொங்கும் ஒரு மனிதன். அதை பார்த்தபடி ''இந்தப் பொம்பிளைங்களை புரிஞ்சுக்கவே முடியாதுப்பா'' என்றார் அவர். ''முட்டாப் பொண்ணுங்க.''

★ ★ ★

**கா**லையில் பனியிருந்தது. விடிந்ததும் ரேடிலை சென்று எழுப்பிய நியூஹாஃப் அந்த சோகச்செய்தியை காபியுடன் சேர்த்து அவருக்கு தந்தார்.

''இப்பகுதிக்கேயான வாடிக்கையான ப்ராப்ளம் போல தெரியுது'' என்றார். ''ஆனா வந்தாச்சு. பொது வானிலை அறிக்கை சாதகமா அமையல. இன்னிக்கு சாயங்காலத்துக்கு

முன்னாடி இங்கிருந்து கிளம்பவே முடியாது போல. அவ்வளவு நேரம் உங்களால காத்திருக்க முடியுமா?''

ரேடில் மறுப்பாய் தலையசைத்தார். ''இன்னிக்கு சாயந்திரம் நான் பாரீஸ்ல இருந்தாகணும். இது நடக்க பிரிட்டனில் நான் இணைப்பு வாகனத்தைப் பிடிச்சாகணும். இதுக்கு, ஜெர்ஸியில நான் பதினொரு மணிக்கு இருந்தால் தான் முடியும். வேறென்ன வகைல உங்களால உதவ முடியும்?''

''நீங்க ரொம்பவும் வேண்டினால், E-படகை என்னால ஏற்பாடு பண்ணித் தரமுடியும்'' என்றார் அவரிடம் நியூஹோஃப். ''இது ஆபத்தானது - இப்பவே சொல்லிடறேன். ராயல் இங்கிலாந்து கடற்படையால இங்கே நமக்கு நிறையவே சங்கடங்கள் இருக்கு. ஆனா நீங்க குறிப்பிட்ட நேரங்களில் வாகனங்களைப் பிடிச்சாகணும்னா, இப்பவே கிளம்பி விடுவதுதான் சரியாகயிருக்கும்.''

''எக்ஸலெண்ட்'' என்றார் ரேடில். ''உடனடியா எல்லா ஏற்பாடுகளையும் செய்யுங்க. நான் டெவ்லினை எழுப்பறேன்.''

★ ★ ★

ஏழு மணியானதும் அவர்களை நியூஹாஃபேக் கொண்டுபோய் துறைமுகத்தில் இறக்கினார். E-கப்பல் கீழே அங்கு காத்திருந்தது. கடலுக்கான ஜாக்கெட் போட்டுக்கொண்டு அங்கு ஸ்டைனர் காத்திருப்பதையும் இவர்கள் பார்த்தார்கள். அவர், இளைய கடற்படை வீரனொருவனோடு பேசிக்கொண்டிருந்தார்.

நெருங்கியவர்களை வரவேற்க அவர் திரும்பினார். ''குட் மார்னிங். கொய்னிக் முக்கியமான சமாச்சாரங்களை

எடுத்துக்கிட்டுப் போகப் போறான்னு சொல்லிக் கிட்டிருந்தேன்.''

கொய்னிக் ஒரு சல்யூட் வைத்தான்.

ஒரு துயர ஓவியமாக தோன்றிய டெவ்லின் தனது பேண்ட் பாக்கெட்டுக்குள் கைகளை நுழைத்துக் கொண்டு நின்று கொண்டிருந்தார். ''இன்னிக்கு காலைப்பொழுது நல்லபடியா விடியலியா, டெவ்லின்?'' என்று விசாரித்தார் ஸ்டைனர்.

டெவ்லின் முனகினார். ரேடில் நியூஹாஃபின் கைகளைக் குலுக்கிக் கொண்டு விடைபெற்றார். ''என்கிட்டேயிருந்து உங்களுக்கு சீக்கிரமா தகவல்கள் வரும். மற்ற மேட்டரைப் பொருத்தவரைக்கும், என்னால என்னவெல்லாம் முடியுமோ அத்தனையையும் நான் செஞ்சுத்தரேன்.''

ஸ்டைனர் ஒன்றும் பேசவில்லை. கைகுலுக்கக்கூட முற்படவில்லை. பிறகு பிரயாணப்பட்டார்.

டிரைவர் பகுதியின் திறந்த ஜன்னல் வழியே கறாராய் கட்டளைகளை வெளியிட்டார் கொய்னிக். வழி திறக்கப்பட்டது. E-கப்பல், துறைமுகத்தின் பனிக்குள் நகர்ந்து காணாமல் போனது.

★ ★ ★

எல்லையைக் கடந்ததும் வேகம் கூடியது. கடற்படை வீரர்கள் போன்ற தோற்றமே அங்கிருந்த குழுவினரில் காணப்படாததை ரேடில் கவனித்தார். மீனவர்கள் போல கனமான ஸ்வெட்டர்களும் குல்லாய்களும் அணிந்து கொண்டிருந்தார்கள் அவர்கள். அந்தப் படகேகூட அதிசயமான ஏரியல்கள் கொண்டு ஒரு E-படகுக்குண்டான அறிகுறிகள் ஏதுமில்லாமல் தென்பட்டது.

டிரைவர் அறைக்குள் நுழைந்தபோது அங்கு கொனிக் ஒரு வரைபடத்தின் மீது கண்களைப் பதித்திருப்பதை பார்த்தார் ரேடில். நிறைய தாடி வைத்திருந்த இன்னொருத்தன் பக்கத்திலிருந்தான். அவன் வாயில் சிகரெட் - இது கடற்படையினர் தொழிலில் இருக்கும்போது வழக்கமாய் செய்யாத ஒன்று.

மரியாதையாய் ஒரு சல்யூட் வைத்தான் கொனிக். "ஆஹ், வாங்க சார். எல்லாம் சரியாயிருக்கா?"

"அப்படித்தான் எதிர்பார்க்கிறேன்" என்ற ரேடில் வரைபடம் நோக்கி குனிந்தார். "எவ்ளோ தூரம் இருக்கு?"

"ஏறத்தாழ ஐம்பது மைல்."

"எங்களை அங்கு சரியான நேரத்துக்கு கூட்டிட்டுப் போயிடுவியா?"

கொய்னிக் கைக்கடிகாரத்தைப் பார்த்தான். "பத்துக்கு முன்னால் போயிடலாம்னு நினைக்கிறேன். ராயல் ஆங்கிலேய கப்பல்கள் எதுவும் இடைமறித்து விடாமல் இருக்கணும்."

ரேடில் ஜன்னல் வழியாய் வெளியே பார்த்தார். "உங்க குழு ஆட்கள், ஸார்... எப்பவுமே இப்படி மீனவங்களைப் போலத்தான் உடை அணிவார்களா? எனக்கு தெரிஞ்சு E-படகுகளுக்கு ராணுவ மரியாதை இருக்குனு கேள்விப்பட்டிருக்கேன்."

கொய்னிக் சிரித்தான். "ஆனா இது E-படகு கிடையாதே. அப்படி வகைப்படுத்தப்பட்டிருக்கு, அவ்வளவே."

அதிர்ந்த ரேடில் "அப்ப இது என்ன கண்றாவி?" என்று அதிகாரமாய் கேட்டார்.

"சொல்லப்போனால் அது எங்களுக்கே தெரியாது... அப்படித்தானே முல்லர்?" பரிதாபத்துக்குரிய அந்த ஆபிஸர்

*முறைக்க, கொனிக் தொடரலானார்: "இது ஒரு மோட்டார் படகு, ஸார். பார்த்தால் உங்களுக்கே தெரியுமே. பிரிட்டனில் கட்டப்பட்டது."*

*"என்னப்பா இது கதை?"*

*"பிரிட்டனில் கடலலை எழுந்த காரணத்தால ஒரு மணற்குன்றுல போய் மாட்டிக்கிச்சு. அதை அதன் கேப்டனால மீட்க முடியல. அதனால அதை கழிச்சு விடுவதற்கு முன்னால இடிச்சுவிடுவதுனு அவன் முடிவு பண்ணினான்."*

*"அப்புறம்?"*

*"அது நடக்கல. திரும்பி வந்து ஏறிக்கொள்வதற்குள் அங்கே வந்த E-படகு அவரையும் அவர் குழுவினரையும் பிடிச்சுக்கிட்டுப் போயிடுச்சு."*

*"அடடா. அவருக்காக நான் வருந்தறேன்."*

*"ஆனா க்ளைமாக்ஸ் இனிமேத்தான் வரப்போகுது. கேப்டன், அந்தப் படகை வெடிக்கச் செய்து விடுவதாக கடைசி சேதி அனுப்பினதால, பிரிட்டிஷ் அதிகாரிகள் அப்படியே நடந்திருக்கும்னு நம்பிட்டாங்க."*

*"அது உங்களுக்கு சாதகமாக, தீவுகளுக்கு நடுவுல நீங்க ஜம்னு சவாரி விட்டுக்கிட்டு இருக்கீங்க."*

*"எக்ஸாக்ட்லி. எங்களுடைய உடை பற்றி நீங்க பட்ட சந்தேகத்துல தப்பே கிடையாது."*

*"இந்த ஏற்பாடு உங்களுக்கு அப்பப்ப உதவிக்கிட்டிருக்கு..."*

*"நிறையவே."*

*தனக்குள் ஒரு கிளர்ச்சி உருண்டை ஒன்று இப்போது சட்டென்று உருவாவதை ரேடிலால் இனம்பிரித்தறிய*

முடிந்தது. அதனடிப்படையில் கேட்டார்: ''எத்தனை வேகத்துல போகும், இது?''

''அதிகபட்ச வேகம் 25 கடல்மைல்கள். கடற்படை ஆளுங்க அப்படியிப்படி பண்ணி முப்பதுக்கு கொண்டு வந்திருக்காங்க. இருந்தாலும் E-படகு போல முடியாது - ஆனாலும் பரவாயில்லைனு சொல்லுவேன். மெஷின் கன் இருக்கு. ஆயுதங்கள் வெச்சுக்கலாம். துப்பாக்கிகள்.''

''நல்லது. சொல்லப்போனால் இது ஓர் ஆயுதந்தாங்கிப் படகு'' என்றார் ரேடில். ''ஓ கே. எத்தனை தூரத்துக்குப் பாயும்?''

''21 கடல்மைல் வேகத்துல, 1000 மைல்கள். ஸைலன்ஸர் போட்டால், தூரம் குறையும்.''

சற்று தொலைவில் துருத்திக்கொண்டு தெரிந்த ஏரியல்களைக் காட்டி ''அதெல்லாம் என்ன?'' என்றார் ரேடில்.

''திசை அறிய. மற்றும் போன்கள். இரண்டு பக்கமும் பேசும் வசதிகொண்ட தந்தியற்ற போன்கள். எங்ககிட்டே மட்டுமிருக்கு இது.''

அவனை பார்த்த ரேடில் கேட்டார்: ''இந்த வசதி, எத்தனை தொலைவுக்கு எடுக்கும்?''

''நல்ல நாட்கள்ல, பதினைந்து மைல்கள் வரை. ஆனா அதுல பாதி தூரத்தைத்தான் நான் பரிந்துரைப்பேன். அந்த தொலைவுல, செமத்தியான ஒரு டெலிபோன் அழைப்பு போல இது இயங்கும்.''

கேட்டவற்றையெல்லாம் சிந்தித்துக் கொண்டு அங்கேயே நின்று கொண்டிருந்தார் ரேடில். பிறகு சட்டென்று ஆமோதிப்பாய் தலையசைத்துக் கொண்டவர், ''தேங்க் யூ, கொனிக்'' என்றார். வெளியேறினார்.

*கொய்னிக்கின் அறையில் டெவ்லின் இருப்பதை பார்த்தார் ரேடில். அவர் மல்லாக்கப் படுத்திருந்தார். கண்கள் மூடியிருந்தன. ரேடில் முகஞ்சுளித்தார். வெறுப்பு உண்டானது. அவருக்குள் ஓர் எச்சரிக்கை மணியும் அடித்தது. கண்களை திறந்த டெவ்லின் புன்னகைத்தார்.*

*"என் பெட்டியை எடுத்து வந்துட்டீங்க இல்லையா?" என்றார் ரேடில்.*

*"என் உயிர் போல" என்று சொல்லிவிட்டு தலைக்கடியிலிருந்து அதனை எடுத்தார் டெவ்லின்.*

*"குட். கவனிங்க. கீழே இவங்ககிட்டே ஒயர்லெஸ் வசதியிருக்கு. அதை, நாம இறங்குவதற்கு முன்னாடி கண்காணிச்சுடணும்."*

*"ஒயர்லெஸ்?" - கரகரப்பாய் கேட்டார் டெவ்லின்.*

*"இப்ப காரணம் கேட்காதீங்க" என்றார் ரேடில். "பிறகு விளக்கறேன்."*

*ரேடில் திரும்பப் போனபோது வரைபடத்துடனேயே உட்கார்ந்திருந்தார் கொனிக். படகின் சக்கரத்தை இயக்கிக் கொண்டிருந்தான் தாடிக்காரன்.*

*ரேடில் நுழைந்ததும் கொய்னிக் எழுந்துக் கொள்ள, "ஆங்... ஜெர்ஸியிலிருக்கும் கடற்படை அதிகாரி - அவர் பேர் என்ன?" என்று கேட்டார் ரேடில்.*

*"கேப்டன் ஸர் ஸீ ஹன்ஸ் ஒல்ப்ரிச்ட்."*

*"அப்படியா? நீங்க நிர்ணயிச்சிருக்கிற நேரத்துக்கு ஓர் அரைமணி நேரம் முன்னாடி எங்களை கொண்டு போய் சேர்த்துட முடியுமா?'*

*சந்தேகமாய் அவர் முல்லரைப் பார்த்தார். "எனக்கு நிச்சயப்படுத்தி சொல்ல முடியல, ஸார். நாங்க முயற்சிக்கிறோம். அவசரமா என்ன?"*

*"ரொம்பவும். உங்களுடைய மாற்றலுக்காக நான் ஒல்ப்ரிச்ட்சைப் பார்க்க வேண்டியிருக்கு."*

*கொனிக் அவரை ஆச்சரியமாய் பார்த்தான். "எனக்கு டிரான்ஸ்பரா, சார்? எந்தப் பகுதிக்கு?'*

*"என் பகுதிக்கு." தன் கோட்டிலிருந்து உறையை எடுத்து அதன் கடிதத்தை அவனிடம் தந்தார் ரேடில். "படிங்க."*

*சிகரெட்டைப் பிடித்துக் கொண்டே பொறுமையின்றி அதனை வாங்கிக் கொண்டான் அவன். ஆனால் திருப்பித் தரும்போது கண்ணகல வியந்து "மை காட்!" என்றபடி தந்தான்.*

*"குட்" என்றார் ரேடில். "கட்டளைகள் தீர்மானமாகும் வரை ஓரிரு நாட்கள் நாம ஜெர்ஸியில தங்கறோம். அப்புறம் நீங்க பௌலாக் கடற்கரை பகுதிக்கு போய் கட்டளைகளுக்காக காத்திருக்கணும். அங்கே போக ஏதாவது ப்ராப்ளம் இருக்கா?"*

*கொனிக் இல்லையென தலையசைத்தார். "அப்படி எதுவும் எனக்கு தெரியல. படகுல ஈஸியா போகக்கூடிய பிரயாணம்தான்." சொல்லிவிட்டு தயக்கமாய் கேட்டார்: "அதுக்கு பிறகு, சார்?"*

*"ஓ... வடக்கு டச்சுப் பகுதியில, டென் ஹெல்டருக்கு அருகில் ஏதோ ஓரிடம். பொருத்தமான ஒரு இடத்தை நான் இன்னும் கண்டுபிடிக்கல. உங்களுக்கு இது தெரியுமா?"*

*தொண்டையை செருமிக் கொண்டு பேசியது முல்லர்: "இடையூறுக்கு மன்னிக்கணும், சார். அந்த இடம் எனக்கு உள்ளங்கை நெல்லிக்கனி."*

*"எக்ஸலெண்ட், எக்ஸலெண்ட்."*

*அவர்களை அப்படியே விட்டுவிட்டு எழுந்து போய் புகைத்துக் கொண்டார் ரேடில். "விஷயம் நகருது" என்றார் மிருதுவாய். "விஷயம் நகருது" என்ற அவரது வயிறு பரபரப்பில் பூரித்தது.*

# 6

**வ**ழக்கமாய் ஸ்பெயின் தூதரகத்திலிருந்து வரும் உளவுத்தகவல்கள், க்ரீன் பார்க்கில் இருக்கும் ஒரு குறிப்பிட்ட பெஞ்ச்சில், The Times பத்திரிகையின் உள்ளே வைத்து மடித்தாற்போல வீசப்பட்டிருக்கும். அதனை மிஸஸ் ஜோன்னா க்ரே எடுத்து வந்து விடுவார். அக்டோபர் 6, புதன் அன்றும் மதியத்துக்கு முன்னால் இது அரங்கேறியது. ஆங்கில ஏட்டின் உள்ளே ஒரு பெரிய உறை மறைத்து வைக்கப்பட்டிருந்தது.

அதை எடுத்துக்கொண்டு தனது காட்டேஜின் பின்பகுதிக்கு க்ரே திரும்பியபோது மணி ஆறைத் தாண்டியிருந்தது. அலுப்பின் உச்சத்திலிருந்தார் அவர். கிச்சனுக்கு நேராய் சென்றவரை வரவேற்றது 'பேட்ச்'. பிறகு படிகளேறி அவருடைய படுக்கை அறைக்கு அருகில் வரும் சின்ன படிக்கும் அறைக்குள் நுழைந்து கொண்டார்.

தனது கழுத்துச் சங்கிலியிலிருந்த சாவியை எடுத்து கதவினை திறந்தார். பரணுக்கு அடியில் மறைவாயிருந்த சின்ன பகுதிக்கு சில படிக்கட்டுகள் வழி பண்ணித் தந்தன. இங்கேதான் இவருக்கு உதவும் ரேடியோ ஒலிபெருக்கியும் டிரான்ஸ்மிட்டரும் அமைக்கப்பட்டிருந்தன. இவையிருந்த மேஜை டிராயரைத் திறந்தார். குண்டுகள் நிரப்பப்பட்டிருந்த பிஸ்டலை அதனுள் போட்டார். பென்சிலுக்காக கையை

உள்ளே விட்டு துழாவினார். சமிக்ஞைகள் சம்பந்தப்பட்ட தனது 'கோட்' புத்தகத்தை எடுத்துக் கொண்டு வேலையில் இறங்கினார்.

ஒரு மணிநேரம் கழித்து வெளியே வந்து உட்கார்ந்தபோது அவருடைய முகம் பரபரப்பாகியிருந்தது. ''மை காட்!'' என்று தனக்குத்தானே சொல்லிக் கொண்டார். ''துணிஞ்சுட்டாங்க. துல்லியமா துணிஞ்சுட்டாங்க.''

பிறகு ஆழ்ந்த சுவாசத்தினை இழுத்து விட்டுக்கொண்ட அவர் நேராய் வரவேற்பறைக்கு இறங்கினார். ஸ்டேட்லே பிராஞ்சுக்கு போன் போட்டார். சர்.ஹென்றி வில்லோக்பீயே லைனில் வந்தார்.

''ஹென்றி - இது ஜோன்னா க்ரே.''

அவரது குரல் உடனே இனிமையானது. ''ஹல்லோ, மை டியர். உங்களால வரமுடியாதுனு சொல்வதற்கு இந்த போன் பண்ணலேனு நினைக்கிறேன். மறக்கலே, இல்ல? 8.30?''

மறந்து விட்டார். ஆனால் பரவாயில்லை. ''மறக்கல ஹென்றி. ஆனா அது பற்றி கிடையாது இந்த போன். உங்களால எனக்கு ஒரு உதவி ஆகணும். இது குறித்து உங்ககிட்டே நான் கொஞ்சம் தனியா பேசணும்.''

அவரது குரல் ஆர்வமானது. ''சொல்லு, பெண்ணே. எதுவாகினும் நான் செய்வேன்.''

''என் காலமான கணவருடைய சில ஐரீஷ் நண்பர்கள் சொன்னது. அவங்களுடைய உறவுக்கார பையனுக்கு உதவி வேணுமாம். சொல்லப்போனா அவரையே இங்கே அனுப்பிட்டாங்க. ரெண்டு மூணு நாட்கள்ல அவர் வந்துடுவார்.''

''என்ன செய்யணும் - அதை சொல்லுங்க.''

*''அவர் பேர் டெவ்லின். பிரான்ஸ்ல இருக்கும்போது பிரிட்டிஷ் படையினரால் மோசமா காயப்படுத்தப் பட்டிருக்கார் இவர். மருத்துவரீதியா ஆஸ்பத்திரியிலிருந்து வெளியே அனுப்பப்பட்டு விட்டாலும், பாவம் ஒரு வருஷமா அலைஞ்சுக்கிட்டேயிருக்காராம். வேலைக்கு உழைக்க உடம்பு தயாராகிடுச்சுனு சொல்றாங்க. ஹீ ஈஸ் ஃபிட். அதனால் ஒரு வேலை வேணும் என்பது அவங்க பக்கத்துக் கோரிக்கை.''*

*''இதுக்கு நான் உதவுவேன்னு நினைச்சீங்களாக்கும்?'' என்ற ஹென்றி உடனேயே ''நோ ப்ராப்ளம்'' என்றும் சொன்னார். ''எஸ்டேட்டுகளுக்கு இப்பெல்லாம் ஆட்கள் தேவைப்பட்டுக்கிட்டே இருக்காங்கன்னு உங்களுக்கே தெரியுமே...''*

*''முதல்ல அவரால நிறைய உழைக்க முடியாம இருக்கலாம்...'' - அவர் சொன்னார். ''ஹாப்ஸ் எண்ட் வீட்டுக்கு ஒரு காவலராக இவரை போடலாமோனு தோணுது. யாரும் அதை கவனிக்கல. தனியாவே இருக்கு. கூட்டக்கூட ஆளில்லாமல்.''*

*''அது பற்றி நமக்கு தெளிவா தெரியாது, ஜோன்னா. அதை நாம ஆழமா சிந்திக்கணும். பலருடன் விளையாடும் சீட்டாட்டத்தின் நடுவுல அதையெல்லாம் விவாதிக்க முடியாது. நாளை மதியம் நீங்க ஃப்ரீயா?''*

*''ம்.''*

*ரீஸீவரை வைத்தார். பேட்ச்சை வாஞ்சையாய் தட்டினார். மீண்டும் டிரான்ஸ்மிட்டருக்குப் போனார். டெவ்லினின் வேலைக்கு பிரச்சினை கிடையாது என்று தகவல் அனுப்பி வைத்தார்.*

★ ★ ★

அன்று பெர்லினில் மழை கொட்டோ கொட்டென்று கொட்டித் தீர்த்துக் கொண்டிருந்தது. தாள முடியாத காற்றும் சேர்ந்து கொண்டிருந்தது. ப்ரின்ஸ் அல்ப்ரெஷ்ட்ஸ்ட்ராஸ்ஸில், ஹிம்லர் அறைக்கு வெளியே, ஒருத்தரையொருத்தர் பார்த்தபடி ரேடிலும் டெவ்லினும் உட்கார்ந்திருந்தார்கள். ஒரு மணிநேரத்துக்கும் மேலாக இப்படியே போனதால், "அவர் நம்மளைப் பார்க்க விரும்பறாரா, இல்லையா?" என்ற கோப வார்த்தைகள் டெவ்லினிடமிருந்து வந்தன.

"போங்க... கதவை தட்டிட்டுப் போய் நீங்களே கேட்க வேண்டியதுதானே?" - என்றார் ரேடில்.

இந்தக் கட்டத்தில் வெளிக்கதவு திறக்கப்பட ரோஸ்மேன் நுழைந்தான். "ரெண்டு பேரும் இன்னுமா இங்கே இருக்கீங்க?"

ரோஸ்மேன் பிறகு கதவை திறந்து கொண்டு உள்ளே போனான். அதை மூட அவன் முயற்சிக்கவில்லை. "சார்... நான் அவரை அழைச்சுக்கிட்டு வந்திருக்கேன்" என்றார்.

"குட்" என்று ஹிம்லர் சொன்னதை இருவரும் கேட்டார்கள். "ரேடில் மற்றும் அந்த ஐரீஷ்காரரை நான் இப்ப பார்க்கிறேன்."

"என்ன அதிகாரம் பார்த்தீங்களா?" என்ற டெவ்லினிடம், "நீங்க ரொம்ப பேச வேண்டாம்" என்றார் ரேடில். "பேசற வேலையை நான் கவனிச்சுக்கறேன்."

உள்ளே இருவரும். வெளியே ரோஸ்மேன். அன்று பார்த்ததைப் போலவே அறை அப்படியே அச்சுஅசலாக இருந்தது. டேபிளுக்கு பின்னால் ஹிம்லர்.

"நீங்க ரொம்ப நல்லா பண்ணிட்டீங்க, ரேடில். விஷயம் முன்னேறும் விதம், எனக்கு பூரண திருப்தியை தருது. ஆங்... இதுதான் மிஸ்டர் டெவ்லினா?"

இருவரிடமிருந்தும் ஆமோதிப்பு பதிலானபோது, ''நம்ம வேலைக்குகந்த ஆள் இவர்தான்னு நிச்சயமா இருக்கீங்களா?'' என்றார் அவர்.

''நிச்சயமா.''

''அப்ப, இவர் எப்பப் போகப்போறார்?''

''ஞாயிற்றுக்கிழமை அன்று.''

''உங்க மற்ற ஏற்பாடுகள்? அவையும் திருப்திகரமா போய்க்கிட்டிருக்கா?''

''இதுவரைக்கும். பாரீஸில் நடக்க வேண்டிய அப்வெஹ்ர் பிஸினஸுடன் என்னுடைய அல்டெர்னி ட்ரிப்பை இணைச்சுக்கிட்டேன். அடுத்தவாரம் ஆம்ஸ்டர்டாம் போகணும். இது அட்மிரலுக்கு தெரியாது. அவர் தலைல ஏகப்பட்ட பல விஷயங்கள்.''

''குட்'' என்றுவிட்டு ஏதோவொரு சிந்தனையில் விட்டத்தையே முறைக்கலானார் ஹிம்லர்.

''ஏதாவது விசேஷம் இருக்கா?'' - கேட்டார் ரேடில்.

''யெஸ். ரெண்டு சமாச்சாரங்களுக்காக இன்னிக்கு ராத்திரி நான் உங்களை வரச் சொன்னேன். நேரடியா மிஸ்டர் டெவ்லினை நான் பார்க்க விரும்பியது ஒண்ணு. ஸ்டைனரின் தாக்குதல் குழு எப்படிப்பட்டவர்களை உள்ளடக்கியதுனு நான் தெரிஞ்சுக்க விரும்பியது, ரெண்டாவது.''

''நான் வெளியே இருக்கவா?'' - டெவ்லின் கேட்டார்.

ஹிம்லர் ''முட்டாள்தனம்'' என்றார் நறுக்கென்று. ''தயவுசெய்து அந்த மூலையிலே போய் உட்கார்ந்துக்கிட்டு என்ன நடக்குதுனு கவனிச்சீங்கன்னா உங்களுக்கு புண்ணியமா போகும்.'' இடைமறித்துப் பேசுவதை அவர் அனுமதிக்கவில்லை.

"ஓ, செஞ்சாச்சு." ஓரமாய் போய்விட்ட டெவ்லின் சிகரெட் புகைக்கலானார்.

இதற்குள் அவரைப் பார்த்து என்னவோ பேச முயன்றார் ஹிம்லர். அதற்கு பேசாமல் விட்டு விடுவதே மேலென நினைத்த அவர் "கவனிங்க ரேடில்" என்று தொடங்கிய பிரச்சினைக்குள் புகுந்தார்: "ஸ்டைனர் அமைத்திருக்கும் குழுவில் ஒரு வீக் பாயிண்ட் எனக்கு தெரியுது. நாலஞ்சு பேருக்குத்தான் அதுல இங்கிலீஷ் பேச முடியுது. இருந்தாலும் ஸ்டைனர் மட்டுந்தான் தேறுகிறார். எனக்கென்னவோ இந்த திறமையில இன்னொருத்தர் இருந்தால் தேவலாம்னு படுது."

"ஆனா ஆங்கிலேய ஆங்கிலம் பேசும் மக்கள் இந்தப் பகுதியில குறைவாச்சே."

"இதுக்கு என்கிட்டே ஒரு தீர்வு இருக்கு" என்றார் ஹிம்லர். "அமேரினு ஒருத்தன் இருக்கான் - ஜான் அமேரி. பிரபல ஆங்கிலேய அரசியல்வாதியின் மகன். ஃப்ரான் கோவுக்கு துப்பாக்கிகள் தருபவன். போல்ஷ்விக்குகளைப் பிடிக்காது. நம்மிடம் கொஞ்ச நாளா இருக்கான்."

"ஏதாவது உபயோகம் இருக்கா இவனால?"

"சந்தேகந்தான். ஆனா, செயின்ட் ஜார்ஜின் முன்னாள் படை வீரர்களுக்கு உதவ ஏதாவது ஒரு அமைப்பை நிறுவ வந்திருக்கான். கிழக்கு முன்னணிக்காக போராட, சிறையிலிருக்கும் நல்ல ஆங்கிலேய கைதிகளைத் திரட்டுவது அவன் இலக்கு."

"யாராவது அப்படி அவனுக்கு கிடைச்சிருக்காங்களா?"

"சிலபேர். நிறைய இல்ல. கிடைச்ச அத்தனையும் ரௌடி. இதுல அமேரிக்கு எந்த அதிகாரமும் இல்ல. கை மாறிமாறி, இப்ப போலீஸே எடுத்துக்கிட்டிருக்கு."

*"ம். இப்படி முயற்சிக்கும் தன்னார்வலர்கள், எத்தனை பேர்?"*

*"ஐம்பது, அறுபது இருக்கும். பிரிட்டிஷ் இலவசப் படைனு அறிவிச்சுக்கிட்டிருக்காங்க." தனக்கு முன்னாலிருந்த கோப்பினைத் திறந்து ஒரு ஆவணத்தை அதனுள்ளிருந்து வெளியிலெடுத்தார். "சில சமயங்களில் இவர்களுடைய உதவி கிடைக்குது. உதாரணத்துக்கு ஹார்வே ப்ரஸ்டன்."*

*அந்த ஆவணத்தை வாங்கி படிக்கலானார் ரேடில். ரயில்வே போர்ட்டரின் மகனாய், பிறப்பு 1916. 14 வயதில் வேலைக்காக வீட்டை விட்டு வெளியேறியிருக்கிறார். 18 வயதில், ஒரு கிடங்கில் வேலை. பதியப்பட்ட 4 குற்றங்களுக்காக 1937ல் இருவருட கடுங்காவல் தண்டனை தீர்ப்பு. 1939ல் வெளியே வந்தாலும் மீண்டும் கைது. இப்போது இலவசப் படையில்.*

*அதனை கொண்டு போய் டெவ்லினிடம் தந்த ரேடில் திரும்பி வந்து "நீங்க இவனை - இவனை ---"*

*"யெஸ். இந்த ரௌடியை ஸ்டைனர் சேர்த்துக்கணும்னு நான் விரும்பறேன்" என முடித்தார் ஹிம்லர். "நல்லா ஆங்கிலம் பேசறான். பிரிட்டிஷ் இங்கிலீஷ். ஆகவே இவன் பேச வாயைத் திறந்தாலே போலீஸ்காரங்க அடங்கிடறாங்க. இது நமக்கு அவசியம். ஆகவே ப்ரஸ்டனும்."*

*"ஆனா, ஸார்... ஸ்டைனரும் அவருடைய ஆட்களும் வீரர்கள் - நிஜமான போர் வீரர்கள். அவங்க முன்னனுபவங்கள் உங்களுக்கே தெரியும். அதுல இவன் பொருந்துவானா? மிலிட்ரி ஆர்டர்கள் புரியுமா இவனுக்கு?"*

*"சொன்னதைச் செய்வான். போதாதா? இவனை சேர்த்துப்பம், ஓ கே?"*

அழைப்பு மணியை இவர் அடிக்க, ரோஸ்மேன் ஓடி வந்தான். ''ப்ரஸ்டன்...''

27 வயதில் அழகான ஒரு வாலிபன், சரியாய் தைக்கப்பட்டிருந்த சாம்பல்நிற உடையுடன் உள்ளே வந்தான். மண்டையோடு பேட்ஜும் மூன்று சிறுத்தைகள் பொறிக்கப்பட்ட போலீஸ் காலரும் வைத்திருந்தான். இடப்புறத்துக் கழுகுக்கு கீழே ஒரு கேடயப்படம்.

''சூப்பர்'' என்ற டெவ்லினின் வார்த்தை ரேடிலுக்கு மட்டும் கேட்கும்படி அமைக்கப்பட்டிருந்தது.

''ஹிம்லர் தேவையான அறிமுகங்கள் செய்து வைத்தார். இன்னிக்கு படிக்கும்படி நான் உங்ககிட்டே கொடுத்திருந்த டாகுமெண்ட்டிலிருந்து, இவங்க ஒவ்வொருத்தருக்கும் உள்ள கடமைகளை நீங்க தெரிஞ்சுக்கிட்டிருக்கணும்...''

ரேடில் பக்கமாய் திரும்பிய ப்ரஸ்டன் விறைப்பானான். அழுத்தி, இரு கால்களையும் இணைத்து நின்றான். ஒரு நல்ல சல்யூட். அப்பழுக்கற்ற மிலிட்டிரி.

''இந்த மேட்டர் பற்றி விளங்கிக்க உங்களுக்கு நல்ல அவகாசம் தரப்பட்டாச்சு. உங்களிடமிருந்து நாங்க என்ன எதிர்பார்க்கிறோம்னு புரியுதா?''

''கர்னல் ரேடில், அவருடைய திட்டங்களை நிறைவேற்ற ஆட்கள் தேடிக்கிட்டிருக்கார்னு சொல்லலாமா?''

அவரையே முறைத்த ஹிம்லரின் குரல் தற்போது பேசும்போது கரடுமுரடாயிருந்தது: ''நீங்க என்ன சொல்ல வரீங்க, ஸார்?''

''என் நிலைமை இங்கே கொஞ்சம் தர்மசங்கடமா இருக்கு. பிரிட்டிஷ் இலவசப் படை, ஓர் உத்திரவாதம் தந்திருக்கு. இப்படை, எக்காலத்திலும் பிரிட்டனுக்கு எதிரான ஆயுதப்போர்ல ஈடுபடாது மற்றும் பிரிட்டிஷ்

மக்களின் போக்குக்கு குந்தகம் விளைவிக்கும் எந்த செயலிலும் ஈடுபடாது.''

''அப்ப, கிழக்கு முன்னணிக்காக உழைப்பதுல இந்த ஜென்டில்மேனுக்கு ஆட்சேபணை இருக்கக்கூடாது. என்ன? தெற்கு ராணுவக்குழுவில். ஆக்ஷனுக்கு இங்கே நிறைய வாய்ப்புகள் வாய்க்கும்.''

தான் பெரிய தவறொன்று செய்து விட்டதாய் உணர்ந்து அதனை துரிதமாய் திருத்த ப்ரஸ்டன் முனைந்தபோது, அதற்கு வாய்ப்பு மறுத்து பேசினார் ஹிம்லர்: ''நீங்களே முன்வந்து போராடுவதில் ஒரு புண்ணியமான கடமைதான் என் கண்களுக்கு தெரியுதே தவிர வேறொன்றும் அல்ல. ஃபுர்ரெர் மற்றும் அரசுக்கு உழைக்க கிடைக்கும் ஒரு வாய்ப்பு இது.''

''அஃப்கோர்ஸ் சார்'' என்று அட்டென்ஷனில் நின்றார் ப்ரஸ்டன். அது அற்புதமாய் அமைந்தது. டெவ்லின் இடைவிடாது ரசித்தார். ''இதுதான் என்னுடைய முழு இலக்கும்'' என்றார்.

''இந்த புனித சூளுரையை நீங்க ஏற்கெனவே எடுத்திருக்கணுமே...''

''யெஸ், சார்.''

''அப்ப மேற்கொண்டு சொல்ல ஏதுமில்லை. இந்நொடியிலிருந்து நீங்க கர்னல் ரேடிலின் அடில வரீங்க.''

''உங்க இஷ்டம், சார்.''

''கர்னல் ரேடில்... நான் உங்ககிட்டே கொஞ்சம் தனியா பேச வேண்டியிருக்கு.''

ப்ரஸ்டன் வெளியேறினார். பின்னாலேயே டெவ்லினும். வெளியே ரோஸ்மேன் இருப்பதற்கான எந்த அறிகுறியும் இல்லாததால், அங்கிருந்த ஒரு நாற்காலியை ஓங்கி

எட்டிவிட்டார் ப்ரஸ்டன். தொப்பியைக் கழற்றி டேபிளில் வீசினார். கோபத்தில் கொதித்திருந்தார். சிகரெட் ஒன்றினை பாக்கெட்டிலிருந்து எடுத்தபோது விரல்கள் நடுங்கின.

அதை அவர் மூடுவதற்குள் தனக்கொரு சிகரெட்டை எடுத்துக் கொண்ட டெவ்லின் ''விலை கொடுத்து வாங்கிட்டாங்க, உங்களை'' என்றார்.

''ஏய், ஏய்...'' என்று புகைந்த ப்ரஸ்டன் ''என்ன சொல்ல வரீங்க?'' என்றார் கோபமாய்.

''கம் ஆன், டியர்'' என்றார் டெவ்லின். ''நீங்க பிரிட்டிஷ் இலவசப் படை போன்ற அமைப்புகளில் இருந்திருப்பதா கேள்விப்பட்டேன். இப்ப இங்கே. இதெப்படி சாத்தியம்? விலைக்கு வாங்கியிருக்காங்க. மது, மாது - அளவில்லாமல் சப்ளை ஆகியிருக்குமே. அதுக்கு இப்ப விலை கொடுங்க.''

''கோபத்தைக் கூட்டாம போயிடு. இல்ல, பல்லு எகிறிடும்.''

சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொள்வதில் இறங்கினார் டெவ்லின்.



ப்ராக்ரஸ் அறிக்கையின் முடிவுக்கு வந்திருந்தார் ரேடில்.

''எக்ஸலெண்ட்'' என்றார் ஹிம்லர். ''இந்த ஐரிஷ்மேன் ஞாயிற்றுக்கிழமை கிளம்பிடுவார், இல்ல?''

''வடமேற்கு திசை பிரயாணம். அங்கிருந்து அயர்லாந்துக்கு. ஆங்கிலேய மண்ணில் கால்பதிக்காத பிரயாண ஏற்பாடு. 25000 அடி உயர பிரயாணத்துல குறுக்கே யாரும் அவரை தொந்தரவு பண்ணிட முடியாது.''

''ஐ ஸீ'' என்றார் ஹிம்லர். ''ஆக எல்லாம் நல்லபடியா நகர்வது போல தெரியுது. உங்களைப் பார்த்து நான்

ரொம்பவும் பிரமிக்கிறேன் ரேடில். எனக்கு தகவல்களைத் தொடர்ந்து அனுப்பிக்கிட்டிருங்க.''

தனது பேனாவை அவர் எடுத்துக் கொண்டார். ரேடில் கிளம்பலாம் என்பதை உணர்த்துவதைப்போல பேசிவிட்டு வேறொரு வேலையில் இறங்கினார்.

''இன்னொரு மேட்டர் இருக்கு'' என்றார் ரேடில்.

நிமிர்ந்த ஹிம்லர் ''என்னது அது?'' என்றார்.

எப்படி மேலும் பேசுவது என்று ரேடிலுக்கு பிடிபட வில்லை. ஆனால் சொல்லிவிட வேண்டும். ஸ்டைனருக்கு செய்து கொடுத்த சத்தியம் பற்றியது. ''இந்த விஷயத்துல கர்னல் ஸ்டைனர் சிறப்பாக இயங்கினால் அது அவருடைய தந்தையார் கேஸ்ல முக்கியமான விளைவை உண்டாக்கும்னு அவரிடம் நான் சொல்லிவிடலாம்னு - ஸார், நீங்களே எனக்கு அனுமதி கொடுத்திருந்தீங்க.''

''ஆமாம்'' என்றார் ஹிம்லர் சாந்தமாய். ''இதுல என்ன பிரச்சினை?''

"கர்னல் ஸ்டைனருக்கு நான் ஒரு சத்தியம் பண்ணிட்டேன்" என்றார் ரேடில் தடுமாற்றமாய். ''அதாவது, நிச்சயமாய், நிச்சயமாய்---''

"அப்படி சொல்ல உங்களுக்கு அதிகாரம் இல்லாதபோது" என முடித்தார் ஹிம்லர். ''இந்த சூழ்நிலையில், இந்த சத்தியத்தை நான் தந்ததாக என் பேரிலேயே நீங்க சொல்லலாம்.'' தனது பேனாவை மறுபடியும் எடுத்துக் கொண்டார் அவர். ''நீங்க கிளம்பலாம். ப்ரஸ்டனை இருக்கச் சொல்லுங்க. அவர்கூட நான் சில வார்த்தைகள் பேசணும். அவரை நாளைக்கு வந்து உங்களுக்கு ரிப்போர்ட் பண்ண சொல்றேன்.''

வெளியே வந்த ரேடிலைப் பார்த்து ''கிளம்பலாமா?'' என்றார் ப்ரஸ்டன்.

''நீங்க இருக்கணும். உங்களை அவர் பார்க்கணுமாம். அப்புறம், நாளைக்கு நீங்க அப்வெஹ்ர் தலைமையகத்துக்கு வராதீங்க. நான் உங்களோட தொடர்பு வெச்சுக்கறேன்.''

சட்டென்று விறைப்பான ப்ரஸ்டன், ''நிச்சயமா, ஸார்'' என்றான் சல்யூட்டில். ''வாழ்க ஹிட்லர்.''

தனியாகியதும் முதல் வேலையாக ''எந்த நரகத்திலிருந்து இவனை கொத்திக்கிட்டு வந்திருக்காங்க?'' என்று கேட்டார் டெவ்லின். ''ஹிம்லர் சுயநினைவில் இல்லாதபோது நடந்திருக்கணும்.''

''கடவுளுக்குத்தான் வெளிச்சம்'' என்றார் ரேடில். ''நல்ல ஆங்கிலம் தெரிஞ்ச இன்னொரு ஆபிஸர் எனும் இலக்கு சரிதான். ஆனா இவனா?'' மறுப்பாய் தலையசைத்துக் கொண்டார். ''பைத்தியக்காரப் பய. க்ரிமினல். கூடவே, செமத்தியான நடிப்பு. கற்பனையிலேயே வாழும் பிரிவு.''

''இவன்கிட்டே நாம மாட்டிக்கிட்டோம்'' என்ற டெவ்லின், ''பாவம், இவனிடமிருந்து ஸ்டைனர் என்னத்தை பெயர்ப்பாரோ?'' என்றார்.

''அதெல்லாம் அவருக்கு தெரியும். இப்ப பிஸினஸ். நாளைக்கு நாம பாரீஸ் பறக்கறோம்.''

''அப்புறம்?''

''ஹாலந்துல எனக்கொரு முக்கிய வேலையிருக்கு. ஏற்கெனவே நான் சொன்னதைப் போல இந்த முழு சமாச்சாரமும் லாண்ட்ஸ்வூர்ட் பகுதியில் மையங் கொள்ளும். உலகின் கடைக்கோடி பகுதி. விஷயம் அரங்கேறும்போது நானே அங்கேயிருப்பேன். ஆகவே நீங்க ஒருவேளை மைக்ரோபோன்ல வந்தால் நானிருப்பதை நினைவு வெச்சுக்கங்க. நான் ஆம்ஸ்டர்டாம் பறக்கும்போது உங்களை பாரீஸ்லேயே விட்டுட்டுப் போறேன். உங்க வாய்ப்பு வரும்போது ப்ரெஸ்ட் பகுதிக்கு அருகிலிருக்கும்

லா வில்லீக்கு உங்களை அழைச்சுட்டுப் போயிடுவாங்க. ஞாயிறு இரவு பத்துமணிக்கு நீங்க கிளம்பலாம்.''

''நீங்க அங்கே இருப்பீங்களா?''

''முயற்சிக்கிறேன். ஆனா அது சாத்தியப்படாது.''

அவர்கள் டிர்பிட்ஸ் உஃபர் வந்தடைந்ததும் ஹோஃபர் வெளியே வந்தான். சல்யூட் வைத்தவனிடம் ''எனக்கு ஏதாவது சமாச்சாரம் இருக்கா?'' என்று கேட்டார் ரேடில்.

''யெஸ். மிஸஸ் க்ரேயிடமிருந்து ஒரு சமிக்ஞை வந்திருக்கு.''

ரேடில் உடல் முழுக்க பரவசம் பரவியது. ''என்னது அது மேன்? என்ன சொன்னாங்க அவங்க?''

''உங்க தகவல் கிடைச்சுது. மிஸ்டர் டெவ்லினின் வேலை பற்றிய சமாச்சாரம் கவனிக்கப்பட்டது.' இதுதான் தகவல்.''

வெற்றி முழக்கமாய் திரும்பி டெவ்லினைப் பார்த்தார் ரேடில்.

★ ★ ★

அலுவலகக் கதவு திறக்கப்பட்டபோது ப்ரஸ்டன் சஞ்சிகை ஒன்றினை படித்துக் கொண்டிருந்தார். ஓசை கேட்டு நிமிர்ந்தபோது நிற்பவர் ஹிம்லர் என்றறிந்ததும், ''மன்னிக்கணும் , மன்னிக்கணும்'' என்று விறுவிறுவென எழுந்து விட்டார்.

''எதுக்காக?'' என்றார் ஹிம்லர். ''என்னோட வாங்க. உங்களுக்கு ஒரு சமாச்சாரம் காட்டணும்.''

விளங்காமலும், சிறு அச்சத்துடனும் அவரைத் தொடர்ந்து கீழிறங்கி, காரிடர் கடந்து, காவலர்கள் இருந்த இரும்புக் கதவினை ப்ரஸ்டன் அடைந்தார்.

இருவரும் அதற்குள் இறங்கி நடந்தார்கள். அப்போது ரிதமுடன் அடிக்கப்படும் ஓர் ஓசை அவருக்கு கேட்டது. சற்று தொலைவிலிருந்து அது வருவதைப் போலிருந்தது. ஒரு சிறை அறைக்கு வெளியே நின்ற ஹிம்லர் அதன் இரும்புக் கதவினைத் திறந்தார். அங்கு ஒரு ஜன்னல் இருந்தது.

அறுபது வயது மதிக்கத்தக்க ஒரு வயோதிகர் அங்கே குப்புறப் படுக்க வைக்கப்பட்டிருந்தார். முடியெல்லாம் அவருக்கு நரைத்திருந்தது. அவரின் பின்புறப் புட்டத்தை அங்கிருந்த இரண்டு போலீஸ்காரர்கள் கெட்டியான ரப்பர் கொண்டு அடித்துக் கொண்டிருந்தார்கள். அதனை சிகரெட் பிடித்தபடி ரோஸ்மேன் பார்த்துக் கொண்டு நின்றிருந்தான்.

''இதுபோன்ற மூளையற்ற வன்முறையை நான் வன்மையாய் கண்டிக்கிறேன்'' என்றார் ஹிம்லர். ''நீங்க?''

ப்ரஸ்டன்னின் வாய் உலர்ந்துப் போயிருந்தது. அவரது வயிறு அப்படியே ஒட்டிக் கொண்டது. ''கொடுமை'' என்றார் அவர்.

''ஃபுர்ரெர்ரும் இந்த அரசாங்கமும் முழு விசுவாசத்தை எதிர்பார்க்கின்றன. கொஞ்சம் குறைவானாலும் அதனால் உருவாகவல்ல விளைவுகளை எதிர்கொண்டுதான் ஆக வேண்டும். என்ன புரியுதா?''

அப்படியே செய்து கொண்டார் ப்ரஸ்டன் - புரிந்து கொண்டார். படியேறி மீண்டும் ஹிம்லர் திரும்பும்போது பின்னால் இவர் தடுமாறினார். கையிலிருந்த கைக்குட்டையால் வாயைப் பொத்திக் கொண்டார்.

அங்கிருந்த ஓர் அறையின் இருட்டில், மேஜர் ஜெனரல் கர்ட் ஸ்டைனர் தவழ்ந்தபடி ஒரு மூலைக்குப் போயிருந்தார். கைகளை மடக்கிக்கொண்டு அப்படியே குனிந்தபடியிருந்தார். வீங்கிய உதடுகளின் வழியே அவர் சன்னமாய் சொன்னார்: ''ஒரு வார்த்தைகூட முடியாது.''

*மீண்டும் சொன்னார்: "சத்தியமா - ஒரு வார்த்தை கிடையாது."*

★ ★ ★

*சனிக்கிழமை, அக்டோபர் 9ஆம் தேதியன்று நைட் ஃபைட்டர் குரூப் ஏழின் கேப்டன் பீட்டர் கெர்ரிக் ஜங்கர்ஸ் 88-ஐ செலுத்திக் கொண்டிருந்தார். கனத்த மேகக்கூட்டத்துக்குள் நுழைந்து அது சென்று கொண்டிருந்தது.*

*கெர்ரிக்குக்கு வயது 23. அழகன். வாழ்க்கை அவனுக்கு மிகவும் மெதுவாய் போவதைப் போன்ற நினைப்பால் கண்களில் ஒருவித பொறுமையற்ற அவசரம் இருந்து கொண்டேயிருக்கும்.*

*இவருக்குப் பின்னால் ரேடார் ஆபரேட்டர் ஹாட் இருந்தார்.*

*ரேடார் கட்டுப்பாட்டு அறையிலிருந்து மேஜர் ஹான்ஸ் பெர்கர் பேசினார். பேசியது, கெர்ரிக்கு. "உங்களுக்கு ஒரு குரியர் இருக்கு. கேட்குதா?"*

*"நல்லா."*

*"087 டிகிரிக்கு ஸ்டீரிங்கைத் திருப்பவும். 10 கிலோ மீட்டர் தொலைவில், இலக்கு."*

*ஜங்கர்ஸ் மேகத்தைக் கிழித்துக் கொண்டு சென்றது. கவனித்துக் கொண்டிருந்த பாமர், கெர்ரிக்கின் கையை பிடித்தார். கெர்ரிக் தனது இரையை அப்போது கவனித்தார். குண்டு சுமக்கும் லேன்கேஸ்டர், தனது வெளி மோட்டாரிலிருந்து புகையைக் கக்கிக்கொண்டு சீறியது.*

*1943ன் பிற்பகுதியில் ஜெர்மனியின் இரவு நேரத்து போர்வீரர்களில் பலர் ஒரு ரகசிய ஆயுதத்தை பயன்படுத்தினார்கள். மேல்நோக்கி 20 முதல் முப்பது*

டிகிரிகளுக்குள் சுட பயன்படுத்தப்படும் 20 மில்லிமீட்டர் பீரங்கி. கீழிருந்து தாக்க இது இரவுநேரத்து போர்வீரர்களுக்குப் பெரிதும் உதவியது. என்ன வந்து தாக்கியது என்று அறிவதற்குள் இது தன் வேலையை முடித்துவிடவல்லது.

இது இப்போது பயனாகியது.

நொடியின் பின்ன அளவுக்குள் கெர்ரிக் தனது இலக்கிலிருந்தார். தனது வலதுபக்கம் திரும்பியபொழுது லேன்காஸ்டர் மூவாயிரம் அடிகளுக்குக் கீழேயிருந்த கடலை நோக்கித் தாழ்வாகப் பறந்து சென்றது. கெர்ரிக்கின் பீரங்கியிலிருந்து புறப்பட்ட குண்டுகள் லேன்காண்டரைத் தாக்கின.

ஒரு மிகப்பெரிய ஆரஞ்சு வண்ணத் தீப்பிழம்பாக லேன்காஸ்டர் வெடித்தது- வெடிப்பதற்கு முன்னதாக அதிலிருந்து இரண்டு பாராசூட்கள் வெளிப்பட்டு விண்ணில் விரிந்தன. இரண்டு பைலட்டுகளும் பிழைத்துக் கொண்டனர்.

''காட்!'' என்றார் பாமர்.

''வாட் காட்?'' - கடுமையாய் கேட்டார் கெர்ரிக். ''என்னுடைய வெற்றிகரமான முப்பத்தெட்டாவது தாக்குதல். யாரும் எளிதில் அடையாத பெரும் வெற்றி. ம், கீழே கண்ட்ரோல் ரூமுக்கு போன் போடுங்க. கீழே பறந்து தப்பிக்கும் அந்தப் பரிதாபத்துக்குரியவர் காப்பாற்ற ஏற்பாடு செய்யச் சொல்லுங்க. நாம வீட்டுக்குப் போவோம்.''

★ ★ ★

இண்டலிஜன்ஸ் அறைக்குள் கெர்ரிக்கும் அவருடைய சகாக்களும் போய் நின்றபோது, அங்கு மேஜர் அட்லர் தவிர யாரும் இல்லை. சகஜமாய் பழகும் 52 வயது அட்லர், ''ஆஹ், வந்தாச்சா பீட்டர்'' என்றார் வேகமாய். ''உங்க

*இலக்கு துல்லியமா முப்பத்தெட்டாவது தடவை ஜெயிச்சாச்சுனு தகவல் கிடைச்சுது. குட்.''*

*''தப்பிச்ச அந்த ஆளுக்கு என்னாச்சு? அவனை கண்டுபிடிச்சுட்டாங்களா?''*

*''இன்னும் இல்ல. ஒரு நிவாரணக் குழு இருக்கு. அது தேடுதல்ல இருக்கு'' என்றவர் சொன்னார்: ''உனக்கு இளகிய மனசு இருக்கு, பீட்டர்.''*

*''அப்படியெல்லாம் நினைச்சுட வேண்டாம். இதுவே நாளைக்கு ராத்திரி எனக்கு நடந்துடலாம். நிவாரணம் இருக்கானு தெரிஞ்சுக்கக் கேட்டேன்.''*

*சொல்லி விட்டு அவர் கிளம்பியபோது, ''ப்ரகர் உங்களை சந்திக்க விரும்பறார்'' என்றார் மேஜர்.*

*ஓட்டோ ப்ரகர் மூன்று நபர்கள் மிகச்சிறப்பாய் வளர காரணமானவர், கெர்ரிக் உட்பட. பக்கா ஒழுக்கம் கொண்டவர். தேசீய உணர்வு பொங்கும். தனது குழுவின் முன்னேற்றத்துக்கு முழு உழைப்பைத் தருபவர்.*

*''அவருக்கு என்ன வேணுமாம்?''*

*அட்லர் தோள்களைக் குலுக்கினார். ''எனக்கு தெரியல. ஆனா போன் பண்ணும்போது, எத்தனை சீக்கிரம் முடியுமோ வரச்சொல்லணும் அப்படின்னார்.''*

*இதனை காதில் வாங்கிக் கொண்டவர், ''ஒரு ட்ரிங்க்?'' என்றார் பாமரிடம்.*

*''வேணாம்ப்பா'' என்றார் பாமர். ''சூடா ஒரு குளியல். எட்டு மணிநேர தூக்கம். இவைதான் இப்போதைய என் தேவைகள்.''*

*ஓங்கிய கொட்டாவி விட்ட ஆபரேட்டர் ஹாட்டையும் பார்த்தபடி ''எப்படியோ போங்க'' என்றார் கெர்ரிக். அருகிலிருந்த ஓர் கிடங்கு அறைக்குள் நுழைந்ததும் கெர்ரிக்*

முதலில் பார்த்தது, கர்னல் ப்ரகரை. இன்னொரு ஆபிஸரோடு உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்தார் அவர். நெருங்கலாமா என்பதில் இவரிடம் ஒரு தயக்கம் இருந்தது. இரு ஆபிஸர்களின் பேச்சும் ஆழந்திருந்ததால் இக்குழப்பம்.

ஆனால் நிமிரும்போது பார்த்து விட்ட ப்ரகர், ''ஹாய் பீட்டர்'' என்று அழைத்தார். ''வந்துட்டீங்களா? வாங்க இங்கே.'' கெர்ரிக் நெருங்கும்போது, வெயிட்டரிடம் ஒரு காபி சொல்லி முடித்திருந்தார் ப்ரகர். பைலட்டுகள் இருக்கும்போது ஆல்கஹாலை அவர் தொடுவது கிடையாது.

''கன்கிராஜுலேஷன்ஸ்'' என்றார் ப்ரகர். ''இன்னொரு வெற்றிக்கனியை நீங்க பறிச்சிருப்பதா கேள்விப்பட்டேன்.''

''தட்ஸ் ரைட். ஒரு லேன்கேஸ்ட்ரை நொறுக்கினேன். ஒருத்தன் தப்பிச்சான். பாராசுட்டுல அவன் குதிப்பதை நான் பார்த்தேன். அவனை தேடிக்கிட்டிருக்காங்க இப்ப.''

''இது கர்னல் ரேடில், கெர்ரிக்.''

நீட்டிய அவர் கையை குலுக்கிய பிறகு, ''வணக்கம் சார்'' என்றார் இவர்.

அப்போது காபியை வெயிட்டர் கொண்டு வந்து வைத்து சென்றபிறகு அங்கு ஓர் இறுக்கமான அமைதி நிலவியது. ப்ரகர்தான் பேச வேண்டியதாயிற்று. ''மிஸ்டர் ரேடில், அப்வெஹ்ரிலிருந்து வந்திருக்கார். உங்களுக்கான புது ஆர்டர்களுடன்.''

''புது ஆர்டர்கள்?'

ப்ரகர் பேசத் துவங்கினார்: ''இவர் நிறைய சொல்வார். ஆனா சுருக்கமா நான் சொல்லணும்னா, ஜெர்மனியின் நாஸி அரசான ரீச்சுக்கு உதவ உங்களுக்கு பொன்னான வாய்ப்பு காத்திருக்கு. நான்தான் சிபாரிசு பண்ணியிருக்கேன். உங்க திறமை மீதான நம்பிக்கையில்.''

*''எனக்கு அது எப்பவும் தெரியும், ஸார்'' என்றார் கெர்ரிக். ''நன்றி சார்.''*

*''இனி நீங்க ரெண்டு பேரும்.''*

*ப்ரகர் எழுந்து நடந்து போய் விட்டார்.*

*''38 முறை விமானத்தில் பறந்து இலக்கு தவறாம வெற்றிகரமா குண்டெறிஞ்சிருக்கீங்க. அசாதாரணம்.''*

*அசௌகரியமாய் நெளிந்தார் கெர்ரிக். ''சில சமயங்கள்ல வெற்றி கிடைச்சுடுது.''*

*கெர்ரிக்கின் முந்தைய நுணுக்கமான வெற்றிகள் பற்றி தான் கேள்விப்பட்டவற்றை குறிப்பிட்டு முடித்த பிறகு ''நான் வந்திருப்பது ஒரு சிம்பிள் விஷயத்துக்கு'' என்று ஆரம்பித்தார் ரேடில். ''எனக்கொரு பைலட் வேணும்.''*

*''ஓ?''*

*''ரீச்சுக்காக. இது சந்தோஷம் தருதா உங்களுக்கு?''*

*''அப்படியொண்ணும் கிடையாது. நான் இப்ப இருக்கிற இடத்திலேயே மிகவும் சந்தோஷமா இருக்கேன்.''*

*''இருந்தாலும், இந்த விஷயத்துல உங்களுக்கு ஒத்துக் கொள்வதை தவிர எவ்விதமான மாற்றமும் கிடையாது.''*

*''அப்படியா?''*

*''யெஸ். நீங்க கேட்பதை என்னால தந்துவிட முடியும்.''*

*''அதிருக்கட்டும். அடுத்து?''*

*''எனக்கு ஆம்ஸ்டர்டாமில் ஒன்பது மணிக்கு ஒரு அப்பாயிண்ட்மெண்ட் இருக்கு. அதுக்கு பிறகு நாம போக வேண்டிய இடம் அங்கிருந்து வடக்கு திசையில இருபது மைல் தொலைவுல இருக்கு. டென் ஹெல்டர் போகும் வழியில்.'' மேலும் சொன்னார்: ''நாம இங்கிருந்து ஏழரைக்குள்ளே கிளம்பியாகணும். நிச்சயமா.''*

"அப்ப, எனக்கு சாப்பிடவும் குளிக்கவும்தான் அவகாசம் கிடைக்கும்."

"பிரயாணத்தின்போது என் கார்லேயே தூங்கிக்கலாம்."

★ ★ ★

**லா**ண்ட்ஸ்வூர்ட் தனிமைப் பகுதியாக ஆம்ஸ்டர்டாமிலிருந்து வடக்குப்பக்கமாய் இருபது மைல்கள் தள்ளியிருந்தது. கடலருகில். முழு பிரயாணத்தின் போதும் கெர்ரிக் தூங்கினார். பிரதேசம் வந்ததும் அவரை தொட்டு உலுக்கி எழுப்ப வேண்டியதாயிற்று.

அங்கொரு பழைய பண்ணைத் தோட்டமிருந்தது. உளுத்துப்போன கூரைக்கு அடியில், விமானத்தை நிறுத்தி வைக்கவல்ல இரண்டு பாதுகாக்கப்பட்ட இடங்கள் இருந்தன. உடைந்த கான்க்ரீட்டில், ரன்-வே. அங்கொரு போலீஸ்காரன் மெஷின்கன் வைத்துக் கொண்டு நின்றிருந்தான். அவர்கள் கொண்டு வந்திருந்த ஆவணத்தை அவன் பரிசோதித்தபோது அங்கிருந்த நாய் அடிக்குரலில் கத்திற்று.

ரேடில் காரை உள்ளே ஓட்டிக்கொண்டு செல்லும்போது, "வெல், இதுதான்" என்றார்.

ஏராளமாயிருந்த மணற்குன்றுகள் மற்றும் அவற்றுக்குப் பின்னாலிருந்த வடக்கு கடல் ஆகியவற்றின் திசை நோக்கி நீண்டு போனது இப்பகுதி. அப்போது மழைத்தூறல் ஆரம்பித்திருந்தது. சிதிலமடைந்திருந்த ரன்-வேயின் இறுதி வரை போய் நின்றார் கெர்ரிக். அங்கு தரையில் காலை ஓங்கி அவர் வைத்தபோது தரையின் கான்கிரீட் பிளந்தது.

"ஒரு பணக்காரனால் அவருடைய சொந்த உபயோகத்துக்காக பனிரெண்டு வருடங்களுக்கு முன்னால்

கட்டப்பட்ட இடம்.'' அருகிலிருந்த ரேடில் விளக்கினார். ''என்ன நினைக்கிறீங்க நீங்க?'

''என்ன ஒரு பிரதேசம்! குப்பையும் கூளமும் கண்ணுக் கெட்டிய வரை அடிவானமும்! உலகின் இறுதி மூலை.''

''ஆக, நம் வேலைக்கு மிக உகந்த இடம்'' என முடித்தார் ரேடில். ''ஒ.கே... நம்மளுடைய பிஸினஸூக்குள் நுழைவோம்.''

முதல் விமான அறைக்குள் நுழைந்தார் ரேடில். அவரை பார்த்ததும் அங்கிருந்த காவலாளி கதவை திறந்து விட்டு அகன்றான்.

மழை நாற்றத்துடன் சில்லென்றிருந்தது அது. கூரையின் ஓட்டைகள் வழியே ஆங்காங்கே மழை உள்ளே சொட்டிக் கொண்டிருந்தது. இரு இன்ஜின்கள் கொண்ட சிறு விமானம் அங்கே தனித்து நின்று கொண்டிருந்தது.

இத்தனை பழைய ஏரோப்ளேனை பார்க்கும் பாக்கியம் தனக்கு கிடைத்ததே என்று எண்ணிக்கொண்டிருந்தார் கெர்ரிக். சிலர் குதிரைகளை ஆசைஆசையாய் விரும்புவதைப் போல கெர்ரிக்குக்கு விமானங்கள். அதன் இறக்கைகளை வாஞ்சையாய் தடவிவிட்டு அவர் பேசியபோது குரல் மிருதுவாயிருந்தது: ''ஓல்ட் பியூட்டி.''

''உங்களுக்கு இந்த விமானம் பற்றி விவரங்கள் தெரியுமா?''

''பெண்களைப் பற்றிய விவரங்களை விடவும், நுணுக்கமாய்!''

''1938ல ஆறு மாதங்கள் பிரேஸிலில். 930 மணிநேரங்கள் பறந்திருக்கு. 19 வயது. ஓய்வில்லாத உழைப்பு.''

''ஓ, அதனாலதான் என்னை தெரிந்தெடுத்திருக்கீங்களா?''

''ம்.''

*"இவளை எங்கிருந்து பிடிச்சீங்க?"*

*"RAF போக்குவரத்திலிருந்து. இரவுநேரத்தில் பாரா சூட்டிலிருந்து குதிக்க உதவும் உங்க நண்பர்களில் ஒருவர் வாங்கித் தந்தது."*

*அதன் கதவு திறந்திருந்ததால் கெர்ரிக் உள்ளே ஏறிப்போனார். காக்-பிட்டில் கட்டுப்பாட்டு உபகரணங்களுக்கு முன்னால் உட்கார்ந்தார். இன்னொரு இருக்கையை ரேடில் எடுத்துக் கொண்டார். கேட்டார்: "அப்ப, உங்களால இதை ஓட்ட முடியும்?"*

*"எந்தப் பகுதிக்கு?"*

*"ரொம்ப தொலைவு இல்ல. வடக்கு கடல் குறுக்காய், நார்த்தஃபால்க்குக்கு. உள்ளே நேரா போகணும். அதேபோல வெளியே நேரா வந்துடணும். தட்ஸ் ஆல்."*

*"எதுக்காக?"*

*"16 பாராசூட் வீரர்களை அங்கு இறக்க."*

*ஆச்சரியத்துடன் உள்ளுக்கிழுத்த மூச்சால் ஏறத்தாழ புரையேறியது கெர்ரிக்குக்கு. வலிமையாய் சிரித்தார். "போர்க்காலத்தையொட்டி இங்கிலாந்துக்குள் நுழைவது நல்லதல்லனு உங்களுக்கு புரியலையா?"*

*"இந்த குறிப்பிட்ட பிரதேசத்துல, குறைந்த உயரத்தில் இயங்கும் ரேடார்கள் கிடையாது" என்றார் ரேடில் நிதானமாய். "600 அடிக்கு கீழே நீங்க பறந்தால் கஷ்டமே வராது. ப்ளேனை நான் பக்காவா ரெடி பண்ணித் தந்துடறேன்."*

*"ஆனா இதெல்லாம் எதுக்கு?" என்றார் கெர்ரிக். "அவங்கெல்லாம் அங்கே இறங்கிட்ட பிறகு செய்யப் போவதுதான் என்ன?"*

ரேடில் கறாராய் சொன்னார்: "அது நீங்க சம்பந்தப் படாதது." தொடர்ந்தார்: "நீங்க ஜஸ்ட் ஒரு பஸ் டிரைவர், மை ஃப்ரண்ட்."

இருவரும் நடந்துபோனபோது "கடுமையா பேசிட்டேனா?" என்றார் ரேடில்.

"முட்டாள்தனமா இருக்காதீங்க. நான் எதுக்குள்ளே காலை விட்டுக்கிட்டு இருக்கேன்னு ஜஸ்ட் தெரிஞ்சுக்க நினைச்சேன்."

தனக்குள் வைத்திருந்த உறையின் கடிதத்தை கெர்ரிக்கிடம் தந்து "படிங்க" என்றார் ரேடில்.

"இத்தனை முக்கியத்துவம் வாய்ந்ததா?" என்றார் படித்தவர். "அதான் ப்ரகருக்கு அத்தனை படபடப்பு."

"எக்ஸாக்ட்லி."

"சரி. எனக்கிருக்கும் அவகாசம்?"

"நாலு வாரங்கள்."

"என் கூடவே பாமர் வரணும். திசை காட்டுவதில் அவரைவிட புத்திசாலியை நான் பார்த்தது கிடையாது."

"வேற ஏதாவது வேணுமா?"

"முடிந்தால் ஒருமுறை ஓட்டிப் பார்த்துடணும்."

"அவசியம்னா செய்யுங்க. ஒரு முறை மட்டும். அதுவும் ராத்திரியில். இப்ப நாம ஆம்ஸ்டர்டாம் கிளம்புவோம்."

★ ★ ★

**அ**டுத்த நாள் அதிகாலை 2.45 மணி. எழுபத்தியாறு வயது ஸைமஸ் ஓ ப்ராய்ன் எனும் ஒரு ஆடு மேய்ப்பவன் தனது வீடிருக்கும் திசைக்காக அல்லாடிக் கொண்டிருந்தான்.

அவன் நன்கு குடித்திருந்தான். தானிருப்பது பூமியிலா அல்லது வேற்று உலகத்திலா என்று தெரியாத அளவுக்கு குடித்திருந்தான்.

அப்போது டெவ்லின் மிக அற்புதமாக தரையிறங்கினார். அவருடைய பெல்ட்டுடன் இறுக்கப்பட்டிருந்த ஒரு கயிறில் கட்டப்பட்டிருந்த பை இருபதடி கீழே ஊசலாடிக் கொண்டிருந்தது. அது தரையை தொட்டது. டெவ்லினை எச்சரித்தது.

கலைந்த மேகங்களுக்கு இடையிலிருந்து பிரகாசித்த பால்நிலா, அவர் பண்ண வேண்டிய விஷயத்துக்குத் தேவையான ஒளியினை அம்சமாய் தந்தது. தனது பையை அவர் திறந்தார். அதிலிருந்து சிறு மண்வெட்டி ஒன்றினை வெளியிலெடுத்தார். அவருடைய மழை கோட், சிறு தொப்பி, ஒரு ஜோடி ஷூக்கள் மற்றும் தோல் பை ஆகியனவும் அதிலிருந்தன. அவற்றையும் எடுத்தார்.

அங்கு அருகில் ஒரு முள் புதரிருந்தது. அதனருகிலேயே ஒரு கால்வாயும். இப்பகுதியின் அடியில் வேகமாய் ஒரு சிறு குழியினை பறித்தார் அவர். பிறகு பறப்பதற்காக அவர் போட்டு வந்திருந்த உடைகளை அவர் களைந்தார். உள்ளே சாதாரண ஆடைகள். அதன் வலப்பாக்கெட்டில் அவர் கையோடு கொண்டு வந்திருந்த துப்பாக்கியை மாற்றிக் கொண்டார். தனது ஷூ, பாராசூட் மற்றும் பறக்கும்போது அணியும் உடை ஆகிய அனைத்தையும் பைக்குள் திணித்து குழிக்குள் போட்டார். மண்வெட்டி கொண்டு மீண்டும் அதனை மூடினார். சில இலைகளையும் சுள்ளிகளையும் அதன்மீது தூவினாற்போல போட்டார்.

தனது மழைகோட்டைச் சரிசெய்து கொண்டு எழுந்தபோது, தான் செய்த அனைத்தையும் ஸைமஸ் ஓ ப்ராய்ன் கவனித்துக் கொண்டிருந்ததை பார்த்தார் டெவ்லின்.

''ஏய்... யார் நீ?'' என்றார் முதியவர். ''மனுஷனா, பேயா? இந்த ராத்திரியிலே என்ன செய்றே?''

அவரருகில் போனதும் அடித்த வாடைக்கு "ஒரு தீக்குச்சியை உன்மேல போட்டால் போதும்யா. பத்திப்ப. அத்தனை ஆல்கஹால்" என்றார் டெவ்லின். அவரது கேள்விக்கு "நான் ரெண்டும்" என்று பிறகு பதில் தந்தார். "வெளிநாடுகளுக்குப் போயிட்டு வீடு திரும்பிக் கிட்டிருக்கேன்."

*"நிஜமா?"*

"சொன்னேன் இல்ல...

"ஓ, அப்படினா - ஒராயிரம் வரவேற்புகள்."

"தேங்க்ஸ்."

அங்கிருந்து இரண்டரை மணிநேர நடை. பிரிட்டிஷ் மண்ணிலிருந்தார் அவர். அரை மணிநேரம் கடந்தபிறகு, பெல்ஃபாஸ்ட் போகும் ரயிலின் மூன்றாம் வகுப்பில் ஏறினார்.



# 7

புதனன்று முழுக்கவும் மழை பெய்தது. மதியத்துக்கு பிறகு ஹாப்ஸ் எண்ட், ப்ளாக்கெனி இங்கெல்லாம் மழையும் கூடியது.

இருந்தாலும் தோட்டத்துக்கு போனார் ஜோன்னா க்ரே. உருளைக்கிழங்குகளை எடுத்துக்கொண்டிருந்தார் அங்கே. அப்போது தோட்டத்து கேட் திறக்கும் ஓசை கிறீச்சிட்டது. நிமிர்ந்தார். வாட்டமான உடலோடு ஆனால் வாடிய முகம் கொண்டு ஓர் இளைஞன் உள்ளே நுழைவதை அவர் பார்த்தார். மழைக்கோட்டும், தொப்பியும் அவர் அணிந்திருந்தார். அவருடைய மினுமினுக்கும் நீலநயனங்கள் போல் இதுவரை மிஸஸ் க்ரே எங்கும் கண்டதில்லை.

''மிஸஸ் க்ரே?'' என்றவர் விசாரித்தார். ''மிஸஸ் ஜோன்னா க்ரே?''

''தட்ஸ் ரைட்.'' பட்டாம்பூச்சிகள் அவருடைய வயிற்றில் சிறகடித்தன. சில கணங்கள் அவரால் சுவாசிக்கக்கூட முடியவில்லை.

அவர் சிரித்தார். ''நம்மிருவருக்கும் நடுவே அணையா தீபம் ஒன்று ஏற்றப்படட்டும்.''

''நிச்சயமாய்.'' பரபரப்பானார் மிஸஸ் க்ரே.

''இனி நாம் பேசுவதை டீ குடிச்சுக்கிட்டே செய்யலாமே. நீண்ட பிரயாணம்'' என்றார் டெவ்லின்.

உள்ளே டீ தயாரித்துக்கொண்டே அடுக்களையிலிருந்து ஜோன்னா க்ரே கேட்டார்: ''வெல், எப்படியிருந்தது?''

''அப்படியொண்ணும் மோசமாயில்ல. சில விஷயங்கள்ல ஆச்சரியப்படுத்திச்சு.''

''எதெல்லாம்?''

''மக்களை சொல்றேன். பொதுவான அவங்களோட மனநிலை. அது, நான் எதிர்பார்த்தைப் போல இல்ல. நிச்சயம் போர்ல ஜெயிச்சுடுவோம்னு இருக்காங்க அவங்க.''

''முட்டாள்களின் சாம்ராஜ்யம்.'' அவரிடம் சாந்தமாய் இதை சொன்னார் ஜோன்னா. ''அவங்க கற்றுக் கொள்வதே இல்ல. ஓர் இயக்கமா அவங்க எப்பவும் இயங்கினது கிடையாது. ஜெர்மனிக்கு ஃபுர்ரெர் தந்திருக்கும் கட்டுப்பாடான ஒழுக்கம் போல இவங்களுக்கு அமையல.''

அன்றைக்கும் இன்றைக்கும் விஷயங்கள் பலவாறாய் மாறிவிட்டிருப்பதை இப்போது உணர்ந்தார் அவர். ஆகவே தரப்பட்ட டீயை அருந்தியபடி, நடந்துபோய் விஸ்கியை எடுக்கும் ஜோன்னா க்ரேயையே வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்தார்.

இருவரும் விஸ்கி அருந்தினார்கள். அப்போது ''குட்'' என்று ஆரம்பித்த ஜோன்னா க்ரே, ''எங்கே, நீங்க கொண்டு வந்திருக்கும் ஆவணங்களைக் காட்டுங்க. நான் கொஞ்சம் பார்க்கணும்'' என்றார்.

தனது பாஸ்போர்ட், ராணுவத்திலிருந்து விலகியது பற்றிய தாள்கள், பழைய அதிகாரி தந்திருந்த சிபாரிசு கடிதம், மருத்துவ சோதனை பற்றிய பல ஆவணங்கள், எல்லாவற்றையும் டெவ்லின் தந்தார்.

''எக்ஸலெண்ட்'' என்றார் மிஸஸ் க்ரே. எல்லாம் அருமை. இப்ப கவனிங்க. சர் ஹென்றி வில்லோக்பீயின் வீட்டில் வேலை ரெடி பண்ணியிருக்கேன். இன்னிக்கு அவர்

உங்களைப் பார்க்க வருவார். நாளைக்கு நான் பக்கத்திலிருக்கும் மார்க்கெட்டுக்குப் போக வேண்டியிருக்கு.''

''நான் அங்கே பண்ண வேண்டியது என்ன?''

''லோக்கல் போலீஸ் ஸ்டேஷனுக்குப் போய் ரிப்போர்ட் பண்ணிடுங்க. ஒரு ரிஜிஸ்டரேஷன் விண்ணப்பம் தருவாங்க. அதை எல்லா ஐரீஷ்காரங்களும் நிரப்பித் தந்துடணும். பாஸ்போர்ட் போட்டோவும் தரணும். இல்லேனா ரெடி பண்ணிக்கலாம் - பிரச்சினையில்ல. அடையாள அட்டை இத்யாதிகள் தேவைப்படும். பார்ப்போம்.''

இடையில் புகுந்தார் டெவ்லின். ''மூணு வாரம் இருக்கப்போறேன். அதுக்கா இத்தனை?''

''இதெல்லாம் அத்தியாவசியம்'' என்றார் ஜோன்னா. ''எல்லாரும் வெச்சிருக்கோம். ஆகவே நீங்களும்.''

''சரி விடுங்க. நீங்கதான் பாஸ். கேட்டுக்கறேன். இந்த வேலையை பொறுத்தவரைக்கும்...''

''ஹாப்ஸ் எண்ட்டின் வார்டன் நீங்க. ரொம்பவும் தனிமையா இருக்க மாட்டீங்க. ஒரு காட்டேஜும் அங்கே இருக்கு. நேரம் போயிடும்.''

''அங்கே நான் பண்ணவேண்டியது?''

''சுத்தமா வெச்சுப்பது. ரெண்டு வருஷமா அங்கே காவல் கிடையாது. ஸோ, கவனிச்சுக்கங்க.''

''அப்புறம் என்ன செய்யறது? கல்எறிஞ்சுக்கிட்டு உட்கார்ந்திருக்கவா?''

''தேவையில்ல. சர் ஹென்றி சின்ன துப்பாக்கி தருவார். சுடுங்க!''

''நல்லது. போக்குவரத்துக்கு?''

''நான் அதுக்கு எல்லா ஏற்பாடுகளும் பண்ணியாச்சு. உங்களுக்கு தனியா ஒரு மோட்டார்பைக் தந்துடணும்னு அவரண்டை சொல்லி, வாங்கிட்டேன்.''

வெளியே ஹார்ன் அடிக்கும் சப்தம் கேட்டது. எட்டிப் பார்க்க போன அவர் உடனேயே திரும்பி வந்தார். ''அது சர் ஹென்றி. நான் என்ன பேசணுமோ அதை பண்ணிக்கறேன். உங்களைக் கேட்டால் மட்டும் சின்னதா பதில் சொல்லுங்க. அதுதான் அவருக்கு பிடிக்கும். அவரை இப்ப இங்கே கூட்டிட்டு வரேன்.''

ஜோன்னா வெளியே போனார். டெவ்லின் காத்திருந்தார். கதவை திறந்து இருவரும் உள்ளே வந்ததும், ''உடனடியா ஹால்ட்டுக்குப் போயிக்கிட்டிருக்கேன், ஜோன்னா. ஒரு அவசர சந்திப்பு. உங்களுக்கு ஏதாவது வேணுமானு கேட்க வந்தேன்.''

இதற்கு, மிகவும் சன்னமாய் டெவ்லின் காதுகளுக்கு கேட்டுவிடாவண்ணம் ஜோன்னா பதிலளித்தார். இதற்கு பதில் தரும்போது தனது குரலை மேலும் குறைத்துக் கொண்டார் ஹென்றி. முணுமுணுப்பாய்தான் அது இருந்தது. பிறகு இருவரும் கிச்சனுக்குள் வந்தார்கள்.

''ஸோ, நீங்கதான் டெவ்லினா?'' என்றார் அவர்.

சட்டென எழுந்து நின்றார் டெவ்லின். கையிலிருந்த தொப்பியின் நுனியை தடவிக்கொண்டே அதை ஒரு வட்டமாய் சுற்றிக் கொண்டிருந்தார். ''உங்களுக்கு நான் நன்றி சொல்ல கடமைப்பட்டிருக்கேன், சார்'' என்றார். ''எனக்காக நீங்க செய்திருப்பதையெல்லாம் மிஸஸ் க்ரே என்னிடம் சொன்னாங்க. ரொம்ப கருணை உங்களுக்கு.''

''உங்க நாட்டுக்காக நீங்க உழைச்சதை விடவா?'' என்றார் ஹென்றி. ''பிரான்ஸ்ல விருது கிடைச்சிருக்குனு கேள்விப்பட்டேன்.''

டெவ்லின் ஆர்வமாய் ஒப்புக்கொள்ள அவரை நெருங்கி வந்த ஹென்றி அவருடைய நெற்றியில் பட்டிருந்த காயவடுவை தடவி பார்த்தார். ''பாவமே...'' என்றார். வடுவின் வீச்சினை பார்த்துவிட்டு, ''அதிர்ஷ்டம் இல்லேனா இப்படி நீங்க இங்கே வந்து பேசிக்கிட்டிருக்க முடியாது'' என்றார், அவர் உயிர் பிழைத்ததை.

''உங்ககூடவே இவரை அனுப்பிடலாம்னு பார்த்தேன், ஹென்றி. ஆனா நீங்க பிஸியா வேற எங்கோ போய்க்கிட்டிருக்கீங்க...''

''நான்தான் சொன்னேனே, ஓல்ட் லேடி.''

''பாதகமில்ல. நானே கூட்டிட்டுப் போய் காட்டேஜ், தோட்டம் எல்லாத்தையும் காட்டிடறேன்.''

''நன்றி. ஆங், மிஸ்டர் டெவ்லின்... உடனடியா போலீஸுக்கு தகவல் தந்துட மறந்துடாதீங்க. அதுபற்றி எல்லாம் தெரியுமில்லையா?''

''யெஸ், ஸார்.''

''ஏதாவது என்னை நீங்க கேட்கணுமா?''

''துப்பாக்கி, ஸார்'' - டெவ்லின் சொன்னார்.

''ஆஹ், யெஸ். நாளைக்கு மதியம் ஏற்பாடு பண்ணிடறேன். பைக்கையும் மத்தியானமே தந்துடறேன். மாதத்துக்கு மூணு கேலன் பெட்ரோல்தான், நினைவிருக்கட்டும்.''

அவருடைய கையை பிடித்த ஜோன்னா, ''ஹென்றி... உங்களுக்கு நேரமாகுதுனு நினைக்கிறேன்'' என்றார்.

''யெஸ்'' என்றவர், ''ஆல் ரைட் ஐரீஷ்மேன்... நாளை மதியம் உங்களை நான் சந்திக்கறேன்'' என்றார்.

இருவரும் அறையை விட்டு அகன்றபிறகே அடுக்களையிலிருந்து டெவ்லின் வெளியே வந்தார். ஹென்றியின் கார் வெளியேறும்வரை பார்த்துக்

*கொண்டிருந்துவிட்டு, ஜோன்னா க்ரே திரும்பி வரும்போது சிகரெட் ஒன்றை இவர் பற்ற வைத்துக் கொண்டார்.*

*"எனக்கு ஒரு விஷயம் சொல்லணுமே" என்றார் அவர் வந்து அமர்ந்தவுடன். "இவரும் சர்ச்சிலும் நண்பர்களா, என்ன?'*

*"எனக்கு தெரிஞ்சு இருவரும் பார்த்துக்கிட்டதுகூட கிடையாது. ஸ்டட்லே க்ராஞ்ச் கலைநயம்மிக்க தோட்டங்களுக்கு பெயர் பெற்றது. அதுதான் அமைதியான வாரஇறுதி ஓய்வுக்கு உகந்ததுனு ப்ரைம் மினிஸ்டர் நினைச்சிருக்கணும்."*

*"இன்னொண்ணு: இந்த வயசிலும் அவர் உங்கமேல ஒரு கண் வெக்கிறார்...!"*

*"ம்... ஐம்பதிலும் ஆசை வரும். சரி... உங்க மூட்டையை எடுத்துக்கிட்டு வாங்க. உங்களை நான் கொண்டு போய் ஹாப்ஸ் எண்ட்ல விட்டுடறேன்."*

★ ★ ★

**கா***ற்றும் மழையும் பேயாய் ஆடின. காட்டேஜின் வாசலில் காரை ஜோன்னா நிறுத்தியதும் டெவ்லின் இறங்கிக் கொண்டார். சிந்தனைக்குள்ளானார் அவர். அது ஓர் அந்நியத்தனமான மற்றும் மர்மமான ஒரு பகுதி. பின்னந்தலையில் மயிர்க்கூச்செறிய வைக்கும் கிலிப்பிரதேசம். அவ்வப்போது கேட்கும் பறவையின் அழுகை அலறல். அப்போது அடித்துக்கொள்ளும் அதன் இறகோசையின் கண்ணுக்குப் புலப்படாத பயங்கரம். "தனிமைப் பிரதேசம்னு நீங்க சொன்னதன் அர்த்தத்தை இப்ப நான் உணர்றேன்."*

*அங்கிருந்த சப்பையான கல்லின் அடியிலிருந்து சாவியை எடுத்து அதன் கதவை திறந்தார் ஜோன்னா. மடிந்தவாடை இப்போது கூடியது. உள்ளே சுவரின் வெள்ளைப் பூச்சுக்கள்*

காரையாகியிருந்தன. இடப்பக்கத்தில் ஒரு கதவு. திறந்தால், பெரிய அடுக்களை மற்றும் வரவேற்பறை. அங்கு கனப்பு இருந்தது.

''மிஸஸ் ஜோன்னா... உங்களுக்கு சொல்ல ஒரு சேதி வெச்சிருக்கேன்'' என்றார் டெவ்லின். ''இதே போலத்தான்... அச்சு அசலா இதே போன்ற ஒரு காட்டேஜ்லதான் நான் வளர்க்கப்பட்டேன். வட அயர்லாந்துல. அவ்விடத்தை வறட்சியா வெச்சுக்க எப்பவுமே கணப்பு தேவைப்படும்... இல்லேனா அவ்ளோதான், விறைத்துவிடும்.''

''மேலும் ஒரு அனுகூலம் உண்டு - ஒதுக்கப்பட்ட தனிமை'' என்றார் ஜோன்னா. ''எத்தனை நாளானாலும், இங்கே கண்ணுக்கு ஒரு ஜீவன் அகப்படாது.''

அங்கு சில புத்தகங்கள் இருந்தன. இன்னும் கொஞ்சம் துழாவியபோது துப்பாக்கியொன்று கிடைத்தது. பாக்கெட் அளவில் ஒரு டிரான்ஸ்மிட்டர் மற்றும் ரிஸீவர் செட். வெள்ளைத் துணியில் கட்டப்பட்ட ஏதோவொன்றும் இருந்தது. அதைத் திறந்து பார்க்க டெவ்லின் முயற்சிக்க வில்லை. ''செலவுக்கு'' என்றார்.

''வாகனம் வாங்கவா?''

''ஆமாம். சரியான ஆட்களின் முகவரி எனக்கு தரப்பட்டிருக்கு.''

''எங்கிருந்து?''

''அப்வெஹ்ர் தலைமையகத்துல இதெல்லாம் கிடைக்கும்.''

''அது எங்கேயிருக்கு.''

''பர்மிங்ஹாம். இந்த வாரக்கடைசியில் அங்கே போயிட்டு வரலாம்னு திட்டம்.''

*''நிறைய தூரமிருக்கு. போய்விட்டு வர முன்னூறு மைல்கள் ஆகும்.''*

*''நிச்சயமா இந்த மூன்று கேலன் பெட்ரோல் பத்தாது. இதுக்கு நான் என்ன பண்ணுவது?''*

*''ரொம்ப ஈஸி. கள்ளச்சந்தையில வாங்கிக்கங்க. ஆனா, மூன்று மடங்கு விலை கொடுக்கணும். இப்படி நடக்காமலிருக்க அரசாங்கம் பெட்ரோல்ல கலர் கொடுத்திருக்கு. ஆனா சாதாரண கேஸ் ஃபில்ட்டர்ல போட்டெடுத்தால் இது மறைஞ்சுடும்.''*

இதற்கு, *''அற்புதமானது இது - தொழில்நுட்பத்தை சொல்றேன்''* என்றார் டெவ்லின். *''நான் பிரயாணிக்கும் போது வேற என்னெல்லாம் தெரிஞ்சுக்கணும்? அதாவது, ஆபத்துக்கள் நேராமல் இருக்க?''*

*''அப்படி பெருசா எதுவும் கிடையாது. ஹெட்லைட்டுல கறுப்பு வட்ட ஸ்டிக்கர் இருக்கணும். இல்லாவிட்டாலும் பரவாயில்லை. கிராமத்துல போக்குவரத்தே இருக்காது - ஆக நோ ப்ராப்ளம். சாலைக்கு நடுவில் வெள்ளைக்கோடு பிரிக்கும். பார்த்து நடந்துக்கணும்.''*

*''போலீஸ் அல்லது பாதுகாப்புப் படைகள் பற்றி?''*

அவரை முறைத்தார் ஜோன்னா. *''ஓ, கவலைப்படும்படி எதுவும் கிடையாது. பாதுகாக்கப்பட்ட பகுதிகளுக்குள்ளே நீங்க நுழைந்தால்தான் மிலிட்டிரி மூக்கை நுழைக்கும். போலீஸைப் பொறுத்தமட்டில், உங்களை நிறுத்தினால் அடையாள அட்டை கேட்கும். பெட்ரோல் சரியா, போலியானு பார்க்கும். லைஸென்ஸ் கேட்கலாம்.''*

*''அவ்ளோதானா?''*

*''அப்படித்தான் நினைக்கிறேன். சில இடங்களில் மணிக்கு 20 மைல் வேகக் கட்டுப்பாடுகள் இருக்கு. நீங்க கவனிச்சுக்கணும்.''*

"ஆக, முக்கியமா எதுவும் இல்லேனு சொல்றீங்க, இல்லையா?"

"இதுவரைக்கும் யாரும் என்னை நிறுத்தினது இல்லை. அப்ப நான் வேற என்ன சொல்றது? இப்பெல்லாம் யாரும் சட்டதிட்டத்தைப் பற்றி கவலைப்படுவது கிடையாது."

டெவ்லின் முறைத்தார். "உங்களுக்கு ஒண்ணு தெரியுமா, மிஸஸ் க்ரே? நாம வெற்றிகரமா முன்னேறப் போறோம்னு நினைக்கிறேன்." எழுந்து ஒரு கப்-போர்ட் நோக்கிப் போனவர் ஒரு சுத்தியல் மற்றும் ஆணியுடன் திரும்பினார். "இதோ."

"எதுக்காக?"

ஆணியை மறைவாய் சுவரில் அடித்தார். துப்பாக்கியை அது வெடிக்காத உறையைப் போட்டு அங்கு மாட்டினார். "இன்கேஸ், அவசியம்னா!" என்றார். "ம்... இப்ப மற்ற இடங்களைச் சுற்றிக் காட்டுங்க."

உதிர்ந்து விழும் நிலையில் ஒரு கட்டிடம். புதர்களுக்குப் பின்னால் நெடுநாட்களுக்கு முன்னால் கட்டப்பட்டதைப் போன்றதொரு கட்டிடம். அதன் ஒரு கதவைத் திறப்பதில்கூட சிக்கலிருந்தது. திறந்து உள்ளே போனார் டெவ்லின். குளிர் மற்றும் மடிசல் வாடை.

"இதெல்லாம் சர் ஹென்றி வந்து பார்க்கவே மாட்டாரா? இப்படியா உபயோகப்படுத்தாமலேயே போட்டு வைப்பது?"

"அவர் ஒரு பிஸிமேன். மாஜிஸ்ட்ரேட். லோக்கல் பாதுகாப்பை நிர்வகிக்கிறார். மற்ற எதுக்கும் அவருக்கு நேரமே இருப்பது கிடையாது.'

"ஆனா உங்களுக்காக..." என்றார் டெவ்லின். "கிழ ஆசாமிக்கு உங்களுக்காக திட்டவட்டமா நேரம் ஒதுக்க முடியுதே..."

*அவர் புன்னகைத்தார். ''ஆமாம். அதென்னவோ வாஸ்தவந்தான்.''*

*இருவரும் தற்போது புதர்களுக்கிடையே நடக்க ஆரம்பித்திருந்தார்கள். மழை கனமாகியிருந்தது. காற்று வலுத்திருந்தது. சில வாத்துக்கள் மறைவிடம் தேடிப் பறந்தன.*

*அவர்கள் பைன் மரங்களடர்ந்த பகுதிக்கு இப்போது வந்திருந்தார்கள். மணல் மூடிய கண்ணிகளும், புகைப்படங்கள் மூலம் டெவ்லினுக்குப் பிரபலமாகியிருந்த* "Beware of mines" *எனும் பகுதியும் வந்தன. ஜோன்னா க்ரே ஒரு கல்லை கீழிருந்த மண்ணில் தள்ளி விட்டார். அதை மீட்க ஒரு ஓயர் கட்டப்பட்டது.*

*''நிச்சயமாத்தான் இருக்கீங்களா?''*

*''படு நிச்சயமா.''*

*டெவ்லின் கயிற்றுக்கட்டினை நோக்கி இறங்கினார். மணலின் நுனியில் தயங்கினார். பிறகு முன்னோக்கி நடந்தார். மீண்டும் தயங்கிவிட்டு ஓடலானார். கடலலை அதிகம் குமுறாதபடியால் கரையோரம் நெடுகிலும் அவரது பாதச்சுவடுகள் புதைந்தபடி அப்படியே இருந்தன. அவர் திரும்பினார். மீண்டும் ஓடிவந்தார். மீண்டும் ஓயரைப் பிடித்தேறினார்.*

*மிகவும் உற்சாகமான அவர் மிஸஸ் க்ரேயின் தோளினைச் சுற்றி கரவளையமிட்டார். ''உங்க கணக்கு சரிதான் - ஆரம்பம் முதலே! இது... இது நிச்சயம் வெற்றிகரமா ஆகப்போகுது. பார்க்கப் போறீங்க, பாருங்க.'' பனிமூட்டத்துக்குப் பின்னால் தெரிந்த கடலினை அவர் கூர்ந்து பார்த்தார். ''அழகிய பகுதி'' என்றார். ''இதை யெல்லாம் விட்டுட்டுக் கிளம்புவது உங்களுக்கு பெரும் மன உளைச்சலைத் தரும்.''*

''விட்டுட்டா?'' - டெவ்லினை புரியாமல் பார்த்தார் அவர். ''என்ன சொல்றீங்க?''

''இங்கேயே நீங்க இருந்துவிட முடியாதில்ல?'' என்றார் டெவ்லின். ''எல்லாம் முடிஞ்சுட்டப்பிறகு சொல்றேன்...''

இப்போது மிஸஸ் க்ரே திரும்பி 'பாயிண்ட்' எனும் பகுதியின் திசை நோக்கி கடலுக்குள் பார்த்தார். யெஸ்... இதை விட்டுவிட்டு ஒரு நாள் கிளம்ப வேண்டும் என்பதென்னவோ அவருக்கு தோன்றவேயில்லை. தற்சமயம் மழைக் கடற்காற்று கடலைக் கொந்தளிக்க வைத்தபோது அவர் நடுங்கினார்.

★ ★ ★

**அ**ன்றிரவு 7.40க்கு, டிர்பிட்ஸ் உஃம்பர் அலுவலகத்தில் இருந்தார் ரேடில். பிரிட்டானியிலிருந்து திரும்பியதிலிருந்து அலுத்துப் போயிருந்தார்.

''இப்படி உங்களை நீங்களே அலைக்கழிச்சுக் கிட்டிருந்தால், மிஸ்டர் ரேடில்...'' என்று தொடங்கிய டாக்டர், ''செத்தே போயிடுவீங்க'' என்றார்.

மூன்று விதமான மாத்திரைகளை வாங்கிக்கொண்டு, டாக்டர் ஃபீஸையும் தந்துவிட்டு கிளம்பினார் ரேடில். அவற்றில் இரண்டை இப்போது சாப்பிட்டார். வலி நிவாரணி மருந்துகள். அப்போது கதவில் தட்டப்படும் ஓசை எழுந்தது. ஹோஃபர் வந்தான். வழக்கமாய் அடங்கியே இருக்கும் அவனுடைய முகம் அப்போது கண்கள் பளபளக்க பிரகாசமாயிருந்தது.

''என்ன விஷயம்?''

''இப்பத்தான் இது வந்தது'' என்று தந்தான். ''மிஸஸ் க்ரேயிடமிருந்து. அவர் வந்தாச்சாம் - ஆபத்தில்லாமல். அவர் இப்ப மிஸஸ் க்ரேயுடன்தான் இருக்காராம்.''

உடல் உபாதைகளெல்லாம் அப்படியே வடிந்து ஓடிவிட்டதைப் போலானது ரேடிலுக்கு. சந்தோஷக் குன்றாய் எழுந்து நின்றார். ''சுதந்திரம் கிடைக்கப் போவதற்காகவும், டெவ்லின் வெற்றிக்காகவும் - கொண்டாடுவோம், கம் ஆன்'' என்றார். கோப்பையை எடுத்துக் கொண்டார்.

★ ★ ★

**ஸ்**பெயினில் லிங்கன் வாஷிங்டன் படைக்குழுவில் இருந்தபோதே மோட்டார் சைக்கிள் ஒன்றைத்தான் மிகவும் உபயோககரமான ஒன்றாய் டெவ்லின் உணர்ந்திருக்கிறார். நார்ஃபால்க் பிரதேசத்திலிருந்து அது மாறுபட்ட ஒரு பகுதியாய் இருந்தது ஆனாலும், இதேபோலத்தான் ஆள் நடமாற்றமற்ற, முழு சுதந்திரம் மிக்கதாய் ஸ்பெயின் அனுபவமும் இருந்தது.

டிரைவிங் லைஸென்ஸ் பெறுவதில் சிறு சிரமமுமில்லாமல் முடிந்தது. ஏற்கெனவே பட்டாளத்தில் இருந்தவன் என்ற கதை, விமரிசையாய் ஒத்துழைத்தது. காயப்பட்ட வீரன் என்ற தகவல் போகுமிடத்திலெல்லாம் இன்னமும் கூடுதலான வரவேற்பை இவருக்கு பெற்றுத் தந்தது.

350 CC பைக்கினை விரட்டிக்கொண்டு பள்ளமான ஒரு குன்றினைக் கடந்து தற்சமயம் கிராமத்திற்குள்ளேயே நுழைந்திருந்தார். ஒரு சிறு குதிரைவண்டியில் போய்க் கொண்டிருந்த இளைய யுவதிக்காக தனது பைக்கின் வேகத்தை குறைத்தார் இவர். அழகிய முகவாயும், பிரம்மாண்ட விழிகளும், அகண்ட அதரமும் அமைந்திருந்த அவளுடைய மூன்று விரல்கள் அவள் அணிந்திருந்த க்ளவுஸின் துளைகள் வழியாய் துருத்திக் கொண்டு வெளியே தெரிந்தன. அவை அழகாயிருந்தன.

இவர் பாலத்தைக் கடக்கட்டும் என்று காத்து நின்ற அவளிடம், ''குட் டே'' என்றார் டெவ்லின்.

ஆச்சரியத்தால் சற்று அகன்ற அவள் கண்கள். அதரமும் அப்படியே சின்னதாய் திறந்தது. பேசவேண்டியது வராததைப் போல ஆனாள் அவள். மேலே ஏறு என்று தனது குதிரையை குன்றுப்பக்கமாய் விரட்டினாள்.

''அழகிய ராட்சஸி'' என்று மிருதுவாய் சொல்லிக் கொண்டார் டெவ்லின். ''என்னை ஒருமுறை அல்ல... இருமுறை திரும்பிப் பார்க்கச் செய்தவள்.'' உடனேயே, ''ஓ, நோ டெல்வின்'' என்று தனக்குத்தானே சொல்லிக் கொண்டார். ''அதெல்லாம் வேணாம். இப்ப வேணாம்.''

ஸ்டட்லே ஆர்ம்ஸ் பக்கமாய் அவர் வண்டியை விரட்டியபோது ஓர் ஆசாமி ஜன்னலிலிருந்து தன்னை பார்த்துக் கொண்டிருப்பதை உணர்ந்தார் டெவ்லின். மிகவும் பருத்த முப்பது வயதையொட்டிய ஆள். நறுக்கப்படாத கறுப்பு தாடி. தொப்பியணிந்திருந்தான் அவன்.

'என்னப்பா நான் உனக்கு அப்படி பண்ணிட்டேன், நீ இப்படி பார்க்க?' என்று தனக்குத்தானே நினைத்துக் கொண்டார் இவர். ஏறிக்கொண்டிருந்த குதிரை வண்டி மற்றும் அப்பெண்ணை நோக்கி அவனது பார்வை சென்றது. டெவ்லின் தனது வண்டியை ஸ்டாண்ட் இட்டு நிறுத்தினார். கழுத்தில் தொங்கிக் கொண்டிருந்த துப்பாக்கியை கைகளுக்குள் மறைவாக்கினார். உள்ளே போனார்.

அது பார் இல்லை. பெரிய வசதியான ஓர் அறை. சின்ன தாழ்வான கூரை. சாய்வுப் பக்கம் உயரமாயிருந்த சில நாற்காலிகள். வெளிச்சம் தந்த ஒரு நெருப்புக் கணப்பு.

அங்கு மூன்று ஆசாமிகள் மட்டுமே இருந்தார்கள். கணப்புக்கு பக்கத்திலிருந்தவர் மவுத்-ஆர்கன் வாசித்துக்

கொண்டிருந்தார். ஜன்னலிலிருந்தது, கறுப்பு தாடிக்காரன். மற்றும் இருபதுகளின் கடைசியிலிருந்த ஒரு குண்டு ஆள்.

''இங்கிருக்கும் அனைவரையும் கடவுள் காக்க'' என்றார் டெவ்லின். இருபதுகளில் இருந்தவன் தனது கையை நீட்டினான். ''நான் ஜார்ஜ் ஓயில்ட்'' என்றான். ''இங்கு வசிப்பவன். நீங்க ஜார்ஜ் ஹென்றி வீட்டுக்கு புதுசாய் வந்திருக்கும் காவலாளி. உங்களை பற்றிய எல்லாத்தையும் நாங்க கேள்விப்பட்டோம்.''

''என்ன, முன்கூட்டியேவா?''

''கிராமத்தை பற்றி உங்களுக்கு தெரியாது.''

''இல்ல, தெரியுமோ?'' - ஜன்னலிலிருந்த குண்டு ஆசாமி கரடுமுரடான குரலில் சொன்னான்.

அறிமுகப்படுத்துவதில் இறங்கிய ஓயில்ட், ''பேசியது ஆர்தூர் ஸேமோர்'' என்றான். ''கணப்பில் இருப்பது, லேக்கர் ஆரம்ஸ்பீ.''

லேக்கரை பார்க்கும்போது நாற்பதுகளின் மையத்தில் இருப்பதுபோல தோன்றினாலும் வயதானவராய் தோன்றினார். அவரும், அவரது கிழிந்த தொப்பியும், களிமண் பூசிய ஷூக்களும், ஸாக்ஸூம். தாளமுடியாத அழுக்கு மூட்டையாய் அவர் தெரிந்தார்.

''என்கூட கொஞ்சம் குடிக்க வரீங்களா?'' - கேட்டார் டெவ்லின்.

''எனக்கு வேண்டியதை வாங்கிக்க எனக்கு தெரியும்'' என்ற ஸேமோர், ''உன்னை நல்லா கவனிச்சுக்கறாங்க போலிருக்கு'' என்றார். ''நல்ல உடைகள், பைக்'' என்று சுட்டிக்காட்டினார். ''இங்கேயே எஸ்டேட்ல வருஷக்கணக்காக வேலை செய்து கொண்டு இருக்கின்ற நாங்கள்லாம் இருக்கும்போது என்ன காரணத்துக்காக

உன்னை வெளியிலிருந்து கூட்டிட்டு வந்திருக்கணும்னு விளங்கல'' என்றார்.

''இதுக்கு விடை ஸிம்பிள். உங்க எல்லாரையும்விட நான் அழகாயிருக்கேன்.''

ஸேமோரின் விழிகளில் வெறி கூடியது. ''என்னை வெச்சு கிண்டலடிக்காதே மேன். மீறினால் பூச்சி போல உன்னை நசுக்கிடுவேன்.''

டெவ்லின் பரபரப்பாய் புன்னகைத்தார். ''ஓஓஓ... புண்படுத்தியிருந்தால், மன்னிச்சுடுங்க'' என்றார்.

''கவனி. கவனத்துல மறக்காம வெச்சுக்க. இனி நான் உள்ளே வந்தால், நீ வெளியேறிடணும்.''

அவன் சொல்லிவிட்டு வெளியேறினான். தனக்கு பின்னால் கதவை ஓங்கியடித்து மூடினான்.

பின்னறைக்கு போய் மதுபாட்டிலுடன் வந்தான் ஜார்ஜ் ஓயில்ட். ''ம், டெவ்லின்.''

''லியாம்னே கூப்பிடுங்க. ஆங்... அவர் எப்பவுமே இப்படித்தானா?''

''எனக்கு நினைவு தெரிஞ்ச நாள்முதலா.''

''நான் வரும்போது குதிரை வண்டியில் ஒரு பொண்ணிருந்தா. அவமேல என்ன இவருக்கு ஒரு கண்ணா?''

''இருக்கலாம்.'' லேக்கர் ஆர்ம்ஸ்பீ நாக்கை சொடுக்கி விட்டு சொன்னார்.

''அவ, மோலி ப்ரையர்'' என்றான் ஓயில்ட். ''ஹாப்ஸ் எண்ட்டுல அவளுக்கும் அவங்க அம்மாவுக்கும் பண்ணை இருக்கு. சில மைல்கள் தள்ளியிருக்கு அது. போன வருஷம் இவ அப்பா செத்ததிலிருந்து ரெண்டு பேருமா கவனிச்சுக்கிட்டு

*வராங்க. சர்ச்சுல வேலையில்லாதபோது இவங்களோட கொஞ்சம் காலம் கழிப்பான் லேக்கர்.''*

*''ஸேமோரும் ஒத்தாசை செய்வார்.''*

*''இந்த பகுதியையே விலைக்கு வாங்கிட்டதா நினைப்போ அவருக்கு? ஏன் அவர் ராணுவத்துக்கு போகல?''*

*''அது ஒரு சோகக்கதை. காதுல துளையிருப்பதால் அவரை திருப்பி அனுப்பிட்டாங்க.''*

*''அதை அவருடைய கொழுத்த ஆண்மைக்கு ஒரு தோல்வியா அவர் எடுத்துக்கிட்டிருக்கணும்...'' - சொன்னார் டெவ்லின்.*

*இதற்கு ஒரு விளக்கம் தேவை என்பதைபோல பேசினார் ஒயில்ட்: ''எனக்கும் போர்ல வலது கால்முட்டி அடிவாங்கிச்சு. 1940ல். உங்களுக்கு பிரான்ஸ் போரில் உடைஞ்சதுனு நினைக்கிறேன்?''*

*''தட்ஸ் ரைட்'' என்றார் டெவ்லின் சாந்தமாய். ''அர்ராஸுக்கு பக்கத்துல நடந்தது. டன்கிர்க் வழியா ஒரு ஸ்ட்ரெச்சர்ல வெச்சு வெளியேற்றப்பட்டிருக்கேன்.''*

*''அப்புறம் ஒரு வருஷம்போல ஆஸ்பத்திரியில் கிடந்தீங்கன்னு மிஸஸ் க்ரே சொன்னாங்க.''*

*டெவ்லின் ஆமோதித்தார். ''நல்ல பெண்மணி. நான் அவங்களுக்கு ரொம்ப கடமைப்பட்டிருக்கேன். என்னைக் சார்ந்தவங்க திரும்பி வந்துட்டாங்க என்பது அவங்களுடைய புருஷனுக்கு தெரியும். அவங்க இல்லேனா, எனக்கு இந்த வேலையே கிடைச்சிருக்காது.''*

*''பெண்மணி'' என்றான் ஒயில்ட். ''ஒரு ரியல் பெண்மணி. அவங்களைவிட சிறந்தவங்க யாரும் இங்கே சுற்றுவட்டாரத்துல கிடையாது.''*

''கிளம்பறேன்'' என்று எழுந்தார் டெவ்லின். ''வேலைகள் இருக்கு.''

★ ★ ★

இலையுதிர்காலத்துக்கே உரிய கடுங்குளிர். ஒன்றன்பின் ஒன்றாய் வானில் மேகங்கள் ஒன்றையொன்று துரத்திக் கொண்டிருந்தன. கடற்கரைச் சாலையில் பைக்கில் போய்க் கொண்டிருந்த டெவ்லின், குதிரை வண்டியில் அன்று பார்த்த அதே பெண்ணை அங்கு கவனித்தார். அடர்ந்த பைன் மரங்களுக்கு நடுவில் அவள் வாகனம் சென்று கொண்டிருந்தது. பைக்கின் வேகத்தை அதிகரித்தார் இவர். லாகவமாய் அவளது வேகத்துக்கு இவரால் ஈடுகொடுக்க முடியாவண்ணம் சாலை வளைந்து வளைந்து போனது... ஈரப்பதமும் வழுக்கியது.

ஒரு சமயம் அவளது பாதையை தவற விட்டாலும், வழுக்கியும் தடுமாறியும் ஓட்டிக்கொண்டு ஒரு கட்டத்தில் அவளை பிடித்து விட்டார் டெவ்லின்.

மோலி ப்ரியர், அங்கிருந்த ஒரு பைன் மரத்தின் அடியில், தனது இணைந்த கால்முட்டிகளின் மேல் முகவாயை வைத்தபடி உட்கார்ந்திருந்தாள். கடைசிமுறை பார்க்கும் போது என்ன மாதிரி ஆடையலங்காரம் செய்திருந்தாளோ அப்படியேதான் இப்போதும் இருந்தாள் - தொப்பியை எடுத்ததை தவிர. இதனால் அவளுடைய நறுக்கப்பட்ட வழுவழு கேசம் தெரிந்தது. குதிரை, அருகில் புல் மேய்ந்துக் கொண்டிருந்தது.

பைக்கை நிறுத்தி ஸ்டாண்டு இட்டு டெவ்லின் நேராய் அவளருகிலேயே போய்விட்டார். ''இனிமையான பொழுது'' என்றார். ''கடவுளுக்கு நன்றிகள்.''

*திரும்பிவள் , நிதானமாய் கேட்டாள்: "எது உங்களை இங்கு இழுத்தது?"*

*தொப்பியை எடுத்துவிட்டு முன்நெற்றி வியர்வையை வழித்து சுண்டிய அவன் ஆச்சரியமாய் பார்த்தான்: "எது என்னை இழுத்தது, ஆங்? இதை கேட்கணுமா? நீ..."*

*பிறகு அவள் சிரித்தாள். தலையை பின்னுக்கு தள்ளிக்கொண்டு சிரித்தாள். அவரும் சிரித்தார். "உனக்கு பசுமையான எதிர்காலம் முன்னால் காத்திருக்கு" என்றார் புன்னகை மாறாமல்.*

*"எனக்கு பதினேழுதான் ஆகுது. நிச்சயமா எதிர்காலம் காத்திருக்கும்தான்" என்றாள் அவள். "பிப்ரவரி வந்தால் 18."*

*"தேதி?"*

*"22."*

*"ஆஹ், மீனம். நான் தேள் - விருச்சிகம். ரெண்டு பேரும் ஒண்ணாயிருந்தால் சுபமேதான். கன்னிராசி ஆசாமியை நீ கலியாணம் கட்டவே கூடாது. மீனம் எப்பவும் கன்னியைக் குத்திக்கிட்டே இருக்கும். பிரளயம்தான். ஆர்தூரை உதாரணத்துக்கு எடுத்துக்க. ரெண்டுபேரும் முட்டிக்கிட்டோம் - அவன் கன்னி."*

*"ஆர்தூர்?" என்றாள் அவள். "அதாவது ஆர்தூர் ஸேமோரையா சொல்றீங்க? பைத்தியமா நீங்க?"*

*"இல்லை. அவர். அவர் பைத்தியம்."*

*அவள் நன்றாய் திரும்பினாள். டெவ்லினைப் பார்த்தாள். அவளது மார்பகங்கள் வளர்த்தியாய் திண்ணென்றிருந்தன. அவள் அணிந்திருந்த காட்டன் ப்ளவுஸால் அவற்றை கட்டுக்கடங்க பிடிக்க இயலவில்லை.*

''டியர் கேர்ள்...'' என்றார் ஆடவன். ''உணவுக் கட்டுப்பாட்டால் உன் வெயிட்டை நீ கண்காணிக்கா விட்டால், பெருத்துடுவே...''

அவள் கண்கள் படபடத்தன. தன்னிச்சையாய் கன்னியின் கண்கள் தணிந்து பார்த்தன. சட்டென்று மேல்கோட்டை இழுத்து துருத்திய பகுதிகளை மூடிக்கொண்டாள். ''சீ நாயே!'' என்றாள் அவள். அவன், அணிந்திருந்த தொப்பியின் அடியில் சிரித்தான்.

''சீ நிறுத்து. எதுக்காக என்னை பார்த்து இப்படி நமுட்டு சிரிப்பு சிரிக்கிற?''

''நீ அருகிலிருக்கும்போது நான் வேற என்ன பண்ணுவது, மோலி ப்ரியர்?''

''ஆ... என் பேர் எப்படி உனக்கு தெரியும்?''

''ஜார்ஜ் ஒயில்ட் எனக்கு சொன்னார்.''

''ஓ, இப்ப விளங்குது எனக்கு. அப்ப ஆர்தூர்? அவர் அங்கே இருந்தாரா?''

''பதில் நீயே சொல்லிடலாம். எனக்கென்னவோ அவர் உன்னை அவருடைய ஒரு தனிப்பட்ட சொத்தாய் பாவிக்கிறார்னு தோணுது.''

''அது அவர்பாடு. நரகத்துக்குப் போக அவன்.'' சட்டென்று கொதிப்பானாள் அவள். ''நான் எந்த ஆணுக்கும் சொந்தம் கிடையாது.''

தானிருந்த இடத்திலிருந்து அப்படியே அவளை பார்த்தார் அவர். உதட்டின் ஓர் ஓரத்தில் சிகரெட் அப்படியே கனன்றுக் கொண்டிருந்தது. ''உன் மூக்கு துடிதுடிக்குது - இதை யாராவதும் உன்னிடம் சொல்லியிருக்காங்களா? அப்புறம், கோபத்துல, உன் உதடுகள் ரெண்டு ஓரத்திலும் அப்படியே சுழிஞ்சுடுது.''

சற்று அதிகப்பிரசங்கித்தனமாய் பேசியதால் அவளுள்ளிருந்த காயத்தை தீண்டி விடுவதுபோல நிலைமை ஆயிற்று. ''ஓ, நான் அழகற்றவள், மிஸ்டர் டெவ்லின். டவுன்ல, இரவு நேரத்து பார்ட்டிகளில் நடனம் இருக்கும். முழுராத்திரியும் காத்து உட்கார்ந்திருப்பேன், யாராவது கூட ஆட கூப்பிடுவாங்களோனு எதிர்பார்த்து. ம்ம். ஒருத்தர் கூட கூப்பிட மாட்டாங்க. ஆனா நீங்க என்னை வெறுக்க மாட்டீங்கன்னு நினைக்கிறேன். வாரயிறுதியில் என்னை கூப்பிட்டாலும் கூப்பிடலாம். ஆண்கள் அப்படித்தான். உங்களுக்கு இங்கே பெண்கள் கிடைக்க மாட்டாங்க. ஒண்ணும் இல்லாததுக்கு, ஏதோவொண்ணு பரவாயில்லை, இல்லையா?''

அவள் எழுந்திருக்க ஆரம்பித்தாள். அவள் கையை பிடித்திழுத்து அப்படியே உட்கார வைத்த டெவ்லின், தனது கைக்குள் அவளை இறுக்கி நகர விடாமல் ஆக்கினார். ''உனக்கு என் பேர் தெரிஞ்சிருக்கு. அதெப்படி?''

''இப்படிப்பட்ட எண்ணங்களை மண்டைக்குள் நுழைய விடாதே. இங்கே எல்லாருக்கும் உன்னை தெரியும். அவங்களுக்கு என்னவெல்லாம் தெரியணுமோ அத்தனையும் தெரியும்.''

''உனக்கு நானொரு சேதி வெச்சிருக்கேன்'' - அவள் மீது சாய்ந்து கொண்டு சொன்னார்: ''என்னைப் பற்றி உனக்கு முழுசா தெரியாது. தெரிந்திருந்தால், எனக்கு இலையுதிர் காலத்து குளிர் பிடிக்கும் என்பதும், அந்த சமயத்தில் பைன் மரங்களுக்கு அடியில் கிடப்பது பிடிக்கும் என்பதும், வார இறுதி நாட்களில் குளிரில் ஆடுவது பிடிக்கும் என்பதும் உனக்கு தெரிஞ்சிருக்கும்!'' அவள் அப்படியே ஓவியமாய் நின்றாள். அவர் மிருதுவாய் அவளது இதழ்களில் முத்தமிட்டுவிட்டு நகர்ந்தார்.

ஓடிப்போய் தனது குதிரையை பிடித்து அவருக்காக திரும்பியபோது அவளுடைய முகம் இறுகியிருந்தது. ஆனால் குதிரையைப் பூட்டிவிட்டு அதனை ஒட்ட எத்திக்கொண்டே மீண்டும் அவருக்காக திரும்பியபோது அம்முகத்தில் பூப்பூத்திருந்தது. புன்னகைப்பூ. "எல்லா ஐரீஷ்காரனுங்களும் பைத்தியக்காரங்கனு சொல்லியிருக்காங்க. இப்ப அதை நான் நம்பறேன். நான் ஞாயிறு சாயங்காலம் மாஸ்ல இருப்பேன். நீ?"

"என்ன, என்னை பார்த்தால், நான் அங்கே நிச்சயம் வருவேன் என்பதுபோலவா தெரியுது?!"

குதிரை, விடப்பட்ட எத்தலுக்கு பணிந்து அரைவட்டமாய் திரும்பி பாதை அமைத்திருந்தது. மோலி, "யெஸ்" என்றாள் ஸீரியஸாய். "அப்படித்தான் தெரியுது."



# 8

பர்மிங்ஹாமில் நகர் முழுக்கவும் குளிர்க்காற்று வீசிக்கொண்டிருந்தது. பென் கார்வால்ட்டுடைய ஃப்ளாட்டின் கண்ணாடி ஜன்னல்களில் சாட்டையடியாய் மழையும் கொட்டிக் கொண்டிருந்தது. சுருண்ட கருங்கேசமும், பட்டினாலான டிரஸ்ஸிங் கவுனும் இவரின் வசீகரத்தைக் கூட்டிக்காட்டினாலும், இன்று காலையிலிருந்தே இவ்வுலகே இவருக்கு கோபமாய் பட்டுக்கொண்டிருந்தது.

முன்னிரவு 11.30 மணிக்கு, பர்மிங்ஹாமின் மதிப்புமிக்க சாலையொன்றில், ஒரு வீட்டில் இவர் நடத்தி வந்த சட்டத்துக்கு புறம்பான சங்கம், நகர போலீஸாரால் சோதனைக்கு ஆக்கப்பட்டது. இவர் கைது செய்யப்படலாம் என்ற நிலைமையெல்லாம் கிடையாது. வெள்ளை அப்பம் எல்லாவற்றையும் கவனித்து விடும் - அதற்காகத்தானே போலீஸ் ஆட்டமாடியதே! இதைவிட சீரியசானது - டேபிளில் இருந்த 3500 பவுண்டையும் போலீஸ் அபகரித்துப் போனது.

கிச்சன் கதவு திறக்க, பதினெட்டு வயது மதிக்கத்தக்க ஓர் இளைய பெண் வந்தாள். “உங்களுக்கு ஏதாவது கொண்டு வரணுமா, மிஸ்டர் கார்வால்ட்?” - அவள் மெதுவாய் கேட்டாள்.

“ஏதாவது, ஆங்? இதுவரைக்கும் நீ எனக்கு ஒண்ணுமே தரலே என்பது இதிலிருந்து தெரியல? ப்ளடி.”

திரும்பி அவளை பார்க்காமலே பேசினார் பென். அவரது கவனத்தை, இப்போதுதான் பைக்கில் உள்ளே நுழைந்து அதனை ஸ்டாண்டு இட்டு கீழே நிறுத்திக் கொண்டிருந்த ஓர் இளைஞன் கவ்வியிருந்தான்.

வழக்கத்துக்கு மாறான "பென்"னின் சில வேண்டு கோள்களுக்கு நேற்றிரவு ஒத்துழைப்பு தர இயலாத இப்பெண், கண்ணீருடன் சொன்னாள்: "என்னை மன்னிச்சுடுங்க, மிஸ்டர் கார்வால்ட்."

அடுக்ககத்துக்குள் நுழைந்திருந்த அந்த ஆள் இப்போது கண் பார்வையிலிருந்து மறைந்திருந்தான். திரும்பிய கார்வால்ட் அப்பெண்ணிடம் பேசினார்: "போ. போய் உன் துணிமணிகளை மூட்டை கட்டு. நீ கிளம்பலாம்." அவள் உயிர்வரை உலுக்கப்பட்டாள். பயத்தில் நடுநடுங்கினாள். வசியம் ஆனவளைப் போல அவரையே முறைத்தாள். ஒரு பெரும் சக்தி, முழுக்கவும் காமம் நிறைந்த அந்த விறைப்பு, பென்னின் உடலெங்கும் பூரித்தது. அவளுடைய கூந்தலை அப்படியே கொத்தாக இழுத்த அவர், அப்பிடியை வலுக்கொண்டு திருகினார். "உனக்கு என்ன கட்டளை சொல்லப்படுகிறதோ அதன்படி நடந்துக்க முதல்ல கத்துக்க. விளங்குதா?"

அப்பெண் மளமளவென உள்ளே ஓடியதும், வரவேற்பறை கதவு திறந்தது. ரூபென் கார்வெல்ட் - பென்னின் இளைய சகோதரன் - உள்ளே வந்தான். அவன் குட்டையாய், நோய்க்கண்டவனைப்போல சமமற்ற தோள்கள் கொண்டு தோன்றினான். ஆனால் அவனுடைய கருவிழிகள் மட்டும் ஓய்வின்றி அசைவில் இருந்தன - எதுவும் அவற்றிலிருந்து தப்பாது.

அடுத்த அறைக்குள் ஓடிய அப்பெண்ணையே வேண்டாவெறுப்போடு பார்த்த அவனுடைய கண்கள்,

''விடு, பென்'' என்று பேசின. ''இப்படிப்பட்ட ஒரு பயந்தாங்கொள்ளி எதுக்கு? வேற எதையாவது பிடி.''

''இதுங்களுக்காகத்தானே பெனிசிலின் கண்டு பிடிச்சிருக்கான்'' - கார்வால்ட் சொன்னார். ''இது போகட்டும்... உனக்கென்ன வேணும்?''

''எவனோ ஒருத்தன் உன்னை பார்க்க வந்திருக்கான். இப்பத்தான். மோட்டார் சைக்கிள்ல.''

''கவனிச்சேன். என்ன வேணுமாம் அவனுக்கு?''

''சொல்ல மாட்டேங்கிறான்.'' சொன்ன ரூபென் பாதியான ஒரு ஐந்து பவுண்டு நோட்டு ஒன்றை காட்டினார். ''இதை உங்கிட்டே கொடுக்க சொன்னான். உன்னை பார்த்தால் இதன் மீதி பாதியை தருவானாம்.''

சிரித்த கார்வால்ட் சகோதரனின் கையிலிருந்த பாதி கிழிந்த நோட்டினை பறித்தார். ''இது எனக்கு பிடிச்சிருக்கு. யெஸ். நிச்சயமா பார்த்துடறேன்.'' அதை அவர் ஜன்னல் வரை கொண்டுபோய் பரிசோதித்தார். ''இப்படி இன்னும் சில அவர்கிட்டே இருக்குமேன்னு நினைக்கிறேன், ரூபென். பார்த்துடுவோம்.''

வெளியே போய் ரூபென் திரும்பிய போது டெவ்லின் நனைந்த ரெயின்-கோட்டுடன் உள்ளே நுழைந்திருந்தார்.

இன்றைய தினம் அப்படியொன்றும் மோசமாய் அமையப் போவதில்லை என்ற நிலைக்கு இப்போது ஆகியிருந்த கார்வால்ட் ''ம், உங்க பேர்?'' என்றார்.

''மர்ஃபி, மிஸ்டர் கார்வால்ட்'' என்றார் டெவ்லின்.

''இதை நான் நம்பறேன்'' என்ற கார்வால்ட், ''முதல்ல உங்க கோட்டை அவிழ்த்து ஓர் ஓரமா வெக்க முடியுமா, ப்ளீஸ்'' என்றார். ''என் விலைமதிப்பற்ற தரைவிரிப்பெல்லாம் நாசமாகுது.''

அப்படியே செய்து அதனை ரூபெனிடம் தந்தார் அவர். அதிர்ந்துப்போன ரூபென் வேறுவழியின்றி அதனை பெற்றுக்கொண்டு மாட்டினார்.

“என் நேரம் பொன்னானது நண்பரே” என்ற கார்வால்ட், “ஸோ, நாம விஷயத்துக்குள்ளே போயிடலாமே” என்றார்.

உள்ளங்கைகள் இரண்டையும் ஒன்றாய் தேய்த்து சூடுபடுத்திக் கொண்ட டெவ்லின் “நீங்க இங்கே ஏதோ போக்குவரத்து பிசினஸ் பண்ணுவதா கேள்விப்பட்டேன்” என்றார். “மற்ற பிசினசுகளுக்கு நடுவுல.”

“யார் சொன்னது அதை?”

“சுற்றுவட்டாரத்துல.”

“அதுக்கென்ன இப்ப?”

“எனக்கு ட்ரக் வேணும். பெட்ஃபர்ட் மூன்று டன் கொள்ளளவு. ராணுவ மாடல்.”

“இவ்ளோதானா?” - இன்னும் சிரித்தபடியே இருந்தாலும் கார்வால்ட்டின் கண்கள் கண்காணிப்பிலேயே இருந்தன.

“நோ. எனக்கொரு ஜீப்பும் வேணும். ஒரு கம்ப்ரஸ்ஸர். ஸ்ப்ரே பண்ணும் உபகரணம். காக்கி, பச்சை நிற பெயிண்ட்டுகள். ‘ட்ரக்குகள், சேவைக்கு’ என்ற பதிவு இருக்கணும்.”

பலமாய் சிரித்தார் கார்வால்ட். “இத்தனையும் வெச்சுக்கிட்டு என்ன பண்ணப் போறீங்க? செகண்ட்ஸ் விற்பனை ஏதாவது தொடங்கப் போறீங்களா?”

தனது சட்டைக்குள்ளிருந்து ஒரு உறையினை எடுத்தார் டெவ்லின். “தபாருங்க... 500 பவுண்டு இருக்கு இதுல, ஓ.கே... நான் ஒண்ணும் நேரங்கடத்த வரலை இங்கே.”

அண்ணனின் கண்ஜாடைக்கு ஏற்ப அதனை வாங்கி பரிசோதித்த ரூபென், பிரகாசமாய் ஆமோதித்தார்.

''ஆல் ரைட்... பேசலாம்'' என்ற கார்வால்ட், ''யாருக்காக நீங்க வேலை செஞ்சுக்கிட்டிருக்கீங்க?'' என்றார்.

''எனக்காக.''

இதை தான் நம்பவில்லை என்பதை கண்களில் காட்டி விட்டார் கார்வால்ட். ''இப்படிப்பட்ட இக்கட்டுக்குள் நுழைய நிச்சயமாக உங்களுக்கு பக்கபலம் இருக்கணும்.''

''நான் எனக்கு என்னென்ன வேணும்னு பட்டியலிட்டாச்சு. உங்களால உதவ முடியாதுன்னா நான் வெளியே எங்காவது ட்ரை பண்ணிக்கறேன்.''

ரூபென் கோபப்பட்டார். ''யாருய்யா நீ?'' என்றார். ''இஷ்டத்துக்கு இங்கே உள்ளே நுழைஞ்சுடலாம். ஆனா வெளியேறுவது அத்தனை சுலபம் கிடையாது.''

''அப்படியா?'' என்றார் டெவ்லின் ஆழமாய். அவர் முகம் வெளிறியது. ரூபெனைப் பார்க்க அவர் திரும்பியபோது, அக்கண்கள் எங்கோ தொலைதூரத்தில் ஈவிரக்கமின்றி குத்திட்டிருந்தன.

தனது ஐந்து பவுண்ட் நோட்டுக்கட்டில் ஒரு கையை கொண்டு போன அவர், இடக்கையை தன்னுடைய துப்பாக்கி இருந்த பாக்கெட்டில் வைத்துக் கொண்டார். ''முதல்ல பிசினஸ்'' என்றார். ''ராணுவ கேன்கள்ல முதல்ல எனக்கு ஐம்பது கேலன் பெட்ரோல் குடுங்க. விலையா, கேட்டதை தரேன்.''

''நிச்சயமா'' என்றார் கார்வால்ட். நிலைமை சுமூகமானது. ''எங்கே வாங்கிக்கறீங்க? ப்ரிமிங்ஹாம்லியா? வேறெங்காவதா?''

''பீட்டர்ஸ்பெர்க் அருகில் எங்காவது'' என்றார் டெவ்லின்.

''ஓ கே... நார்மன் க்ராஸ் தெரியும்ல? பீட்டர்ஸ் பெர்க்கிலிருந்து ஐந்து மைல்கள். அங்கேயொரு கேரேஜ் இருக்கு. ஃபர்கெட்ரீ அதன் பேர். தற்சமயம் அது மூடப்பட்டிருக்கு.''

''தெரியல. ஆனா நான் பார்த்துக்கிறேன்.''

''எப்ப வேணும் உங்களுக்கு?''

''28 வியாழக்கிழமை மற்றும் 29 வெள்ளிக்கிழமை. ஜீப்பை ரெண்டாவது நாள் எடுத்துக்கறேன். மீதியெல்லாத்தையும் முதல் நாள் எடுத்துக்கறேன்.''

''ஆல் ரைட். எந்த நேரத்துல?''

''இருட்டிவிட்ட பிறகு. ஒன்பதிலிருந்து - ஒன்பதரைக்குள்னு வெச்சுக்கலாம்.''

''பணம்?''

''இந்த ஐநூறை வரவுல வெச்சுக்கங்க. ட்ரக் இத்யாதிகளை எடுத்துக்கும்போது 750. இதே தொகை, ஜீப் எடுத்துக்கும்போதும். எல்லாத்துக்கும் டெலிவரி லைசென்ஸ் வேணும் எனக்கு.''

''ம்.''

''கிளம்பறேன் அப்ப.''

நனைந்திருந்த மழை கோட்டினை எடுத்துக் கொண்டு பட்டன் போட்டுக் கொண்டார்.

ரூபென் முன்கதவை திறந்து வழிகாட்ட, டெவ்லின் பின்தொடர்ந்தார். ஆனால் வெளியேறுமுன் திரும்பினார். ''இன்னொரு சமாச்சாரம், கார்வால்ட்.''

''என்னது அது?''

''நான் என் வார்த்தையை மீறவே மாட்டேன்.''

''கேட்க இனிமையா இருக்கு.''

''நீங்களும் அப்படியே நடந்துக்கப் பாருங்க.''

இப்போது கார்வால்ட் சிரிக்கவில்லை. அம்முகம் சட்டென்று வெளிறும்முன் டெவ்லின் வெளியேறியிருந்தார்.

மோட்டாரை எடுத்துக் கொண்டு டெவ்லின் சிறிது தூரம் போனபோது, ''என்னாச்சு உனக்கு பென்?'' என்ற தம்பியின் குரலை கேட்டார் அவர். ''ஒரு எலி அவன். வந்து என்னவெல்லாமோ பேசிட்டுப் போறான். நீ பெப்பெப்பேனு நிக்கறே.''

''அவன் எதையோ பிடிச்சுக்கிட்டிருக்கான், ரூபென்'' என்றார் பென். ''எதுவோ, செமத்தியா லாபம் தரவல்ல ஒண்ணு.''

''அதுக்கு எதுக்கு ராணுவ வாகனங்கள்?''

''இதுக்கு நிறைய சாத்தியக்கூறுகள் சொல்லலாம். எதுவாக வேணும்னாலும் இருக்கலாம். யாரோவொருத்தன்... ராணுவ லாரியை படைகள் இருக்கும் இடத்துக்குள்ளே ஓட்டிட்டுப் போய் முப்பதாயிரம் பவுண்டுகளை சுருட்டிக்கிட்டு நழுவியிருக்கான். சேதி வந்திருக்கு.''

''அப்படிப்பட்ட ஒருத்தனா இவன் இருக்கலாம்னு நீ நினைக்கிறியா?''

''அதெப்படியோ'' என்ற கார்வால்ட் ''நான் இதை விடப்போவதில்ல'' என்றார். ''கவனிச்சியா - அவன் என்னை மிரட்டி சவால் விடறான் ரூபென். என்னை! என்னால் இதை அனுமதிக்க முடியாது.''

★ ★ ★

**கொ**ய்னிக் E-படகினை தாழ்வான கடற்கரை பகுதிக்குள் செலுத்திக்கொண்டிருந்தார். அது பகல் நேரந்தான், இருந்தாலும் விளக்குள் போடப்பட்டிருந்தன. இடிமேகங்கள் வானில் சூழ ஆரம்பித்திருந்தது. இதற்கொரு

காரணம், குண்டான கருமேகங்கள் விண்ணெங்கும் அடைத்திருந்தன.

வரைபடத்தின்மீது கண் பதித்திருந்த முல்லர், "கடும்புயல்" என்று அறிக்கை சொன்னார்.

ஜன்னல் வழியாய் வெளியே பார்த்த கொய்னிக், "இன்னும் கால் மணிநேரம் ஆகும், அது ஆரம்பிக்க. அதற்குள் போயிடலாம்."

தொடர்ச்சியாய் அடித்த கடும்காற்றால் சிறு மணற்குன்றுகள் சமதளங்களாகியிருந்தன. தூரத்துப் பிரதேசங்கள் கருமையான பின்னணியில் தெரிந்தன. மழை மேகங்களின் ஆதிக்கம். காற்று "பளிச்பளிச்"சென்று அடிக்க, வேகத்தை குறைத்தார் அவர். "படகை உள்ளே செலுத்திடு, எரிச்."

முல்லர் அதன் சக்கரத்தை இயக்கலானார். தள்ளிப் போய் நின்று கொண்ட கொய்னிக்கின் மனம் கிலேசமடைந்திருந்தது. சிகரெட் ஒன்றை பற்ற வைத்துக் கொண்டார். கடற்பிரயாணம் சுகமாயில்லை. இவர் சேர்ந்து பணியாற்ற வேண்டிய குழுவினர் பற்றிய கவலை வேறு பிரதானமாய் அமைந்தது. ஒரு கடற்பிரயாணத்தில் முக்கியமானது இதுதான். படகு ஓரமாய் ஒதுங்க இடம்தேடிக் கொண்டிருந்தபோது மேடான பகுதியில் கார் ஒன்று விரைந்து வந்து நின்றது. அதில் ஸ்டைனரும், ரிட்டர் நியூமேனும். இறங்கிய இருவரும், கடலின் நுனி வரை நடந்து வந்து நின்றார்கள்.

"ஹலோ கொய்னிக்... ஆக ஜெயிச்சுட்டீங்க" என்று அழைத்தார் ஸ்டைனர் உற்சாகமாய். "லேண்ட்ஓர்த் பகுதிக்கு அன்புடன் வரவேற்கிறோம்."

பாதிதூரத்துக்கு ஏணியில் ஏறியிருந்த கொய்னிக் ஆச்சரியத்தில் அப்படியே அடுத்த அடியை தவற விட்டு

தொப்பென்று கடல்நீரில் விழுந்து விட்டார். ''நீங்களா ஸார்... ஆனா, ஆனா...'' பிறகு பலமாய் சிரித்துக் கொண்டார். ''நான் யார்கூட சேர்ந்து இங்கே பணியாற்ற வேண்டுமோனு கவலையிலிருந்தேன். ஆனா... ஆனா...''

தட்டுத்தடுமாறி ஏணியை பிடித்தவர் பிறகு ஸ்டைனரின் கையை பிடித்துக் கொண்டு ஏறினார்.

★ ★ ★

டெவ்லின் மீண்டும் கிராமத்துக்கு வந்தபோது மணி நாலரை ஆகியிருந்தது. பாலத்தைக் கடந்தபோது ஆர்கான் இசைக்கருவிகளின் மெல்லிய ஓசை அவர் காதுகளுக்கு விழுந்தது. சர்ச், மின்னொளியில் இருந்தது. இருட்டி விட்டால் முடியாது என்பதற்காக மாலை பிரார்த்தனைகள் பகலிலேயே நிகழ்வதாக ஜோன்னா க்ரே சொல்லியிருக்கிறார். குன்றின்மீது ஏறும்போது கடைசியாய் மோலி ப்ரியர் சொன்னது டெவ்லினுக்கு நினைவு வந்தது. வாசலில் குதிரை வண்டி நின்றது. அவள் அங்கு இருந்தாள். டெவ்லினுக்கு தெரிந்ததுதான் இது. இரண்டு கார்கள், ஒரு ட்ரக் மற்றும் பல சைக்கிள்களும் இருந்தன.

கதவினை திறந்துக்கொண்டு டெவ்லின் உள்ளே நுழைந்தபோது ஃபாதர் வெரேக்கர் மையப்பாதையில் நடந்து சென்று கொண்டிருந்தார். அவருடன் வெள்ளை ஆடை அணிந்திருந்த மூன்று இளைய வாலிபர்களும் போனார்கள். ஒருவன் ஒரு வாளி நிரம்ப புனித நீர் சுமந்திருந்தான். நின்று கொண்டிருந்தோரின் தலைகளில் அந்நீரை தெளித்து அவர்களை கழுவி புனிதப்படுத்தியவாறு போனார் பாதிரி. நீள பெஞ்ச் ஒன்றில் இடத்தை பிடித்தார் டெவ்லின்.

அங்கு மொத்தமாய் பதினெட்டு பேர் போலத்தான் இருந்தார்கள். சர் ஹென்றி இருந்தார். அவரருகில் இருந்தது

அவருடைய மனைவியாய் இருக்க வேண்டும். அவர்களுக்கருகில் கருமையாய், இருபது வயது மதிக்கத்தக்க யுவதியொருத்தி, பெண் விமானப்படையினரின் உடையணிந்து அமர்ந்திருந்தாள். அது பமீலா வெரேக்கராய்தான் இருக்க வேண்டும். தனது மனைவியுடன் ஜார்ஜ் ஒயில்ட் அங்கிருந்தார். சுத்தமான வெள்ளை சட்டை மற்றும் பாரம்பரிய கறுப்பு கோட் அணிந்துக்கொண்டு லேக்கர் ஆர்ம்ஸ்பீயும் அவர்களுடன் உட்கார்ந்திருந்தார்.

கனிவான தோற்றத்துடன் அன்பாய் இருந்த ஒரு நடுத்தரப் பெண்மணியுடன் - அவள் அம்மாவாக இருக்க வேண்டும் - மோலி உட்கார்ந்திருந்தாள். அங்கிருந்தவர்களில் இவளுடைய உடைதான் அழகுற மடித்து அணியப்பட்டிருந்தது.

சட்டென திரும்பும்போது டெவ்லினைப் பார்த்து விட்டாள் அவள். சிரிக்கவில்லை. நொடிப்பொழுது வெறுமனே அவரை பார்த்தாள். பிறகு திரும்பிக் கொண்டு விட்டாள்.

பிரார்த்தனை துவங்கியதும் அவள் முட்டிபோட்டுக் கொண்டு உட்கார்ந்தாள். அனைவரும்கூட அப்படியே செய்தார்கள். அப்போது அவள் அணிந்திருந்த ஸ்கர்ட் பாவாடை கிட்டத்தட்ட ஆறங்குல உயரம் அளவுக்கு மேலேறிப் போனது. இதற்கு கமுக்கமாய் சிரிக்கும்படி ஆனது டெவ்லினுக்கு. ஆனால் உடனேயே அவர் அடக்கிக்கொண்டாலும் வெறிபிடித்த ஆர்தூரின் கண்கள் ஒரு தூணுக்கு மறைவிலிருந்து இவரை கவனிப்பதை கவனிக்க இவர் தவறவில்லை.

பிரார்த்தனைக் கூட்டம் முடிந்ததும் வெளியேறியவர்களில் முதல் ஆளாய் டெவ்லின்தான் இருந்தார். மோட்டார்

பைக்கில் ஏறி அவர் கிளம்பியிருக்க வேண்டும்... ''மிஸ்டர் டெவ்லின், ஒரு நிமிஷம்'' என்ற அவளுடைய குரலால் நின்றார். குடையை விரித்துப் பிடித்தபடி வேகமாய் அவரை நெருங்கினாள். சில தூரம் தள்ளி அவளுடைய தாயார் வந்து கொண்டிருந்தார். ''இப்படி அவசரப்பட்டுக்கிட்டு நீங்க ஓட அப்படி என்ன இருக்கு? என்னை கேவலமா உணர்றீங்களா?''

''சீ. நான் இங்கே வந்ததுல அத்தனை சந்தோஷப் படறேன்.''

இதற்கு அவள் வெட்கப்பட்டாளா... இல்லையா... என்று சொல்ல முடியவில்லை. வெளிச்சம் போதாது. என்னவாகயிருந்தாலும், அக்கணத்தில் அவளுடைய தாயார் வந்து சேர்ந்திருந்தார். ''இது என் அம்மா'' என்றாள் மோலி. ''இது மிஸ்டர் டெவ்லின்மா.''

''உங்களை பற்றிய விபரம் எல்லாம் எனக்கு தெரியும்'' என்றார் மிஸஸ் ப்ரையர். ''எங்களால் ஏதாவது ஆகணும்னா, ஜஸ்ட் இப்பவே நீங்க கேட்கலாம். ஒரு ஆம்பிளை தனியா எல்லாத்தையும் கவனிச்சுக்கிட்டு இருப்பது ரொம்ப கஷ்டம்.''

''நீங்க எங்ககூடவே வீட்டுக்கு வந்து டீ குடிப்பீங்கன்னு எதிர்பார்த்தோம்'' - மோலி குறிப்பிட்டாள்.

இவர்களுக்கு பின்னால், கேட்டின் அருகே, கனன்று கொண்டு ஆர்தூர் நிற்பதை டெவ்லின் பார்த்தார். ''உங்களுக்கு ரொம்ப நன்றி. ஆனா நான் இப்ப வரும்நிலை இல்ல.''

அவரை தொட்ட மிஸஸ் ப்ரையர், ''கடவுள் உங்களை ஆசீர்வதிக்கட்டும்'' என்றார். ''நனைஞ்சிருக்கீங்க தம்பி. உடனே போய் துடைச்சுக்கிட்டு வெந்நீரில் ஒரு முழுக்குப் போடுங்க.''

''அம்மா சொல்வதுதான் சரி'' என்றாள் ஆர்வமாய் மோலி. ''கிளம்புங்க. அவங்க சொன்னதை செஞ்சிடுங்க. இல்லேனா காய்ச்சல் வந்துடும்.''

டெவ்லின் கிளம்பினார். ''இப்படிப்பட்ட பெண் படையிலிருந்து, ஓ கடவுளே... என்னைக் காப்பாற்று'' - பிரார்த்தனை செய்து கொண்டார் அவர்.

★ ★ ★

**இ**யலாத ஒரு பெருங்காரியமானது, குளியல். தண்ணீரை வெந்நீராக்குவது அத்தனை சுலபமாய் அமையவில்லை. இது, கணப்பில் நீரை சூடாக்குவதில் போய் முடிந்தது. உடை களைந்து குளித்துவிட்டு, கடல்நீல நிற சட்டை மற்றும் பேண்ட்டை அணிந்துக் கொண்டார் டெவ்லின்.

பசி எடுத்தது. ஆனால் அது தணிய வேறொன்றும் பண்ண முடியவில்லை. ஆகவே கார்வால்ட் கையோடு கொடுத்தனுப்பியிருந்த பாட்டிலைத் திறந்து அதிலிருந்து ஒரு கோப்பை மதுரஸம் நிரப்பிக் குடித்தார்.

ஒருமணிநேரம் அப்படியே கிடந்தார். பிறகுதான் குளிர்ந்த கொத்துக்காற்று அவருடைய பிடரியில் விழுந்தது. விழிப்பு தட்டியது. கதவு திறந்த ஓசையே டெவ்லின் கேட்டிருக்கவில்லை... ஆனால் அவள் வந்திருந்தாள்.. இது நடக்கும் என்பதும் டெவ்லினுக்கு தெரியும்.

''எது உன்னை இழுத்து வந்தது?'' - தலையை தூக்காமலே கேட்டார்.

''புத்திசாலி. ஒன்றரை மைல் தூரத்தை மழையிலும் இருளிலும் கடந்து வந்திருக்கேன். உங்களுக்கு சாப்பாடு தர.''

அவள் கணப்பு பக்கமாய் நகர்ந்துப் போனாள். ரெயின் கோட்டும், வெலிங்டன் பூட்ஸும் அணிந்திருந்தாள்.

பெரிய ஸ்கார்ஃப் சுற்றியிருந்த அவளது ஒரு கையில் கூடையொன்றிருந்தது. "கொஞ்சம் மாமிசம். உருளைக் கிழங்கு பொரியல். சாப்பிட்டாச்சோ?"

அவர் முனகினார். "எத்தனை சீக்கிரம் முடியுமோ அதற்குள் சூடாக்கிடு."

கூடையை கீழே வைத்துவிட்டு மழை கோட்டினை அவிழ்த்து வைத்தாள். உள்ளே பூக்கள் நிறைய போட்டிருந்த உடையொன்றினை அவள் அணிந்திருந்தாள். ஸ்கார்ஃப்பை இழுத்து அவிழ்த்த அவள், தலையை அசைத்து தனது கூந்தலை காற்றில் அலசிக்கொண்டாள். "நீங்க என்ன படிச்சுக்கிட்டிருக்கீங்க?"

அவர் புத்தகத்தை அவளிடமே தந்தார். "கவிதைகள்." "கண்பார்வையற்ற ஐரீஷ் கவிஞன் எழுதியவை. ரொம்ப காலத்துக்கு முன்னால் வாழ்ந்தவர்."

கணப்பு வெளிச்சத்தில் தாள்களுக்குள் கண்களை மேய விட்டாள் அவள். "ம்ம், என்னால விளங்கிக்க முடியல" என்றாள். "வேற்றுமொழியில இருக்கு."

"ஐரீஷ்" என்றார் அவர். "மகாராஜாக்களின் தர்பார் மொழி." அவளிடமிருந்து புத்தகத்தைப் பெற்றுக்கொண்டு படித்தார். பிறகு அர்த்தம் சொன்னார்:

*இதோ, இப்போது, இலையுதிர் பனிக்காலத்தில், நேரம் நீளுகின்றது...*

*என் படகும் மேற்கொண்டு போய்க் கொண்டிருக்கும்...*

*என் பிரயாணம் என்னவென்பது உறுதியாகி விட்டால், அதில் என் காலடிகள் ஆழமாய் சக்தியுடன் பதியும்...*

*மறுபடியும் நான் மேயோ பிரதேசத்தில் போய் நிற்கும்வரை...*

''பியூட்டிஃபுல்'' என்றாள் அவள், சொல்லப்பட்ட அர்த்தத்திற்கு. ''உண்மையிலேயே அழகு வரிகள்.'' அவரருகிலிருந்த பெட்டில் அப்படியே உட்கார்ந்தாள். நாற்காலியிலிருந்த டெல்வினைத் தனது இடக்கை தழுவுமாறு அவரோடு சாய்ந்துகொண்டு உட்கார்ந்தாள் அவள். ''அந்த இடத்திலிருந்துதான் - அதாவது மேயோ - அங்கிருந்துதான் நீங்க வரீங்களா?''

''இல்லை'' என்றார் அவர். தனது குரலை சற்று பிரயத்தனப்பட்டு சீராய் வைக்கவேண்டியிருந்தது டெவ்லினுக்கு. ''வடக்குக் கோடியிலிருந்து.''

டெவ்லின் பெயரின் முதல் பகுதியை சொன்னாள் அவள். ''லியான்'' என்றாள். ''இதுவும் ஐரீஷா?''

''யெஸ், மேடம்.''

''என்ன அர்த்தம் இதுக்கு?''

''வில்லியம்.''

அவள் முகஞ்சுளித்தாள். ''ம்ம். எனக்கு லியான்தான் பிடிக்குது. வில்லியம், சாதாரணமாபடுது அதனால.''

தனது புத்தகத்தை இடக்கையில் இறுக்கிய டெவ்லின் வலக்கையை அவளுடைய பின்பக்கத்துக் கூந்தலில் பதித்தார். ''ஜீஸஸ், ஜோஸப் மற்றும் மேரி - எனக்கு சகாயம் செய்க.''

''எதுக்கு இப்பப் பிரார்த்தனை?'' - வெகுளியாய் கேட்டாள் அவள்.

''பெண்ணே... உடனடியாய் ஒவன்ல இருப்பவற்றை தட்டுக்கு மாற்றலைனா, அதுக்கு நான் பொறுப்பாக முடியாதுனு அர்த்தம்!''

அவள் கலகலவென்று சிரித்து விட்டாள். முன்னுக்கு வளைந்து விழுந்து அடித்தொண்டையிலிருந்து சிரித்த அவள்,

*''உங்களை எனக்கு ரொம்ப பிடிக்குது'' என்றாள். ''உங்களுக்கு ஒண்ணு தெரியுமா, டெவ்லின் சார்? முதன்முதலாய் நீங்க பைக்ல உட்கார்ந்திருந்த நிலைல உங்களை நான் பார்த்ததிலிருந்து, உங்களை எனக்கு ரொம்பவும் பிடிக்கும்.''*

*அவர் புன்னகைத்தார். எழுந்த அவள் தனது பாவாடையை சரி செய்தபடி ஓவனுக்குப் போனாள். அதிலிருந்த பதார்த்தத்தை எடுத்து வந்தாள்.*

★ ★ ★

**வ***யல்களின் வழியாக அவர்கள் நடக்க ஆரம்பித்தபோது மழை விட்டிருந்தது. மேகங்கள் நீரைக் கொட்டிவிட்டதால் கலைந்து போயிருந்தன. வானம் முழுக்க நட்சத்திரங்கள் கூடி டாலடித்தன. காற்று மட்டும் பலமாகவே இருந்தது. அது மரங்களின் மீது மோதியாடி அவ்வப்போது இவர்கள் மீது சுள்ளிகளை ஒடித்துப் போட்டது. டெவ்லின் தன்கூடவே சிறிய துப்பாக்கியையும் எடுத்து வந்திருந்தார். மோலி அவருடைய இடக்கையில் தொங்கியபடியே நடந்தாள்.*

*சாப்பாட்டுக்கு பிறகு இருவரும் அதிகம் பேசிக்கொள்ள வில்லை. தனக்காக அதிகம் கவிதைகள் படிக்க சொல்லியிருந்தாள் அவள். அப்போது அவர் மீது சாய்ந்துக்கொண்டே அவற்றை ரசித்தாள். கொஞ்சமும் கற்பனை பண்ணியிராத அளவுக்கு நிலைமை மோசமாகிக் கொண்டு போவதை டெல்வினால் உணர முடியாமலில்லை. இதெல்லாம் இவருடைய திட்டங்களில் கிடையாது. மூன்று வாரங்கள்தான் இவருக்கு உள்ளது. அவ்வளவுதான். அவ்வளவேதான். அதற்குள் செய்ய வேண்டிய காரியங்கள் ஏராளம் ஏராளம். மனம் தடுமாற அவகாசங்கள் கிடையாது.*

பண்ணைவீட்டருகே வந்ததும் கேட்டருகே இருவரும் தாமதித்தார்கள்.

''புதன்கிழமை மத்தியானம் நீங்க இருப்பீங்களா? வேலை ஒண்ணுமில்லைனா வாங்களேன். சில கனமான மெஷின்களை இடம் மாற்ற வேண்டியிருக்கு. என்னாலும் அம்மாவாலும் மட்டும் இயலாது. கனமானவை. அப்படியே ராத்திரி டின்னரும் எங்ககூட நீங்க எடுத்துக்கலாம்.''

இதற்கு சுலபமாய் முடியாது என்று சாக்கு ஒன்றை முன்வைத்து பேச்சினை முடித்திருக்கலாம். ஆனால் ''அதனாலென்ன?'' என்றார் டெவ்லின்.

அவருடைய கழுத்தைச் சுற்றி தனது கையை மாலையாக்கிய அவள், டெவ்லினின் முகத்தை தன்பக்கமாய் இழுத்துக் கொண்டாள். வெறியாய், அன்புபொங்க, அனுபவமற்ற அவசரம் தலைதூக்குமாறு அவரை முத்தமிட்டாள் மோலி. அது அவரை உள்வரை நகர்த்தியது. முகர முகர இன்பம் பயக்கும் ஒருவித லாவண்டர் திரவியம் பூசியிருந்தாள் அவள். அவளால் அதிகம் முடிந்தது அதுதான். தனது வாழ்க்கையின் இதர நாட்கள் முழுமைக்கும் அதனை அவர் நினைவில் வைத்துக்கொண்டே இருப்பார்.

டெவ்லின் மீது அவள் சாய்ந்து கொண்டபோது அவளுடைய காதுகளுக்கு மட்டும் அவர் சொன்னார்: ''நீ பதினேழு. நான், மிகவும் கடந்த முப்பத்தைந்து. இதை நினைத்து பார்த்தியா?''

கண்கள் மூடி அவரை நிமிர்ந்து பார்த்தாள் அவள். அதே நிலையிலேயே சொன்னாள்: ''நீங்க ஒரு லவ்லீ.'' மீண்டும் சொன்னாள்: ''ரொம்ப லவ்லீ.''

அவர் அவளை மீண்டும் முத்தமிட்டார். மிக மிருதுவாக. இதழ்களில். ''உள்ளே போ!''

எவ்வித எதிர்ப்பும் காட்டிக்கொள்ளாமல் மெதுவாய் உள்ளே போனாள் அவள். எங்கோ வீட்டின் பின்னால்

நாயொன்று குரைத்தது. கதவொன்று அடித்துக் கொண்டது. திரும்பிய டெவ்லின், பைக்கில் கிளம்பினார்.

மழை மீண்டும் சூழ்ந்தது. இடக்கையை கண்களுக்கு குடையாக்கி பிடித்துக்கொண்டு பைக்கை ஓட்டிச் சென்றார். அப்போது திடுமென்று ஓர் உருவம் முளைத்து பாதையில் வந்து நின்றது. தெரிந்த சிறு ஒளியில் இடைமறித்து நிற்பது ஆர்தூர் என்பதை உணர்ந்தார் டெவ்லின்.

''நான் உன்கிட்டே ஏற்கெனவே சொல்லியிருக்கேன்'' என்றான் அவன். ''எச்சரித்தேன். ஆனா நீ கவனிப்பதா தெரியல. இப்ப நீ அதுக்கான பாடத்தை கற்றுக்கணும்.''

அந்நொடியில் தன்னிடமிருந்த துப்பாக்கியை வெளியிலெடுத்து விட்டார் டெவ்லின். அதில் குண்டு போடப்படவில்லை. ஆனால் பாதகமில்லை. அதை அப்படியே ஸேமோரின் தாடையில் ஓங்கி ஒரு குத்தாய் இறக்கினார். ''நீ என்கிட்டே பாடம் கத்துக்க.''

அடியிலிருந்து தப்பித்தான் அவன். ''உன்னை அப்புறம் கவனிச்சுக்கிறேன்'' என்றான். ''அந்த சிறுக்கியையும் பார்த்துக்கிறேன். ரெண்டு பேரும் தொலைஞ்சீங்க.''

இருளுக்குள் ஓடிவிட்டான் அவன். தனது காட்டேஜுக்குப் போனார் டெவ்லின். மழையின் ஆதிக்கம் கூடியது. தனக்கு விடப்பட்ட மிரட்டலைப் பற்றி இவர் கவலைப்படவேயில்லை. மோலியை நினைத்தார்... வயிற்றடியில் பரபரப்பு பிராண்டியது.

''கடவுளே'' என்றார் மிருதுவாய். ''அவளுக்கு ஏதாவது அவன் பண்ணினால், அந்த நாய்மகனை நான் கொன்னுடுவேன். யெஸ், நான் கொல்வேன்.''



# 9

**M**K IIS என்பது ஒரு ரக துப்பாக்கி. ஸ்பெஷலாய் வடிவமைக்கப்பட்டது. இதில் இருக்கும் சைலன்சர் ஓர் அதிசயம். துப்பாக்கியை சொடுக்கும் ஓசையைத் தவிர, குண்டு வெடித்தலால் உருவாகும் ஓசை துளியும் வெளியேறாதபடி பார்த்துக்கொள்ளும் தொழில்நுட்பம் கொண்டது.

லேண்ட்ஓர்த் பகுதியின் காலைப்பொழுது. புதன்கிழமை அக்டோபர் 20. மணற்குன்றிலுள்ள குண்டுப் பலகை நோக்கி குறி வைத்தபடி ஸெர்ஜெண்ட் ஷைட் கையில் பிடித்திருந்த துப்பாக்கி, சிறந்த ரகமாகும். சுடவேண்டிய இலக்குகள் தொலைவில் பலகையில் வரிசையாகயிருந்தன. அவை ஒவ்வொன்றாய் சரியாய் சுடுவதை பார்ப்பதே அலாதியான ஓர் அனுபவம். தனது சிறு குழுவுடன் ஷைட்டை சுற்றிலும் ஸ்டைனர் நின்றிருந்தார். அவர்கள் அனைவரும் ஷைட்டின் குறிதப்பாது சுடும் திறனை வியந்து கொண்டிருந்தார்கள்.

முடிந்ததும் துப்பாக்கியை ஸ்டைனரிடம் ஷைட் தந்தபோது ‘‘எக்ஸலெண்ட்’’ என்றார் ஸ்டைனர். அத்துப்பாக்கியை நியூமேனிடம் தந்தபோது “அய்யய்யோ...” என்றலறி விட்டார் அவர்.

''முன்பக்கத்தை தொடாதீங்க'' என்றார் ஷைட். ''சுட்டவுடன் ஸைலன்ஸர் விறுவிறுனு சூடாகிடும். ஜாக்கிரதை.''

ஆயுதக்கிடங்கில் பணியாற்றிய அனுபவம் ஷைட்டுக்கு செழுமையாய் உண்டு. பல துப்பாக்கிகள் மற்றும் உபகரணங்களை அவர் கீழே கொட்டி விளக்கினார். அவர் மேற்கொண்டு துப்பாக்கிகள் பற்றி விவரித்துக் கொண்டிருக்கும்போது, ஸ்டைனரின் தோளில் கைபதித்தார் நியூமேன். கர்னல் திரும்பிய திசையில் ஸ்டார்க் கார் வந்திருந்தது.

''ஒரு நிமிஷம், ஸெர்ஜெண்ட்'' என்றார் ஸ்டைனர். ''கவனிங்க எல்லாரும். இந்த நிமிடத்திலிருந்து ஷைட் என்ன சொல்றாரோ அதுதான் சட்டம். பயிற்சியைப் பொறுத்தமட்டில். விளங்குதா? இன்னும் சில வாரங்கள் உங்க கைகளில் இருக்கு. கவனமா கத்துக்கங்க. அதன் முடிவில், இங்கிருக்கும் அனைத்தையும் நீங்க மூடிய கண்களுடன் சரியா பொருத்தி காட்டணும். அந்த அளவுக்கு பயின்றிருக்கணும். இவருக்கு என்ன உதவிகள் தேவையோ, அனைத்தையும் நீங்க தரீங்க.''

ப்ராண்டிட் விறைப்பானார். ''யெஸ், சார்.''

''குட்.'' ஒவ்வொருவராய் பார்த்தார் ஸ்டைனர். அனைவருக்கும் ஒரு சல்யூட் வைத்துவிட்டு ஓரமாய் நிறுத்தப்பட்டிருந்த காரை நோக்கி போனார் ஸ்டைனர். பின்னாலேயே நியூமேன். பின்னால் அவர் ஏறிக்கொள்ள, நியூமேன் காரைக் கிளப்பினார்.

பிரயாணத்தின் முடிவில் அது அழகாய் வேகம் குறைத்து நின்றது. விமானங்கள் வந்து செல்ல இருந்த ஒரு பிரதேசம் அது. நாலைந்து அதிகாரிகள் ஒரு ட்ரக்கில் இவர்களிடம்

வந்தார்கள். ரேடில் வருவதற்காக, ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்துக்கொண்டு காத்திருக்கலானார் ஸ்டைனர்.

நியூமேன் சொன்னார்: ''அவர்கூட யாரோ ஒருத்தர் இருக்கார்.''

நிமிர்ந்தார் ஸ்டைனர். அவர் முகம் சுருங்கியது. உற்சாகமான புன்னகையுடன் இவரை நோக்கி ரேடில் வந்தார். இரு கைகளையும் அணைக்கும்படி நீட்டிக் கொண்டு வந்த அவர், ''எல்லாம் எப்படிப் போகுது?'' என்றார்.

ஆனால் அவருடன் உயரமாகவும், வாளிப்பாகவும் வந்த ஆடவனின் மீதே ஸ்டைனரின் கவனம் இருந்தது. போலீஸ் தொப்பி அணிந்திருந்தார் அவர். ''யாரிது மேக்ஸ்?''

தேவையான அறிமுகத்தை செய்தபோது ரேடிலின் சிறு சிரிப்பும்கூட ஒத்து வராமல் அமைந்தது. ''கர்னல் கர்ட் ஸ்டைனர் - இவர், பிரிட்டிஷ் இலவசப் படையின், ஹார்வே ப்ரஸ்டன்.''

★ ★ ★

**ப**ண்ணைவீட்டின் பழைய வரவேற்பறையை, இனி நடக்கவுள்ள நடவடிக்கைகளின் மையப்பகுதியாய் ஆக்கியிருந்தார் ஸ்டைனர். அவருக்கும் நியூமேனுக்கும் என்று ஒருசில கட்டில்கள் மூலையில் போடப்பட்டிருந்தன. மையத்தில் ஒரு டேபிள். அதில் ஹாப்ஸ் எண்ட் மற்றும் ஸ்டட்லே கான்ஸ்டபிள் ஆகிய பகுதிகளின் வரைபடங்கள் பரத்தப்பட்டிருந்தன. அங்கு, அப்பகுதியின் முப்பரிமாண மாடல் ஒன்றும் பாதி முடிந்த நிலையில் வைக்கப்பட்டிருந்தது. ஒரு கையில் பிராந்தி கோப்பையுடன் அதனை நோக்கி ஆர்வமாய் குனிந்தார் ரேடில். டேபிளின் மறுபக்கத்தில் நியூமேன் நின்று கொண்டிருந்தார். ட்ரெயின் போல புகையை கக்கிக்கொண்டு மேலும்கீழுமாய் நடந்து கொண்டிருந்தார் ஸ்டைனர்.

''அற்புதமாயிருக்கு இந்த மாடல்'' என்றார் ரேடில். ''இதை யார் செஞ்சுக்கிட்டிருப்பது?''

''ப்ரைவேட் க்ளக்ள். போருக்கு முன்னால சிறந்த கலைஞரா இருந்திருக்கணும் அவர்.''

ஸ்டைனர் பொறுமையிழந்து திரும்பினார். ''கையிலிருக்கும் பிரச்சினையை தவிர்த்து வேற எதையும் நாம பேச வேணாம், மேக்ஸ். இதை நான் ஒப்புக் கொள்ளணும்னு எதிர்பார்க்கிறீங்களா - நீங்க கொண்டு வந்திருப்பதை?!''

''கடவுளே. இது தலைவரின் ஐடியா'' என்றார் ரேடில் மிருதுவாய். ''இதுபோன்ற மேட்டர்களில் நான் ஐடியாக்களைக் கொடுப்பது கிடையாது. அவற்றை வாங்கிப்பேன்.''

''அவருக்கு பைத்தியம் பிடிச்சிருக்கணும்.''

ரேடில் ஒப்புதலாய் தலையசைத்து விட்டு கொஞ்சம் தள்ளிப்போய்விட்டார். ''இதையே நாம அடிக்கடி சொல்லியிருக்கோம்னு நினைக்கிறேன்!''

''கவனிங்க'' என்றார் ஸ்டைனர். ''ப்ராக்டிகலா இதை அணுகணும். நாம போட்டிருக்கும் திட்டம் ஜெயிக்கணும்னா, செய்யும் தொழிலில் முழுக்கவும் ஒழுக்கம் கடைப்பிடிக்கும் ஆட்கள்தான் நமக்கு பக்கபலமா வேணும். ஒரே சிந்தனையுடன், ஒரே செயலுடன், ஒரே நினைப்புடன், ஒருமுகப்படுத்தப்பட்டு இயங்கும் ஆட்கள் அத்தியாவசியம். இங்கிருக்கும் என்னுடைய ஆட்கள் அத்தனை பேருமே நரகம் வரை அப்படிப்பட்ட ஒரே குறிக்கோளுடன் போய் திரும்பியவர்கள். எதுவும் அவர்களுடைய கொள்கையை மாற்றாது. லெனின்க்ராட், ஸ்டாலின்க்ராட் இப்படி பல இடங்களில் நானே அவர்களுடன் இருந்திருக்கேன். மேக்ஸ்... என் கட்டளையை எதிர்பார்க்காமல் நான் எப்படி

இயங்கியிருப்பேனோ..? அதேபோல அவர்களே இயங்கி வெற்றி பெற்றுத்தந்த காலகட்டங்களெல்லாம் இருந்திருக்கு. அப்படிப்பட்ட அனுபவம் பெற்றவர்கள் அவர்கள்.''

''இதை நான் எவ்வித மறுப்புமின்றி முழுசா ஏத்துக்கறேன்.''

''அப்படியிருக்கும்போது, வெளியிலிருந்து வந்த ஒருத்தனுடன், அதுவும் ப்ரஸ்டன் போன்ற ஒருத்தனுடன், இவங்க சேர்ந்து இயங்கணும்னு நீங்க எப்படி எதிர்பார்க்கலாம்?'' - ரேடில் கொடுத்திருந்த கோப்பை எடுத்து அதை உலுக்கிக்காட்டினார். ''கிரிமினல். சின்ன வயசிலிருந்து நல்லவன்னே நடிச்சுக்கிட்டு வந்திருக்கான்.'' வெறுப்பில் அந்த கோப்பை தூக்கி எறிந்தார். ''வீரன்னா என்னனு விளக்கம் தெரியுமா அவனுக்கு?''

''இதுல நமக்கு இப்ப தேவைப்படும் அனுபவத்தை வைத்து பேசினால்...'' என்று எடுத்துக்கொடுத்த நியூமேன் சொன்னார்: ''அவர் ஒரு முறைகூட ஏரோப்ளேனிலிருந்து குதிச்சது கிடையாது.''

ரேடில் ஒரு சிகரெட்டை எடுத்து பொருத்திக் கொள்ள அதற்கு வத்தி வைத்தார் நியூமேன். ''இந்த விஷயத்துல நீங்க உங்க உணர்ச்சிகளை வீணாக்கிறீங்களோனு தோணுது, ஸார்.''

''ஆல் ரைட்'' என்றார் ஸ்டைனர். ''கவனிங்க மேக்ஸ். குதிக்கிறதுனா என்னன்னு தெரியுமா உங்களுக்கு? கட்டிலிலிருந்து இல்லை - விமானத்திலிருந்து. அந்த பயிற்சி எப்படிப்பட்டதுனாவது உங்களுக்கு தெரியுமா?'' கேட்டுவிட்டு நியூமேன் பக்கமாய் திரும்பினார் அவர். ''நீங்க சொல்லுங்க, ரீட்டர்.''

''பாராசூட்டிலிருந்து ஆறுமுறை குதிச்சிருக்கணும். அப்பத்தான் அங்கீகரிக்கப்பட்ட பேட்ஜ் உண்டு. அதை

தக்கவைத்துக்கொள்ள வருஷாவருஷம் ஆறுமுறை குதிக்கணும்'' என்றார் நியூமேன். ''இது அனைவருக்கும் பொருந்தும். ஆபீஸரிலிருந்து ட்ரெயினீ வரை.''

''ஸோ?'' என்று கேட்டார் ரேடில்.

''இதுக்கு தரையிலேயே ரெண்டு மாசம் பயிற்சி எடுப்பீங்க. அப்புறம் முதல் ஜம்ப் அறுநூறு அடி உயரத்திலிருந்து. இதுக்கப்புறம் பலவித ஒளி சூழல்களில் குதியல் நடக்கும். காரிருள் உட்பட. பிறகு, கடைசி ஃபைனல். போர்முனை போல லோடுகளுடன் நானூறு அடி உயரத்திலிருந்து.''

''அப்பாடி'' என்றார் ரேடில். ''இதுக்கெல்லாம் மாறாக இருக்கு ப்ரஸ்டனின் நிலைமை. கவனிச்சீங்களா இதை? அவர் ராத்திரிதான் குதிக்கணும். போரெல்லாம் கிடையாது. தனிமை பகுதியில தனியா குதிக்கணும் - அவ்வளவே. இறங்க வேண்டிய இலக்கிலும் குழப்பம் கிடையாது. எங்கே இறங்கணும் என்பது துல்லியமா வரையறுக்கப்பட்டாச்சு. ஆகவே இந்த ஒரேயொரு பிரச்சினைக்கு அவரை பழக்கி விடுவதில் அப்படி பெரிய கஷ்டங்கள் இருப்பதாக... எனக்கு படவில்லை.''

இதற்கு பதில் சொல்ல முடியாதவராய் ஸ்டைனர் பக்கம் திரும்பினார் நியூமேன். ''இதுக்கு நான் என்னத்தைச் சொல்ல?''

''நத்திங்'' என்றார் ரேடில். ''எதுவும் சொல்ல வேணாம். அவரே இருக்கட்டும். அவரே இருப்பார் - ஏனென்றால் ஹிம்லர் விரும்பறார்.''

''கடவுளே'' என்றலறினார் ஸ்டைனர். ''இது நடக்காது. மேக்ஸ், உங்களுக்கே இது அசாத்தியம்னு தெரியலியா?''

''நான் பெர்லினுக்கு காலைல கிளம்பறேன்'' என்று பதிலளித்தார் ரேடில். ''இப்படித்தான் நீங்க முடிவா

உணர்றீங்கன்னா பேசாம என்கூடவே நீங்களும் வந்து அவரிடம் நீங்களே சொல்லிடுங்க. என்ன?''

ஸ்டைனரின் முகம் வெளிறியது. ''பாழாப்போச்சு மேக்ஸ். இதை என்னால பண்ண முடியாதுனு உங்களுக்கு தெரியும். ஏன்னு காரணமும் தெரியும்.'' ஒரு கணம் மேற்கொண்டு பேசுவதில் அவருக்கு தடங்கல் வந்ததைப் போல இருந்தது. ''என் தகப்பனார் - அவர் நல்லா இருக்காரா? நீங்க பார்த்தீங்களா?''

''நோ'' என்றார் ரேடில். ''ஆனா உங்க அப்பா பற்றிய உத்திரவாதம் நிச்சயம் உண்டுனு மட்டும் உங்ககிட்டே என்னை அவர் சொல்லச் சொன்னார்.''

''அதுக்கு என்னய்யா அர்த்தம்?'' என்றலறினார் ஸ்டைனர். ''கவனிச்சுக்கங்க. நான் என் மனசார பர்ஸனலா போற்றும் சர்ச்சிலை நம்மால களவாட முடியும்னா, இன்னொரு பாராசூட் படையை நேரா கொண்டு போய் டிர்பிட்ஸ் உஃபர் தலைமையகத்துல இறக்கி அந்த சாணிப்பயலையும் சரியா எடுத்துடலாம்.'' நியூமேன் பக்கமாய் திரும்பிய அவர் கேட்டார்: ''நீங்க என்ன நினைக்கிறீங்க ரீட்டர்?''

''அப்ப நீங்க அவரை எடுத்துக்கறீங்களா?'' - ஆர்வமாய் கேட்டார் ரேடில். ''ப்ரஸ்டனை சொல்றேன்.''

''ஓ. எடுத்துக்கறேன்'' என்றார் ஸ்டைனர். ''போங்க நியூமேன். போய் அவனை உள்ளே கூட்டிட்டு வாங்க. இங்கே என்ன நடந்துக்கிட்டு இருக்குனு கொஞ்சமாவது அவன் தலைல போடறேன்.'' அவர் வெளியேறியதும் ரேடில் பக்கம் திரும்ப கருவினார்: ''எல்லாம் முடியட்டும். அவனையும் முடிக்கிறேன்.''

★ ★ ★

**ஹா**ர்வே ப்ரஸ்டன் யங் பிரிட்டிஷ் ஆபிஸராக ஒருமுறை நடித்திருக்கிறார். "பிரயாணத்தின் முடிவு" என்பது போர்க்காலத்தை மையமாய் கொண்ட அந்நாடகத்தின் தலைப்பு. வீரமான, போரைக் கண்டு அஞ்சாத, வெறி மிகுந்த இளைஞன் பாத்திரம். வெளுத்து வாங்கினார். மரணிக்கும்போது முகத்தில் புன்சிரிப்போடு இறக்கும் பாத்திரம். எல்லாம் முடிந்து, மேடை விளக்குகள் அணைத்து, திரையிறங்கியதுதான் தாமதம்... வேகமாய் ஒப்பனை அறைக்குப் போய் ரத்தத்துக்காக பூசப்பட்ட சாயங்களை விரைவாய் கழுவி விடலாம்.

ஆனால் இப்போது அப்படி செய்ய முடியாது. இது நிஜம். முகத்தில் ஆபத்தாய் அறையும் நிதர்சனம். நினைத்தவுடனேயே பயத்தால் குன்றிப் போனார் அவர். ஜெர்மனி போரில் ஜெயிக்காது என்பதால் உண்டான நிலைகுலைவு கிடையாது இது. ஜெயிக்கும் என்பதில் மிகுந்த நம்பிக்கை உண்டு அவருக்கு. ஆனால் அந்த வெற்றிகரமான திருவிழா நாளைக் காண தான் உயிருடன் இருக்க வேண்டும் என்ற ஆதங்கப் பயமிது!

தோட்டத்தில் குளிர் அதிகமாயிருந்தது. மேலும் கீழுமாய் விரைந்தபடியிருந்தார். சிகரெட் புகைத்துக் கொண்டு பண்ணை வீட்டில் ஏதாவது அரவம் தென்படக்கூடாதா என்று ஏக்கமாய் பார்த்தார். அவரது நரம்புகள் திருகிப் போயிருந்தன. அப்போது ஸ்டைனர் ஜன்னலில் தோன்றினார். "ப்ரஸ்டன்!" என்றழைத்தார். "உள்ளே வாங்க."

மறுவார்த்தைக்கு வழி தராமல் போனார். உள்ளே நுழைந்ததும் வரைபட டேபிளை சுற்றிலும் ரேடில், நியூமேன் மற்றும் ஸ்டைனர் ஆகியோர் நின்று கொண்டிருப்பதை அவர் பார்த்தார்.

''சார்'' என்று ஆரம்பித்தார்.

''ஷட் அப்!'' என்றார் ஸ்டைனர் நேரடியாய். ரேடில் பக்கமாய் திரும்பி சைகை காட்டினார். ''அவருக்கான கட்டளைகளை தந்துடுங்க.''

ரேடில் அலுவலகரீதியில் சொன்னார்: ''திரு ஹார்வே ப்ரஸ்டன்... இந்தக் கணத்திலிருந்து பாராசூட் படையின் கர்னல் திரு ஸ்டைனரின் கட்டுப்பாட்டில் நீங்க முழுக்கவும் வந்தாச்சு என்பதை அறிந்துக் கொள்ளவும். இது, தலைவர் ஹிம்லரின் நேரடி கட்டளையின் பேரில் அமலாகின்றது. உங்களுக்கு விளங்குதா?''

ப்ரஸ்டனைப் பொறுத்தமட்டில் 'உனக்கு மரணதண்டனை தீர்ப்பாகின்றது... விளங்குதா?' என்று ரேடில் சொல்லியிருந்தால்கூட இப்போதுபடும் வேதனையை அனுபவித்திருக்க நேர்ந்திராது. ஸ்டைனர் பக்கமாய் அவர் திரும்பி பேசத் திணறியபோது அவருடைய முன்நெற்றி முழுவதும் வியர்வை பூத்திருந்தது. ''ஆனா சார்... இதுக்கு முன்னால நான் பாராசூட்டிலிருந்து குதிச்சது கிடையாது'' என்றார் பரிதாபமாய்.

''உங்களுக்குள்ள அடிப்படை குறைபாடு'' - ஸ்டைனர் கண்டிப்பாய் பேசினார். ''ஆனா அதையெல்லாம் நாங்க ஈடுகட்டிடுவோம்.''

''இதுக்கு நான் ஒப்புக்க முடியாது'' என்று ஆரம்பித்த ப்ரஸ்டனை ரம்பம் கொண்டு அறுப்பது போல் அறுத்தெறிந்தார் ஸ்டைனர்.

''வாயை முதல்ல மூடிட்டு உங்க ரெண்டு கால்களையும் சேர்த்து வெச்சு ராணுவ மரியாதையை கடைபிடிங்க. ம், ஆகட்டும். இனிமே நீங்க பேசக் கேட்டுக் கொள்ளப் பட்டால் மட்டும் பேசுங்க. இல்லேனா ஒரு வார்த்தை வெளியே வரக்கூடாது.'' தற்போது அட்டென்ஷனில்

நின்றுகொண்டிருந்த ப்ரஸ்டனை ஒருமுறை சுற்றி நடந்தார் ஸ்டைனர். "நீங்க ஒரு கூடுதல் சுமை. எங்களுக்கு. இப்ப நிலைமை இதுதான். ஓ. கே.? ஒரு ஆரம்பநிலை வீரன்கூட கிடையாது நீங்க. இந்நிலைமையை மாற்ற முடியுமானு முதல்ல நாங்க பார்க்கணும். அப்படித்தானே?" இவர் கேட்ட கேள்விக்கு ஒரு பதில்கூட வராமல் எங்கும் அமைதி நிலவியது. "அப்படித்தானே?"

ப்ரஸ்டன் பரபரவென்று பதில் சொல்லி விட்டார்: "ஆமாம்."

"குட். ஸோ, நீங்க எப்படிப்பட்ட ஒரு ராணுவ வீரன்னு நாம ரெண்டு பேருமே விளங்கிப் புரிந்து கொண்டோம்." அவருக்கு முன்னால் நடந்து போய் மறுபடியும் நின்றார் ஸ்டைனர். "இந்த நொடியில, என்ன காரணத்துக்காக இப்படிப்பட்ட ஒரு ஏற்பாடு இந்த லேண்ட்வொர்த் பகுதியில் நடந்துக்கிட்டிருக்குனு இங்கே இருக்கிற நாலு பேருக்கு மட்டுந்தான் தெரியும். வேற ஒருத்தருக்கு இது தெரிய வந்ததுனா, அது முன்ஜாக்கிரதையற்ற உங்களுடைய நடவடிக்கையாலதான் இருக்கும்னு உடனடியா எனக்கு விளங்கிடும். சுட்டுப் பொசுக்கிடுவேன், ஆமாம்."

"சரி, ஸார்."

"ரேங்க் பொறுத்தவரைக்கும், எந்த மண்ணும் உங்களுக்கு இப்ப கிடையாது. பாராசூட் குதியலுக்குத் தேவையான முழு உபகரணங்களும் உங்களுக்கு தரப்படும். ஆக பயிற்சியில் இருக்கும் ஏனைய அனைவருக்கும் மற்றும் உங்களுக்கும் எவ்வித வேறுபாடும் காட்டப்பட மாட்டாது என்பதை நீங்க தெரிஞ்சுக்கணும். இருந்தாலும் உங்க கேஸ்ல மேலும் சில வேலைகள் பண்ண வேண்டியிருக்கு. அதுக்கு அப்புறம் வருவோம். ம், வேற ஏதாவது கேள்விகள்?"

ப்ரஸ்டனின் கண்கள் எரிந்தன. மூச்சுகூட அவரால் இழுக்க முடியவில்லை. அவருடைய கிலி அத்தனை வீரியமானது. ரேடில் மிருதுவாய் சொன்னார்: “உங்களுக்கு திருப்தி இல்லேனா நீங்க என்கூட பெர்லின் திரும்பிடலாம்... நிலைமையை ஹிம்லரிடம் நேரடியாகவே நீங்க எடுத்து சொல்லிடலாம்.”

உடனேயே இறுக்கலான குரலில், “வேற கேள்விகள் இல்ல” என்று சொல்லி விட்டார் அவர்.

“குட்” என்ற ஸ்டைனர் நியூமேன் பக்கம் திரும்பினார். “இவரை வெளியே தள்ளிட்டுப் போங்க. ப்ராண்டிட் கிட்டே ஒப்படைச்சுடுங்க. இவருடைய பயிற்சி அட்டவணை பற்றி உங்ககிட்டே நான் பிறகு பேசறேன்.” ப்ரஸ்டன் பக்கமாய் திரும்பினார். “ஆல் ரைட். நீங்க போகலாம்.”

சல்யூட் வைத்தார் ப்ரஸ்டன். திரும்பினார். தட்டுத் தடுமாறி நடந்து வெளியேறினார். ரிட்டர் நியூமேன் அவருக்கு பின்னால் சென்றார்.

கதவு சாத்தப்பட்டதும், “இதுக்கப்புறம் எனக்கு குடிக்க வேணும்” என்றார் ஸ்டைனர். உஷ்ஷ்ஷ் என்று பெருமூச் செறிந்தவர் வேகமாய் போய் மதுவை கோப்பையில் ஊற்றி எடுத்துக் கொண்டார்.

“இதெல்லாம் வேலைக்கு ஆகுமா, ஸார்?” என்றார் ரேடில்.

“எவனுக்கு தெரியும்?” - ஸ்டைனர் நரித்தனமாய் சிரித்தார். “லக் இருந்தால் ஒரு கால் உடைவதுடன் அவர் பயிற்சி முடியும்.” கையிலிருந்த பிராந்தியில் கொஞ்சம் குடித்தார். “இதை விடுங்க. முக்கியமான விஷயங்களுக்குப் போவோம். டெவ்லின் இப்ப என்ன பண்ணிக்கிட்டிருக்கார்? ஏதாவது சேதி?”

★ ★ ★

ஹாரப்ஸ் எண்ட்டிலிருந்த அவளுடைய சிறு படுக்கையறையில், டெவ்லின் டின்னருக்கு வரும்போது தான் அழகாய் எடுப்பாய் தெரியவேண்டும் என்பதற்கான முயற்சிகளில் இருந்தாள் மோலி. அவர் எப்போது வேண்டுமானாலும் வந்து விடலாம் என்கிற தருணம். சட்டென்று உடையனைத்தையும் களைந்துவிட்டு வெறும் ப்ரா மற்றும் கீழ்க்கச்சையுடன் மட்டும் கண்ணாடிக்கு முன்னால் நின்று தன்னை தீவிரமாய் பரிசோதித்துப் பார்த்தாள் அவள். கீழ்க்கச்சை சுத்தமாயும் சரியாகவும் இருந்தது. ஆனால் நிறைய தையல்கள். ப்ச், பரவாயில்லை. எல்லோருக்கும் இப்படித்தான் இருக்கும். அங்கிருக்கும் சிறுதுணி கிடையாது ரசிக்கப்படுவது... அதற்குள்ளிருப்பது தான்! அதில் பாதகங்கள் கிடையாது. நல்ல விறைப்பான மார்பகங்கள், வட்ட இடுப்பு, தாங்கும் தொடைகள்.

அவளது தொப்பையில் கைவைத்து, அப்படித் தொடுவது டெவ்லின் என எண்ணிப் பார்த்தாள் அவள். உள்ளே ரஸம் ஊறியது. கால்வரை நீளும் இரண்டு ஸாக்ஸுகளை எடுத்து அவள் அணிந்து கொண்டாள். பிறகு காட்டன் உடைகளை புனைந்தாள்.

அப்போது வாசலில் ஒரு கார் வந்து நிற்கும் ஓசை கேட்டது. ஜன்னலின் வழியே துளைத்தெடுத்து பார்த்தாள். ஒரு முதியவர் காரை ஓட்டி வருவது தெரிந்தது. அது, ஃபாதர் வெரேக்கர். மோலி மிருதுவாய் சபித்தாள். உடைகளை சரிசெய்துக் கொண்டு, இரண்டங்குல உயரம் கொண்ட காலணியை அணிந்து கொண்டாள்.

படியிறங்கி வரும்போது சீப்பு ஒன்றை கொடுத்து கூந்தலின் இழைகளை சுருட்டி விட்டுக் கொண்டேயிருந்தாள். வெரேக்கர் அடுக்களையில் அவளது தாயாருடன் இருந்தார். மோலி நுழைந்ததும் அவளை முறுவல் செய்து ஏற்றார். “ஹலோ மோலி... எப்படியிருக்கே?”

''நிறைய வேலைகள், ஃபாதர்'' - தன் முழு உடலைச் சுற்றி ஓர் அழகு மேலங்கியை இறுக்கிக்கொண்டு தன் தாயாரிடம் கேட்டாள்: ''இறைச்சியும், சாம்பாரும் தயார் தானேம்மா? அவர் எப்ப வேணும்னாலும் இங்கே வரலாம்.''

''ஓ, யாருக்காகவோ காத்திருப்பது போல தெரியுது'' என்றபடி, தனது ஊன்றுகோலை ஊன்றிக்கொண்டு எழுந்தார் பாதிரியார். ''நான் வேற நடுவுல நுழைஞ்சுட்டேன்.''

''அப்படியெல்லாம் ஒண்ணும் கிடையாது, ஃபாதர்'' என்றார் மிஸஸ் ப்ரியர். ''ஹாப்ஸ் எண்ட்டின் புது காவலர் மிஸ்டர் டெவ்லின்தான். எங்ககூட மதியம் முழுக்க உதவினார். இப்ப ராத்திரி டின்னருக்கு வரார். ஏதாவது ஸ்பெஷல் விஷயமா, ஃபாதர்?''

வெரேக்கர், மோலியைப் பார்ப்பதற்காகத் திரும்பினார். பார்வையில் நிராகரிப்பு தெரிந்தது. அவளுடைய உடை, காலணிகள் ஆகியன அவர் முகத்தில் சுளிப்பினை ஏற்படுத்தின. மோலி கோபமாய் வெடித்தாள். தனது இடக்கையை இடுப்பில் பதித்துக் கொண்டு அவரை ஏறிட்டாள். ''என்னைப் பார்க்கவா வந்தீங்க, ஃபாதர்?'' என்றாள் அவள் நேராய்.

''இல்ல. நான் பார்க்க வந்தது ஆர்தூரை. ஆர்தூர் ஸேமோர். செவ்வாய் புதன் கிழமைகளில் அவர் உனக்கு இங்கே ஒத்தாசையா இருக்கார், இல்ல?''

அவர் பேசுவது பொய் என்று உடனடியாய் அவளுக்கு விளங்கி விட்டது. ''ஆர்தூர் ஸேமோர் இங்கே வேலை செய்வது கிடையாது, ஃபாதர். உங்களுக்கு இது தெரியும்னு நான் நினைச்சிருந்தேன். அவரை நான் துரத்திட்டேன்னு அவர் உங்ககிட்டே சொல்லலியா என்ன?''

வெரேக்கர் வெளிறினார். இதை அவர் ஏற்றுக்கொள்ள விரும்பவில்லை. ஆயினும் இதில் அவளிடம் பொய்

சொல்லவும் விரும்பவில்லை. மாறாக, "ஏன் அப்படி செஞ்சே, மோலி?" என்றார்.

"ஏன்னா அவரை நான் இந்தப் பக்கத்துல மேற்கொண்டு பார்க்க விரும்பல."

விசாரிக்கும் தொனியில் அவர் மிஸஸ் ப்ரியர் பக்கமாய் திரும்பினார். அசௌகரியமாய் உணர்ந்த அவர் தோள்களை குலுக்கி காட்டினார். "அவர் ஒரு நல்ல கம்பெனி கிடையாது."

அவர் மோலியிடம் சொன்னார்: "அவரை வேணும்னே துரத்திட்டதா வெளியில பேசிக்கிறாங்க. வெளியாள் ஒருத்தரை அனுமதிப்பதற்காக செய்திருக்கக்கூடாது... விலக்கினதுக்கு சரியான காரணம் இருக்கணும்னு சொல்றாங்க. வந்து வந்து வேலை செஞ்சு தன் காலத்தை போக்கிய ஒரு மனுஷன், திடீர்னு எங்கே போவான் மோலி?"

"மனுஷன்" என்றாள் அவள். "அவர் ஒரு மனுஷனா, ஃபாதர்? அப்படி நான் ஒருமுறைகூட உணரல. உங்களிடம் சொன்னவங்ககிட்டே போய் அவர் எப்பவும் என் பாவாடையை தூக்கி என் சதையைத்தான் உணர துடிச்சுக்கிட்டிருந்தார்னு சொல்லுங்க." இப்போது வெரேக்கரின் முகம் முழுவதும் வெளிறிப்போனது. ஆனால் அவள் கலக்கமில்லாமல் தொடர்ந்து பேசிக் கொண்டிருந்தாள்: "கிராமம் என்ன வேணும்னாலும் பேசும். பேசட்டும். ஆனா நீங்க அவரை சரியாக்க முயற்சிக்கலியே."

"மோலி!" - அவளுடைய தாயார் மூச்சடைக்க கத்தினார்.

"என்னம்மா?" என்றாள் அவள். "ஒரு பாதிரியாரை, உண்மைகளை எடுத்து சொல்லி மடக்கக்கூடாதுனு

சொல்வே நீ. அப்படித்தானே?'' வெரேக்கரை இப்போது திரும்பி அவள் பார்த்தபோது தன் கட்டுக்குள் அடங்கியிருந்தாள். ''அவர் எப்படிப்பட்டவர்னு உங்களுக்கு தெரியாதுனு மட்டும் ப்ளீஸ் சொல்லாதீங்க ஃபாதர். அவர் உங்களுடைய ஞாயிறு பிரார்த்தனைக் கூட்டங்களை தவற விடுவதே இல்லை. அதனால அவரை நீங்க போர்த்திப் பேசித்தானே தீரணும்...''

கோபத்தில் கனன்ற அவருடைய கண்களிலிருந்து தன்னை விலக்கிக் கொண்டாள் அவள், வாசற்கதவில் கொட்டுகள் விழுந்தன. கதவு நோக்கி அவள் விரைந்தபோது இடுப்புப்பகுதி உடையை தடவி சீர்செய்தபடி போனாள். ஆனால் கதவை திறந்தபோது அங்கு வந்திருந்தது - லேக்கர் ஆரம்ஸ்பீ. வாயில் சிகரெட்டை வைத்து உருட்டிக் கொண்டிருந்தான் அவன். அவன் கொண்டு வந்திருந்த ட்ராக்டர் வாசலில் இருந்தது. அதில் கொண்டு வந்திருந்த வெங்காயங்களைக் காட்டி ''இதையெல்லாம் எங்கே கொட்ட, மோலி?'' என்றான்.

''நீ முட்டாள் லேக்கர். இதுவா நேரம்? கிடங்குல போய்க் கொட்டு. வா கட்டறேன். இல்லேனா நீ தப்பா எங்கேயாவது கொண்டு போய் கொட்டி வைப்பே.''

களிமண்ணில் அவளுடைய அழகிய ஷூக்கள் அழுக்காவதை தவிர்க்க முடியாமல் கிடங்கு நோக்கி நடக்கலானாள் அவள். பின்னால் லேக்கர் தொடர்ந்தான். ''சூப்பரா டிரஸ் பண்ணியிருக்கியே, மோலி. என்ன விசேஷம் இன்னிக்கு?''

''உன் வேலையை பார் லேக்கர்'' என்றாள் அவள். ''ம், இந்த கதவை திற.''

கைப்பிடியைப் பிடித்து கனமான இரண்டு கிடங்குக் கதவுகளில் ஒன்றான அதனை திறந்தார். மறுகதவின்

பின்னால் ஆர்தூர் நின்றிருந்தான். வெறிகொண்ட அவனுடைய கண்களை மறைக்குமாறு தொப்பியை இழுத்து விட்டுக் கொண்டிருந்தான். பழைய மேல் கோட், அவனுடைய திரண்ட தோள்களைக் கவ்விப்பிடித்து திண்ணென்று காட்டின.

''என்ன ஆர்தூர் இங்கே?'' என்றான் லேக்கர்.

கேட்டவனை அப்படியே ஒருபக்கமாய் தள்ளி விட்டுவிட்டு மோலியின் வலக்கையைப் பிடித்திழுத்தான் அவன். ''உள்ளே வாடீ நீ'' என்றான். ''உன்கிட்டே நான் ரெண்டொரு வார்த்தை பேசணும்.''

லேக்கர் அவனுடைய கையை பிடித்திழுத்து தடுத்தான். ''கவனி ஆர்தூர்'' என்றான். ''இப்படி நடந்துக்க வழி விடமாட்டேன்.''

முஷ்டியால் ஒரே குத்தாய் லேக்கரின் முகத்தை தாக்கினான் ஆர்தூர். வெட்டப்பட்ட கால்வாயில் பீறிடும் நீராய் உடனே ரத்தம் அவனுடைய மூக்கிலிருந்து கொட்டியது. ''போ நீ!'' என்றபடி லேக்கரை அப்படியே அங்கிருந்த சகதியில் தள்ளி விட்டான்.

மோலி வேகமாய் துள்ளினாள். ''என்னை விடு!''

''ஓ, நோ'' என்றான் அவன். தனக்கு பின்னால் கதவினைத் தள்ளி அதனை தாளிட்டான். ''இனி முடியாது மோலி.'' அவளுடைய கூந்தலை தன்னிடக்கையால் பிடித்தான். ''நல்லா பொண்ணா இங்கே நடந்துக்க. காயப்படுத்த மாட்டேன். அந்த ஐரீஷ் நாய்மகனுக்கு நீ தந்ததை எனக்கு தர இத்தனை காலம் நீ எடுத்துக்கக் கூடாது!''

அவனுடைய மறுகை விரல்கள் அவள் அணிந்திருந்த பாவாடையின் கீழ் நுனிக்கு சென்றன.

''சீ நாத்தம்புடிச்சவனே!'' என்றலறினாள் அவள். குனிந்த அவள் அவனுடைய மணிக்கட்டினை மிக ஆழமாய் கடித்தாள். வலியால் துடித்த அவன் கைப்பிடியை தளர்த்தினான்... ஆனாலும் மறுகையால் ஓட முயன்றவளை பிடித்தான். அவள் துணி கிழிந்தது. சேந்திக்காக சாய்த்து வைக்கப்பட்டிருந்த ஏணி நோக்கி ஓடினாள் அவள்.

★ ★ ★

**ஹா**ப்ஸ் எண்ட் நோக்கி வந்து கொண்டிருந்த டெவ்லின், கிடங்கு நோக்கி லேக்கரும் மோலியும் சென்று கொண்டிருப்பதைச் சரியாய் கவனித்து விட்டார். கவனித்த சில கணங்களிலேயே களிமண் குட்டையில் லேக்கர் மல்லாக்க விழுவதும், பெருங்கதவு ஓசையுடன் சாத்தப்படுவதும் நடந்தன. இதையும் கவனித்துவிட்ட டெவ்லின் கையிலிருந்த சிகரெட்டை சுண்டி எறிந்துவிட்டு குன்றுகளின் மேல் மளமளவென்று ஓட ஆரம்பித்தார்.

எல்லைக்குள் அவர் நுழைந்தபோது ஃபாதர் வெரேக்கரும் மிஸஸ் ப்ரியரும் கிடங்குக்கு வந்திருந்தார்கள். பாதிரி, கையிலிருந்த தடியால் அக்கதவை தட்டிக் கொண்டிருந்தார். ''ஆர்தூர்'' என்று அவர் கத்தினார். ''கதவை திற. இந்த முட்டாள்தனத்தை உடனே நிறுத்து.''

இதற்கு மோலியிடமிருந்து வந்த அலறல் மட்டுமே பதிலானது.

''என்ன நடக்குது இங்கே?'' - காட்டமானார் டெவ்லின்.

''ஆர்தூரால'' என்றார் லேக்கர், மூக்கு ரத்தத்தைக் கைக்குட்டையால் கட்டுப்படுத்தியபடி. ''மோலியை உள்ளே இழுத்துக்கிட்டுப் போயிருக்கான். கதவை உள்பக்கமா தாழ்ப்பாள் போட்டுட்டான்.''

டெவ்லின் தோள்பலம் கொண்டு கதவினை தள்ளினார். உடனேயே இது உதவாது என்பதை உணர்ந்து கொண்டார். உள்ளே மோலியின் அலறல் அதிகரித்துக் கொண்டிருப்பதை கேட்டபடி செய்வதறியாது தன்னை சுற்றிலும் ஒருமுறை பார்த்தார். லேக்கர் விட்ட இடத்திலிருந்த டிராக்டரின் மீது அவருடைய கண்கள் சென்றன. அதனிடத்துக்கு நொடிப் பொழுதில் பாய்ந்திருந்தார் அவர். அதன் உயர் இருக்கைக்கு ஒரே தாவலில் போய்ச் சேர்ந்தார். அணைக்காமலிருந்த அதன் இன்ஜினுடைய கியரை உயர உசுப்பினார். டிராக்டர் சீறிப்பாய்ந்து முன்னேறியபோது அதற்கு வழிவிட்டு ஃபாதரும் மிஸஸ் ப்ரியரும், லேக்கரும் மிகச்சரியாய் விலகிக் கொண்டார்கள். நேராய் ஓடி கதவுகளில் மோதியது டிராக்டர். அவை இரண்டாய் பிளந்து வழிவிட்டன. நிற்பதற்கில்லாமல் டிராக்டர் உள்நோக்கி சீறியது.

அதனை டெவ்லின் நிறுத்தினார். மோலி சேந்திக்குள் போயிருந்தாள். அங்கு தானும் போக ஏதுவாய் சரிந்து விழுந்திருந்த ஏணியை தூக்கி வைத்துக் கொண்டிருந்தான் ஆர்தூர். என்ஜினை டெவ்லின் நிறுத்தினார். அவரை திரும்பி பார்த்தான் ஆர்தூர். அந்நியத்தனமான வெறிப்பார்வை.

ஃபாதர் சொன்னார்: ''கவனி ஆர்தூர்... நான் உன்கிட்டே சொல்லியிருக்கேன்...''

ஆனால் அவர் வார்த்தைகள், ''உன்னை கொல்லாம விடமாட்டேன்'' என்று பாய்ந்த டெல்வினின் கோபத்துக்கு முன்னால் அடையாளம் இழந்தன.

இருவருக்குள்ளும் போர் மூண்டது. முஷ்டிகள் தாக்கிக் கொண்டன. கீழே உருண்டு புரண்டு எழும்படி சில கட்டங்கள் அமைந்தன.

பல குத்துகளாலும் அடிகளாலும் ஒருநிலையில் கீழே சரிந்த் ஆர்தூரை அப்படியே அருகிலிருந்த சிறு மழைநீர்

குட்டையில் முக்கினார் டெவ்லின். மூச்சுக்காற்றுக்கு திண்டாடினான் அவன். ''மை காட்... டெவ்லின் முதல்ல அவனை விடுங்க. கொன்னுடுவீங்க போலிருக்கே...'' என தவித்தார் பாதிரி.

''அதுதான் நடக்கல'' என்றார் டெவ்லின். ''துரதிர்ஷ்டம்.''

தன்னை ஸ்திரப்படுத்திக்கொள்ள முனகிக்கொண்டே ஆர்தூர் எழுந்தபோது ஒவ்வொரு கையிலும் ஒரு துப்பாக்கியுடன் அங்கு வந்திருந்தார் மிஸஸ் ப்ரியர். ''அவனை முதல்ல இங்கிருந்து போகச்சொல்லுங்க'' என்றார் வெரேக்கரிடம். ''அவன்கிட்டே சொல்லி வைங்க. என் பொண்ணைத் தேடிக்கிட்டு அவன் மறுபடியும் இந்தப் பக்கம் வந்தான்னா ஒரு நாயை சுடற மாதிரி அவனை நான் சுட்டுப் பொசுக்கிடுவேன்.''

ஃபாதரும் லேக்கரும் தள்ளாடிய ஆர்தூரரைச் சுமந்துக் கொண்டு நகர்ந்தார்கள்.

சட்டென்று தலையை சுற்றியது டெவ்லினுக்கு. கீழே பூமி நகர்வதைப் போல உணர்ந்தார். மோலியின் பலமான தோள்கள் ஒரு பக்கமும் அவளுடைய அம்மாவின் ஆதரவான கைகள் மறுபக்கமும் தன்னை தாங்குவதை உணர்ந்தார் அவர்.

அடுக்களை தரையில், கணப்புக்கு அருகில் சாய்ந்தார் டெவ்லின். மோலியின் மார்பில் தலைவைத்திருந்தார். ''எனக்கொண்ணும் இல்ல'' என்றார். ''நான் கிளம்பறேன்.''

முகத்தில் படபடப்புடன் அவரை குனிந்து பார்த்தாள் மோலி. ''ஒரு குத்து விட்டானே அவன் உங்க மண்டையில்... காட்! அதுல உங்க மண்டையோடு உடைஞ்சிருக்குமோனு நான் பதறிட்டேன்.''

''கொஞ்சம் ஓய்வெடுக்கட்டும், விடு மோலி'' என்றபடி வந்தார் மிஸஸ் ப்ரியர். ''உணவு தயாராயிருக்கு. அப்புறம் சாப்பிடலாம்.''

''தேங்க் யூ, மேம்'' என்றார் அவர்.

★ ★ ★

ஹாப்ஸ் எண்ட்டுக்கு டெவ்லின் திரும்பியபோது நெடுநேரம் ஆகியிருந்தது. மழை அதிகம் பெய்ததால் அப்பகுதியில் சேறும், சகதியும் அதிகமாகியிருந்தன. அடிவானத்தில் இருப்பின்றி இருமிக்கொண்டிருந்தது இடியோசை. உள்ளே நுழையும்போது கவனித்தார் - அங்கிருந்த ஒதுக்குப்புறத்தில் ஜோன்னா க்ரேயின் கார் நிறுத்தப்பட்டிருந்தது. அங்கு, கடலைப் பார்த்தபடி அவரே நின்று கொண்டிருந்தார். டெவ்லின் அவரை நெருங்கிய போது நிமிர்ந்து பார்த்தார். ஆர்தூர் விட்ட அபாயமான குத்தினால் அவருடைய முன்நெற்றி நன்கு வீங்கிப் போயிருந்ததை கவனித்தார் மிஸஸ் க்ரே.

''பைத்தியக்காரத்தனம்'' என்றார். ''நீங்க என்ன தற்கொலை பண்ணிக்கப் பார்க்கிறீங்களா?''

டெவ்லின் இறுகினார். ''நீங்க அந்த மிருகச் செயலை பார்த்திருக்கணும்...''

''எல்லாம் தெரியும்.'' சொன்னவர் மறுப்பாய் தலையை அசைத்துக் காட்டினார். ''இதையெல்லாம் நிறுத்திடணும், லியாம்.''

அவர் சிகரெட்டை பற்ற வைத்தார். தீக்குச்சி அணையாமல் கையில் கனன்றது. ''எதை?''

''மோலி ப்ரியர். அதுக்காக நீங்க இங்கே இல்லை. நீங்க பண்ண வேண்டிய வேலைகள் இருக்கு.''

‘‘அதெல்லாம் இல்ல’’ என்றார். ‘‘நான் கார்வால்ட்டைச் சந்திக்கும் வரை எந்த வேலையும் எனக்கு இல்லை.’’

‘‘முட்டாள்தனமா அலையாதீங்க. உலகத்துல நடக்காதது ஒண்ணும் இங்கே நடந்துடலை. உங்களுக்கே இது தெரியும். அந்த புது அறிமுகங்களை தூக்கியெறிங்க. உங்களை கவனிங்க. ஆர்தூருக்கு நீங்க செய்திருப்பதை அந்தக் கூட்டம் விரும்பாது.’’

‘‘அவன் மோலிக்கு பண்ணினதை நான் விரும்பல’’ - ஆச்சரியப்பட்டு சொன்னார் டெவ்லின். ‘‘இன்னிக்கு மத்தியானம் லேக்கர் இந்த ஆர்தூர் பயலைப் பற்றி சொன்னவற்றில் பாதி நிஜமாயிருந்தாலும், அவன் கம்பிகளுக்குப் பின்னால் வருஷக்கணக்கா இருக்கணும். யெஸ். காமத் தாக்குதல்கள். பற்பல. தவிர, குறுகிய காலத்துல இங்கே ரெண்டு பேரை தாக்கியிருக்கானாம்.’’

‘‘ப்ச்... இதுபோன்ற இடங்களில் போலீசை யாரும் பயன்படுத்துவதில்லை. அவங்களே கவனிச்சுடுவாங்க.’’ பொறுமையற்றுப் போனார் மிஸஸ் க்ரே. ‘‘ஆனா இதெல்லாம் நமக்கு எவ்வகையிலும் உதவப் போவது கிடையாது. நாம உலக மக்களை சுலபமா மாற்றிட முடியாது. அதனால புத்திசாலித்தனமா நடந்துக்கங்க. மோலியைத் தனியா விட்டுடுங்க.’’

‘‘இது கட்டளையா, மேம்?’’

‘‘ஒரு இடியட் மாதிரி நடந்துக்காதீங்க. நான் உங்களுக்கு வேண்டுகோள் வைக்கிறேன். தட்ஸ் ஆல்.’’

அவர் காரை நோக்கி சென்று விட்டார். நாயை பின்கதவு திறந்து ஏற்றினார். அவர் இன்ஜினை ஆன் பண்ணியபோது ‘‘சர் ஹென்றியிடமிருந்து ஏதேனும் சேதி?’’ என்று கேட்டார் டெவ்லின்.

அவர் புன்னகைத்தார். "அவரை நான் கவனிச்சுக்கிறேன். யூ டோண்ட் ஒர்ரி. வெள்ளி இரவு ரேடிலுடன் ரேடியோவில் பேசுவேன். அதிலிருந்து என்ன வருதுனு உங்ககிட்டே பிறகு சொல்றேன்."

அவர் போனதும் வீட்டுக்குள் போனார் டெவ்லின். அங்கு அப்படியே சற்று நேரம் நின்றார். பிறகு கதவை சாத்தி தாளிட்டார். திரைச்சீலையை இழுத்து விட்டுவிட்டு கணப்பு மூட்டிக் கொண்டார். கார்வால்ட் கொடுத்திருந்த மது ரசத்தைக் கொஞ்சம் கோப்பையில் ஊற்றிக் கொண்டு அதனருகில் உட்கார்ந்தார்.

மழை ஆரம்பித்தது. ஜன்னல் கண்ணாடிகளில் சாட்டையென அடித்தது. கொஞ்ச நேரம் போயிருக்கும்... அப்போது முன்கதவின் தாழ்ப்பாள் சன்னமாய் திருகப்பட்டது. இதற்கு சற்று நேரம் கழித்து ஜன்னலில் சிறுசிறு தட்டுதல்கள் விழுந்தன. அவள் இவருடைய பெயரை மிகவும் மெதுவாய் அழைத்தாள். கையிலிருந்த புத்தகத்திலேயே, கணப்பின் குறைந்த ஒளியில் சரியாய் தெரியாத வார்த்தைகளை ஊன்றிக் கவனித்தபடி மூழ்கி இருந்தார் டெவ்லின். சற்றுநேரம் கழிந்த பிறகு அவள் சென்று விட்டாள்.

கதவு நோக்கி ஓடுமாறு அவருடைய ஒவ்வொரு செல்லிலும் உதித்த உத்வேகத்தை, சத்தியம் பண்ணி தடுத்துக் கொண்ட டெவ்லின், கையிலிருந்த புத்தகத்தை ஆவேசமாய் சுவரின் மீது வீசினார். இன்னும் கொஞ்சம் விஸ்கியை ஊற்றியெடுத்துக் கொண்டு போய் ஜன்னலோரம் நின்று கொண்டார். சட்டென்று, இதோ இப்போது, வெறிகொண்டு மழை மேலும் தீவிரமடைந்த போது, இதுவரை தன் வாழ்நாளில் என்றுமே உணர்ந்திராத அளவுக்கு, மிக அதிகமாய், தனிமையை உணர்ந்தார் டெவ்லின்.

லாண்ட்ஸ்லூர்ட் பகுதியில் கடலலைகள் கொந்தளிப்பில் வெகுண்டன. கொட்டோகொட்டென்று பெய்த மழை சர்ஜனின் கத்தியைப் போல உடலைக் கீறியது. பழைய பண்ணைவீட்டின் தோட்டத்துக்குக் காவலாய் போடப்பட்டிருந்த ப்ரஸ்டன், அவரை இந்த அளவுக்கு இறங்க வைத்து விட்ட ஸ்டைனரை சபித்தார். ரேடிலை சபித்தார். ஹிம்லரை சபித்தார். அவருடைய வாழ்வின் மிக மோசமான தாழ்ந்த நிலையாய் இதை அறிவித்துக் கொண்ட அவர், இதற்கு காரணமான மற்ற எல்லாவற்றையும்கூட சபித்துக் கொண்டிருந்தார்.



# 10

இரண்டாம் உலகப்போரின்போது, ஒரு முக்கியமான அம்சத்தில் ஜெர்மானிய பாராசூட் படைகள் பிரிட்டிஷ்காரர்களின் படைகளிலிருந்து வேறுபட்டிருந்தன. அது - உபயோகப்படுத்தப்பட்ட பாராசூட்டின் வகையில்.

லாண்ட்ஸ்வூர்ட் பகுதியில், ஞாயிற்றுக்கிழமையன்று காலையில், இந்த வித்தியாசத்தைப் பழக்குவதற்காக, ஒரு விளக்க முகாமுக்கு ஏற்பாடு செய்தார் ஸ்டைனர்.

வீரர்கள் அவருக்கு முன்னால் ஓர் அரைவட்டமாய் நின்றார்கள். குதிப்பதற்கான உடை, பூட்சுகள் சகிதமாய் ஏனைய வீரர்களைப் போலவே அலங்கரிக்கப்பட்டிருந்த ப்ரட்ஸன் மையத்தில் இருத்தப்பட்டிருந்தார். தனது ஒருபக்கம் நியூமேனும் மறுபக்கம் ரேடிலும் வருமாறு பாராசூட் வீரர்களைப் பார்த்தவாறு நின்றிருந்தார் ஸ்டைனர்.

''இந்த ஆபரேஷன் எதுக்குனு நான் முன்னாடியே உங்களுக்கு சொல்லியிருக்கேன். போலந்து ஸ்பெஷல் விமானப்படையின் அங்கத்தினர்களாக நாம நுழையப் போகிறோம். இதனால், உங்களுடைய அனைத்து உபகரணங்களும் பிரிட்டிஷ்காரர்களைப் போல இருக்க வேண்டியது மட்டும் அவசியம் கிடையாது... பிரிட்டிஷ்காரர்கள் பயன்படுத்தும் வழக்கமான பாராசூட் கொண்டுதான் நீங்க குதிக்கணும் என்பதும் அவசியமாகுது.''

ரிட்டர் நியூமேன் பக்கமாய் திரும்பிய அவர் சொன்னார்: "இனி அனைத்தும் உங்க கட்டுப்பாட்டில்."

ஒரு பாராசூட் பொட்டலத்தை எடுத்து அதனை உயரத்தில் தூக்கிப் பிடித்தார் ப்ராண்டிட். பிரிட்டிஷ் விமானப்படைகள் பயன்படுத்தும் K வகை பாராசூட்டுகள். ஏறத்தாழ 28 பவுண்டுகள். கலோனல் ஸ்டைனர் விளக்கியதைப் போலவே, இது, நம்முடைய அமைப்பிலிருந்து முற்றிலும் வேறுபட்டது."

அதனை அவிழ்த்து அகலமாய் விரியும்படி ஆக்கினார் ப்ராண்டிட். "கவனிங்க. குறிப்பா தோள்களை நாம் இறுக்கும் பட்டியை. நம்முடைய வகையிலிருந்து எப்படி மாறுபட்டிருக்கு இது என்பதை நீங்களே பார்க்கலாம்..."

"இதுல கவனிக்க வேண்டிய பாயிண்ட் என்னன்னா..." என்று இடையில் வந்தார் ஸ்டைனர்: "திசையை நீங்களே மாற்றலாம். எங்கே இறங்கணும் என்பதுல முழுக் கட்டுப்பாடும் உங்க கையிலேயே இருக்கும். இதுவரை நீங்க பயன்படுத்தினதில் இதெல்லாம் கிடையாது."

"இன்னொரு பாயிண்ட்" என்றார் ரிட்டர். "நம்முடையதில் புவியீர்ப்பின் மையம் அதிகம். அதனால் முகத்தை சற்று குனிந்து கீழ்நோக்கி வளைந்தபடியேதான் நாம இயங்கணும். இந்த K வகை பாராசூட்டுகளில் நீங்க நின்ற நிலையிலேயே பறக்கலாம். இதையெல்லாம்தான் நாம இப்ப பயிற்சி பண்ணப்போறோம்."

ப்ராண்டிட்டைப் பார்த்து அவர் ஒப்புதலாய் தலையசைக்க, "ஆல் ரைட்" என்ற அவர், "இப்ப நீங்க விளக்கிக் காட்டலாம்" என்றார்.

ப்ராண்டிட் செயல்முறை விளக்கத்தில் இறங்கினார்.

அப்போது ஸ்டைனர், ப்ரஸ்டனை உன்னிப்பாய் கவனிக்கலானார். கலவரமாகியிருந்தார் அந்த

இங்கிலீஷ்மேன். வெளிறிப்போன அவர் முகமெங்கும் வியர்வை பூத்திருந்தது. செயல்முறை விளக்கத்தில் ஈடுபடும்போது ஒவ்வொருவரும் அவரவரது திறமைகளுக் கேற்ப வெவ்வேறு அளவிலான வெற்றிக் கனிகளைப் பறித்தனர். கடைசியாய் ப்ரஸ்டனின் வாய்ப்பு வந்தது.

ஸ்டைனர் திரும்பிப் பார்த்து ப்ராண்டிட்டிடம் சொன்னார்: ''அவரை கவனிங்க.''

ப்ரஸ்டன் மேல்நோக்கி, கிளம்பினார். போகும்போதே தென்பட்ட ஒரு தடுப்பின் மீது நன்றாய் மோதிக் கொண்டார். அதில் அவர் நிலையாகும்வரை உதவிகள் தரப்பட்டன. அங்கிருந்து கீழே அபாயமாய் பார்த்தார் அவர்.

இங்கிருந்து ''இருக்கட்டும், பரவாயில்ல'' என்று குரல் தந்த ப்ராண்டிட் ''நான் சொன்னதை நினைவுல வெச்சுக்கங்க. நான் சமிக்ஞை தரும்போது குதிச்சுடுங்க'' என்றார்.

ஆனால் சமிக்ஞைக்கெல்லாம் அவர் காத்திருக்கவில்லை. ஓர் அலறல் வந்தது. அவர் இருந்த இடத்திலிருந்து அப்படியே விழுந்திருந்தார். மேலே பறப்பவர்களுக்கு காலில் ஒரு கயிறு கட்டப்பட்டிருந்தது. அதில் ஒரு பெண்டுலத்தைப் போல தலைகீழாய் தொங்கியபடி ஆடிக்கொண்டிருந்தார் அவர்.

அந்த முகத்தில் ஒரு கை பதித்து தூக்கிப் பார்த்த ப்ராண்டிட் ''மயக்கமாயிட்டார்'' என அறிவித்தார்.

''அப்படித்தான் தெரியுது'' - ஸ்டைனர்.

''இவரை வெச்சுக்கிட்டு நாம என்ன பண்ணுவது?'' - ரிட்டர் நியூமேன்.

''இறக்கிக்கிட்டு வாங்க அவரை'' என்றார் ஸ்டைனர் சாந்தமாய். ''அப்புறம், மறுபடியும் அவரை ஏத்துங்க. திருப்தி வரும்வரை எத்தனை முறை முடியுமோ அத்தனை

முறையும் செய்யுங்க. திருப்தியா செய்யலையா... கால் உடையும் வரை ஏத்துங்க.'' சல்யூட் வைத்து விட்டு கிளம்பினார் அவர். அப்போது சொன்னார்: ''ம், ஆரம்பிங்க.''

★ ★ ★

டெவ்லின் ஸ்டேட்லே ஆர்முக்குள் நுழைந்தபோது அங்கு ஒரிரு நபர்கள் இருந்தார்கள். லேக்கர் ஆர்ம்ஸ்பீ அவருக்கு உரிய வழக்கமான இடத்திலேயே மவுத் ஆர்கன் வாசித்துக் கொண்டிருந்தார். கையில் ஒரு கோப்பை மது ரசத்துடனிருந்த ஆர்தூர் ஜன்னலின் வழியே வெளியே பார்த்துக் கொண்டிருந்தார்.

''கடவுள் அனைவரையும் காப்பாற்ற!'' என்றார் டெவ்லின். அறையில் அழுத்தமாய் அமைதி நிலவியது. அப்போது அவருக்கு பின்னால் அரவம் கேட்க திரும்பினார். ஜார்ஜ் ஒயில்ட் வந்தார். அவரது முகம் ஆழ்ந்தும், பாவங்களற்றும் இருந்தது. ''நான் இப்பத்தான் மூடினேன், மிஸ்டர் டெவ்லின்'' என்றார் சாந்தமாய்.

''ஒரு கோப்பை மட்டும்.''

''இயலாது. ஸாரி. நீங்க கிளம்பிடலாம், ஸார்.''

தனது இரு பேண்ட் பாக்கெட்டுகளிலும் தன் கைகளை விட்டுக்கொண்ட டெவ்லின் தோள்களைத் தூக்கிக் கொண்டு தலையை தொங்க விட்டபடி நின்றார்.

அவர் தலையை நிமிர்த்தியபோது ஆர்தூரும் இவரிருந்த பக்கமாய் திரும்பியிருந்தார். அவரது ஒரு கண் இன்னமும் முழுக்கவும் மூடிய நிலையிலேயே இருந்தது. உதடுகள் வளைந்து போயிருந்தன. வீங்கியுமிருந்தன. அவருடைய முகம் முழுவதும் கனமாகியிருந்தது. ஆங்காங்கே சிகப்பு வீக்கங்கள். சுரத்தற்று டெவ்லினைப் பார்த்த அவர் பிறகு தலையை தொங்க விட்டுக் கொண்டார்.

ஒயில்ட் பக்கமாய் திரும்பினார் டெவ்லின். "கொஞ்சம் ட்ரிங்க் வேணும். ஆங், ஆங்... இல்லேனு சொல்லிடாதீங்க. ஸ்பெஷல் கஸ்டமர்ஸ் வந்தால் இருக்கட்டும்னு நிச்சயமா தனியா எடுத்து வெச்சிருப்பீங்க. அதிலிருந்து எடுத்துக் கொடுங்க. ம்."

ஒயில்டால் இதற்கு பதில் பேச முடியவில்லை. கோப்பையில் சிறிதளவு நிரப்பி அதனை கொண்டு வந்து அவர் டெவ்லினுக்கு பக்கத்தில் வைத்தார்.

இதற்கு கை முழுக்க நாணயங்களை அளித்தார் டெவ்லின். "ஒரு ஷில்லிங் மற்றும் ஆறு பென்ஸ்" என்றார் அவர் உற்சாகமாய்.

முழு அறையும் காத்திருந்தது. டெவ்லின் வைக்கப்பட்ட கோப்பையை எடுத்தார். விளக்கு வெளிச்சத்தில் உயர்த்திப் பிடித்தார். அந்த நிலையிலேயே அதனை கவிழ்த்தார். தங்க அருவியாய் அத்திரவம் வீழ்ந்து முடித்தது. "லவ்லீ" என்றார். "இது எனக்கு பிடிச்சிருக்கு."

லேக்கர் இதற்கு பெரும் இடிச்சிரிப்பு சிரித்தார். "தேங்க் யூ ஓல்ட்மேன். ஐ லவ் யூ டூ" என்றார் டெவ்லின். பிறகு வெளியேறி விட்டார்.



**லா**ண்ட்ஸ்வூர்ட் பகுதி விமானதளத்தில் ஸ்டைனர் தனது காரை செலுத்திக் கொண்டிருந்தபோது நல்ல மழை பெய்தது. முதலில் விமானத்தின் அருகே நிறுத்தி விட்டு அறை நோக்கி சென்றார். நான்கு மெக்கானிக்குகளுடன் விமான பாகங்களில் அங்கு வேலை செய்து கொண்டிருந்தார் பீட்டர் கெர்ரிக்.

"பீட்டர்?" என்றழைத்தார் ஸ்டைனர். "ஒரு நிமிஷம் ஒதுக்க முடியுமா? என்ன முன்னேற்றம் ஆகியிருக்குனு எனக்கொரு ப்ராக்ரஸ் ரிப்போர்ட் வேணும்."

''ஓ, எல்லாம் நல்லபடியா போய்க்கிட்டிருக்கு.''

''என்ஜின்கள்ல ஒண்ணும் ப்ராப்ளம் இல்லையே?''

''ஒண்ணும் கிடையாது. எல்லாம், 900 குதிரை சக்தி கொண்ட புயல்கள். எல்லாம் முதல்தரம். இதுவரை கொஞ்சம்தான் பயனாகியிருக்கு. ஒரு பாதுகாப்பு கருதிதான் இப்ப எல்லாத்தையும் பிரிச்சு பார்த்துக் கிட்டிருக்கோமே தவிர, எந்த ப்ராப்ளமும் கிடையாது.''

''நீங்களே உங்க என்ஜின்களைப் பழுது பார்த்துடுவீங்களா?''

''தேவைப்பட்டால்'' என்றார் பீட்டர். ''தென்னாப்பிரிக்காவுக்கு இதை ஓட்டிட்டுப் போறேன்னு வைங்க. நான்தான் பழுது பார்த்தாகணும். வேற வழியில்லை'' என்றவர் சொன்னார்: ''எல்லாம், எத்தனை தூரம் ஒரு விமானம் பறந்திருக்கு என்பதை பொறுத்தது கிடையாது. எத்தனை லாகவமா பறக்கவிடப்பட்டிருக்கு என்பதை பொறுத்தது. அதாவது, எல்லாம் பைலட் கையில் இருக்கு.''

''ஒரு பரீட்சார்த்த ஓட்டம் செய்யணும்னு நீங்க விரும்பினீங்க, இல்லையா?''

''தட்ஸ் ரைட்.''

''நானும் யோசிச்சுக்கிட்டிருந்தேன்'' என்றார் ஸ்டைனர். ''ஒரு பயிற்சி வகுப்புடன் உங்களுடைய பரீட்சார்த்த டெஸ்ட்டிங்கையும் சேர்த்து விடுவது நல்லது. ஒருநாள் இரவு, கடலலைகள் அற்ற பொழுதுல வெச்சுக்கலாம். பீச்சின் வடக்கு மணல்பகுதியை பயன்படுத்திப்போம். பிரிட்டிஷ் பாராசூட்டுகளை ஒருமுறை ஓட்டிப் பார்க்கும் வாய்ப்பையும் வீரர்களுக்கு இது ஏற்படுத்திடும்.''

''எத்தனை உயரம் வரை பறக்கணும்னு நீங்க மனசுல வெச்சிருக்கீங்க?''

''400 அடி. வேகமா இறங்கிடணும் என்பது என்னுடைய தேவை. அப்படி இறங்க, அந்த உயரத்திலிருந்து 15 நொடி பிடிக்குது.''

சுற்றிவர பார்த்துக் கொண்டே பேசிய பீட்டர் ''என்னவொரு தனிமை பகுதி'' என்று குறிப்பிட்டார்.

''என் தேவையை இது பூர்த்தி செய்யுது'' என்றார் ஸ்டைனர்.

''அதுதான் என்ன?''

''இதே கேள்வியை ஒரு நாளைக்கு ஐந்து முறை நீங்க கேட்கறீங்க. விட்டுடக் கூடாதா?''

''இதெல்லாம் எதுக்குனு தெரிஞ்சுக்க விரும்பறேன். தட்ஸ் ஆல்.''

''ம், ஒருநாள் தெரிஞ்சுப்பீங்க. அது ரேடில் கையில்தான் இருக்கு. இப்போதைக்கு, நாம, கொடுக்கப்பட்ட வேலைகளுடன் நிறுத்திப்போம்.''

''அந்த ப்ரஸ்டன்?'' என்று கேட்டார் கெர்ரிக். ''அவர் எதுக்கு இதுலே? வியப்பாயிருக்கு. ஒருத்தன், அவன் பண்ணியேயிராத விஷயத்துக்குள்ளே எதுக்காக திணிக்கப்படணும்? அதுவும் இதுபோன்ற ஆபத்தான சமாச்சாரத்துக்குள்ளே...''

''ஹிம்லரின் நேரடி ஆர்டரின் பேரில் அவர் இங்கே வந்திருக்கார்.''

''நீங்க எதுக்கு இங்கே?'' என்றும் அவர் கேட்டார். ''ஃபுர்ரெர்ரின் உயிர்நாடி நீங்க...''

''பதில், கடவுளுக்கே வெளிச்சம். ஒருவேளை என் அப்பா அமெரிக்கராகவும் அம்மா ஜெர்மானியராகவும் இருந்திருந்தால், நான் அடுத்த பக்கத்துல இருந்திருப்பேன். பாராசூட் படையில ஏன் சேர்ந்தேன்னு சொல்லணும்னா,

அந்த காலகட்டத்துல இதுல சேர்வது சிறந்த முடிவா இருந்தது. அப்புறம் என்ன பண்ணுவது? அப்படியே தொடர வேண்டியதுதான்...''

''எனக்கு பறந்துக்கிட்டேயிருக்கணும்... அதனால இப்படி எனக்கு வாழ்க்கை போய்க்கிட்டிருக்கு'' என்றார் கெர்ரிக். ''வடக்கு கடல் பகுதியிலிருக்கும் என் போன்ற அத்தனை பேரின் நிலைமையும் இதுதான்.'' தனது தலையை மறுப்பாய் அசைத்தார் அவர். ''எனக்கு விளங்கல, மிஸ்டர் ஸ்டைனர். அப்படினா, இப்பணி உங்களுக்கு ஜஸ்ட் ஒரு பொழுதுபோக்குத்தானா?''

ஸ்டைனர் அசதியாய் சொன்னார்: ''தெரியல. என் அப்பா ஒரு ராணுவ வீரர். நிறைய ரத்தம் சிந்தியவர். நேர்மையானவரும்கூட.''

''இந்த பிசினசை நீங்க பண்ணணும்னு கொடுத்திருக்காங்களே... இதுல உங்களுக்கு வேறெந்த விதமான சந்தேகமும் எழலியா?''

''ம்ம். ஒண்ணும் கிடையாது. ஒரு சுத்தமான மிலிட்டிரி வேலை. என்னை நம்பலாம் நீங்க. இதுல சர்ச்சிலேகூட தப்பு கண்டுபிடிக்க முடியாது.'' இதற்கு புன்னகைக்க, முயற்சித்து தோற்றார் கெர்ரிக். ஸ்டைனர் அவர் தோள்மீது கைபதித்தார். ''நான் விசும்பி அழும் நாட்கள் சீக்கிரம் வரும்னு எனக்கு தெரியும் - நம் எல்லோருக்காகவும்.'' சொன்ன ஸ்டைனர், திரும்பி, மழைக்குள் நடந்து மறையலானார்.

★ ★ ★

**ஹி**ம்லரின் அலுவலகத்தில், அந்த பெரிய மனிதனின் மேஜைக்கு முன்னால் நின்று கொண்டிருந்தார் ரேடில். ஹிம்லர் இவர் தந்த அறிக்கைகளைப் படித்துக்

கொண்டிருந்தார். ''எக்ஸலெண்ட்'' என வருணித்தார். ''ரியலி எக்ஸலெண்ட். நாம போட்ட திட்டங்களை விடவும் எல்லாம் திருப்திகரமா போய்க்கிட்டிருக்கு. அந்த ஐரீஷ்காரன்கிட்டேயிருந்து சேதி ஏதாவது வந்ததா?''

''நோ. மிஸஸ் க்ரேயிடமிருந்துதான் - அதாவது வெறும் ஏற்பாடுகளைப் பற்றி மட்டும். டெவ்லினிடம் அருமையான ரேடியோ-டெலிபோன் ஸெட் இருக்கு. E-படகு உள்ளே வரும்போது அதனுடன் தொடர்பு கொள்ள இந்த ஸெட் உதவும். தகவல்கள் அனுப்புவதை பொறுத்தமட்டில் அவர் கையாள வேண்டிய பகுதி ஒன்று இதுதான்.''

''அட்மிரல் எவ்வகையிலும் சந்தேகப்படலியே? என்ன நடக்குது என்பது பற்றி அவருக்கு துளியும் குறிப்பு கிடைக்கலியே? இதுல நீங்க நிச்சயமாத்தானே இருக்கீங்க?''

''நிச்சயமா, ஸார். பிரான்சுக்கும் ஹாலந்துக்கும் நான் போயிருந்தபோது பாரீசின் அப்வெஹ்ர் வேலைகளுடன் இதையும் சேர்த்தே என்னால செய்ய முடிந்தது. என் பிரிவு பணிகளை நானே பண்ண அட்மிரலிடமிருந்து எனக்கு பக்கபலம் இருக்குனு உங்களுக்கே தெரியும்.''

''மறுபடியும் நீங்க எப்ப லாண்ட்ஸ்வூர்ட் பகுதிக்கு போகப்போறீங்க?''

''அடுத்த வார இறுதியில். அதிர்ஷ்டவசமா, நவம்பர் ஒன்று அல்லது ரெண்டாம் தேதி அட்மிரல் இத்தாலிக்குப் போகிறார். இதனால் இறுதி, இக்கட்டான நாட்களின் போது - அதாவது திட்டங்கள் நேரடியா அரங்கேறும்போது - நானேகூட லாண்ட்ஸ்வூர்ட் பகுதியில் தங்கிவிடும் வாய்ப்பு தானா வருது.''

''இது எதிர்பாராமல் நடக்கும் அதிர்ஷ்டமெல்லாம் கிடையாது'' என்ற ஹிம்லர் புன்னகைத்தார். ''ஒரு சரியான அவகாசம் வந்தபோது நான்தான் ஃபுர்ரெரிடம் இந்த

தேதிகளில் செல்லுமாறு ஆலோசித்தேன். தானும் அப்படி நினைச்சதா சொன்னார் அவர். ஆக, எல்லாம் சுபமா முன்னேறிக்கிட்டிருக்கு, ரேடில். இன்றிலிருந்து இன்னும் ரெண்டே நாள். எல்லாம் முடிஞ்சுடும். எனக்கு தகவல்களைத் தந்துக்கிட்டேயிருங்க.''

தனது வேலையைத் தொடர அவர் பேனாவை எடுத்துக் கொள்ள, இன்னும் சொல்ல வேண்டியிருப்பதால், காய்ந்த உதடுகளை ஈரமாக்கிக் கொண்டே, ''ஸார்'' என்றார் ரேடில்.

''நான் ரொம்ப ரொம்ப பிஸியாயிருக்கேன் ரேடில். என்னது அது?''

''ஜெனரல் ஸ்டைனர். அவர், அவர் - நல்லாயிருக்காரா?''

''பின்னே!'' என்றார் ஹிம்லர் அமைதியாய். ''ஏன் கேட்கறீங்க?''

தனது வயிற்றுக்குள் குடல் புரள சொன்னார்: ''கர்னல் ஸ்டைனர்... அவர் மிகவும் பரபரப்பாயிருக்கார்.''

''அதெல்லாம் தேவையில்லை'' என்றார் ஹிம்லர் ஆழ்ந்து. ''நான் என்னுடைய தனிப்பட்ட உத்திரவாதம் தந்திருக்கேன், இல்லையா?''

''ஆமாமாம்'' - கதவுக்கு ஓடிவிட்டார் ரேடில். ''மீண்டும், நன்றி.'' திரும்பிய அவர் எத்தனை சீக்கிரம் இயலுமோ அத்தனை சீக்கிரம் வெளியே வந்து விட்டார்.

ஹிம்லர் மறுப்பாய் தலையசைத்துக் கொண்டார். எரிச்சலாய் பெருமூச்செறிந்தார். எழுதுவதைத் தொடர்ந்தார்.

★ ★ ★

டெவ்லின் சர்ச்சுக்குப் போனபோது பிரார்த்தனைக் கூட்டம் ஏறத்தாழ முடிந்திருந்தது. ஓரமாய் நழுவிய அவர் ஒரு பெஞ்சில் இடம்பிடித்துக் கொண்டார். தனது தாய்க்குப் பின்னால் முட்டி போட்டு அமர்ந்திருந்த மோலி, போன ஞாயிறு அணிந்திருந்த அதே உடையலங்காரத்தில் வந்திருந்தாள். ஆர்தூரிடமிருந்து பெறப்பட்டிருந்த கடுமையான ஆளுமையை அவ்வுடை கொஞ்சமும் இப்போது காட்டவில்லை. வழக்கமாய் ஆர்தூர் வந்தமரும் அதேயிடத்தில் வந்து அவரும் அமர்ந்திருந்தார். உடனடியாய் டெவ்லினை அவர் பார்த்தார். எவ்விதவுணர்ச்சிகளையும் அவர் வெளிக்காட்டிக் கொள்ளவில்லை. பெஞ்சிலிருந்து எழுந்த அவர் நிழலில் நடந்து வெளியே போய்விட்டார்.

வெகுளியாய் மடிந்தமர்ந்து பிரார்த்தனையிலிருக்கும் மோலியையே மெழுகு ஒளியில் கவனித்தபடி அமர்ந்திருந்தார் டெவ்லின். கொஞ்ச நேரத்திற்கு பிறகு, ஏதோ அவர் வந்து உட்கார்ந்திருப்பதை அறிந்தவளைப் போல, அத்திசை நோக்கி திரும்பினாள் அவள். அவளது நயனங்கள் அகன்றன. அவரையே நீண்ட நேரம் பார்த்துக் கொண்டிருந்தாள். பிறகு மீண்டும் திரும்பிக் கொண்டு விட்டாள்.

பிரார்த்தனை முடிவதற்கு ஜஸ்ட் சில நொடிகள் முன்னால் எழுந்துக் கொண்டு வேகமாய் வெளியேறினார் டெவ்லின். முதல் கூட்டம் வெளியே வருவதற்கு முன்னமேயே தனது மோட்டார் பைக்கில் ஏறியிருந்தார் அவர். மழை ஆரம்பமாகியிருந்தது. தனது கோட்டின் தொப்பிப் பகுதியை தூக்கி தலையை மூடிக்கொண்ட அவர், பைக்கில் காத்திருந்தார். இறுதியாய் தனது அம்மாவுடன் வெளியேறி வந்த மோலி அவரை முழுசாய் ஒதுக்கினாள். அவர்களது வாகனத்துக்குள் ஏறிக் கொண்டார்கள். கிளம்பி விட்டார்கள்.

''ஆஹ், வெல்'' என்று தனக்குத்தானே மிருதுவாய் சொல்லிக் கொண்டார் டெவ்லின்: ''யார் அவளை குற்றம் சொல்ல முடியும்?''

தனது பைக்கை அவர் உதைத்தபோது தன்னுடைய பெயர் சொல்லி அழைக்கப்படுவதை அவர் கேட்டார். அவரை பார்த்தபடி நெருங்கினார் ஜோன்னா க்ரே. தணிந்த குரலில் அவர் பேசினார்: ''இன்னிக்கு மத்தியானம் பிலிப் வெரேக்கர் ரெண்டு மணிநேரம் பேசித்தள்ளினார். என்கிட்டே. சர் ஹென்றிகிட்டே உங்களை பற்றி அவர் கம்ப்ளெயிண்ட் பண்ணுமாம்.''

''நான் இவருக்கு என்ன பண்ணிட்டேன்?''

மேற்கொண்டு மிஸஸ் க்ரே பேச முடியாமல் ஆனது. அங்கு சர் ஹென்றி வந்து விட்டார். ''சொல்லுங்க டெவ்லின்... எப்படி போய்க்கிட்டிருக்கு.''

''ஃபைன், ஸார்.'' தொடர்ந்தார்: ''இப்படியொரு அற்புதமான வாய்ப்பை எனக்கு தந்திருப்பதற்கு நான் எப்படி நன்றி சொல்வதுனே எனக்கு தெரியல.''

வாயை இறுக்கமாய் மூடிக்கொண்டுதான் மிஸஸ் க்ரே நிற்கின்றார் என்பது ஹென்றிக்கு தெரியும். ''குட் ஷோ, டெவ்லின், குட் ஷோ. நல்ல எக்ஸலெண்ட் ரிப்போர்ட் தான் வந்துக்கிட்டிருக்கு. வெரி எக்ஸலெண்ட். இந்த பங்களிப்பைத் தொடருங்க.''

★ ★ ★

காட்டேஜுக்கு டெவ்லின் திரும்பியபோது மிகமிக அடர்த்தியாய் மழை கொட்டித் தீர்த்துக் கொண்டிருந்தது. வழி நெடுகிலும் மட்டுமல்ல... சேற்றிலும், சகதியிலும் அல்லாடி பைக்கைக் கொண்டு போய் ஓரமாய் நிறுத்திய போதும், நனைந்து ஊறிப்போயிருந்த உடைகளோடு

நடக்க முடியாமல் வீட்டை அடைந்த வரையிலும், மழையில் சிக்கித் திறக்க சண்டித்தனம் செய்த கேட்டோடு மன்றாடிய எரிச்சலிலுமென்று, எக்கட்டத்திலும் அவரால் - மோலியை மறக்க முடியவில்லை.

சிந்தனையிலிருந்து அவளை எடுக்க எத்தனையோ எத்தனித்தார் - அதெல்லாம் வேலைக்காகவில்லை. முட்டிபோட்ட பிரார்த்தனை நிலையில் பாவாடை மேலே தூக்கியிருந்த அந்த இளம் உருவம் மனக்கண்களிலிருந்து மறைய மறுத்தது.

வாசற்கதவினை திறக்க அவர் முயன்றபோது கனமான விறகுப் புகையினை அவரால் அங்கு காண முடிந்தது. மாலை இருளுக்கு பொட்டு வெளிச்சமாய் காட்டேஜின் ஜன்னலில் உள்ளிருந்து ஒளி தெரிந்தது. கருந்திரை சின்னதாய் இடைவெளி விட்டு ஆடியபோது அதன் வழியே நெருப்பின் மஞ்சள்நிறம் தென்பட்டது.

அவர் உள்ளே நுழைந்தபோது சமையல் மணம் கமழ்ந்தது. துப்பாக்கியை ஓர் ஓரத்தில் வைத்தார். ஈரத்தில் தோய்ந்திருந்த ரெயின் கோட்டினை, நீர் வடிய மாட்டினார். வரவேற்பறைக்குள் நுழைந்தார்.

அடுப்புக்குள் ஒரு பெரிய கரித்துண்டை எடுத்துப் போட்டபடி டெவ்லினைப் பார்த்த அவள், ''ஜலதோஷம் பிடிக்கப்போகுது'' என்றாள்.

''அரைமணிநேரம் கணப்புக்கு முன்னால். அப்புறம் ஒரு விஸ்கி. போதும். எதுவும் என்னை தாக்காது.''

ஒரு கோப்பை மதுரசம் நிரப்பிக் கொண்டு வந்த அவள், ''இந்த முறை கீழே கொட்டிடாதீங்க'' என்றாள். ''ஒழுங்கா குடிக்க முயற்சி பண்ணுங்க.''

''ஓ, அப்ப உனக்கு நடந்த விஷயம் தெரியும்...''

''ம். கிராமமிது. வம்புதான் பொழுதுபோக்கு.''

''சமையல் பண்ணிட்டே பேசுவோம்'' என்று அடுக்களை உள்ளே போனவள் போய்க்கொண்டே கேட்டாள்: ''எது தப்பா போனது, லியாம்? ஏன் நீங்க விலகிப் போகணும்?''

கால்களை கணப்பின் மிக அருகில் நீட்டி உட்கார்ந்து கொண்டார் டெவ்லின். அவரின் பேண்ட் உள்ளே நுழைந்து புகை வெளியேறுமாறு பார்த்துக் கொண்டார். அது அவருக்கு இதமாக இருந்தது. ''அதுதான் நல்லதுனு எனக்கு பட்டுது'' என்றார் மோலியின் கேள்விக்கு பதிலாய்.

''ஏன்?''

''எனக்குனு காரணங்கள் இருக்கு.''

''சரி... இன்னிக்கு என்ன பிரச்சினை?''

''ஞாயிற்றுக்கிழமை.''

''அதுக்கென்ன?''

''எப்பவுமே ஞாயிறு, ஒரு பிரச்சினைதான்.'' தொடர்ந்தார்: ''நான் சீக்கிரம் படுக்கப் போறேன். அசதியாயிருக்கு.''

தயக்கமாய் அவரிடம் வந்தாள் அவள். அவரது கேசத்தை நீவினாள். அந்தக் கையை பறித்துக் கொண்ட அவர் அதில் முத்தம் தந்தார். ''ஐ லவ் யூ. தெரியுமா உனக்கு?''

அவளுக்குள் அணைந்திருந்த ஒரு விளக்கு உயிர்பெற்று ஒளிர்ந்ததைப் போல ஆனாள் அவள். பிரகாசமானாள். அப்படியே தன் நிலைமாறி முழுக்கவும் ஒரு புது பரிமாணம் கொண்டவளைப் போல ஆனாள் அவள். ''கடவுளே, நன்றி. அப்பா... இன்னிக்கு ராத்திரி கொஞ்சமும் மனக்கிலேசமில்லாமல் நான் நிம்மதியா தூங்குவேன்.''

''ஆனா நான் கெட்டவன், டியர். எனக்குனு எதிர்காலங்கள் கிடையாது - எச்சரிக்கிறேன். என் பெட்ரூம்

கதவுல ஒரு நோட்டீஸ் ஒட்டணும் தெரியுமா? இதனுள் நுழையும் எந்தப் பெண்ணாகிலும் அவள் அவளுடைய எதிர்பார்ப்புகளை ஒழித்து விட்டு நுழையவும் - இதுதான் அது.''

''அதெல்லாம் நாம பிறகு பார்த்துப்பம்'' என்றாள் அவள். ''உங்க பதார்த்தத்தை கொண்டு வரேன்.''

பிறகு, ஒரு கையை அவளை சுற்றிப் போட்டபடி பெட்டில் படுத்துக்கொண்டு, நெருப்பினுடைய ஜ்வாலையின் ஆட்டங்களுக்கு ஏற்ப உத்திரத்தில் ஆடிய நிழலையே கவனித்துக் கொண்டிருந்தபோது, முழு திருப்தியை அனுபவித்தார் டெவ்லின். இத்தனை வருடங்கள் இல்லாத மனச்சாந்தியையும் அனுபவித்தார். விவரிக்க வார்த்தைகள் இல்லை.

சற்று நேரங்கழித்து அங்கிருந்த ரெக்கார்ட் ப்ளேயரை சுழல விட்டாள் மோலி. அது பாடியது:

*அந்த ஆள் மரணித்துப் போய்விட்டபிறகு...*

*ஒரு நற்காலைப் பொழுதில் அந்த செய்தி எங்கெங்கும் பரவும்.*

*சிறு மீசை கொண்ட நம்பிக்கைத் துரோகி.*

*மண்ணுக்கடியில் தூங்குவான்...*

மயக்கமான குரலில் அவள் சொன்னாள்: ''இது நடக்கும்போது நான் சந்தோஷப்படுவேன்.''

''என்ன?''

''சிறு மீசை கொண்ட நம்பிக்கைத் துரோகி. மண்ணுக்கடியில் தூங்குவான்... ஹிட்லரை சொல்றேன். அப்ப எல்லாம் முடிஞ்சிருக்கும், இல்லையா?'' அவருடன் இன்னும் நெருக்கமாய் தன்னை ஆக்கிக் கொண்டாள். ''போர் முடிந்தபிறகு, நமக்கு என்ன நடக்கும், லியாம்?

''கடவுளுக்கே வெளிச்சம்.''

நெருப்பை வெறித்தபடியே அவர் படுத்துக் கிடந்தார். சற்று நேரத்துக்கு பிறகு அவளுடைய சுவாசம் சீரானது. போருக்கு பிறகு. எந்தப் போர்? கட்டுப்பாடற்ற தடைக் கற்களையே கடந்த 12 வருடங்களாய் தாண்டித்தாண்டி வாழ்ந்துக் கொண்டிருக்கிறார் டெவ்லின். இந்த இக்கட்டான தர்மசங்கட வாழ்க்கையை அவளிடம் இவர் எப்படித்தான் சொல்வார்? அவளை இறுக்கிக் கொண்டார். அந்தப் பழைய வீட்டை சுற்றி காற்று சோகமாய் முனகியபடி வீசிக்கொண்டிருந்தது.

★ ★ ★

பெர்லினில், ப்ரின்ஸ் அல்ப்ரெஷ்ட்ஸ்ட்ராஸில், தனக்கு முன்னாலிருந்த கோப்புகளிலும் ரிப்போர்ட்டுகளிலும், தனக்கே உரிய ஒழுங்குமுறையோடு உழைத்துக் கொண்டிருந்தார் ஹிம்லர். கிழக்கு ஐரோப்பா மற்றும் ரஷ்யாவில் கையகப்படுத்தப்பட்ட நிலங்களிலிருந்து படைகளை திரும்பப்பெறுவதை பற்றியே அனைத்தும் இருந்தன. உடல் மற்றும் மனதளவில் பாதிக்கப்பட்டு ராணுவத்தில் நிலைக்க முடியாமலானவர்களையும், விலக்கும் அறிக்கைகள் அங்கிருந்தன.

கதவில் சாந்தமான தட்டுக்கள் விழுந்தன. ரோஸ்மேன் அமைதியாய் உள்ளே நுழைந்தான். ஹிம்லர் நிமிர்ந்தார். ''எப்படி போகுது எல்லாம்?''

''எதை செஞ்சாலும் அவர் வளைய மாட்டேங்கிறார், ஸார். பாவம், அவருக்கு ஒண்ணுமே தெரியாதோனு நினைக்க வேண்டியிருக்கு.''

''அதுக்கு வாய்ப்பில்ல.'' ஹிம்லர் ஒரு தாளை எடுத்துத் தந்தார். ''இன்னிக்கு இந்த டாக்குமெண்ட் எனக்கு வந்தது.

ரெண்டு வருஷமா அவருக்கு ஒத்தாசையா இருந்தவருடைய, கையொப்பமிட்ட வாக்குமூலம். அந்த காலக்கட்டத்துல மேஜர் ஜெனரல் ஸ்டைனருடைய கட்டளைகளை உடனுக்குடன் நிறைவேற்றி வந்தவர்.''

''இதுக்கு மேல என்ன?''

''எனக்கு ஜெனரல் ஸ்டைனரிடமிருந்து கையொப்ப மிட்ட வாக்குமூலம் நேரடியா வேணும். அந்த அளவுக்கு இறுக்கமான தேவையிருக்கு.'' ஹிம்லரின் முகம் சற்று கோணியது. ''உளவியளலால் கொஞ்சம் முயற்சி பண்ணிப் பார்ப்போம். ஒரு ராணுவ டாக்டரை வர வைங்க. ட்ரில் பண்ணுவது பற்றி உங்களுக்கு வழிவகை தெரியுமில்ல? யாரோ செய்திருக்கும் அதிர்ச்சிகரமான தப்பு - இந்த அளவுக்கு ஆகியிருக்கு. அவரை இன்னமும் வைத்திருப்பதற்கு மன்னிக்க. ஆனா இன்னும் ஓரிரு பாயிண்ட்டுகள் தெளிவாக வேண்டியிருக்கு. இது முக்கியம்.''

''அதுக்கு பிறகு?''

''பத்து நாட்கள் அவகாசம் தா. அப்படியும் ஒத்து வரலேனா மறுபடியும் செய். எச்சரிக்கையெல்லாம் தரவேணாம். நேரடி ஷாக்.''

''நீங்க சொல்வதை போலவே செய்வேன், ஸார்'' - ரோஸ்மேன் சொன்னான்.



# 11

அக்டோபர் 28 வியாழனன்று, ஹாப்ஸ் எண்ட்டின் காட்டேஜுக்கு வந்தார் ஜோன்னா க்ரே. டெவ்லின் அவருடைய மோட்டார் சைக்கிளுடன் அல்லாடிக் கொண்டிருப்பதை பார்த்தார்.

''இந்த வாரம் முழுக்க உங்களை பிடிக்கணும்னு நான் அலைபாஞ்சுக்கிட்டிருந்தேன்'' என்றார். ''எங்கே போயிருந்தீங்க?''

''சுற்ற'' என்று உற்சாகமாய் சொன்னார் டெவ்லின், கையிலிருந்த க்ரீஸை துணியில் துடைத்தபடி. ''ஊரை சுற்றிப் பார்க்க. கார்வால்ட்டை சந்திக்கும்வரை நான் பண்ணுவதற்கு ஒண்ணும் கிடையாது. கிராமத்தை ஒரு ரவுண்ட் அடிச்சேன்.''

''கேள்விப்பட்டேன்'' என்றார் க்ரே, இறுக்கமாய். ''மோலியைப் பில்லியன்ல உட்கார வெச்சுக்கிட்டு சுத்தணுமோ? போன செவ்வாய்க்கிழமை ஹோல்ட்டுல ரெண்டு பேரும் டான்ஸ் ஆடியிருக்கீங்க.''

''ஒரு நல்ல காரியத்துக்காக'' என்று விளக்கினார் டெவ்லின். ''அங்கே உங்க ஃப்ரண்ட் வெரேக்கரும் வந்திருந்தார். நம் பாவத்தைக் கழுவ கடவுள் உதவுவார்னு பேசினார். உப்பு சப்பற்ற பேச்சு அது.''

''நான் உங்ககிட்டே அவளை தனியா விட்டுடுங்கன்னு சொல்லியிருந்தேன்.''

''முயற்சி செஞ்சேன். வேலைக்காகல. அத விடுங்க. உங்களுக்கு என்ன வேணும், அத சொல்லுங்க. நான் பிசியா இருக்கேன். இதோட மேக்னட்டுல ஏதோ ப்ராப்ளம். இன்னிக்கு ராத்திரி நான் பீட்டர்ஸ்பெர்க் போக இதை நான் முதல்ல ரெடி பண்ணியாகணும்.''

''மெல்தாம் மாளிகைக்கு படைகள் நகர்ந்திருக்கு'' என்றார் அவர். ''செவ்வாய்க்கிழமை இரவு அவங்க வந்திருக்காங்க.''

டெவ்லினின் முகம் சுணங்கியது. ''மெல்தாம் மாளிகை - ஸ்பெஷல் படைகள் இங்கேதானே பயிற்சியில ஈடுபடும்?''

''தட்ஸ் ரைட். அது, ஸ்டட்லே கான்ஸ்டபிளிலிருந்து கடற்கரை வழியா எட்டு மைல் தொலைவு வரும்.''

''யாரவங்க?''

''அமெரிக்கன் படையினர்.''

''ஐ ஸீ. அவங்க இங்கே வந்திருப்பது ஏதாவது மாற்றத்தை நமக்குள் ஏற்படுத்துமா?''

''அப்படி சொல்லிட முடியாது. அங்கிருக்கும் வசதிகளைப் பயன்படுத்திக்க விரும்பும் குழு அப்படியே அங்கே வந்து இறங்கும். அடர்ந்த மரங்களடர்ந்தப் பகுதி. மணற்குன்றுகள் ஏராளம். வந்திருக்காங்க என்பதை நாம மனசுல வெச்சுக்கணும் - தட்ஸ் ஆல்.''

டெவ்லின் ஆமோதித்தார். ''வெச்சுக்கிட்டாச்சு. ரேடியுடனான உங்களுடைய அடுத்த ஒலிபரப்புல இதை நீங்க அவர்கிட்டே தெரிவிச்சுட்டா உங்க கடமை முடியும். இப்போதைக்கு, நான் என் வேலையை பார்க்கிறேனே...''

காருக்குப் போக திரும்பியவர் தயங்கினார். ''கார்வால்ட் ஆசாமியை எனக்கு பிடிக்கல.''

''எனக்கு மட்டும் என்ன பிடிக்குதா? ஆனா கவலைப்படாதீங்க, மை லவ். அவன் முரட்டுத்தனமா நடந்துக்க நினைத்தால், அது இன்றிரவு நடக்காது. நாளை இரவுதான் நடக்கும்.''

அவர் காரில் ஏறி புறப்பட்டுவிட தனது மோட்டார் சைக்கிள் வேலைக்குள் நுழைந்தார் டெவ்லின். இருபது நிமிடங்கள் கழித்து மோலி தனது வண்டியில் ஒரு கூடையுடன் அங்கு வந்து சேர்ந்தாள். ''பதார்த்தம் கொண்டு வந்திருக்கேன்'' என்றாள்.

''அது காத்திருக்கட்டும்'' என்றார் டெவ்லின் புன்னகையில். ''இன்னிக்கு ராத்திரி நான் போயாகணும். உள்ளே வெச்சுடு. நான் சாப்பிடும்போது சூடாக்கிக்கிறேன்.''

''நானும் உங்ககூட வரலாமா?''

''சான்ஸே கிடையாது. ரொம்ப தொலைவு. தவிர, இது பிசினஸ்.'' அவளை பின்பக்கத்தில் தட்டினார். ''இப்போதைக்கு நான் தவிப்பது ஒரு கப் டீக்கு, குடும்பத்தலைவியே.''

தனது கூடையுடன் உள்ளே ஓடியவளைப் பிடிக்க முயன்ற அவரிடமிருந்து மோலி தப்பி விட்டாள். அவரும் அப்படியே அவள் சந்தோஷமாய் ஓடுமாறு விட்டுவிட்டார். டெவ்லினுடைய பை அங்கு உள்ளே டேபிளில் வைக்கப்பட்டிருந்தது. அடுக்களை நோக்கி ஓடிய மோலியின் கையில் அது சிக்கிக்கொண்டு அந்த வேகத்துடன் அப்படியே கீழே விழுந்தது. சிதறும்விதமாய் அது விழுந்ததால் அதனுள்ளிருந்த பேங்க் நோட்டுக் கற்றைகள் பிரிந்து தரையில் பரவின. துப்பாக்கியின் பாகங்களும் விழுந்த அதிர்ச்சியில் அங்கும் இங்குமாக ஆயின.

அவற்றின் அருகில் குனிந்தாள் மோலி. கணநேரம் ஸ்தம்பித்தாள். எதிர்காலத்தில் எதுவும் இன்றைய தினத்தினைப் போல நிம்மதியாய் தொடராதோ என்ற கலவர எண்ணத்தால் முதுகுத்தண்டில் சில்லிட்டாள்.

அறையின் வாசலில் காலடி ஓசைகள் இப்போது கேட்க டெவ்லின் சாந்தமாய் சொன்னார்: ''மை டியர் லிட்டில் கேர்ள்... எல்லாத்தையும் அழகா மறுபடியும் பைக்குள்ளேயே போட்டுட முடியுமா?''

வெளிறிய முகத்துடன் நிமிர்ந்து பார்த்தாள் அவள். ஆனால் குரல் கடுமையாய் இருந்தது: ''என்ன இதெல்லாம்? என்ன அர்த்தம் இதுக்கெல்லாம்?''

''நத்திங்'' என்றார் அவர், ''உன்னைப் போன்ற சின்னப் பெண்களுக்கு.''

''ஆனா இவையனைத்தும் மணி - பணம்.''

கரன்சி ஐந்தினைக் கட்டாய் தூக்கிப்பிடித்தாள் அவள். ''சலவை நோட்டுக்கள். நிஜமானவை. போலி அல்ல. இதெல்லாம் எங்கிருந்து உங்களுக்கு கிடைச்சது?''

டெவ்லின் கரன்ஸிகளையும் துப்பாக்கியின் பாகங்களையும் எடுத்துப் பைக்குள் திணித்து அதனைக் கொண்டு போய் அலமாரிக்குள் வைத்தார்.

''ஃபேகன்ஹாம் பகுதியில் ஒரு பப் இருக்கு. அங்கேயிருக்கும் ஒருத்தன் தந்தான். உலகத்திலிருக்கும் எதுவுமே உனக்கு கிடைக்கும் - ஆனா அவற்றை எப்படி எவ்விதம் பெறுவதுனு மட்டும் நீ சரியா திட்டமிட்டு விட்டால்!''

''ஓ, அப்ப எல்லாம் ப்ளாக் மார்க்கெட் - சரியா? இதுலதான் நீங்க மாட்டிக்கிட்டிருக்கீங்க, அப்படித்தானே?''

''அதுதான் என் நிறம். கறுப்பு. ரொம்ப சரியா சொல்லிட்டே. ஏய், இப்பப்போய் வேகமா எனக்கான 'டீ'யைக் கொண்டு வரியா? நான் ஆறு மணிக்குக் கிளம்பியே ஆகணும். இந்த மோட்டார் சைக்கிளில் நான் பண்ண வேண்டிய வேலைகள் இன்னமும் பாக்கி இருக்கு.''

பணப்பை கொண்டு போகப்பட்ட திசையையே பார்த்துக் கொண்டிருந்த அவள் ''இதெல்லாம் சரியா, லியாம்?'' என்றாள்.

அவளை சின்னதாய் முத்தமிட்ட அவர், ''ஏன் சரியா இருக்கக்கூடாதா?'' என்றார். திரும்பிய அவர் தன்னைத் தானே சபித்தபடி வெளியேறினார்.

முதன்முறையாய், இந்த சின்னப் பெண்ணுக்கு இவர் பண்ணிக்கொண்டிருக்கும் விஷயத்தை, நேருக்கு நேராக சந்தித்திருக்கிறார் டெவ்லின். ஒரு வாரத்துக்குள் இப்பெண்ணின் உலகமே தலைகீழாய் கவிழ்க்கப்பட்டு விடும். இது தவிர்க்க முடியாதது. இதற்கு டெவ்லினால் செய்வதற்கு ஏதும் இல்லை - இக்காயத்தை தன்னந்தனியாக தாங்கும்படி அவளை அப்படியே தனியாய் விட்டுவிட்டு போய் விடுவதை தவிர!

திடுமென்று கிலேசம் கொண்டவராய் ஆனார் டெவ்லின். அங்கிருந்த மணல்தரையை ஆவேசம் பொங்க உதைத்தார். ''நாயே, நாயே'' என்று தன்னை வைதார். ''வெறிபிடிச்ச அழுக்கு நாயே, லியாம்.''

★ ★ ★

**பெ**ன் கார்வால்ட்டும் அவருடைய சகோதரர் ரூபென்னும் காத்திருந்தார்கள். அறையின் மேலும் கீழும் இருப்புக்கொள்ளாமல் நடந்தபடியிருந்தார் பென். அவ்வப்போது உள்ளங்கைகளை ஒன்றாய் சேர்த்து

இயலாமையால் பிசைந்து கொண்டார். நல்ல ஸ்வெட்டரும், ஸ்கார்ஃப்பும் அணிந்திருந்தபோதிலும் குளிரின் நடுக்கம் அவருக்கு அதிகம் இருந்தது.

''என்னமா குளிருது ரூபென்?'' என்றார். ''அவன் வரும் அறிகுறியே தென்படலியா?''

''இப்பத்தான் மணி எட்டே முக்கால் ஆகுது, பென்'' என்றார் ரூபென்.

''மணி என்ன ஆனா எவனுக்கென்ன?'' என்று கோபப்பட்டார் தேவையில்லாமல். வருவதாய் சொன்ன நேரம் வரை, காத்திருக்க வேண்டியதை பென் கவனத்தில் கொண்டவராய் தெரியவில்லை. நேரம் சற்று கடந்தது. சிகரெட் ஒன்றினை எடுத்து அண்ணன் பற்ற வைத்துக் கொள்ளும்போது தம்பி வாசற்கதவருகிலிருந்து குரல் தந்தார்: ''காம்பவுண்டுக்குள்ளே அவர் ஜஸ்ட் நுழைஞ்சுக்கிட்டிருக்கார்.''

''கதவை அகலமா திறந்து வை. வரட்டும் அந்த நாய்.''

இது சொல்லப்பட்ட சில நொடிகளில் முழுக்கவும் நனைந்தபடி உள்ளே வந்து சேர்ந்தார் டெவ்லின். ஃபேக்ஹாமில் இரண்டாம் விற்பனையில் வாங்கிய அழகிய மேல் கோட், மூக்குக் கண்ணாடி, ஹெல்மெட் ஆகியனவற்றை அவர் அணிந்திருந்தார்.

''டர்ட்டி நைட், கார்வால்ட்'' என்றார் டெவ்லின்.

''இங்கே எப்பவும் இப்படித்தான்'' என்றார் பென். ''உங்களை சந்திப்பதில் மகிழ்ச்சி.'' அன்பாய் கைகுலுக்கினார். ''ரூபென்னை உங்களுக்கு தெரியும். இதோ இவன் ஸாமி ஜாக்ஸன். என் ஆட்களில் ஒருத்தன். உங்களுடைய டிராக்டர் பெட்ஃபார்டை ஓட்டி வந்திருப்பவர்.''

ஏதோ ஒரு நல்ல தனிப்பட்ட சேவையை ஸாமி பண்ணி விட்டதை குறிப்பிடுவது போன்ற தொனி தெறித்தது. அதற்கேற்றாற்போல "அப்படியா? ரொம்ப நன்றி உங்களுக்கு" என்றார் டெவ்லின்.

"நல்லது" என்ற பென், "எனக்கு இன்னொரு இடத்துல பிசினெஸ் இருக்கு" என்றார். "உங்களை காக்க வைக்கவும் விரும்பலை. உங்க ட்ரக் இங்கேயிருக்கு. என்ன சொல்றீங்க?"

பெயிண்ட் சற்று உதிர்ந்திருந்தாலும் அதன் டயர்கள் திண்ணென்றிருந்தன. அவர் கேட்டிருந்த பெயிண்ட் ட்ரம், ராணுவ முலாம் ஆகியன இருப்பதை, அதில் ஏறி சரிபார்த்துக் கொண்டார் டெவ்லின்.

"நீங்க சொன்னதைப் போலவே எல்லாம் அதுல இருக்கு" என்ற பென் ஒரு சிகரெட்டினை அவருக்கு தந்தார். "பெட்ரோலையும் செக் பண்ணிக்கலாம்."

"தேவையில்லை. உங்களை நம்பறேன்."

"அப்ப, ட்ரக்கை ஒருமுறை பரிசோதிச்சுப்பார்த்துடுங்க."

ஆக்ஸிலேட்டரை ஏற்றினார் டெவ்லின். அவர் எதிர்பார்ப்பிற்கு ஏற்ற மாதிரி இன்ஜின் வேகம் காட்டியது.

டிரக்கிலிருந்து குதித்த டெவ்லின் மீண்டும் அதை பார்த்தார் - அதிலிருந்த மிலிட்டிரி பதிவினை நோட்டமிட்டபடி.

"அது சரிதானே?"

"அப்படித்தான் நினைக்கிறேன்" என்றார் டெவ்லின். மெதுவாய் ஆமோதித்தார். "இதிருக்கும் நிலைமையை பார்த்தால் அதிகமா உழைச்சிருக்கும் போலத் தெரியுது" என்றார் டெவ்லின்.

''ஆமாம்'' என்றார் பென். ''அதனால் பாதகமில்ல. அப்படி உழைக்கத்தான் இவை உருவாக்கப்படுவதே.''

''நான் கேட்டிருந்த டெலிவரி லைசென்ஸ் வெச்சிருக்கீங்க, இல்லியா?''

''நிச்சயமா.'' ஒரு முறை கை தட்டினார் அவர். ''அந்த ஃபார்ம், ரூபென்...''

அந்த படிவத்தை தந்த ரூபென், ''இதையும் தந்துவிட்டால், நாம பணத்தை பார்ப்பது எப்போது?'' என்றார்.

''அப்படி சொல்லாதே ரூபென்'' என்றார் பென். ''இங்கிருக்கும் மர்பி, சத்தியத்தின் திருவுருவம்.''

''நோ. அவர் சொல்வதுதான் சரி. வியாபாரத்துல எல்லாம் உடனே நடந்திடணும்.'' சொன்ன டெவ்லின் ஓர் உறையை எடுத்து தந்தார். ''உள்ளே, எழுநூற்றைம்பது.''

தந்த பிறகு நரித்தனமான பார்வையை அமைத்துக் கொண்ட டெவ்லின் கேட்டார்: ''இங்கிருந்து நான் கிளம்பினதுக்கப்புறமா என்னை அடியாட்களை விட்டு துரத்தி அடிச்சுட மாட்டீங்களே?''

''அப்படி உங்களுக்குப்போய் நான் பண்ணுவேனா, மை சன்?''

இதற்கு பிறகு அவருடைய மோட்டார் பைக்கினை டெவ்லினும் ஸாமியுமாய் டிரக்கில் ஏற்றினார்கள். ''ஓ. கே. கார்வால்ட்'' என்றார் கடைசியில். ''நாளை, இதே நேரம் சந்திப்போம்.''

''உங்களுடன் பிஸினஸ் பண்ணுவதை ரசிக்கிறேன் நான்'' என்றார் பென், டெவ்லின் கிளம்பும்போது. அவர் கிளம்பி வெளியேறியபோது, ''இனி எல்லாம் ஃப்ரட்டி கையில் இருக்கு'' என்றார் பற்கள் நறநறக்க.

*"இன்னிக்கு இவர் அவனை ஏமாற்றி விட்டால்?" - சந்தேகப் பரபரப்பில் கேட்டார் ரூபென்.*

*"நாளைக்கு எதுக்கு இருக்கு?"*

★ ★ ★

*தனக்கு பின்னால் குறைவான விளக்கொளியுடனான வாகனத்தால் தான் பின்தொடரப்படுவதை உடனே அறிந்து கொண்டார் டெவ்லின். எக்ஸாக்ட்லி இதைத்தான் அவரும் எதிர்பார்த்திருந்தார். இவர் கிளம்பிய சில மிடங்களிலேயே பின்தொடரப்பட்டார்.*

*கணமும் தாமதிக்காமல் தனது வாகனத்தின் விளக்குகள் அனைத்தையும் அணைத்தார். ட்ரக் சாலையில் இருக்கும் சுவடே தெரியாமல் ஆனது. சட்டென்று அருகில் தெரிந்த ஒரு கும்மிருட்டுப் பகுதிக்குள் தன்னுடைய வாகனத்தை செலுத்தி விட்டார். அதனுள் சற்று உள்ளடங்கிப் போனதும், பிரேக்கிட்டு நிறுத்தி இன்ஜினையும் அணைத்தார்.*

*ஏதோ இவருடைய டிரக் அதே சாலையில் மேற்கொண்டு சென்று கொண்டிருப்பதாய், பின்தொடர்ந்த வாகனம் தனது வேகத்தையும் கூட்டிக்கொண்டு சாலையில் விரைந்து பிரயாணித்து மறைந்திருந்தது.*

*டெவ்லின் டிரக்கிலிருந்து குதித்திறங்கினார். வாகனத்துக்குப் பின்னால் சென்றார். பெட்ஃபார்ட் டிரக்கின் பின்பக்கத்து பல்புகளை அவிழ்த்தெடுத்தார். பிறகு வாகனத்தின் மேல் ஏறி அமர்ந்தவர் அதனை ஓர் அரைவட்டம் அடித்து திருப்பி அதே சாலைக்குள் செலுத்தினார். விளக்குகளை ஒளிர விட்டுக் கொண்டு தன் திசை நோக்கி செலுத்தலானார்.*

*சற்றுநேரப் பிரயாணத்துக்கு பிறகு வாகனத்தை மறுபடியும் நிறுத்திய அவர், இறங்கிப்போய் டிரக்கின்*

பின்னாலிருந்து பிடுங்கியிருந்த பல்புகளை அதனதன் இடத்தில் மீண்டும் பொருத்தினார். இதற்கு கையிலிருந்த டார்ச் ஒளியினை பயன்படுத்திக் கொண்டார். கையிலிருந்த ஆவணத்தில், இது ப்ரிமிங்ஹாம் பகுதி ராணுவத்துக்கான சேவை வாகனம் என்ற அறிவுறுத்தலும் யாரோ மேஜர் த்ரஷ் என்பவருடைய அதிகாரபூர்வ கையொப்பமும் இருந்தன. இது எங்கு போகிறது என்பதற்கான இடம் காலியாக விடப்பட்டிருந்தது. பென்னுக்கு இந்த தகவல் தெரியாததால் நிரப்பப்படவில்லை. அவ்விடத்தில் ஹாப்ஸ் எண்ட் என்று இவரே நிரப்பிக் கொண்டார்.

வண்டி மீண்டும் கிளம்பி ஓடியது. ஹெட் லைட்டின் ஒளியும் சாலையில் வெளிச்சமும் குறைவாக இருந்ததால் வேகம் குறைத்தே ஓட்டினார் டெவ்லின். இப்போது பென் கார்வால்ட் என்ன நினைத்துக் கொண்டிருப்பார் என்ற சிந்தனையுடனேயே டிரக்கை ஓட்டிக் கொண்டிருந்தார் அவர்.

★ ★ ★

**வெ**ள்ளியன்று லஞ்ச் முடித்தபிறகு டிரக்கின் நம்பர்களை வெள்ளை பெயிண்ட் கொண்டு சரிசெய்துக் கொண்டிருந்தார். அப்போது ஒரு கார் வரும் ஓசை அவருக்கு கேட்டது. கையை வேகமாய் கழுவிக்கொண்டு காரேஜ்ஜிலிருந்து வெளியே வந்து எட்டிப்பார்த்தார். வந்தது, ஜோன்னா க்ரேதான். இவரை பார்த்ததும் ''எல்லாம் நல்லபடியா முடிஞ்சிருக்கணுமே'' என்று கேட்டார்.

''அதை நீங்களே இங்கே பார்க்கலாமே'' என்று உள்ளே கொண்டு போய் காட்டினார். பெட்ஃபார்ட் டிரக், இவர் தயாரித்திருந்த காக்கி பச்சை வண்ணத்தில் பட்டாள வண்டியாகவே ஆகியிருந்தது. ''எனக்கு கிடைத்துள்ள

தகவல்களின்படி, ஸ்பெஷல் படையின் ஊர்திகளில் பேட்ஜ்கள் பொறிக்கப்படுவதில்லை'' என்றார் டெவ்லின்.

''யெஸ்'' என்றார் ஜோன்னா க்ரே. ''இது ரொம்ப நல்லாவே இருக்கு, லியாம். உங்களுக்கு ஏதாவது பிரச்சினைகள் இருந்ததா?''

''யாரோ ஒருத்தரை விட்டு என்னை பின்தொடர அவர் முயற்சித்தார். ஆனா அதை நான் எப்படியோ சமாளிச்சுட்டேன். இன்னிக்கு ராத்திரிதான் பெரும் பிரச்சினையா இருக்கப் போகுது.''

''அதை உங்களால சமாளிச்சுட முடியுமா?''

''இது சமாளிச்சுடும்'' என்றார் அவர். கரன்ஸி நோட்டுக்களை சுட்டிக்காட்டினார். தொடர்ந்தார்: ''எல்லாம் திட்டமிட்டபடி போச்சுன்னா நள்ளிரவுப் பொழுதுல நான் ஜீப்புடன் திரும்பியிருப்பேன். காலை விடிஞ்சதும் முதல் வேலையா உங்களை வந்து பார்க்கிறேன்.''

''அதுவரை என்னால பொறுக்க முடியும்னு தோணல.'' அவருடைய முகம் பரபரப்பிலும், எதிர்பார்ப்பிலும் நிரம்பியது. படபடத்த அவருடைய கையை ஒரு கணம் அழுத்தினார் டெவ்லின். ''டோண்ட் ஒர்ரி'' என்றார். ''திட்டம், வேலை செய்யும். எனக்கு தீர்க்கதரிசனம் உண்டு - என் பாட்டி சொல்வா. நான் இதை கவனிச்சுடுவேன்.''

''ரௌடிப் பயலே'' என்ற ஜோன்னா க்ரே அவ்வரை நெருங்கி கன்னத்தில் பாசம் பொங்க முத்தம் தந்தார். ''நீ எப்படி இத்தனை வருஷம் உயிர் வாழறேனு எனக்கு சில சமயங்களில் சந்தேகம் வரும்.''

''அது ரொம்ப ஈஸி'' என்றார் டெவ்லின். ''நான் வாழப்போறேனா மரணமடையப் போறேனானு நான்

*ரொம்ப அலுத்துக்க மாட்டேன்'' என்றவர், ''சரி... நாளை சந்திப்போம்'' என முடித்தார்.*

அவர் காம்பவுண்ட் விட்டு காரில் போகும்வரை பொறுத்திருந்து விட்டு கேரேஜின் கதவில் ஓர் உதை விட்டார். சிகரெட் ஒன்றையும் பற்ற வைத்துக் கொண்டார்.

கணநேர தாமதம் விளைந்தது. பிறகு, கேரேஜின் கடைக்கோடியிலிருந்து மோலி வெளிப்பட்டாள். பேசப்பட்ட எதுவும் காதில் விழும் அருகாமையில் இவள் ஒளிந்து இருக்கவில்லை. ஆகையால்தான் அனைத்தையும் பேசினார் டெவ்லின். அவள் அருகில் வந்ததும், ''மோலி, மை ஓன் ஸ்வீட் கேர்ள்'' என்றார்.''ஐ லவ் யூ. ரொம்ப.''

அவர் கழுத்தில் ஊஞ்சலாடினாள் அவள். கேட்டாள்: ''இன்னிக்கு ராத்திரி நான் இங்கே வரலாமா?''

''வேண்டாம்'' என்றார் அவர். ''ஏன்னா நான் இங்கே இருக்க மாட்டேன்.'' பிறகு பாதி உண்மை பேசினார். ''நான் பீட்டர்ஸ்பெர்க் வரை போகப்போகிறேன். திரும்ப, அகாலமாயிடும்.'' தற்போது அவளுடைய அழகிய நாசியை ஒரு விரலால் தட்டிய அவர் சொன்னார்: ''இது நம்ம ரெண்டு பேருக்கு மட்டுமே. விளம்பரப்படுத்த அல்ல.''

''என்ன, நிறைய கரன்ஸிக்காகவா?'' என்றாள் அவள். ''இல்லை, ரெண்டு பாட்டில் இலவச விஸ்கிக்காகவா?'' சற்று தாமதித்து விட்டு கேட்டாள்: ''நீங்களும் நல்லவராக! மற்றவர்களைப் போல ஏன் ஒரு சராசரி வாழ்க்கையை வாழக்கூடாது?''

டெவ்லின் ''நீ நல்ல பொண்ணுனா, போய் முதல்ல ஸ்டவ்ல கெட்டிலை வை'' என்றார் சாந்தமாய். ''டீ வேணும்.''

அவள் சிரித்தபடி ஓடிப்போனாள். சிகரெட் ஒன்றை பற்ற வைத்துக்கொண்டார் இவர். அடிவானத்தில்

இடியோசைகள் உருண்டன. மழை எப்போதும் ஆரம்பிக்கலாம் என்று வானம் குமுறிக் கொண்டிருந்தது. மற்றுமொரு மழைப் பிரயாணம். ஒரு பெருமூச்சுடன் மோலி ஓடிய திசையில் போனார் டெவ்லின்.

★ ★ ★

**வா**சலில் எட்டிப் பார்த்துக் கொண்டிருந்து விட்டு விரைந்து இப்போது உள்ளே வந்த ரூபென், ''வந்துட்டான் அவன்'' என்றார்.

''ஓ கே. கதவை அகல திறந்து வை. அவன் உள்ளே வரட்டும்.''

காற்று பலமாயிருந்தது. பைக்கை ஓட்டவிடாமல் ஆட்டிப் படைத்தது அது. ஊர்தியை அதனிடத்தில் நிறுத்தி விட்டு கார்ன்வால்ட் பகுதிக்கு வந்தவரிடம், ''மீண்டும் நல்வரவு'' என்றார் பென். ''நேற்றிரவு எல்லாம் நல்லபடியா போச்சு, இல்லையா?'' என்றும் கேட்டார்.

''எவ்வித பிரச்சினையும் இல்ல.''

அங்கிருந்த ஜீப்பினை நெருங்கிப் போனார் டெவ்லின். பெட்ஃபோர்டைப் போலவே இதற்கும் புது பெயிண்ட் தேவைப்பட்டது. மற்றபடி, நன்றாயிருந்தது. மெஷின் கன் வைப்பதற்கான தனியிடம் அதிலிருந்தது. பதிவுஎண் புதிதாய் எழுதப்பட்டிருந்தது. அதனை நெருக்கமாய் பரிசோதித்தபோது அதனடியில் வேறொரு பதிவு எண் இருப்பது தென்பட்டது. ஆகவே,''என்ன கார்வால்ட்... எந்த ராணுவத்திலிருந்து தள்ளிட்டு வந்தது இது?'' என்று கேட்டார்.

ரூபெனுக்கு கோபம் வந்தது.

அதனை புறக்கணித்தார் டெவ்லின். ''எகிற வேண்டாம். நேற்று ராத்திரிப் பொழுதினை கொஞ்சம் நினைச்சுப்

பாருங்க. யாரோ என்னை பின்தொடர முயற்சித்ததை நான் கவனிச்சேன். நேற்றிரவு எல்லாம் நல்லபடியா போச்சானு இப்ப கேட்கறீங்க. பயம், ஆங்?'' சொல்லிவிட்டு தனது சட்டையிலிருந்த துப்பாக்கி பக்கமாய் ஒரு கையை நகர்த்திக் கொண்டார்.

பொத்தி, வெடிக்காமல் வைத்திருந்த கார்வால்ட்டின் கோபம் பீறியது. ''உன்னையெல்லாம் வைக்கிற இடத்துல வைக்கணும். அதுக்கு நான்தான் லாயக்கு.'' சொல்லிவிட்டு தனது சட்டையின் பொத்தன்களை அவிழ்க்க ஆரம்பித்தார் அவர். அவரிடமும் துப்பாக்கி இருந்தது. கூடவே, ''ஸாமி, ம்'' என்று கட்டளையுமிட்டார்.

இப்போது டெவ்லின் பேசினார்: ''ம், செய்யுங்க. ஆனா அதுக்கு முன்னாடி உங்க பய ஸாமிகிட்டே நான் ஒண்ணு சொல்லிக்க விரும்பறேன். அவனிடமிருக்கும் துப்பாக்கியில் ரவை போட்டிருக்கா இல்லையா? இல்லேனா, பாவம், அவன் பெரிய ஆபத்துல இருக்கான்னு அர்த்தம்.''

ஸாமி இந்த வசனங்கள் பேசப்படுவதற்கு முன்பே தனது துப்பாக்கியிருந்த சட்டைப்பகுதிக்கு கையை கொண்டு போயிருந்தான் - ம்ம், ஆனால் காலந்தாழ்ந்திருந்தது. அவனுடைய துப்பாக்கியை வெளியே எடுப்பதற்குள், ட்ரிக்கரில் கையை அழுத்தியிருந்தார் டெவ்லின். மூன்று வெறியர்களுக்கு முன்னால் காலந்தாழ்த்துவது ஆகாது என்று அறிந்த அவர், ஓர் அழுத்து அழுத்தினார். ஸைலன்ஸர் பொருத்தப்பட்ட அந்த அபாய உபகரணம், ஸாமியின் இடக்கையை துளைத்தெறிந்தது. இரண்டாவது குண்டோ, வலியால் திரும்பிய அவனுடைய முதுகெலும்பில் துளை போட்டது. மரணமடைந்தான் அவன். அத்தருணத்திலும் டெவ்லினைக் குறிவைத்து ட்ரிக்கரை அழுத்த முனைந்தான் - ஆனால் பலம் போதவில்லை. சரிந்துப் போனார்.

இரு சகோதரர்களும் பின்வாங்கினார்கள். ரூபென் நடுங்கிப் போனார். பென்னின் கண்கள் எச்சரிக்கையாய் அல்லாடின.

''ஆல் ரைட்'' என்றார் பென். ''நான் தப்பு பண்ணிட்டேன்'' என்றார்.

''யெஸ்'' என்ற டெவ்லின் ''ஸாமியை ஏவிய தப்பைவிட பெரிய தப்பை செஞ்சிருக்கீங்க. கொடுத்த வாக்கை மீறினது. நான் பணியாற்றும் இடத்துல ஒரு வழக்கமிருக்கு. எங்களை ஏமாற்றுபவர்களை...''

''வேணாம் மர்ஃபி, ப்ளீஸ். சொல்றதைக் கேளு. யோசி. அவசரப்படாதே.''

இவற்றில் எதற்கும் டெவ்லின் செவிமடுக்கவில்லை. சுட்டார். பென்னின் வலக்காலின் மூட்டினை அக்குண்டு பெயர்த்தெடுத்தது. கொடூரமான அலறலுடன் இரு உள்ளங்கைகளாலும் முட்டியைப் பிடித்துக் கொண்டு சுருண்டு விழுந்தார் பென். ரத்தம், பீறிட்டது.

ரூபென் இரண்டு கைகளையும் தூக்கி விட்டார். தலையை தொங்க விட்டுக் கொண்டார். கண்களை மூடிக் கொண்டார். இந்நிலையிலிருந்து சில நிமிடங்களில் அவர் கண்களை திறந்தபோது மிகஅருகில் டெவ்லின் வந்திருந்தார். ''எங்கே டெலிவரி சலான்?''

நடுநடுங்கும் கையோடு தனது சட்டைப் பையிலிருந்து அதனை எடுத்துக் கொடுத்தார் ரூபென். அதனை மேலோட்டமாய் பரிசோதித்து முடித்த டெவ்லின், ''இந்தாங்க பேசின தொகை'' என்று கூறி விட்டு ஓர் உறையினை தந்தார். ''எழுநூற்றைம்பது. வாக்கு தவற மாட்டான் டெவ்லின். அப்படியிருக்க இனியாவது முயற்சியுங்க.''

ஜீப்பில் ஏறி அதனை உசுப்பிக் கிளப்பினார். பைக்கை அதனிடத்திலிருந்து எடுத்து ஜீப்புக்குள் ஏற்றினார். இருளில் மறைந்தார்.

மளமளவென்று அண்ணனிடம் ஓடி வந்த ரூபென், "யாரந்த நாய் மகன்?" என்று கேட்டார்.

"எனக்கு தெரியாது. அதைபற்றி எனக்கு கவலையும் இல்லை. முதலில் இந்தா இந்த துணியை பிடி. கொட்டும் ரத்தத்தை சுற்றிக் கட்டு. முதலில் ரத்தத்தை நிறுத்து. சீக்கிரம்டா."

ரூபென் காயத்தை பார்த்து விட்டு கலவரமானார். உள்ளிருக்கும் வெள்ளை எலும்பு வெளியில் தெரியுமளவுக்கு முட்டி பிளக்கப்பட்டிருந்தது.

"கடவுளே. ரொம்ப மோசமாயிருக்கு அண்ணா. ஆஸ்பத்திரி போகணும். கிளம்பு."

"வாயை மூடு. என்னை தூக்கிக்கிட்டு நீ அவசர உதவிக்கு போனால், இதெல்லாம் எப்படி நடந்ததுனு கையில் விலங்கு மாட்டிடுவாங்க. அதெல்லாம் முடியாது ரூபென். கட்டு பேண்டேஜை."

முட்டியில் துணியை இறுக்கக்கட்ட ஆரம்பித்த ரூபென் பக்கவாட்டில் பார்த்து விட்டு கேட்டார்: "ஸாமியை என்ன செய்ய?"

"துணி போட்டு மூடு. நாளைக்கு பயலுங்களைக் கூட்டிட்டு வந்து ஏறக்கட்டிடு. முதல்ல கிளம்பு. அவசரம். இங்கிருந்து நாம கிளம்பிட வேண்டியது அவசரம்."

"எங்கே, பென்?"

"நேரா ப்ரிமிங்ஹாம் போயிடலாம். ஆஸ்டன்ல ஒரு நர்ஸிங்ஹோம் இருக்கு. இந்திய டாக்டர் ஒருத்தர் நடத்தறார். என்ன பேர் அவர் பேர்?"

"தாஸைச் சொல்றீங்களா?" கேட்ட ரூபென் மறுப்பாய் தலையசைத்தார். "அவர் அறுவை சிகிச்சை பிரிவு கிடையாது."

"அவர் டாக்டர்தான், இல்லையா?" - பென் கேட்டார். "அப்ப ஒரு கை குடு. நாம அங்கே போவோம். எல்லாத்துக்கும் நீ குறுக்குக் கேள்வி கேட்கறே."

★ ★ ★

நள்ளிரவு கடந்த பிறகுதான் ஹாப்ஸ் எண்ட் அடைந்தார் டெவ்லின். பேய்க்காற்றாலும் அடைமழையாலும் அது ஒரு ராட்சச இரவாய் ஆகியிருந்தது. வாசலில் ஜீப்பை நிறுத்தி விட்டு உள்ளே வந்தார்.

அசதியாயிருந்தது அவருக்கு. எலும்புவரை துளைக்கும் குளிர்வேறு. ஒரு சிகரெட்டை பற்ற வைத்துக் கொண்டு அறையின் மேலும் கீழுமாய் நடந்தார். அசதியில் இப்படி இருப்புக்கொள்ளாமல் ஆனது அவருக்கே புதுசாய் தெரிந்தது.

மழை கூரையில் விழும் ட்ரம் ஓசையும், விளக்கின் "உஸ்" ஓசையும் மட்டுமே கேட்டன. அப்போது காற்றின் வேகத்துடன் கதவு திறக்கப்பட மோலி உள்ளே வந்தாள். உடனேயே கதவையும் சாத்தினாள். ஜீப்பை பார்த்ததால் கேள்விக்குறியாய் வந்தவள், "லியாம்?" என்றாள்.

"நீ சத்தியம் செஞ்சிருக்கே" என்றார் அவர். "எந்தக் கேள்வியும் கேட்கக் கூடாது. கொடுத்த வாக்கை மீறினால் எனக்குப் பிடிக்காது."

"மன்னிக்கணும். பயந்துட்டேன். அதுக்கு ஏற்றாற்போல வெளியே புது ஜீப்" என்றாள். "அதுக்கு என்ன அர்த்தம்?"

"நீ சம்பந்தப்படாதது இது" என்றார் டெவ்லின் காரமாய். "நன் ஆஃப் யுவர் பிசினஸ். என்னை

பொறுத்தவரைக்கும் நீ இப்ப கிளம்பிடலாம். ஒரேயடியா. போலீசுக்குப் போய் சொல்லணும்னு தோணினால் - வெல், போ. போய் செய்.''

அவரைப் பார்த்தபடி அப்படியே நின்றாள் அவள். கண்கள் அகண்றன. வாய் பேச முடியவில்லை.

''போடீ!'' என்று தொடர்ந்தார் அவர். கடைசியாய் சொன்னார் - ''கெட் அவுட்!''

அவள் அவருடைய கைகளை நாடி ஓடி வந்தாள். வெடித்து அழுதாள். ''ஓ, நோ, லியாம். என்னை வெளியே அனுப்பிடாதீங்க. இனி கேள்விகள் கேட்க மாட்டேன். இப்போதிலிருந்து நான் என் வேலையை மட்டும் பார்த்துக்கறேன். என்னை வெளியே மட்டும் துரத்திடாதீங்க.''

யெஸ்... இனி அவள் அவருக்கு இடையூறு தரமாட்டாள். இது நிஜம். டெவ்லின் அவளுடைய நெற்றியில் முத்தமிட்டார். ''குளிர்ல நடுங்குகிறே நீ. உள்ளே போ. கணப்பு மூட்டி கொஞ்ச நேரம் உட்கார். நான் உடனே உள்ளே வந்துடறேன். போ.''

அவர் முகத்தில் எதையோ தேடித்தேடி முறைத்தாள் அவள். பிறகு உள்ளே சென்று விட்டாள்.

★ ★ ★

ஆஸ்டனிலிருந்த அந்தச் சின்ன ஆஸ்பத்திரியின் டேபிளில் கண்கள் மூடியபடி மல்லாக்கப் படுத்திருந்தார் பென். ரூபென் அவரருகில் நின்று கொண்டிருந்தார். நெட்டையான டாக்டர் தாஸ் அறுவை சிகிச்சைக்கான கத்திரிக்கோலினால் அவருடைய பேண்ட்டினை வெட்டி எடுத்துக் கொண்டிருந்தார்.

குரல் நடுங்கியது ரூபென் கேட்டபோது: "மோசமாயிருக்கா?"

"படு மோசமா."

டாக்டர் சாந்தமாய் சொன்னார். "அவரை ட்ரீட் பண்ண ஒரு முதல்தர சர்ஜென் இப்ப அவசியம். ஸெப்டிக் ஆகிட்டா பாடு ரொம்ப திண்டாட்டமாகிவிடும்."

கண்களை திறந்து "கொஞ்சம் நான் சொல்றதைக் கேட்க முடியுமா உன்னால்?" என்றார் டாக்டரிடம் கோபமாய். "நீங்க வெளில மாட்டி தொங்கவிட்டிருக்கிற போர்டில் 'ஃபிசிஷியென் அண்டு சர்ஜென்' அப்படினு போட்டிருக்கே. எதுக்கு?"

"அது நிஜந்தான் பென்" என்றார் டாக்டர் இன்னமும் சாந்தமாய். "பாம்பே மற்றும் லண்டனின் பட்டங்கள் என்னிடம் இருக்கு. அது இல்லை பாயிண்ட். இந்த கணத்துல ஒரு நிபுணரின் தேவை உங்க கேஸில் அத்தியாவசியம்."

தனது முஷ்டியால் அவரை புறந்தள்ளினார் பென். தாளமுடியாத வலியில் இருந்தார் அவர். முகம் முழுக்க வியர்வை பொங்கி வழிந்தது. "நான் சொல்வதை கேட்டால் அது உங்களுக்கு நல்லது. மூணு மாசத்துக்கு முன்னால் இங்கே ஒரு பொண்ணு செத்தா. அது ஒரு தவறான ஆபரேஷனால். அது பற்றி எனக்கு தெரியும். அதைப் போன்ற பல கேஸ்களும் எனக்கு அத்துப்படி. ஏழு வருஷம் உங்களை உள்ளே தள்ளப் போதுமானவை அவை."

இதற்கும் அசைக்கப்பட்டவராய் தாஸ் தோன்றவில்லை. "வெரி வெல் மிஸ்டர் கார்வால்ட். உங்க இஷ்டம். உங்களுக்கு நான் மயக்க மருந்து தந்தாகணும். விளங்குதா?"

"என்னத்தையோ கொடுய்யா. சிகிச்சையை ஆரம்பி."

கார்வால்ட் கண்களை மூடிக்கொண்டு விட்டார். "நீங்க இப்ப உதவணும்" என்றார் டாக்டர் ரூபென்னிடம். "இந்த அட்டையில் நான் சொல்வதைப் போல அப்படியே கடைபிடிச்சு க்ளோரோஃபார்மைச் சொட்டுச்சொட்டா சேர்க்கணும். முடியுமா உங்களால?"

பேச முடியவில்லை ரூபென்னால். ஆமோதிப்பாய் தலையை மட்டும் ஆட்டினார்.



# 12

**ஜோ**ன்னா க்ரேவைப் பார்க்க மறுநாள் காலை டெவ்லின் போனபோதும் மழை பெய்து கொண்டிருந்தது. அவருடைய பைக்கை நிறுத்தி விட்டு பின்கதவுக்குப் போனார். அதனை திறந்த க்ரே உடனடியாய் அவனை உள்ளுக்கிழுத்துக் கொண்டார். அவர் அப்போதும் இரவு உடையிலேயே இருந்தார். முகம் எதிர்பார்ப்பின் உச்சத்திலும் படபடப்பாயும் இருந்தது.

''நன்றி கடவுளே'' என்றார் ஜோன்னா. டெவ்லினின் முகத்தை தனது இருகரங்களால் தாங்கிக்கொண்டு குலுக்கினார். ''துளிகூட நான் கண் மூடலை. ஐந்து மணிக்கே எழுந்துட்டேன். டீயையும் விஸ்கியையும் மாற்றிமாற்றி குடிச்சுக்கிட்டிருக்கேன். இந்தக் காலைப்பொழுதுலே இப்படியொரு கலவையான திரவ உணவு.'' அவரை அன்பாய் முத்தமிட்டு விட்டு, ''ரௌடிப்பயலே'' என்றார்.

ஜோன்னா க்ரே ஸ்டவ்வுக்கு நகர, கணப்பருகே போய் நின்றுகொண்டார் டெவ்லின்.

''எல்லாம் எப்படிப்போச்சு?'' என்றார் ஜோன்னா.

''ஆல் ரைட்.''

வேண்டுமென்றே பட்டும்படாமல் பேசினார் அவர். விஷயத்தை தான் கையாண்ட விதம் மிஸஸ் ஜோன்னாவுக்கு பிடிக்காமல் இருக்கலாமென என் நம்பினார் அவர்.

*ஆச்சரியமாய் திரும்பிக் கேட்டார் ஜோன்னா: ''வேற எதுவும் பண்ண அவனுங்க முயற்சிக்கலை?''*

*''ஓ, யெஸ், அது இல்லாமலா?'' என்ற டெவ்லின் ''ஆனா நான் சமாளிச்சுட்டேன்'' என்றார்.*

*''துப்பாக்கி?''*

*''சேச்சே.''*

*''ஏய்...''*

*''இல்லேங்கிறேன்! சும்மா நான் துப்பாக்கியைத் தூக்கிக் காட்டினதே போதும் என்றானது. சுருண்டுட்டானுங்க, ஆங்கிலேயனுங்க.''*

*தேனீர் சமாச்சாரங்களை ஒரு தட்டில் வைத்துக் கொண்டு வந்தார் அவர். கொடுக்கும்போது ''நாம இனி என்ன செய்வது?'' என்றார்.*

*''காத்திருத்தல்'' என்றார் டெவ்லின். ''அடுத்த ஆறு நாட்கள் வரை நகங்களைக் கடித்துக் கொண்டு காத்திருக்கணும்.''*

*தனது கோப்பையை எடுத்து டெவ்லின் பக்கமாய் நீட்டியபடி ''எனக்கென்னவோ ஒண்ணும் விளங்கல டெவ்லின்'' என்ற ஜோன்னா, ''உங்களுக்கு கடவுள் துணை நிற்கட்டும்'' என்றார்.*

*தனது கோப்பையிலிருந்ததை மிஸஸ் க்ரே குடித்தார். அப்போது திடுமென்று ஆசனவாயில் கத்தியைச் செருகியதைப் போல என்னவோவொன்று அவருக்குள் மளமளவென்று நகர்ந்தது. அத்தருணத்தில் அவருக்கு சந்தேகத்துக்கு அறவே இடமின்றி விளங்கி விட்டது: இந்த முழு சமாச்சாரமும், எத்தனை முடியுமோ அந்த அளவுக்கு தவறாய் முடியப்போகின்றது.*

★ ★ ★

பமீலா வெரேக்கருக்கு அந்த வார இறுதிக்கு பாஸ் கிடைத்திருந்தது. குதிரை ஒன்று வைத்திருந்தார் இவர். நல்ல குண்டுக்குதிரை அது. அதில் ஏறி பசுமை மரப்பகுதியின் சுழற்பாதைகளில் மேலேறிச் சென்றுக் கொண்டிருந்தார். மழை முகத்தில் பளீர்பளீரென அடிக்க அந்த சிரமத்தோடு குதிரையை ஓட்டுவதில் ஓய்ந்து போனார் அவர்.

காட்டிலாக்கா போட்டுக் கொடுத்திருந்த பாதை குறிப்பிலேயே மரக்காட்டுக்குள் பயணித்தார் பமீலா. அக்குன்றின் உச்சியை நெருங்கும்போது குதிரை தனது வேகத்தை குறைத்தது. அங்கு ஒரு தடை தென்பட்டது. அதனை தாண்டிக் கடந்தால்தான் மேற்கொண்டு போக முடியும். மூன்றடி உயரம் இருந்தது அது. ஆனால் குதிரை அதனை ஒரே தாண்டுதலில் தாண்டிவிட்டது. மறுபக்கம் போய் சேர்ந்ததுமே வலப்புறத்தில் ஓர் உருவம் நின்று கொண்டிருப்பதை எதிர்பார்க்கவில்லை குதிரை. இதனால் எகிறியது அது. இதனை பமீலா எதிர்பார்க்கவில்லை. கட்டுப்பாட்டை அவர் இழந்ததால் ஒருபக்கமாய் தூக்கியெறியப்பட்டார். ஒரு புதரில் போய் விழுந்தார். அக்கம்பக்கத்தில் ஏதோ பேச்சு சத்தம் கேட்கிறது என்ற அளவுக்கு உணர்ந்தபடி, சில கணங்கள் அங்கு மூச்சுக்காற்றுக்கு அல்லாடியபடி அவர் விழுந்து கிடந்தார்.

''நீ ஒரு முட்டாள்ப்பா, க்ருகௌஸ்க்கி'' என்றார் யாரோ ஒருத்தர். ''அவங்களை என்ன பண்ணப் பார்க்கிறே? கொல்லவா?''

அவை அமெரிக்கக் குரல்கள். பமீலா கண்களைத் திறந்தார். ராணுவ உடையிலும் ஹெல்மெட் அணிந்துக் கொண்டும் தன்னைச் சுற்றி படைவீரர்கள் நிற்பதை பார்த்தார். அனைவர் கையிலும் பலத்த ஆயுதங்கள் இருந்தன. தற்சமயம் அவரருகில் முட்டிக்கால் போட்டு

உட்கார்ந்திருந்தது, தலைமை சர்ஜெண்ட் நட்சத்திரம் பொதித்த சட்டை அணிந்திருந்த ஓர் அகலமான நீக்ரோ. ''ஒண்ணும் ஆகலையே உங்களுக்கு?'' என்றார் அவர், ஆர்வமாய்.

முக வேதனை சற்று தென்பட மறுப்பாய் தலையசைத்த அவர், பரவாயில்லை என்பது போலவும் உணர்ந்தார். ''நீங்க யார்?''

தனது ஹெல்மெட்டை சல்யூட் அடிப்பதைப் போல தொட்டுக் காட்டினார் அவர். ''கார்வே. இது என் பெயர். தலைமை சர்ஜெண்ட். 21-வது ஸ்பெஷல் படை. மெல்தாம் ஹவுசில் ஓரிரு வாரங்கள் தங்க வைக்கப்பட்டிருப்போம். வந்திருப்பது, பயிற்சிக்காக.''

அப்போது அங்கு ஒரு ஜீப் வந்து நின்றது. களிமண்ணில் நிற்கவியலாது அது தடுமாற வேண்டியதாயிற்று. உள்ளிருந்தவர், ''இங்கே என்ன கூத்து நடந்துக்கிட்டிருக்கு?'' என்றார் அதிகாரமாய்.

''தனது குதிரையிலிருந்து இவங்க விழுந்துட்டாங்க, மேஜர்'' என்றார் கார்வே.

இத்தனை இளமையில் மேஜரா என்று வியந்தார் பமீலா. ''எனக்கு ஒண்ணும் ஆகலை, ரியலி'' என்றார் அவர்.

அவரது கையைப் பிடித்துப் பார்த்த மேஜர் ''எனக்கு அப்படி தோணலை'' என்றார். ''ரொம்ப தொலைவா வீடு?''

''ஸ்டட்லே கான்ஸ்டபிள். என் சகோதரர் அங்கே பாதிரியாரா இருக்கார்.''

ஜீப் வரை அவரை அழைத்துப் போனார் மேஜர். ''என்னோட நீங்க வந்தால் தேவலாம்னு தோணுது. மெல்த்தாம் ஹவுசில் ஒரு மெடிக்கல் ஆபிசர் இருக்கார். நீங்க உங்களுக்குள்ளே சில துண்டுகளா ஆகலேனு அவர் சொன்னால் நான் திருப்தியடைவேன்.''

*அவர் தோளில் போட்டிருந்த ரேஞ்ஜர்ஸ் என்ற ரேங்க்கை வைத்து, இத்தகையவர்கள் பிரிட்டிஷ் கமாண்டோ படைக்கு இணையானவர்கள் என எங்கோ படித்தது அவருடைய நினைவுக்கு வந்தது.*

*''மெல்த்தாம் ஹவுஸ்னா?''*

*''ஓ, ஐ'ம் ஸாரி. முதலில் என்னை நான் அறிமுகப்படுத்திக்கணும். மேஜர் ஹார்ரி கேன். 21-வது ஸ்பெஷல் படையை சேர்ந்தவன். கமாண்டர் ஈ. ஷாஃப்ட்டோவுக்கு கீழ் வருகிறது இப்படை. நாங்களெல்லாம் இங்கே பயிற்சிக்காக கூடியிருக்கோம்.''*

*''ஓ, இப்ப நினைவுக்கு வருது'' என்றார் பமீலா. ''சில சந்தர்ப்பங்களில் இந்த மெல்த்தாம் வீடு பயிற்சிக்கு பயன்படுதுனு என் சகோதரர் சொல்லியிருக்கார்.'' சொல்லி விட்டு கண்களை மூடினார் அவர். ''மன்னிக்கணும். எனக்கு கொஞ்சம் மயக்கமா இருக்கு.''*

*''ஆசுவாசப்படுத்திக்கங்க. காலங்கடத்தாம. நான் உங்களை அங்கே கூட்டிட்டுப் போய் விட்டுடறேன்.''*

*அது ஒரு வசீகரமான குரல். நிச்சயமாக. ஏதோவொரு காரணத்துக்காக அக்குரல் அவர் மூச்சை நிறுத்துமளவுக்கு அமைந்திருந்தது. அவர் படுத்துக்கொண்டார். அவர் சொன்னதைப் போலவே ஆசுவாசப்படுத்திக் கொள்ளலானார்.*

★ ★ ★

**மெ**ல்த்தாம் ஹவுசின் புதர்களின் வழியாய் அவ்வீட்டுக்குள் சென்று கொண்டிருந்தார்கள், பமீலாவும் ஹார்ரி கேனும். எஸ்டேட் முழுவதையும் நல்ல அவகாசம் எடுத்துக்கொண்டு சுற்றிக்காட்டினார் மேஜர். அந்த ஒவ்வொரு நொடியையும் முழுக்கவும் கொண்டாடினார்

பமீலா. கேட்டார்: ''உங்கள்ல எத்தனை பேர் இருக்கீங்க, இங்கே?''

''தற்போதைக்கு, தொண்ணூறு பேரளவில் இருக்கோம்.''

''என்னை ஏன் உங்களுடைய கேம்ப் ஏரியாவுக்கு கூட்டிட்டுப் போகக்கூடாது? ரகசியமோ?'

''அடக்கடவுளே... அப்படியெல்லாம் ஒண்ணும் கிடையாது'' என்று சப்புக்கொட்டிய அவர் சொன்னார்: ''நீங்க அபரிமித அழகா இருக்கீங்க. அதுதான் சிம்பிள் ரீசன்!''

ஓர் இளைய சேவகன் அப்போது மேஜர் நோக்கி விரைந்து வந்தான். ''கர்னல் வந்திருக்கார் சார்'' என்றான். ''தலைமை சர்ஜெண்ட் கார்வே அவர்கூட இருக்கார்.''

''அமெரிக்கர்கள் எல்லாத்தையும் ஈசியா எடுத்துக்கிட்டு ஓட்டிடுவாங்கன்னு நான் நினைச்சுக்கிட்டிருந்தேன்.''

கேன் முறைத்தார். ''ஷாஃப்ட்டோ பற்றி உங்களுக்கு தெரியாது. 'துல்லியம்' எனும் வார்த்தையையே அவரை வெச்சுத்தான் உருவாக்கியிருப்பாங்க.''

அவர்கள் மேலே போனார்கள். முழு தீவிரத்துடன், இருப்புக்கொள்ளாமல் அலையும் ஒரு மிருகத்தின் வலிமையுடன் அங்கொருவர் இருந்தார். அவரை பார்த்து கேன் வைத்த சல்யூட்டிலிருந்தே அவர் யார் என்பது பமீலாவுக்கு உணர்த்தப்பட்டிருக்கும். ''கர்னல் ஷாஃப்ட்டோ... இது மிஸ் பமீலா.''

அத்தருணத்தில் ராபர்ட் ஷாஃப்ட்டோவின் வயது 44. அழகாய் இருந்தார். அகந்தைத் தெறித்தது. அனல் கக்கும் முகம். இடப்பக்கத்து பாக்கெட்டின் மேல் பலநிறங்கள் டாலடிக்க மெடல்கள் தொங்கின. உறையில்லாமல் .45

துப்பாக்கியை அவர் இடுப்பில் செருகியிருந்ததிலிருந்தே அவர் ஓர் அசாதாரணமானவர் என்பது விளம்பரமாயிற்று.

ஆழ்ந்து சொன்னார் அவர்: "உங்களுக்கு நேரிட்ட விபத்தைக் கேள்விப்பட்டதும் நான் ரொம்ப விசனப்பட்டேன், மேடம். என்னால் ஏதாவது உதவ முடியுமானால்..."

"உங்க கருணைக்கு நன்றி" என்று முடித்தார் பமீலா. "மேஜர் கேன் என்னை ஸ்டட்லே கான்ஸ்டபிள் வரை கொண்டு போக முன்வந்திருக்கார் - நீங்க அனுமதித்தால். என் சகோதரர் அங்கே ஒரு பாதிரி."

"உங்களுக்கு நாங்க செய்யவல்ல சிறு உதவிதான் இது. நோ ப்ராப்ளம்."

மறுபடியும் கேனை சந்திக்க வேண்டும் என்றொரு ஆவல் அவர் மனதில் எழுந்தது. இதை அடைய ஒரேயொரு வழிதான் இருந்தது. "நாளை இரவு தொழுகையின்போது ஒரு சின்ன பார்ட்டிக்கு ஏற்பாடு பண்ணியிருக்கோம். சில பதார்த்தங்களும் பானங்களும். நீங்களும் மிஸ்டர் கேனும் வரணும்னு ஆவலா இருக்கேன்."

இதற்கு ஷாஃப்ட்டோ தயங்கினார். ஏதோ காரணம் சொல்லி மறுக்கப் போகிறார் என்பது தெரிந்ததும், அவசரமானார் பமீலா. "சர் ஹென்றி - லோக்கல் முக்கியப் புள்ளி, இவரும் வரார். இவரை நீங்க சந்திச்சாச்சா?"

ஷாஃப்ட்டோவின் கண்கள் பிரகாசமாயின. "நோ" என்றார் அவர். "இதுவரை அந்த பாக்கியம் அமையலை."

"மிஸ் வெரேக்கரின் சகோதரர் முதல் பாராசூட் குழுவில் வீரர். அவருடன் துனிஸியாவில் போன வருடம் நாம குதிச்சிருக்கோம். அது நினைவிருக்கா, கர்னல்?"

''நிச்சயமா'' என்றார் அவர். ''அது ஒரு நரக அனுபவம். உங்க சகோதரர் எப்படியோ அதுல தப்பிச்சுட்டார், யங் லேடி.''

''ஆனா அதுல அவருக்கு மிலிட்டரி விருது கிடைச்சது'' என்றார் பமீலா. ''அவரை நினைச்சு நான் ரொம்ப பெருமைப்படறேன்.''

''நாங்க வர்றோம். நீ தேவையான ஏற்பாடுகளை பண்ணிடு, ஹார்ரி. இப்ப நீங்க என்னை மன்னிக்கணும். கவனிக்க எனக்கு முக்கியமான வேலைங்க இருக்கு. வரேன்.''

★ ★ ★

''அவர் உங்களை கவர்றாரா?'' - கடற்கரை சாலையில் ஜீப்பில் திரும்பிக் கொண்டிருந்தபோது பமீலாவிடம் அவர் கேட்டார்.

''நிச்சமா சொல்லத் தெரியல'' என்றார் பமீலா. ''நெருப்புப் போல தெரியறார். நீங்களும் இக்கருத்தை ஒப்புக்கணும்.''

''ஷாஃப்ட்டோ படையில சண்டைக்கோழினு பேர். அந்தக் காலங்களில் தனது வீரர்களின் கையில் கத்தியோடு போருக்கு வெகு தீவிரமாக படைநடத்தவல்ல திறமை இருந்தது அவருக்கு.''

''வேற வகைல சொல்லணும்னா உடலை நம்பி வாழும் அவர் மூளையைப் பயன்படுத்துவது கிடையாதுனு சொல்லலாமா?''

''யாருடைய கட்டளையையும் பிரித்தறிந்து செயல்படுத்த முடியாது அவரால். சண்டை போடுவார். தோற்காமல். பல படைகள்ல மாறிமாறி பணியாற்றியவர். பென்டகன்ல இருந்தார். ஆனா ஒத்துவரலை. ஆனாலும்

தீரர்னு எடுத்த பெயரை நிலைநாட்ட அவர் தவறலை. நார்மாண்டியிலிருந்த ஒரு கலங்கரை விளக்கத்தை தவிடுபொடியாக்கியது... பிரெஞ்சு தீவுகளில் பலமுறை போய் இறங்கி ஜெயிச்சது. இப்படி பல.''

''அவரைப் பற்றி நீங்க ரொம்ப உயர்வா நினைக்காதது போல தெரியுது...''

அப்படியெல்லாம் ஒன்றும் இல்லை என்றும், பல பத்திரிகைகளில் அனைத்திலும் ஷாஃப்ட்டோவுடைய கீர்த்திகள் பாடப்பட்டுள்ளன என்றும் விளக்கினார் ஹார்ரி.

பிறகு மிருதுவாய் பமீலா கேட்டார்: ''நீங்க எதுக்காக இந்த யூனிட்ல சேர்ந்தீங்க, கேன்?''

''மாட்டிக்கிட்டாச்சு'' என்றார் அவர். ''வேற என்னத்தை சொல்ல? இதிலிருந்து தப்பிக்க என்னவெல்லாம் பண்ணுமோ அத்தனையையும் நினைச்சிருக்கேன் - செஞ்சிருக்கேன்.''

''அப்ப, குறிப்பிட்ட எந்த சண்டையிலும் நீங்க ஈடுபடலியா?''

''நோ, மேம்.''

அவர் அப்போது நீட்டிய ஒரு சிகரெட்டை புகைக்க ஆரம்பித்த பமீலா ''இந்த போர் சண்டையெல்லாம் என்னுள்ளே ரொம்பவும் ஆழமா இறங்கிடுச்சு.''

''உங்க சகோதரரால்?''

''அது மட்டுமில்ல. என் தொழிலாலும். நான் நேற்று வேலையில் இருக்கும்போது ஒரு போர் விமானத்தை பார்த்தேன். வடக்கு கடல் பகுதியில். அதன் இறக்கை தீப்பிடிச்சு எரிய, அவன் உள்ளிருந்து கதற...''

''நல்ல நாளாதான் ஆரம்பமாகும்'' என்றார் கேன். ''ஆனா திடுமென்று அப்படியே மாறிடும்.''

கேன் ஸ்டீரிங் சக்கரத்தை பிடிக்க முயன்றபோது தனது கையை ஒரு உத்வேத்தால் அவர் மீது போட்ட பமீலா ''ஸாரி'' என்றாள். ''உங்க மூடை நான் சிதைக்கறேன்.''

''தட்ஸ் ஓ கே.''

பமீலாவின் முகம் இப்போது புதிர் கொண்டது. கேனின் கையை இப்போது உயர்த்திப் பிடித்துப் பார்த்தார் அவர். ''என்னாச்சு இவ்விரல்களுக்கு?'' என்று கேட்டார். ''பல விரல்கள் குரூரமாகியிருக்கு. உங்க நகங்கள் - ஓ காட்... உங்க நகங்களுக்கு என்னாச்சு?''

"ஓ, அதுவா?" என்றவர், "சிலர் அவற்றை பிடுங்கிட்டாங்க" என்றார்.

அவரை குலைநடுங்க பார்த்தார் பமீலா. ''அது - அது - ஜெர்மானியரா, ஹார்ரி?'' - அவர் முணுமுணுத்தார்.

''நோ.'' இன்ஜினை உசுப்பினார் அவர். ''சொல்லப் போனால் அவர்கள் ஜெர்மானியர்கள்தான் - ஆனா எதிர்ப்புறத்தில் மற்றவர்களுக்காக போராடினார்கள். என் வாழ்க்கையில் நான் ஆழமா படிச்ச பாடம் இது: ''உலகத்தை சமைக்க எல்லா வகைகளும் தேவைப்படுது.''

குரூரமாய் சிரித்த அவர் ஓட்டிச்சென்றார்.

★ ★ ★

அதே நாள் மாலையில் நர்சிங்ஹோமில் பெண்ணின் நிலைமை மோசமானது. ஆறு மணிக்கு நினைவிழந்தார் அவர். அவரது நிலைமை அடுத்த நாலு மணிநேரத்துக்கு சொல்லும்படியாய் அமையவில்லை. நர்சின் அவசர அழைப்புக்கு தாஸ் வந்தபோது மணி எட்டு. நிலைமையை

*அறிய ரூபென் வந்தபோது மணி பத்து. ஸாமி ஜாக்ஸனை அறையிலிருந்து அகற்ற போய் வந்திருந்தார்.*

*பென்னின் முகம் வியர்வையில் மூழ்கியிருந்தது. அவர் முனகலாய் உறுமிக் கொண்டேயிருந்தார். அழுகிய மாமிசத்தின் துர்நாற்றம் அவ்வறையில் உருவாகத் துவங்கியிருந்தது. சுத்தம் செய்ய தாஸ் தூக்கிக்காட்டிய முட்டிப்பகுதியை பார்த்த ரூபென் பயத்தில் முகத்தை திருப்பிக் கொண்டு விட்டார். ''பென்?'' என்றழைத்தார்.*

*கார்வால்ட் கண்களை திறந்தார். உடனடியாய் தனது சகோதரனை அவர் அடையாளம் கண்டுகொண்டதை போல தெரியவில்லை. பிறகுதான் அவர் சிரித்தார். பிறகு அவர் கண்களை மூடிக்கொண்டு விட்டார். ரூபென், தாஸ் பக்கமாய் திரும்பினார். ''ரொம்ப மோசமா ஆகிடுச்சா?''*

*''ரொம்ப ரொம்பப்பா. இதையே ரெண்டு பேரும் எத்தனை தடவை மாற்றி மாற்றி கேட்பீங்க? நான் ஏற்கெனவே எச்சரித்திருந்தேன் அவரை.''*

*''ஓ மை காட்'' என்றார் ரூபென். ''ஆஸ்பத்திரிக்குப் போயிருக்கணும் அவன்.''*

*பென்னின் கண்கள் திறந்து கொண்டன. அவர் நடுநடுக்கமாய் பார்த்தார். தனது சகோதரனின் மணிக்கட்டுக்காக தன் கையை அவர் நீட்டினார். ''ஆஸ்பத்திரிங்கிற பேச்சே கூடாது. கேட்குதில்லே?''*

*மறுபடியும் கண்கள் மூடிக்கொண்டன. ''ஒரேயொரு வாய்ப்பிருக்கு'' என்றார் தாஸ். ''பென்ஸிலின்னு ஒரு மருந்திருக்கு. நீங்க கேள்விப்பட்டிருக்கீங்க, இல்ல?''*

*''நிச்சயமா. எதையும் அது குணமாக்கிடும்னு சொல்லிக்கிறாங்க.''*

''யெஸ். இதுபோன்ற கேஸ்களில் அது அதிசயிக்கத்தக்க ரிசல்ட்ஸ் கொடுக்குது. அதை உங்களால கொண்டு வர முடியுமா? இன்னிக்கே - ராத்திரி?''

''ப்ரிமிங்ஹாம்லேயே அது இருந்தால் - இன்னும் ஒரு மணிநேரத்துல அது உங்க கைகளில் இருக்கும்.'' கதவு வரை விரைந்து போய்விட்டு திரும்பிய ரூபென் சொன்னார்: ''ஆனா அவர் இறந்து விட்டால்... மகனே நீயும் அவருடனேயே போக வேண்டியிருக்கும்.''

அவர் வெளியேறினார். அக்கதவு காற்றில் ஆடிக்கொண்டிருந்தது.

★ ★ ★

**அ**தே கணத்தில் லாண்ட்ஸ்வூர்த்தில் டகோட்டா கிளம்பியது. ரன்வேயிலிருந்து எழுந்து கடற்பரப்புக்கு மேல் எகிறியது. கெர்ரிக், நொடியையும் வீணாக்கவில்லை. ஆயிரமடிக்கு மேலே கொண்டு போய் அதனை ஓட்டினார். உள்ளே ஸ்டைனரும் அவருடைய ஆட்களும் தயாரானார்கள். பாராசூட்டிலிருந்து குதிக்கும் பிரிட்டிஷ் உடையில் அவர்களனைவரும் மாறியிருந்தார்கள். ''ஆல் ரைட்'' என்று ஸ்டைனர் அழைப்பு விடுத்தார்.

அனைவரும் கயிறுகளில் க்ளிப் செய்து கொண்டார்கள். தங்களுக்கு முன்னால் இருக்கும் வீரரை ஒவ்வொருவரும் கவனித்துக் கொண்டார்கள். ஸ்டைனர், ப்ரஸ்டனுக்காக பார்த்தார். அவர் கடைசியிலிருந்தார். தனது பெல்ட்டினை இறுக்கிக் கொள்ளும்போது அந்த ஆங்கிலேயர் கலவர நடுக்கத்தில் இருப்பதைப் பார்த்தார் ஸ்டைனர்.

''பதினைந்து நொடிகள்'' என அறிவித்தார் அவர். ''ஆக நிறைய அவகாசம் கிடையாது உங்களுக்கு - புரிகிறதா? ஆக எல்லோரும் உருப்படியா குதிச்சு திரும்புங்க. காலை

உடைச்சுப்பதாக இருந்தால் அதை இன்னிக்கே, இங்கேயே, இந்தப் பயிற்சியிலேயே உடைச்சுக்குங்க. நார்ஃபாக்ல அல்ல.''

அங்கு பொதுவாய் சிரிப்பு விளைந்தடங்கியது. முதலில் ஸ்டைனர் சென்றார். நியூமேன் அவருடைய பெல்ட்டினை சரிபார்த்தார். கதவருகே சென்றார். அவரின் தலைக்கு மேலிருந்த சிகப்பு விளக்கு ஒளிர்ந்தது. திடீரென்று கொத்தாய் காற்று வீசியது.

இதுதான் குதிக்கும் தருணம். ஒவ்வொருவருக்கும் இது நடந்தது. ரிட்டர், ப்ராண்டிட்... ப்ரஸ்டனை பொறுத்த மட்டில் அவர் அங்கு நின்று கொண்டிருந்தார். வாய் திறந்தபடி. இரவினையே வெறித்தபடி.

''ம், கோ ஆன்'' - அவரது தோளைப் பிடித்து திருகிய ஸ்டைனர் சொன்னார்.

மறுத்து தலையசைத்தார் அவர். ''என்னால இயலாது.'' அழுதார். ''காண்ட் டூ இட்.''

பளீரென்று அவரை அறைந்தார் ஸ்டைனர். கையோடு இழுத்துக் கொண்டு கதவு வரை போனார். தனது இரு கைகளாலும் முகத்தை மூடிக்கொண்டு அந்த நுழைவைவிட்டு அகலாமல் நின்றார் ப்ரஸ்டன். அவரது முதுகில் காலை வைத்து பதித்து அப்படியே அந்தரத்தில் தள்ளிவிட்டார். அவருடைய கயிறை வலுவாக பிடித்தபடி கண்காணிக்கலானார்.

★ ★ ★

உயரம் கூடிப்போய் குதிக்கும்போது அதிகம் பயப்படுவதற்கு எதுவும் இருக்காது. தான் குட்டிக்கரணம் அடித்துக் கொண்டிருப்பதை உணர்ந்தார் ப்ரஸ்டன். திடீர் ஜம்ப். காற்றில் அடங்கி சராசரியாகும், பாராசூட். பிறகு

ஒன்றுமில்லை. காக்கி குடைக்கு கீழே வெறுமனே தொங்கியபடி ஆடிக்கொண்டிருந்தார் ப்ரஸ்டன். தட்ஸ் ஆல்.

அது ஒரு சுகானுபவம். கீழ்வானத்தில் தனித்து தெரியும் நிலா. சமதளமாய் தெரியும் ஈர மணற்குன்றுகள். வரிசையாய் குதித்தெழும் நுரையலைகள். நிமிர்ந்து அவர் பார்த்தபோது ஸ்டைனர் ஒருமுறை தோன்றினார். தவிர தான் மிக வேகமாய் பறந்துக் கொண்டிருப்பதும் விளங்கியது.

அனைவரது இடுப்பிலும் இருபது அடிக்கு கீழே தொங்கிக்கொண்டிருக்குமாறு ஒரு பை கட்டப்பட்டிருந்தது. இது தரையை தொடும்போது உணரும் சமிக்ஞையே பாராசூட் தளம்தொடப் போகின்றது என்பதற்கான நிறைவான அறிகுறி. இது தற்சமயம் ப்ரஸ்டனுக்கு நடந்தது. சற்று நேரத்தில் கால் முட்டிகள் மணலில் மேவ தரையிறங்கியிருந்தார்.

ஒரு தனிப்பட்ட வெற்றி அவரை கவ்வியது. இதுவரை வாழ்க்கையில் அவர் சாதித்தேயிராத வெற்றி முழக்கம் அவரை ஆட்கொண்டது.

"நான் செஞ்சுட்டேன்!" என உரக்க கத்தினார். "எந்த நாயும் என்னை இனி ஏளனம் பேச முடியாது. நான் செஞ்சுட்டேன்! நான் செஞ்சுட்டேன்!"

ஆஸ்பத்திரி கட்டிலில் அசைவற்றுக் கிடந்தார் பென். அவருடைய இதயத்துடிப்பினை டாக்டர் ஸ்டெதஸ்கோப்பில் தேடிக்கொண்டிருந்தபோது ஓர் ஓரமாய் நின்றுகொண்டிந்தார் ரூபென். பிறகு, "எப்படியிருக்கார்?" என்று கேட்டார்.

"இன்னும் உயிருடன்."

ரூபென் தான் எடுத்திருந்த முடிவினை செயல்படுத்தினார். டாக்டரின் தோளைப் பிடித்திழுத்து அவரை கதவின் மீது தள்ளினார். ''எத்தனை சீக்கிரம் முடியுமோ, அத்தனை சீக்கிரமாய் ஆம்புலன்ஸை தயார் பண்ணு. நான் அவனை நல்ல மருத்துவமனைக்கு கூட்டிட்டுப் போயிடறேன்.''

''அப்ப இது ஒரு போலீஸ் கேஸா ஆகிடும்'' என்று சுட்டிக்காட்டினார் தாஸ்.

''இதுக்கெல்லாம் நான் பயப்படுவேன்னு நினைச்சியா?'' - உறுமினார் ரூபென். ''அவன் எனக்கு உயிரோட வேணும், விளங்குதா? என் சகோதரன் அவன். ம், மேற்கொண்டு ஆவன செய்.''

கதவை திறந்து தாஸை வெளியே தள்ளி விட்டார் அவர். படுக்கைக்கு திரும்பியபோது அவருடைய கண்களில் நீர் தளும்பிக் கொண்டிருந்தது. ''சத்தியம் செஞ்சு தரேன் பென்'' - உடைந்து போய் சொன்னார். ''அந்த ஐரீஷ்க்கார நாயை விடமாட்டேன் நான்.''



# 13

**45** வயது கிரம்பிய நிலையில் ஜேக் ரோகன் ஒரு போலீஸ்காரராக கால் நூற்றாண்டு அனுபவம் பெற்றிருந்தார். மூன்று ஷிப்டுகளில் உழைத்து இத்தனை அனுபவம் போட்டிருப்பது பாராட்டப்பட வேண்டிய ஒன்றே. ஆனால், அதுதான் போலீஸ்காரன் வாழ்க்கை.

அது நவம்பர் 2, செவ்வாய்க்கிழமை. ஸ்காட்லாண்ட் யார்ட் அலுவலகத்துக்குள் நுழைந்தார் அவர். ஐரீஷ் கிளப் விஷயமாய் குறுக்கு விசாரணையை சென்ற ராத்திரி முழுக்க நடத்தியுள்ள நிலையில், அவர் இப்போது இங்கு வந்திருக்கவே கூடாது. போய் படுத்திருக்க வேண்டும். ஆனாலும் கொஞ்சமாய் வேலை பாக்கியிருந்தது. அதற்காக வந்திருக்கிறார்.

தனது டேபிளில் அவர் உட்கார்ந்தவுடன், அவரது அறைக்கதவில் சில தட்டுக்கள் விழுந்தன. இவரது அசிஸ்டெண்ட், துப்பறியும் இன்ஸ்பெக்டர் ஃபெர்ஜஸ் க்ரேண்ட் வந்திருந்தார்.

வந்தவரை அப்படியே தடுத்தார் இன்ஸ்பெக்டர். "சில கடிதங்கள் எழுதணும். கோப்பை டீ சாப்பிடணும். உடனடியா வீட்டுக்கு திரும்பிப் போயிடணும் - தூங்க. இவைதான் இப்போதைய என் வேலைகள், ஃபெர்ஜஸ். நேற்றிரவு எனக்கொரு நரகம்."

''எனக்கிது தெரியும் ஸார்'' என்றார் க்ரேன்ட். ''ஓர் அசாதாரண ரிப்போர்ட் ஒண்ணு ப்ரிமிங்ஹாம் போலீஸ்கிட்டேயிருந்து ஜஸ்ட் வந்தது. அது உங்களுக்கு இண்ட்ரஸ்டிங்கா இருக்கும்னு நினைச்சேன் நான்.''

''என்னை மட்டும் சொல்றீங்களா அல்லது ஐரீஷ் பிரிவை குறிப்பிடிறீங்களா?''

''ரெண்டையும்.''

''ஆல் ரைட்'' என்று தனது நாற்காலியில் வசதியாய் அமர்ந்துக் கொண்ட ரோகன், தன்னுடைய பைப்பில் புகையிலையை நிரப்பிக் கொண்டார். ''படிக்க மூட் இல்லை எனக்கு. ஸோ, சொல்லுங்க.''

''கார்வால்ட்னு ஒரு பெயரை நீங்க கேள்விப்பட்டிருக்கணும்...''

ரோகன் நிறுத்தினார். ''பென் கார்வால்ட்டையா குறிப்பிடிறீங்க? பல வருடங்களா இருக்கும் சிம்ம சொப்பனமாச்சே அவன். பெரிய வில்லன்.''

''இன்னிக்கு காலைல அவன் செத்துட்டான். குண்டுவெடிப்பு ஒன்றின் காயத்தின் தீவிரத்தால். அவரை காப்பாற்றும் கட்டம் தாண்டிய நிலையில் ஆஸ்பத்திரிக்கு கொண்டு போகப்பட்டிருக்கார்.''

ரோகன் ஒரு தீக்குச்சியை பற்ற வைத்துக் கொண்டார். ''இன்று காலையில் இப்படியொரு நற்செய்தியானு மனம் மகிழும் ஒரு கூட்டத்தையே எனக்கு தெரியும். இருக்கட்டும்... நமக்கெதுக்கு இது இப்ப?''

''அவர் வலக்கால்ல சுடப்பட்டிருக்கார் - ஓர் ஐரீஷ்காரனால்.''

ரோகன் சொன்னவரை முறைத்துப் பார்த்தார். ''இது இண்ட்ரஸ்டிங். யாராவது நமக்கு குறுக்கே வந்தால் தரப்படும் ஐரீஷ் வகை தண்டனை. அவன் பேர் என்ன?''

''மர்ஃபி, ஸார்.''

''இருக்கலாம். மேற்கொண்டு ஏதாவது இருக்கா?''

''நீங்களே கணிக்கலாம்'' என்றார் க்ரேன்ட். ''கார்வால்ட்டுக்கு ஒரு சகோதரன் இருக்கார். இவருடைய இழப்பினால் உடைஞ்சுப் போயிருக்கார். மர்ஃபியைப் பிடிச்சுத் துண்டுத் துண்டாக்கணும்னு சொல்லிக்கிட்டு வந்திருக்கார் இவர்.''

ரோகன் ஆமோதிப்பாய் தலையசைத்தார். ''அவருடைய கோரிக்கையை நிறைவேற்றித் தரமுடியுமானு பார்ப்போம். இதெல்லாம் எதனால்?''

க்ரேன்ட் சற்று விளக்கமாய் சொல்லி முடித்தபோது ரோகனின் முகம் நெளிந்தது. ''ஓர் ஆர்மி ட்ரக், ஒரு ஜீப், காக்கி பெயிண்ட்? இவற்றால் அவன் பண்ண நினைச்சதுதான் என்ன?''

''ஏதாவது ராணுவ கேம்பில் கைவரிசையைக் காட்ட நினைச்சிருக்கலாம், ஸார். ஆயுதங்களைக் களவாட.''

ரோகன் எழுந்து ஜன்னல் வரை போனார். ''இதை, நம்பத்தகுந்த ஆதாரங்கள் இல்லாம என்னால அத்தனை சுலபமா வாங்கிட முடியாது. அதெல்லாம் இருக்காது. கார்வால்ட்டுடைய சகோதரர் என்னவா இருக்கலாம்னு சொல்றார்?''

''திருடனா இருக்கலாம்னு ஊகம்.''

''கால்முட்டியில் துப்பாக்கியால சுடுவது நடக்காமல் இருந்திருந்தால், இதை நான் நம்புவேன். இது முழுக்க முழுக்க ஐரீஷ் ராணுவ வகையான நடவடிக்கை. நோ. இது என்னை ரொம்ப ஈர்க்குது, ஃபெர்ஜஸ். இதனால நமக்கு ஏதாவது முக்கியமான துப்புகள் தெரிய வரலாம்.''

''அப்ப அடுத்து என்ன செய்வது, ஸார்?''

யோசித்தார். மேலும் கீழும் நடந்தார். ''எனக்கு ஒரு விஷயம் தெரியும்'' என்றார், டிடெக்டிவ் பக்கமாய் திரும்பி. ''நீங்க இதை தனிப்பட்ட முறையில கையாளுங்க. பர்மிங்ஹாமை சேர்க்க வேணாம். ஒரு காரை புக் பண்ணிக்கிட்டு நேரா அங்கே போங்க. கோப்புகள், போட்டோக்கள் இத்யாதிகளைக் கையோடு கொண்டு போங்க. நமக்கு தெரிந்த ஐரீஷ் ராணுவ ஆட்கள் அத்தனை பேரையும் காட்டுங்க. கார்வால்ட் யாரையாவது கை காட்டலாம்.''

''அப்படி முடியாமல் ஆகிவிட்டால்?''

''அப்ப நாம இங்கே உட்கார்ந்து கேள்விகளை யோசிப்போம். விடைகாண, அனைத்து வழக்கமான வழிகளிலும் முயற்சி செய்வோம்.''

''ரைட் ஸார்'' என்றார் க்ரேன்ட். ''நான் ஆரம்பிக்கிறேன்.''

★ ★ ★

**பி**ரின்ஸ் பகுதியின் இரண்டாவது தளத்தில் தனக்களிக்கப்பட்ட உணவினை ஜெனரல் கர்ல் ஸ்டைனர் சாப்பிட்டு முடித்தபோது மணி எட்டு. கோழிக்கறி, உருளைக்கிழங்கு சிப்ஸ், ஸாலட்... எல்லாம் இவருக்கு பிடித்தவையே. நிறைவாய் ஓர் அற்புதமான காபி.

எலெக்ட்ரிக் ட்ரீட்மெண்ட் கொடுக்கப்பட்டு இவர் சீர்குலைந்த அந்த இரவுநேர அனுபவத்திற்கு பிறகு நிலைமை முழுக்கவும் மாறியிருந்தது. அது நடந்த மறுநாள் கண்விழித்தபோது தான் ஒரு வசதியான படுக்கையில் தூங்கியிருப்பதை உணர்ந்தார் ஸ்டைனர். அந்த கொடுங் கோலன் ரோஸ்மேன் மற்றும் அவனுடைய ஆட்கள் பற்றிய எவ்விதமான அறிகுறிகளும் அங்கு இல்லை. ஸைட்லர்

என்றொருவன் மட்டுமிருந்தான். கனிவானவன். தராதரம் புரிந்தவன்.

மிகுந்த மன்னிப்புகளை அவன் கேட்டுக் கொண்டான். யாரோ தவறான தகவலை உள்நோக்கம் மிகுந்து தந்திருக்கிறார்கள்... அதனால் விளைந்த தப்புகள். ஹிம்லரே முழு விசாரணைக்கும் உத்தரவிட்டிருந்தார். இத்தனைக்கும் காரணமானவர்கள் நிச்சயம் தண்டிக்கப்படுவார்கள். இவ்வளவு தெரிந்தபிறகும்கூட ஜெனரல் ஸ்டைனர் கம்பிகளுக்குப் பின்னால் இருக்க வேண்டிய நிர்ப்பந்தம் இருப்பதாய்தான் நிலைமை அமைந்தது. மேலும் ஒருசில நாட்களுக்கு. இந்த இக்கட்டினை அவர் புரிந்து கொள்ள வேண்டும்.

அவர் புரிந்து கொண்டார். அவருக்கெதிராய் என்ன வெல்லாமோ சொல்லப்பட்டனவே யொழிய, கான்க்ரீட்டாக ஒன்றும் நிரூபணமாக இல்லை. மேலும், கொடுமையின் உச்சத்தில் நின்று ரோஸ்மேன் ஆடியிருந்தபோதிலும் வாய் திறந்து ஒரு வார்த்தை பேசவில்லை இவர். ஆக, யாரோ எங்கோ செய்திருக்கும் போலி ஆட்டம்தான் இத்தனைக்கும் காரணம் என்றே உணரப்பட்டது. விடுதலையாகும்போது ஜெனரல் நல்லபடியாய் ஆரோக்கியமாய் தெரிய வேண்டும் என்ற காரணத்துக்காக இப்போது அவரை பூரணமாய் கவனித்துக் கொண்டிருக்கிறார்கள். அவரது காயங்கள் அனைத்தும் ஏற்கெனவே மறைய ஆரம்பித்து விட்டன. கண்களை சுற்றி கருவளையங்கள்தான் நீடிக்கின்றன.

இந்நிலையில் அவரது அறையின் கதவு இப்போது திறக்கப்பட்டது. அங்கு விளக்கவொண்ணா அமைதி நிலவியது. அவர் பிடரியில் மயிர்கூச்செறிய ஆரம்பித்தது.

திரும்பிப் பார்த்தார். ரோஸ்மேன் வாசலில் நின்று கொண்டிருந்தான். கூடவே இரு அடியாட்கள்.

ஸ்டைனருக்குள் என்னவோ சுக்குநூறானது. அனைத்தும் இப்போது சிறப்பாய் விளங்கின. ''யூ, நாயே'' என்றலறினார். கையில் வைத்திருந்த கோப்பை காபியை அவர் முகத்தில் வீசினார்.

ஒரு அடியாள் அவரை நெருங்கி ஓடினான். ஸ்டைனரை அவன் குத்த அவர் அலறிப்புடைத்து விழுந்தார். அவரது தலையின் ஒருபுறத்தில் அடிக்கப்பட்ட அடி அவரை முற்றிலுமாக நிலைதவற வைத்தது.

''சிறைக்கு'' - சாதாரணமாய் சொல்லிவிட்டுப் போனான் ரோஸ்மேன்.

இருவரும் ஸ்டைனரை இழுத்துக் கொண்டு சிறை அறைக்குப் போனார்கள்.

★ ★ ★

**அ**து ஹிம்லரின் அலுவலக அறை. மேக்ஸ் ரேடில் கதவினைத் தட்டிவிட்டு உள்ளே போனார். ''இங்கேதான் வந்துக்கிட்டிருப்பீங்கன்னு நினைச்சுக்கிட்டிருந்தேன்.''

''ராத்திரி பிளேன்லே பாரீஸ் போறேன்'' - அவரிடம் சொன்னார் ரேடில். ''அட்மிரல் கனாரீஸ் இன்னிக்கு காலைல இத்தாலி போயிருப்பது, ஸாருக்கே தெரியும்.''

''துரதிர்ஷ்டம்'' என்றார் ஹிம்லர். ''ஆங்... ரோஸ்மேனிடம் இன்னிக்கு காலைல நீங்க தந்திருந்த அறிக்கையை நான் படிச்சேன். அந்த ஏரியாவுக்கு வந்திருக்கும் இந்த அமெரிக்க ரேஞ்சர்கள் பற்றி என்ன நினைக்கிறீங்க? அது என்ன இடம், காட்டுங்க...''

வரைபடத்தை விரித்து அதில் மெல்த்தாம் ஹவுஸ் பகுதியை சுட்டிக்காட்டினார் ரேடில். ''ஸ்டட்லே கான்ஸ்டபிளிலிருந்து வடக்கு கரையோரமாய் எட்டு கல் தொலைவு இருக்கு, இப்பகுதி. ஹாப்ஸ் எண்ட்டிலிருந்து 12

*அல்லது 13 மைல் வரும். சமீபத்துல ரேடியோ தொடர்புல பேசினபோது அதனால எவ்விதமான சங்கடங்களும் நேராதுனு சொன்னார் மிஸஸ் க்ரே.''*

*ஹிம்லர் ஆமோதித்தார். ''உங்களுடைய ஐரீஷ்மேன் அவருக்கு தந்திருந்தவற்றை முடிச்சுட்டார்னு கேள்விப்பட்டேன். இனி எல்லாம் ஸ்டைனர் கைல இருக்கு.''*

*'அவர் நம்மை தோற்க வைக்கமாட்டார்னு நான் ஸ்திரமா நம்பறேன்.''*

*''ஆமாம், நான் ஒரு விஷயத்தை மறந்துடறேன்'' என்றார் ஹிம்லர். ''அவர்தான், இவ்விஷயத்துல, ஒரு பலிகடாவா இருக்காரே...''*

*''மேஜர் ஸ்டைனருடைய ஆரோக்கியம் பற்றி ஸார் கொஞ்சம் சொல்ல முடியுமா?''*

*''நேற்று சாயந்திரம் நான் அவரை கடைசியா பார்த்தேன்'' - ஹிம்லர் மிகவும் நிஜமாய் பதில் தரலானார். ''அவர் என்னை பார்க்கலேங்கிறதையும் சொல்லிக்கறேன். அவர் சாப்பிட்டிருக்கிட்டிருந்தார், அப்ப'' என்றவர் கேட்டார்: ''வெள்ளிக்கிழமை அவங்களெல்லாம் எத்தனை மணிக்கு கிளம்பறாங்க.''*

*''நள்ளிரவுக்கு கொஞ்சம் முன்னாடி. ஒரு மணிநேர ஆகாய பிரயாணம் - வானிலை சரியாக இருந்தால்.''*

*ஹிம்லர் நிமிர்ந்து பார்த்தார். விழிகள் குறிவைத்திருந்தன. ''கர்னல் ரேடில்... நான் ஒருவிஷயத்தை நிச்சயப்படுத்திட விரும்பறேன். வானிலை இருக்கோ இல்லையோ... ஏற்பாட்டின்படி ஸ்டைனரும் அவருடைய ஆட்களும் போறாங்க, ஓ கே? இன்னொரு ராத்திரி வரையிலும் தள்ளிப்போடக்கூடிய சமாச்சாரம் கிடையாது இது. 24 மணிநேரமும் இந்த இடத்துக்கு ஒரு லைன்*

இணைப்பிலேயே இருக்கும். ஆக நீங்க ஒவ்வொரு மணிநேரமும் நிலைமையின் வீரியத்தை என்னிடம் சொல்லிக்கிட்டே இருக்கணும். எல்லாம் நல்லபடியா முடியும்வரை.''

''நிச்சயமா, ஸார்.''

ரேடில் வெளியேறத் திரும்பியபோது, ''இன்னொரு சமாச்சாரம்'' என்றார் ஹிம்லர். ''பல காரணங்களுக்காக, இவ்விஷயத்தின் முன்னேற்றம் பற்றிய எந்த தகவல்களையும் நான் ஃப்யூர்ரெர்கிட்டே சொல்லலை. இது ரொம்ப கடினமான ஒரு காலகட்டம், ரேடில். ஜெர்மனியின் முடிவே நம்முடைய தோள்களில்தான் உக்கார்ந்துக்கிட்டிருக்கு. எப்படி சொல்வது, ஆங்... இது அவருக்கு ஒரு ஆச்சரியமா அமையணும் என்பது என் எண்ணம்.'

ஹிம்லர் சீரியஸாகத்தான் பேசிக் கொண்டிருக்கிறார் என்றுணர்ந்தார் ரேடில்.

அவர் தொடர்ந்து கொண்டிருந்தார்: ''நாம அவரை ஏமாற்றம் அடைய வைச்சுடக்கூடாது என்பது ரொம்ப முக்கியம். நாம எல்லாம் இப்ப ஸ்டைனர் கையிலதான் இருக்கோம். இதை அவருக்கு நல்லா உணர்த்திடுங்க.''

''செஞ்சுடறேன் ஸார்.''

ஹிம்லர் ஒரு சல்யூட் வைத்துவிட்டு சொன்னார்: ''வாழ்க ஹிட்லர்!''

★ ★ ★

டிர்பிட்ஸ் உல்ஃபரிலிருக்கும் தனது அலுவலகத்துக்கு ரேடில் சென்றபோது அவருக்காக ஒரு பிரயாணப் பையை பேக் செய்துக் கொண்டிருந்தான் ஹோஃபர். ஆர்வமாய் கேட்டான்: ''ஐயா நல்லாத்தானே இருக்கீங்க?''

''நம்ம ஹிம்லர் இப்ப வாய்தவறி சொன்ன ஒரு தகவல் என்ன தெரியுமா? எத்தனை தூரத்துக்கு நாம

*பிரயாணிச்சிருக்கோம் என்பதை இதுவரை அவர் ஃப்யுர்ரெர்கிட்டே சொல்லவே இல்லையாம். அவரை இவர் ஆச்சரியப்படுத்த விரும்பறாராம். இப்ப இது நல்ல இனிப்பான சேதி இல்லை?''*

*''கடவுளே!''*

*''ஆல் ரைட். என்னுடைய பாரீஸ் ஃப்ளைட் எத்தனை மணிக்குனு கேட்டியா?''*

*''பத்தரைக்கு. ஒன்பதே காலுக்கு ஒரு காரை வரச்சொல்லியிருக்கேன்.''*

*''அங்கிருந்து ஆம்ஸ்டர்டாமுக்கு எத்தனை மணிக்கு விமானம்?''*

*''நாளை காலைலே. பதினோரு மணியையொட்டி இருக்கும். நிச்சயப்படுத்தி சொல்லலே.''*

*''நல்லது. வெதர் நல்லபடியா இருக்கணும். வானிலை அறிக்கை என்ன சொல்லுது?''*

*''நல்லாயில்லேனு சொல்லுது. செமத்தியான குளிர் இருக்காம்.''*

*''பனி என்ன இப்படி உயிரை வாங்குது?'' என்றார் க்ரேன்ட். ''பிரயாணம் பண்ணவே முடியலியே.''*

*ரேடில் சிந்திக்கலானார்.*

★ ★ ★

**ரோ**கன் கேட்டார்: ''ஏதாவது நகர்ந்திருக்கா?''

*தனது பெட்டியை திறந்த க்ரேன்ட், தனது கோப்பிலிருந்து ஒரு கார்டை எடுத்தார். அதனை ரோகனிடம் தந்தார். அதில் லியாம் டெவ்லினின் புகைப்படம் பின் செய்யப்பட்டிருந்தது. நம்பமுடியாதபடி, அதில் அவர்*

வயதானவராக இருந்தார். அடியில் பல பெயர்கள் தட்டச்சு செய்யப்பட்டிருந்தன. "இவன்தான் மர்ஃபி, ஸார்."

ரோகன் மெலிதாய் விசிலடித்தார். "இவனா? நிச்சயமா?"

"ரூபென் கார்வால்ட் நிச்சயமாங்கிறார்."

"ஆனா இது விளங்கலியே" என்றார் ரோகன். "கடைசியா நான் கேள்விப்பட்டதன்படி, இவர் ஸ்பெயின்ல ஏதோவொரு சிக்கல்ல மாட்டிக்கிட்டிருக்கார். ஆயுள்தண்டனையில்லே அதுல இவருக்கு கிடைச்சது."

"அப்படி ஒண்ணும் தெரியல ஸார்."

நான் இதுவரை சந்திக்காத ஒரு சிலர்ல இவனும் ஒருத்தன். மிஸ்டிரி மேன். இத்தனை புனைப்பெயர்களா இவனுக்கு?"

"ட்ரினிட்டி காலேஜ் போயிருப்பதாய் ரிக்கார்டு சொல்லுது. நல்ல இங்கிலீஷ் இலக்கியம். ஆல் ரைட் ஸார். இதை நாம எப்படி கையாளப் போகிறோம்?"

"ட்யூப்ளின்ல இருக்கும் ஸ்பெஷல் பிராஞ்சுடன் முதல்லே தொடர்பு கொள்ளுங்க."

"அதுக்கப்புறம்?"

"அவன் இங்கே இருப்பதாய் இருந்தால், நிச்சயமாய் உள்ளூர் போலீஸ்லே அவன் பதிவு பண்ணியிருக்கணும். ப்ளஸ் ஒரு போட்டோவுடன்."

"அது, தலைமையகத்துக்கு அனுப்பப்படணும்..."

"எக்ஸாக்ட்லி" - ரோகன் மேஜையை குத்தினார். "ரெண்டு வருஷமா நாயா நான் கத்திக்கட்டிருக்கேன். இப்படிப்பட்ட பயலுங்களையெல்லாம் ஒரு பொதுவான சென்ட்ரல் கோப்புக்குள்ளே கொண்டு வந்து வெச்சுக்கணும்னு. ஆனா கிட்டத்தட்ட முக்கால் மில்லியன்

பேர் இத்துறையில் மாரடிச்சுக்கிட்டிருக்கோம். யார் நான் சொன்னதை கேட்டது?''

''ஆக நீங்க என்ன சொல்லவரீங்கன்னு விளங்குது. போட்டோ பிரதிகளை அனைத்து நகரங்கள் மற்றும் காவல்துறைகளுக்கும் அனுப்பி வைக்கணும். அவர்களிடம் இருக்கும் பதிவுகள்ல ஒப்பிட்டு அலசணும்.'' சொல்லிவிட்டு கார்டை எடுத்துக் கொண்ட க்ராண்ட், ''இதுக்கு நேரம் பிடிக்கும்'' என்றார்.

''வேற என்னத்தை நாம பண்ண முடியும்? ஒரு தாளில் இதை ஒட்டி, இந்த மனிதனை யாராவது பார்த்திருக்கீங்களானு கேட்பதா? அவன் எங்கே என்ன பண்றான்னு நான் தெரிஞ்சுக்கணும், ஃபெர்ஜஸ்... அப்படியே அவனை கோழி அமுக்குவதைப் போல பிடிச்சுடணும். நாம அவனை தேடறோம்னு பயமுறுத்த நான் விரும்பல.''

''சரி, ஸார்.''

''சொன்னதைப் போல பண்ணுங்க. உங்க வேலைலே முதல் இடம் இதுக்குத்தான். இதுக்கு தேசிய பாதுகாப்பின் சிகப்பு கோப்பு அந்தஸ்தைக் கொடுங்க. மவனுங்க அப்பவாவது உழைக்கிறானுங்களானு பார்ப்போம்.''

க்ராண்ட் போனார். டெவ்லினின் கோப்பினை எடுத்துக் கொண்ட ரோகன் அதனை ஆழமாய் படிக்க ஆரம்பித்தார்.

பாரீஸில் அனைத்து விமானங்களும் தரையிறக்கப் பட்டிருந்தன. ஊர்லீ தளத்திலிருந்து ரேடில் வெளியே வந்தபோது அவர் முகத்துக்கு முன்னால் நீட்டப்பட்ட அவருடைய கையையே அவர் பார்க்க முடியாத அளவுக்கு பேய்ப்பனியாயிருந்தது. உள்ளே போய் டெபுடி ஆபிஸரிடம் கேட்டார்: ''நீங்க என்ன நினைக்கிறீங்க?''

''மன்னிக்கணும், ஸார். லேட்டஸ்ட் வானிலை அறிக்கையின்படி, நாளை காலைவரை எதுவும்

செய்வதிற்கில்லை. அதுக்கப்புறமும் தாமதம் இருக்கும்னு நான் இப்பவே சொல்லிக்கிறேன். இந்தப் பனி இன்னும் ரெண்டு நாட்களுக்கு இருக்கும்னு சொல்லிக்கிறாங்க.''

ரேடில் முடிவெடுத்துக் கொண்டு தன் பையிருந்த இடத்துக்கு வந்தார். ''நாளை மதியத்துக்குள் நான் ராட்டர்டேம் பகுதியில் இருக்க வேண்டியது மிக அவசியம். நீர்வழிப் போக்குவரத்து எங்கேயிருக்கு?''

★ ★ ★

இதே கணத்தில், ஸ்டட்லே கான்ஸ்டபிளில் இருக்கும் ஜோன்னா க்ரேயின் காட்டேஜில் இருந்த சர் ஹென்றி, அவருடனும் ஃபாதர் வெரேக்கருடனும் சீட்டாடிக் கொண்டிருந்தார். குடிக்க அவரிடம் நிறைய மது இருந்தது. அவர் குஷியான மனோநிலையிலும் இருந்தார்.

எனவே விளையாட்டு வளர வளர, அவருடைய போதையும் வளர்ந்தது. ஒருநிலையில் கட்டுக்கடங்காமலும் ஆனது.

இதை கவனித்த வெரேக்கர் ''இன்னிக்கு நீங்க ரொம்ப நல்ல மூடுல இருப்பதா படுது'' என்றார்.

கணப்புக்கு முதுகு காட்டிக்கொண்டு தன்னை உஷ்ணமாக்கிக் கொண்டிருந்த ஹென்றி, ''இதுக்கு காரணம் இருக்கு, பிலிப்'' என்றார். பிறகு காட்டாறாய் அவரிடமிருந்து பின்வரும் வார்த்தைகள் வந்தன: ''அதை ஏன் உங்ககிட்டே நான் சொல்லக்கூடாது?''

கடவுளே, கிழ முட்டாள் இவன். ஜோன்னா க்ரேயின் அலாரம் அடித்தது. அவசரமாய் சொன்னார்: ''உங்க ரகசியத்தை சொல்லித்தான் ஆகணுமா, ஹென்றி?''

''ஏன் சொல்லக்கூடாது?'' என்று விட்டார் அவர். ''உங்களையும் பிலிப்பையும் நான் நம்பலைனா வேற

யாரை நம்ப முடியும்?'' இப்படி கேட்டு விட்டு வெரேக்கர் பக்கமாய் திரும்பினார் அவர்: ''இதுதான் சமாச்சாரம்: வாரக்கடைசியில தங்க, சனிக்கிழமை அன்னிக்கு பிரதம மந்திரி வரார்.''

''ஓஓஓ'' என்று ஆச்சரியத்தின் உச்சிக்கு எறியப்பட்டார் வெரேக்கர். ''உண்மையா சொல்லணும்னா, உங்களுக்கு மிஸ்டர் சர்ச்சில்லைத் தெரியும்னு நான் எதிர்பார்க்கவேயில்லை ஸார்.''

''எனக்கு தெரியாது'' என்றார் ஹென்றி. ''மறுபடியும் திரும்புவதற்குள் ஒரு அமைதியான வார இறுதியை அவர் எதிர்பார்த்திருக்கார். அவருக்கு பிடிச்ச பெயிண்டிங் இத்யாதிகள் மட்டுமே விரும்பியிருக்கார். ஸ்டட்லேயிலிருக்கும் தோட்டத்தைப் பற்றி கேள்விப்பட்டிருக்கார் அவர். அவர் வந்து தங்கலாமானு டௌனிங் ஸ்ட்ரீட்டிலிருந்து எனக்கு தகவல் வந்தபோது, நான் மறுக்கவா செய்வேன்...?!''

''நேச்சுரலி'' என்றார் வெரேக்கர்.

''இனிமே இதை நீங்க உங்களுக்குள்ளேயே வெச்சுக்க வேண்டியது அவசியம்'' என்றார் ஹென்றி. ''அவர் கிளம்பிப் போகும்வரை விஷயம் கிராமத்தாருக்கு தெரிய வராது. இது அவசியம்னு சொன்னாங்க அவருடைய ஆட்கள். பாதுகாப்பு.''

இப்போது அவர் நிறையவே குடித்து முடித்திருந்தார். வாய் குளறியது. ''அவருக்கு செமத்தியான பாதுகாப்பு இருக்கும்னு நினைக்கிறேன்'' என்றார் வெரேக்கர்.

''கிடையவே கிடையாது'' என்றார் சர் ஹென்றி. ''மூணு அல்லது நாலு பேர்தான் அவர்கூட இருப்பாங்க. அவர் இருக்கும்போது அப்பகுதி முழுவதையும் பாதுகாக்க நான்தான் தனிப்பட்ட முறையிலே ஏற்பாடு பண்ணியிருக்கேன்.''

''அப்படியா?'' என்றார் ஜோன்னா.

''நான்தான் அவரை சந்திக்க சனிக்கிழமை போகப் போறேன். நாங்க கார்ல வருவோம்.'' குடித்து முடித்த கோப்பையை அவர் கீழே வைத்தார். கண்கள் செருகின அவருக்கு. வெரேக்கர் சொன்னார்:

''அவர்கூட வீடு வரைக்கும் நான் போறேன். அதுதான் நல்லது. கார் ஓட்டிப்போகும் நிலைமையில்லை அவர்.''

''அதெல்லாம் வேணாம்.'' அவருடைய கையை பிடித்து வாசற்கதவு வரை அழைத்துப் போனார் ஜோன்னா க்ரே.

நொண்டியபடி போனவரை பார்த்து ''சனிக்கிழமை பமீலாவை நான் எதிர்பார்க்கிறேன்'' என்றார். அந்த ஊன்றுகோலின் ஓசையடங்கி ஓயும்வரை வாசலிலேயே நின்று கொண்டிருந்தார் அவர். ஒன்றும் அசையாமல் ஓசையின்றி கிடந்தது சுற்றுப்புறம்.

உள்ளே போய் கதவை மூடினார் அவர். கணப்புக்கு அருகிலிருந்த நாற்காலியை நோக்கித் தள்ளாடியபடி போய்க்கொண்டிருந்தார் சர் ஹென்றி. ''கிளம்பறேன், ஓல்ட் கேர்ள்'' என்றார்

இவரிடமும் ''அதெல்லாம் வேணாம்'' என்றார் ஜோன்னா. ''இன்னும் குடிக்கலாம்.'' மேலும் ஒரு கோப்பையை ஊற்றினார். அவரிடம் தந்து விட்டு ''யூ நோ ஹென்றி...'' என்றார் சிந்தனையாய். ''எனக்கு பிரதம மந்திரியை சந்திக்கணும்னு இருக்கு. உலகில் நான் மிகவிரும்பும் ஒன்று, இச்சந்திப்பு.''

''அப்படியா?'' - முட்டாள்தனமாய் அவரை பார்த்தார் ஹென்றி.

சிரித்த ஜோன்னா மிருதுவாய் அவரது நெற்றியில் தன்னுடைய இதழ்களை செலுத்தினார்.

★ ★ ★

பிரின்ஸ் பகுதியின் சிறைப்பகுதியில் ஹிம்லர் இறங்கி நடந்தபோது அங்கு அனைத்தும் நிர்ச்சலனமாய் இருந்தன. கீழே காத்திருந்தான் ரோஸ்மேன். அவனுடைய முழுக்கை சட்டை, தோள் வரை சுருட்டி விடப்பட்டிருந்தது. மிகவும் அலறலாய் தெரிந்தான் அவன்.

''என்ன?'' - ஹிம்லர் அதிகாரமாய் கேட்டார்.

''அவர் இறந்துட்டாரோனு நினைக்கிறேன், சார்.''

இதில் தனக்கு திருப்தி கிடையாது என்பதை காட்டினார் ஹிம்லர். ''இது உன்னுடைய ஒரு தனிப்பட்ட திறமையின்மையைதான் காட்டுது, ரோஸ்மேன். இப்படி ஆகக்கூடாதுனு நான் உன்கிட்டே எச்சரிக்கையாய் இருக்கும்படி சொல்லியிருந்தேன்.''

''நிச்சயமா சார். ஆனா அவருடைய இதயம் நின்னிருக்கு. மாரடைப்புத்தான் என்பதை டாக்டரே சொல்வார் பாருங்க. அவருக்கு நான்தான் ஆளனுப்பியிருந்தேன். அவர் இன்னமும் உள்ளேதான் இருக்கார்.''

அருகிலிருந்த கதவை திறந்தான் அவன். இரு அடியாட்களும், திறந்த மார்பினை ஸ்டெத்தால் பரிசோதித்துக் கொண்டிருந்த ஓர் இளைஞரும் உள்ளேயிருந்தார்கள்.

அங்கு போன ஹிம்லர் ஸ்டைனரை குனிந்து பார்த்தார். ஜெனரலின் கைமுட்டிகள் இணைத்துக் கட்டப்பட்டிருந்தன. அவருடைய பாதங்கள் காலணியில்லாமல் வெறுமனே இருந்தன. அவருடைய விழிகள் பாதி திறந்து, அசையாது, எல்லையற்றதில் நிலைகுத்தியிருந்தன.

''மாரடைப்பு, இதுல சந்தேகம் வேண்டாம்'' என்றார் டாக்டர், கேள்விக்குறியாய் ஹிம்லர் பார்த்தபோது.

தனது மூக்குக்கண்ணாடியை கழற்றிக் கொண்ட ஹிம்லர் தனது கண்களை நன்றாய் கசக்கினார். மதியத்திலிருந்து அவருக்கு தலையை வலிக்கின்றது. போனபாடாய் இல்லை.

''ஃபுர்ரெர் உயிருக்கே உலை வைத்ததை நினைச்சு நினைச்சே இவர் நிலைகுலைஞ்சுக்கிட்டிருந்தார். இதை தெரிஞ்சுக்கிட்ட ஃபுர்ரெர் இவருடைய குற்றத்துக்காக தண்டனை தந்திருக்கார். மரணமடைந்தாலும் அது நிறைவேற்றப்படணும்.''

''யெஸ், சார்.''

''அந்த தண்டனை நிறைவேற்றப்பட ஏற்பாடுகள் செய். நான் இருக்க மாட்டேன். ராஸ்டன்பெர்க் போக வேண்டியிருக்கு. புகைப்படங்கள் எடுத்துக்க. வழக்கம்போல உடலை அப்புறப்படுத்திடு.''

அனைவரும் சல்யூட் அடித்து விட்டு கிளம்பினார்கள்.

★ ★ ★

''**அ**வனை எங்கே கைது செஞ்சாங்க?'' - கேட்டார் ரோகன். மணி ஐந்து. ஆயினும் இருட்ட ஆரம்பித்திருந்தது.

''கெர்ரியில, கர்ரக் ஏரி அப்படினு ஓர் ஏரியிருக்கு. போன ஜூன்ல கைது நடந்திருக்கு. ரெண்டு போலீஸ்காரங்களை சுட்டிருக்கான். அவனுக்கும் காயம் ஏற்பட்டிருக்கு. மறுநாள் லோக்கல் ஆஸ்பத்திரியிலிருந்து தப்பிச்சிருக்கான். அப்புறம் ஆளைக் காணல.''

''இவனுங்கஎௗல்லாம் தங்களை போலீஸ்காரங்கனு சொல்லிக்கிறானுங்க. கடவுளே.''

''இதுல டியூப்ளின் ஸ்பெஷல் துறை சம்பந்தப்படவே இல்ல, ஸார். ரிவால்வரிலிருந்த ரேகைகளை வெச்சு அவங்க பின்னாடி கண்டுபிடிச்சிருக்காங்க, அவ்வளவுதான். லோக்கல் போலீஸ் பந்தோபஸ்தின்போது கைது நடந்திருக்கு. இதை பிடிச்சுக்கிட்டு தேடியபோதுதான், ஸ்பெயின் அயல்நாட்டு அலுவலகம், ஒரு தண்டனையிலிருந்து 1940ல் இவன் தப்பிச்சிருக்கான் என்பதை சொல்லியிருக்கு. லிஸ்பன்

வழியா அமெரிக்கா போயிருப்பான் என்பது அவங்களுடைய கருத்து.''

''ஆனா இப்ப அவன் திரும்பி வந்திருக்கான்'' என்றார் ரோகன். ''எதுக்காக? இதைத்தான் நாம தெரிஞ்சுக்கணும். வேற யாரிடமிருந்தாவது தகவல்கள் வந்ததா?''

''நோ, சார்.''

''ஆல் ரைட். தற்சமயத்துக்கு, நம்பிக்கையுடன் இருப்பதைவிட நாம் செய்யக்கூடியதாய் ஒன்றும் இல்லை. ஏதாவது கிடைச்சதுன்னா, உடனடியா என்னை தொடர்பு கொள்ளுங்க. இரவோ, பகலோ, நான் எங்கிருந்தாலும்.''

''வெரி வெல், சார்.''



# 14

வெள்ளிக்கிழமை 11.15 மணி. மெல்த்தாமில் முக்கியமான விசாரணையில் இருந்தார் ஹார்ரி கேன். ஷாஃப்ட்டோவிடம் உடனடியாய் வந்து ரிப்போர்ட் பண்ணுமாறு அப்போது அவருக்கு ஓலை வந்தது. அவசரமாய் தனது ஆபிசரின் அலுவலகத்தை அவர் சென்றடைந்தபோது அங்கு நிலைமை புயலில் சிக்குண்ட நகரம் போலிருந்தது. அங்கிருந்த குமாஸ்தாக்களெல்லாம் நடுநடுக்கத்தில் இருந்தார்கள். மாஸ்டர் சர்ஜெண்ட் கார்வே மேலும் கீழுமாய் ஆவேசநடை நடந்து கொண்டிருந்தார்.

''என்ன நடந்தது?'' - கறாராய் கேட்டார் கேன்.

''கடவுளுக்குத்தான் வெளிச்சம் மேஜர். பதினைந்து நிமிடங்களுக்கு முன்னால தன்னுடைய துப்பாக்கியை ஒரு முறை சுட்டார். அப்பத்தான் தலைமையகத்திலிருந்து அவருக்கு ஒரு கடுதாசி வந்தது... அதை பார்த்ததும்தான் இப்படி ஆனார். யங் ஜோன்ஸை துரத்தி விரட்டினார்.''

கேன் கதவை தட்டி அனுமதி கேட்டு உள்ளே சென்றார். ஷாஃப்ட்டோ அங்கு ஜன்னலருகே நின்று கொண்டிருந்தார். கோபமாய் திரும்பினார். ஆனால் 'பாவம்' உடனே மாறியது. ''ஓ, நீங்களா ஹார்ரி.''

''என்னாச்சு, சார்?''

"சிம்பிள்ப்பா சிம்பிள். ஒருங்கிணைந்த குழுவில் இருக்கும் நாய் மகன்கள் அவங்க வழியிலிருந்து என்னை அப்படியே முழுக்க அப்புறப்படுத்த நினைச்சாங்க. ஆரம்பத்திலிருந்தே இப்படித்தான் பண்ணிக்கிட்டிருந்தாங்க. கடைசியில ஜெயிச்சுட்டாங்க. அடுத்த வாரம் இங்கே வேலைகளை நாம முடிச்ச பிறகு எல்லாத்தையும் நான் ஸாம் வில்லியம்சிடம் ஒப்படைச்சுடணும்."

"அப்ப நீங்க, சார்?"

"மறுபடியும் ஸ்டேட்ஸைட் பகுதிக்கே போயிடணும். முதன்மை இன்ஸ்பெக்டரா."

குப்பைக்கூடையை அறையின் மையத்துக்குப் போகும்படி எட்டி உதைத்தார். கேன் கேட்டார்: "இதுக்கு உங்களால எதுவும் பண்ண முடியாதா?"

வெறிபிடித்தவரைப் போல அவர் பக்கமாய் திரும்பினார் ஷாஃப்ட்டோ. "என்ன பண்ணுவது?" ஆர்டரை எடுத்து அதனை கேனின் முகத்துக்கு நேராய் திணித்தார். "யார் கையொப்பமிட்டிருக்காங்கன்னு பாருங்க." பிறகு அதனை ஓர் உருண்டையாய் கசக்கி கீழே போட்டார். "இதுல கேவலம் என்ன தெரியுமா கேன்? இந்தாளு ஒருமுறைகூட ஃபீல்டுல இறங்கினது கிடையாது. இப்பனு இல்லே... இவனுடைய மொத்த அனுபவத்திலே ஒரேயொரு நாள்கூட ஃபீல்டுல இறங்கினது கிடையாது."

★ ★ ★

**ஹா**ப்ஸ் எண்ட்டில் டெவ்லின் படுக்கையில் படுத்துக் கொண்டு அவருடைய தனிப்பட்ட டைரி எழுதிக் கொண்டிருந்தார். மழை அதிகம் பெய்தது. இருந்தாலும்கூட புதர்போல மண்டியிருந்தது பனி. கதவு திறக்கப்பட்டது.

டெவ்லினின் மேல் கோட்டைப் போட்டுக்கொண்டு மோலி வந்து நின்றாள்.

''இந்தாங்க டீ, வறுத்த ரொட்டி. கூடவே ரெண்டு முட்டைகள். மேலும் நெய்தடவிய சான்விச்.''

நிமிர்ந்து பாராட்டும் தொனியில் அவளை பார்த்தார் டெவ்லின். ''கீப் இட் அப். இதே தரத்துல நீ இருந்தேன்னா உன்னை நான் நிரந்தரமா வெச்சுப்பேன்.''

''நான் கிளம்பறேன். டின்னருக்கு வந்துடுவேன்னு அம்மாகிட்டே சொல்லியிருக்கேன்.''

அவர் கோப்பைக்குள் டீயை ஊற்றிக்கொண்டிருந்த போது ''இதென்ன?'' என்று அவருடைய டைரியை எடுத்துக் கேட்டாள் மோலி. ''கவிதை?''

முறைத்தார் அவர். ''சும்மா, என் அனுபவங்களை ஒட்டிய கருத்துப் பதிவுகள்.''

''உங்களுடைய கருத்துக்கள்?'' - கேட்டபடி இன்று அவர் பதிந்ததை படித்தாள் அவள். 'இருட்டிய பிறகு மரங்களடர்ந்த பகுதியில் நான் நடந்ததாய் எனக்கு நினைவில்லை.' நிமிர்ந்து பார்த்த அவள், ''ஓ, பியூட்டிபுல் லியாம்'' என்றாள்.

''நீ அப்படித்தான் சொல்வேன்னு எனக்கு தெரியும். உப்பு சப்பில்லாத அதுல என்னயிருக்கு?''

அவரை அள்ளியணைத்து முத்தமிட்டாள் மோலி. ''இன்னிக்கு ராத்திரி நான் வரேன். சமைச்சுத்தரேன். சாப்பிடுவோம். பிறகு சின்னதா கணப்பு மூட்டி கொண்டாடுவோம்.''

''அது உன்னால முடியாது'' என்றார் டெவ்லின். ''ஏன்னா, நான் இங்கே இருக்க மாட்டேன்.''

அவள் முகம் இருண்டது. ''பிசினஸ்?''

அவளை சின்னதாய் முத்தமிட்டார் அவர். "பண்ணிக் கொடுத்த சத்தியத்தை இப்ப நினை."

"ஆல் ரைட்" என்றாள் அவள். "குறுக்கிட மாட்டேன். நாளை காலை சந்திப்போம்."

"நோ. அதுவும் முடியாது. நாளை மதியம் வரை நான் வரமாட்டேன். அதனால விட்டுடு. நானே வந்து கூப்பிடறேன்."

விருப்பின்றி ஆமோதித்தாள். "நீங்க சொல்லிட்ட பிறகு என்ன செய்வது..."

"நன்று."

அப்போது காரின் ஹாரன் ஒலி கேட்டது. ஜன்னலுக்கு ஓடி அதன் வழியே எட்டிப்பார்த்த அவள் விறுவிறுவென்று வந்து விட்டாள். தனது உடைகளை சரிசெய்தபடி, "ஓ மை காட்... அது மிஸஸ் க்ரே" என்றாள்.

வேகமாய் பின்பக்கம் ஓடினாள். "நான் கிளம்பறேன். ஸீ யூ டுமாரோ, அழகா. இதை நான் எடுத்துக்கலாமா? இதுல இருக்கும் எல்லாத்தையும் நான் படிக்கணும்."

சொன்னவள் கையில் டைரியை கைப்பற்றியிருந்தாள். "கடவுள்தான் என்னை காப்பாற்றணும்" என்றார் டெவ்லின்.

அவரை ஆழமாய் முத்தமிட்டாள் அவள். பின்கதவை டெவ்லின் திறந்துவிட ஓடினாள் அவள். புதர்களுக்குள் ஓடி அவள் முழுவதுமாய் மறையும் வரை பார்த்துக் கொண்டேயிருந்தார் - இதுதான் இறுதி முடிவு என்று தெரிந்துகொண்டே.

முன்கதவில் தொடர்ச்சியாய் விழுந்த குட்டுகளைத் தொடர்ந்து கதவினைத் திறக்க வேகமாய் போனார் அவர். கதவை திறந்த பிறகு தனது சட்டையை பேண்ட்டுக்குள் அவசரமாய் செருகிய அவரை கூர்ந்து கவனித்தார் மிஸஸ்

க்ரே. ''உள்ளே வரும்போது தொலைவில் ஓடிய மோலியை பார்த்துட்டேன்'' என்றார். ''உங்களுக்கே வெட்கமா இல்ல?''

''எனக்கும் தெரியும்.'' அவரையும் அழைத்துக் கொண்டு உள்ளே போனார். ''நான் ஒரு பொறுக்கி. விடுங்க அதை. என்ன சேதி?''

''எனக்கிடப்பட்டிருந்த கட்டளையின்படி நேற்று ராத்திரி நான் ரேடியோவுல இணைப்பை ஏற்படுத்தினேன். லாண்ட்ஸ்வூர்ட் பகுதிக்கான நேரடி இணைப்பு. இப்ப ரேடிலே அங்கிருக்கார்.''

''திட்டமிட்டபடி போகுதா?'' என்றார் டெவ்லின். ''வானிலை மோசமா இருக்கே...''

மிஸஸின் கண்கள் பளபளத்தன. ''புயலோ மழையோ எதுவானாலும், ஸ்டைனர் ஒரு மணிக்கு இங்கிருப்பார்.''

★ ★ ★

**தா**க்கும்படையினரிடம் கட்டளைகளை தந்து கொண்டிருந்தார் ஸ்டைனர். நிதர்சனத்தில் குதிக்கவுள்ளவர்களை தவிர அங்கிருந்த ஒரேயொரு வெளி மனிதர் மேக்ஸ் ரேடில். கெர்ரிகூட தள்ளி வைக்கப்பட்டிருந்தார். அவர்களனைவரும் வரைபட டேபிளை சுற்றிலும் நின்று கொண்டிருந்தார்கள். ஜன்னலருகே ரேடிலுடன் தணித்த குரலில் பேசிக்கொண்டிருந்து விட்டு ஸ்டைனர் திரும்பியபோது கூட்டத்தினரிடையே ஒருவித எதிர்பார்ப்பு கலந்த பரபரப்பு உருவானது. அவர், கெர்ஹார்ட் க்ளக்ளுடைய மாதிரி புகைப்படங்கள், வரைபடங்கள் ஆகியனவற்றை குறித்துக் காட்டினார்.

''உங்க எல்லோருக்கும் நீங்க எங்கே போறீங்கன்னு தெரியும். இங்கிருக்கும் ஒவ்வொரு கல்லுக்கும்கூட கடந்த சில வாரங்களாய் அந்த பயிற்சி அளிக்கப்பட்டிருக்கு. நாம

அங்கே போய்விட்ட பிறகு என்ன செய்யணும் என்பதுதான் இங்கிருக்கும் ஒவ்வொருவருக்கும் தெரியாதது.''

டென்ஷனாய், எதிர்பார்த்தபடி இருந்த ஒவ்வொரு முகமாய் பார்க்கலானார் அவர். சற்று காலமாய் இதில் இடம்பெற்றிருக்கும் ப்ரஸ்டனிடமும் சூழ்நிலையின் தீவிரம் இறங்கியிருந்தது.

ஆகவே, ஸ்டைனர் விளக்க ஆரம்பித்தார்.

★ ★ ★

**பீ**ட்டர் கெர்ரிக்கால், தொலைதூரத்திலிருந்தபோதே உரத்த சப்தத்தைக் கேட்க முடிந்தது.

''என்ன நடக்குது?'' போமர் கேட்டார்.

''என்னை கேட்கக் கூடாது'' என்றார் கெர்ரிக் காரமாய். ''இங்கே இருப்பவர்கள் யாரும் என்னிடம் எதையும் சொல்வது கிடையாது.'' கசப்பான உணர்வு பொங்கி வழிந்தது. ''ஆபத்துல போய் நாம தலையைக் கொடுப்பதாய் இருந்தாலும், அது என்ன வகையான ஆபத்துனு சொல்லணுமா வேண்டாமா?''

''எனக்கென்னவோ அந்தத் தகவலெல்லாம் எனக்கு வேணும்னு தோணலை. நான் ப்ளேனுக்குப் போறேன்.''

அவர் விமானத்துக்குள் எகிறிக் குதிக்க, கெர்ரிக் சிகரெட்டைப் பற்ற வைத்துக்கொண்டு சற்றுத் தள்ளிப் போனார். தன்னை நோக்கி விமானதள கார் வந்து கொண்டிருப்பதை பார்த்தார். அதில் ரிட்டர் நியூமேன் முன்னால், அருகில் ஸ்டைனர், பின்னால் ரேடில். ஒருவரும் இறங்கவில்லை.

''என்ன பீட்டர்... நீங்க சந்தோஷமா இருப்பதாய் தோணலை?'' என்று கேட்டார் ஸ்டைனர்.

''எப்படி இருக்க முடியும்?'' என்றார் இவர். ''ஒரு மாசம் முழுக்க இராப்பகலா நான் உழைச்சிருக்கேன். காரணம்? அதுகூட தெரியாமல்!'' வெளியே மழையையும், பனியையும் சுட்டிக்காட்டினார். ''இப்படிப்பட்ட ஒரு சூழ்நிலைலே நான் தளத்துக்கு வந்ததே கிடையாது.''

''ஓ, எங்களுக்கு உங்க மேல முழுநம்பிக்கை இருக்கு. உங்களைப் போன்ற திறமைசாலிகள் மீது, எதையும் சாதிப்பவர்கள் என்ற முறையிலே மரியாதையும் உண்டு.''

அவர்கள் ஊர்தியிலிருந்து இறங்கினார்கள். வந்த சிரிப்பை அடக்கிக் கொள்வதில் தோற்றுக் கொண்டிருந்தார் நியூமேன். இதனை கவனித்துவிட்டு ''என்ன, எதுக்கு?'' என்று கோபமாய் கேட்டார் கெர்ரிக்.

''என்னய்யா கோபம்? எல்லாம் அருமையானதொரு காரணத்துக்காகத்தான், முட்டாளே'' என்றார் ரேடில். ''தலைமை தளபதி என்பதை குறிக்கும் Knight's Cross விருது உங்களுக்கு வழங்கப்பட்டிருக்கு என்பதை தெரிவிப்பதில் பெருமையடைகிறேன்.''

அப்படியே அகண்ட வாயுடன் நின்றார் கெர்ரிக். ஸ்டைனர் ஜென்டிலாய் சொன்னார்: ''என்ன, இராப்பகலா உழைத்ததிற்கு சன்மானம் போதுமா?''

★ ★ ★

**ஸ்**டைனர் மற்றும் ரேடிலுடன் இணைந்து வரைபட டேபிளின் முன் வளைந்தார் கொய்னிக். ஒரு குறிப்பிட்ட தொலைவில் நின்றார் சீனியர் கடற்படை அலுவலர் முல்லர்.

இளைய ராணுவ வீரர் பேசிக்கொண்டிருந்தார்: ''நாலு மாசத்துக்கு முன்னாடி பிரிட்டிஷ் கப்பல் ஒண்ணு, ஸ்காட்லாண்டின் ஹெப்ரைட் அருகே தகர்க்கப்பட்டது.

E-படகு கொண்டு நடத்தப்பட்ட அத்தாக்குதலை என் நண்பனான ஹார்ஸ்ட் வெங்கல் நடத்திக் காட்டினார். அதுலே 15 பேர்தான் இருந்தாங்க... அந்த அனைவரையும் கைதிகளாக பிடிச்சுக்கிட்டுப் போயிட்டார் இவர். அவர்களிடமிருந்த ஆவணங்களை துரதிர்ஷ்டவசமாக அவங்களாலே காப்பாத்திக்க முடியலை. பிரிட்டிஷ் கடற்கரையோர சுரங்கங்கள் சிலவற்றை பற்றிய தகவல்கள் அதிலிருந்தன.''

''ஓ.''

''இங்கே பாருங்க... வாஷ் பகுதியின் கிழக்கு திசையிது. இங்கே கடற்கரைக்கு இணையா உள்ளேயே கப்பல் தடத்துல சுரங்கம் இருப்பது தெரியுதா? இதுல இருக்கும் வழியும் துல்லியமா குறிக்கப்பட்டிருக்கு, பாருங்க. பிரிட்டிஷ் கடற்படை, இதை அவங்களுக்கான பிரத்தியேக தேவைக்காக செய்திருக்காங்க. கடற்பிரயாணத்துக்கு சாதகமான சூழலிருந்தால் நல்ல ஸ்பீட்ல போகலாம்.''

''அந்த நிலைமைலே சுரங்கமே ஒரு சிறப்பான பாதுகாப்பா அமையும்னுகூட பேச்சிருக்கு'' என்றார் ரேடில்.

''எக்ஸாக்ட்லி, சார்.''

''பாயிண்ட் பகுதியிலிருந்து ஹாப்ஸ் எண்டுக்கு வரும் அந்தக் குறுகிய கடற்பகுதி பற்றி?''

''கஷ்டந்தான். ஆனா கடற்படை ஆணையகமான அட்மிரால்டியின் வரைபடத்தை நானும், முல்லரும் மனப்பாடம் ஆகுமளவுக்கு பார்த்திருக்கோம். நாம பத்து மணிக்கு போயாகணும்னா, அலைகள் எகிறிக்கிட்டிருக்கும் காலத்துலதான் நாம போகணும்.''

"பிரயாணத்துக்கு நீங்க எட்டு மணிநேரம் சொல்றீங்க. அப்ப நாம இங்கிருந்து எத்தனை மணிக்கு புறப்படணும் - ஒரு மணிக்கு?"

"நாம மறுபுறத்தில் சேர வேண்டிய இடத்துல பூரண அவகாசம் தேவையென்றால் - யெஸ், ஒரு மணிக்கு. ஆனா இது ஒரு தனித்துவமான பிளேன். ஏழு மணிநேரத்துலகூட இதனால முடியும். ஒரு பாதுகாப்புக்காக நான் சொன்னது அது."

"புத்திசாலித்தனம்" என்றார் ரேடில். "நானும், ரேடிலும் உங்க கட்டளைகளை கொஞ்சம் மாற்றப்போறோம். பாயிண்ட் பகுதியிலிருந்து கிளம்பி ஒன்பதிலிருந்து பத்து மணிக்குள் எப்போது வேண்டுமானாலும் நீங்க வந்து பிக்-அப் பண்ணிக்கணும்னு நாங்க எதிர்பார்க்கிறோம். இதுக்கான இறுதிக் கட்டளைகளை நீங்க டெவ்லினிடமிருந்து பெறுவீங்க. அவர் சொல்வதைப் போல நடந்துக்கவும்."

"வெரி வெல், சார்."

"இருட்டு உங்களுக்கு ஓர் இடையூறாகிடக்கூடாது" என்றார் ஸ்டைனர். புன்னகைத்தார்.

ரேடில் சொன்னார்: "இப்போதிலிருந்து டெவ்லினிடமிருந்து இணைப்பு வரும்வரை, தொடர்பேற்படுத்தும் ரேடியோவை சைலண்ட்ல போட்டுடுங்க. அவருடைய கோடு எண் உங்களுக்கு தெரியுமில்லையா?"

"யா."

கொய்னிக் சாந்தமாய் நிற்க, "என்னை பார்த்தாலே நீங்க நரம்பதிர்வீங்கன்னு எனக்கு தெரியும்" என்றபடி அவருடைய தோள்களைத் தட்டினார் ரேடில். "கிளம்புவதற்கு முன்னால் நான் நாளை உங்களை சந்திப்பேன். இப்ப ஸ்டைனருக்கு நீங்க குட்-பை சொல்லிக்கலாம்."

இருவரிடமும் கைகுலுக்கல் செய்து கொண்டார் ஸ்டைனர். "சரியான நேரத்துல வந்துடுங்க. இதைத்தவிர என்ன சொல்வதுனு எனக்கு தெரியல."

கொய்னிக் அவருக்கு ஒரு பக்கா கடற்படை சல்யூட் வைத்தார். "அந்த கடற்கரையில நான் உங்களை சந்திப்பேன். இது சத்தியம்."

ஸ்டைனர் வறட்சியாய் சிரித்தார். "நான் அதையே எதிர்பார்க்கிறேன்."

விமானதள காரை நோக்கி அவர்கள் நடந்தபோது "இதெல்லாம் திட்டமிட்டபடி நிறைவேறுமா?" என்றார் ரேடில்.

அதே கணத்தில் வெர்னர் ப்ரிகெல்லும், கெர்ஹார்ட் க்ளக்கும் வந்து கொண்டிருந்தார்கள். "இவங்களுடைய கருத்தை கேட்டுடுவோமோ" என்றார் ஸ்டைனர்.

ஸ்டைனர் ஆங்கிலத்தில் அழைத்தார்: "குனிக்கி! மொக்சார்! வாங்க, ப்ளீஸ்!"

தயக்கமே காட்டாமல் ப்ரிகெல்லும் க்ளக்கும் தப்படிகள் வைத்து ஓடிவந்தார்கள். அவர்களை அமைதியாய் பார்த்தபடி கேட்டார்: "நான் யார்?'

"கர்னல் ஹோவார்ட் கார்ட்டர்." நல்ல ஆங்கிலத்தில் பதிலளித்தார் ப்ரிகெல்.

ஸ்டைனர் பக்கமாய் புன்சிரிப்போடு திரும்பினார் ரேடில். "கொன்னுட்டீங்க."

"நீங்க இங்கே என்ன பண்ணிக்கிட்டிருக்கீங்க?" என்று கேட்டார் ஸ்டைனர்.

"மேஜர் ப்ராண்டில்" என்று ஆரம்பித்து, பிறகு நாக்கைக் கடித்துக்கொண்டு திருத்திய ப்ரிகெல், "மேஜர் க்ருஸ்ஸெக்

எங்களை அப்படியே ஆறமர ஒரு பொடிநடை போயிட்டு வரச்சொன்னார்'' என்றார்.

திரும்பி ரேடிலைப் பார்த்த ஸ்டைனர் கேட்டார்: ''நீங்களே சொல்லுங்க... நாங்க எப்படி தோற்போம்?''

★ ★ ★

**ஆ**னால் சூழ்நிலை அவர்கள் தோற்க வேண்டும் என்று முடிவெடுத்துவிட்டதைப் போல தோன்றியது. இருள் கவ்வ, பனி, போர்வையாய் படர, மேற்கு ஐரோப்பாவின் அனைத்து பகுதிகளுமே குளிரில் நடுங்கின. லேண்ட்ஓர்த் பகுதியில் ஆறுமணியிலிருந்தே ரன்வேயைக் கண்காணித்துக் கொண்டிருந்தார் கெர்ரிக். கடுமையான மழை பெய்த போதிலும் பனி விலகியதாய் தெரியவில்லை. கனமாய் அதுவும் நிலவியது.

எட்டு மணிக்கு ஸ்டைனர் மற்றும் ரேடிலிடம் ''காற்றே இல்லை, கவனிச்சீங்களா?'' என்று கேட்டார் கெர்ரிக். ''அதுதான் இப்ப நமக்கு இந்த கனமான பனியிலிருந்து தப்பிக்க அவசியம். கொத்துக்கொத்தாய் காற்று.''

★ ★ ★

**வ**டக்கு கடலில் நார்ஃபால்க் பகுதியிலும் நிலைமை போற்றும்படியாய் இல்லை. தனது ஒதுக்குப்புறமான அறையில் காதில் ஹெட்-போனை மாட்டிக் கொண்டு ரேடியோ ரிசீவரிடமே காத்துக் கொண்டிருந்தார் ஜோன்னா. போயர் போரின்போது தான் சிறை வைக்கப்பட்ட ஒரு தருணத்தில் எப்படி தப்பித்தோம் என்று சர்ச்சில் விளக்கி எழுதியிருந்த புத்தகத்தை மிஸஸ் க்ரேயிடம் வெரெக்கர் கொடுத்திருந்தார்... அப்புத்தகத்தை படித்துக் கொண்டிருந்தார் அவர். வீரதீர சாகசமாய் அமைந்திருந்த அந்த அனுபவத்தைப் படிக்கும்போது பிரதம மந்திரி மேல் ஜோன்னாவுக்குள்

உருவான பாராட்டினை அவராலேயே மறுக்க முடியவில்லை.

கெர்ரிக்கைப் போலவே, ஹாப்ஸ் எண்ட்டிலிருந்த டெவ்லினும் அடிக்கடி வெளியே வந்துவந்து வானிலையை பரிசோதித்தபடியே இருந்தார். ஆனால் மாற்றமேதும் இல்லை. பனியின் அடர்த்தி குறைந்தபாடாயில்லை. பத்து மணிக்கு நாலாவது முறையாக பீச் பக்கம் போனார் அவர். ம்ம், நிலைமை மாறவேயில்லை.

இருட்டுக்குள் டார்ச்சை அடித்து பார்த்தவர் மறுப்பாய் தலையசைத்தபடி தனக்குள் சொல்லிக் கொண்டார்: ''குட் நைட்.''

★ ★ ★

**மு**ழு ஏற்பாடும் கழுவப்பட்டதைப்போல தோற்று விட்டது என்பது வெளிப்படையாகவே தெரிந்தது. லேண்ட்ஓர்த் பகுதியிலும் இதே நிலைமையே அமைந்தது. யங் ஹாப்ட்ஸ்மேன் இன்னொரு முறை வானிலையை பார்த்து விட்டு விமானத்துக்குள் நுழைந்தபோது அதிரடியாய் ரேடில் கேட்டார்: ''என்ன, கிளம்ப முடியாதுனுதான் மறுபடியும் சொல்லப் போறீங்களா?''

''பிரச்சினை இங்கே ஒண்ணும் கிடையாது சார்'' என்றார் கெர்ரிக். ''கண்ணை மூடிக்கிட்டு நான் விமானத்தைக் கிளப்பலாம். சமதளமான இதைபோன்ற பகுதிகளில் எங்களுக்கு பிரச்சினையே எழாது. ஆனா போய்ச் சேரும்பகுதியை நினைச்சு தாமதிக்க வேண்டியிருக்கு. அங்கே போய் ஆட்களை அப்படியே தொபுக் தொபுக்குனு இறக்கி விட்டுட்டு எல்லாம் சுபமா அமையும்னு நான் எதிர்பார்க்க முடியாது. இலக்கை விட்டு நாம் ஒரு மைல் தள்ளி இருந்தாலும் இருக்கலாம். தோராயமாகவாவது என் கண்களுக்கு இலக்கு தென்பட்டாகணும்.''

அப்போது போஹ்மர் அங்கு வந்தார். என்ன என்று கேட்ட கெர்ரிக்கிடம் நீங்களே வந்து பாருங்க என்று பதில் தந்தார்.

கெர்ரிக் முன்னுக்குப் போனார். வெளி விளக்கினைப் போட்டிருந்தார் போஹ்மர். அதன் ஒளிகுன்றிய நிலையிலும் விதம்விதமான தினுசில் முன்பனி சுழல்வதை அவரால் கவனிக்க முடிந்தது. எதுவோ ஒன்று அவரது கன்னத்தை சில்லென்று தொட்டது. "காற்று!" கண்ணகல பரபரப்பானார். "மை காட் - காற்று ஆரம்பிச்சிடுச்சு!"

அங்கு ஜன்னலில் திடுமென அதன்சீலை அகன்று கீழே காட்ட, அவரால் பண்ணைப் பகுதியை பார்க்க முடிந்தது. எண்ணெய் தடவிய பொருளாய்த்தான் - ஆனாலும் அப்பகுதி தெரிந்தது. "நாம கிளம்பலாமா?" - போஹ்மர் ஆணையாய் கேட்டார்.

"யெஸ்" என்றார் கெர்ரிக். "ஆனா அது இப்பவே நடந்தாகணும்." ரேடிலிடமும் ஸ்டைனரிடமும் சொல்ல அவர் விரைந்தார்.

★ ★ ★

இருபது நிமிடங்கள் கழித்து, சரியாய் பதினொரு மணிக்கு, ஜோன்னா க்ரேயுடைய ஹெட் போன் கரகரத்தது. புத்தகத்தை கீழே வைத்தார். பென்சிலை எடுத்துக் கொண்டார். பேடில் இருந்த தாளில் எழுதினார். மிகச்சிறிய சேதி அது. நொடிப்பொழுதுகளில் அதன் அர்த்தம் பிடிபட்டது. கணநேரம் பேச்சுமூச்சின்றி ஆன அவர், எழுதியதையே வெறித்துக் கொண்டிருந்தார். பிறகு அவர் சேதி கிடைத்ததற்கான பதில் அனுப்பினார்.

கீழே மளமளவென்று இறங்கி ஓடிய அவர், கம்பளியினாலான தனது சட்டையை எடுத்து அணிந்து

கொண்டார். கூட எகிறிய நாயிடம், ''நோ, இப்ப கிடையாது பேட்ச்'' என்றார்.

பனியால் கவனமாய் ஓட்ட வேண்டியிருந்தது. இருபது நிமிடங்கள் கழித்து ஹாப்ஸ் எண்ட்டுக்குள் அவர் நுழைந்திருந்தார். கார் ஓசையை கேட்டதும் பரபரப்பானார் டெவ்லின். தனது துப்பாக்கியை துரிதமாய் எடுத்துக் கொண்ட அவர், படியிறங்கி வாசலுக்கு விரைந்தார்.

''நான்தான் லியாம்'' என்றார் வந்தவர்.

கதவை திறந்தார். ஜோன்னா உள்ளே நழுவினார். ''என்ன இப்ப?''

லேண்ட்ஓர்த்திலிருந்து எனக்கு ஜஸ்ட் இப்பத்தான் ஒரு சேதி வந்தது. சரியா பதினோரு மணிக்கு.'' சொன்னவர் தொடர்ந்தார்: ''கழுகு கிளம்பிடுச்சு.''

ஆச்சரியமாய் ஜோன்னாவையே பார்த்தார் டெவ்லின். ''கிறுக்கு பிடிச்சிருக்கணும் அவனுங்களுக்கு.''

''கிடையாது. வரும்போது கவனிச்சேன். கொஞ்சம் முன்னேற்றம் ஏற்பட்டிருப்பதைப் போலத்தான் தெரியுது.''

வேகமாய் வெளியே போன அவர் முன்கதவினை திறந்தார். முகம் முழுக்க கிளர்ச்சி பொங்க நொடிப் பொழுதில் திரும்பியிருந்தார். ''கடலிலிருந்து காற்று வரத் துவங்கியிருக்கு. நிறைய இல்ல. ஆனா நிறைய ஆகலாம்.''

''நிறைய ஆகுமா?''

''அது கடவுளுக்கே வெளிச்சம்.''

தனது துப்பாக்கியை காட்டிய டெவ்லின், ''இதை பயன்படுத்த தெரியுமா?'' என கேட்டார்.

''ம்.''

பிதுங்கிக்கொண்டிருந்த ஒரு பெரிய பையினை எடுத்துக்கொண்டார் அவர். ''அப்ப ரைட். நீங்களும்

நானும் களத்துல இறங்குவோம். நாம பண்ண வேண்டிய வேலை இருக்கு. நீங்க சொன்ன நேரம் சரியாயிருந்தால் இன்னும் நாற்பது நிமிடங்களில் அவங்க பீச்சுல இறங்கிடுவாங்க.''

இருவரும் நடைபாதையில் இறங்கியபோது அடிக்குரலில் சிரித்தார் டெவ்லின். பனிக்குள் நடக்கலானார்கள்.

★ ★ ★

''நான் உங்க இடத்துல இருந்தால் கண்ணை மூடிக்கிட்டு ஓட்டுவேன்'' - உற்சாகமாய் போஹ்மரிடம் சொன்னார் கெர்ரிக். விளக்குகள் விமானத்தின் முன்னால் ஒளிர்ந்தன. ஆனாலும் அனைத்தும் பார்வைக்கு புலப்படவில்லை. நாற்பது அல்லது ஐம்பது கெஜ தூரம்தான் கண்பார்வைக்கு எட்டியது.

காக்-பிட்டின் கதவு திறந்து எட்டிப்பார்த்த ஸ்டைனர், ''எல்லாம் தயாரா?'' என்றார்.

''எல்லாமும் தயார். எல்லோரும் தயார்! உங்க ஆணைக்காக காத்திருக்கோம்.''

''குட். நான் எச்சரிக்கறேன்னு நினைச்சுட வேணாம். என்ன வேணும்னாலும் நடக்கலாம். சொல்லப்போனால், என்ன வேணும்னாலும் நடக்கும்.''

இன்ஜினை உசுப்பியபோது அதன் கர்ஜனை கூடியது. அதனால் தன் குரலை உயர்த்திய ஸ்டைனர், ''உங்க மேல நாங்க நம்பிக்கையா இருக்கோம்'' என்றார்.

அப்போது 'மை காட்' என்று நினைத்துக் கொண்டார் அவர். 'இதுவா, என்ன? கடைசியிலே, இதுவா?'

அதிக சக்தியை விமானத்திடமிருந்து அவர் பெற்று உசுப்பியபோது அதன் அதிர்வுகள் தாளவொண்ணாமல் ஆகின. முன்னுக்கு செலுத்தியபோது பின்னால் வால்பகுதி

தூக்கிக் கொண்டது. மெதுவாய் செலுத்தினார். விமானம் காற்றின் சுழற்சிக்கு தன்னை நிலைநிறுத்த வளைந்து சுழிந்தது. புது திசையை சின்னதாய் திருத்தினார் அவர்.

அப்போது எழுந்த இன்ஜினின் ஓசை இரவின் அமைதியை நார்நாராக்கியது. எண்பதில் ஓடிக்கொண்டிருந்த விமானத்தை சற்றுக் குறைத்தார். அப்படியே நிலை நிறுத்தினார். பிறகு, பல்லாயிரம் மணிநேரங்கள் விமானத்தை ஓட்டியுள்ளதால் உருவான அனுபவத்தின் குரல், அவரது ஆறாம் அறிவினை சுண்டிவிட்டது. எல்லாம் சரி என்றது அனுபவ அறிவு. விசை கொடுத்து இழுத்துப் பிடித்தார்.

"இப்பவே!" - கத்தினார்.

உணர்ச்சி பொங்கும் டென்ஷனுடன் லீவரில் கைவைத்துக்கொண்டு காத்திருந்த போஹ்மர், உடனடியாய் ஒத்துழைத்தார். திடுமென்று அவர்கள் அனைவரும் பறந்தார்கள். கொர்ரிக் இன்னும் விமானத்தை செலுத்திக் கொண்டுதானிருந்தார்.

ஐநூறு அடிகள் உயரத்தில் அனைவரும் பனிமூட்டத்துக்குள்ளிருந்து வெளியானார்கள்.

அவர் கடலுக்குள் செலுத்த ஆரம்பித்தார்.

பிரயாணிகள் இருக்கையில் அமர்ந்திருந்த ரேடில், மதிப்பும் பயமும் கலந்த ஆச்சரியம் முகத்தில் தெறிக்க, "அடக்கடவுளே!" என்று முணுமுணுத்துக் கொண்டிருந்தார். "சாதிச்சுட்டார்!"

இரவுக்குள் இன்ஜினின் ஓசை கரையும்வரை உட்கார்ந்திருந்த அவர் பிறகு இயக்கிக் கொண்டிருந்த விட் என்பவரை நோக்கி ஒப்புதலாய் தலையசைத்தார். "பண்ணை வீட்டுக்கு எத்தனை சீக்கிரம் முடியுமோ

அத்தனை சீக்கிரம் திரும்பணும். செய்ய வேண்டிய வேலைகள் எனக்கிருக்கு.''

★ ★ ★

இத்தனை கால அனுபவம் இருந்தாலும், இது புத்தம்புது இரண்டாவது தனித்துவமான அனுபவமாய் அமைந்ததால், ரிட்டர் நியூமேன் மற்றும் ஸ்டைனர் உட்பட அங்கிருந்த அனுபவஸ்தர்கள் ஒருவர்கூட வாய் திறந்து சப்தமாய் பேசவில்லை - முணுமுணுப்புத்தான்.

ஆல்ட்மேன் பேசினார்: ''யங் ஹாப்ட்ஸ்மேன் ஓர் எமன்யா. இப்படிப்பட்ட பனியில ஜெயிச்சுட்டாரே...''

கடைசியில் உட்கார்ந்திருந்த ப்ரஸ்டன் பக்கமாய் திரும்பினார் ஸ்டைனர். ''ஒரு சிகரெட்?''

''ரொம்ப தேங்க்ஸ், ஸார். ஆமாம், வேணும்.''

''எப்படி உணர்றீங்க?'' - தணித்த குரலில் கேட்டார் அவர்.

''எக்ஸலெண்ட்டா, ஸார்'' - சாந்தமாய் அவரிடம் சொன்னார் ப்ரஸ்டன். ''இனியும் காத்திருக்க முடியாது.''

எழுந்துகொண்ட ஸ்டைனர் காக்-பிட் வரை சென்றார். அங்கு போஹ்மர், கெர்ரிக்குக்கு காபி தந்து கொண்டிருந்தார். இரண்டாயிரம் அடி உயரத்தில் அவர்கள் பறந்து கொண்டிருந்தார்கள். அவ்வப்போது மேகங்களுக்கு இடையே தென்பட்ட வானத்தில் நட்சத்திரங்களும் நிலாவும் தென்பட்டன. கீழே, குன்றின்மீது படர்ந்த புகைமூட்டமாய், கடலைப் பனி படர்ந்து கிடந்தது. அருமையான காட்சிகள்.

''எப்படி இருக்கு எல்லாம்?'' - கேட்டார் ஸ்டைனர்.

''ஃபைன். அடுத்த முப்பது நிமிடங்கள். அதிகம் காற்று இல்லை. இதை குறிச்சுக்கணும்.''

*ஆமோதிப்பாய் தலையசைத்தார் ஸ்டைனர். ''நீங்க என்ன நினைக்கிறீங்க? கீழே போகும்போது கிளியரா அமையுமா?''*

*''யாருக்கு தெரியும்?'' - கெர்ரிக் வாயகல சிரித்தார். ''அந்த பீச்சுல நானும் உங்களுடன் சேர்ந்து முடிந்து விடலாம்...''*

*அந்நொடியில், ''பீட்டர்... பீட்டர்...'' என்றார் போஹ்மர் பரபரப்பாய்.*

*ஒரு சிறு மேகக்கூட்டத்துக்குள் அவர்கள் நுழைந்தார்கள். ''என்னவா இருக்கும்?'' என்றார் ஸ்டைனர்.*

*''வேண்டிக்கங்க. இது, வானத்துல நம்ம வாகனத்தை ரெண்டா பிளக்கவல்லது.''*

*மேகக்கூட்டத்திலிருந்த நிர்மலமான வானத்துக்குள் அவர்கள் வெளிவந்தார்கள். கெர்ரிக்கின் கையில் தட்டிக் கொடுத்தார் போஹ்மர். ''எந்த நரகத்திலிருந்தும் வெளியே வந்துடறீங்க, நீங்க.''*

*''ஸ்டைனர்... போங்க. உங்க பயலுங்களை தயாராக சொல்லுங்க. எல்லாம் நல்லபடியா முடிந்தால் நாம டெவ்லினுடன் போனில் தொடர்பு கொள்ளணும். அப்ப நான் உங்களைக் கூப்பிடறேன். இப்ப இங்கிருந்து போங்க. போஹ்மர் என்னவோ புதுதினுசா ஒட்டிப் பார்க்கணும்கிறார்.''*

*ஸ்டைனர் மெயின் பெட்டிக்கு வந்தார். நியூமேன் சிகரெட் ஒன்றை நீட்டினார். ''தேங்க்ஸ்'' என்றார் இவர். ''இதைத்தான் நான் இப்ப எதிர்பார்த்தேன்.''*

★ ★ ★

**பீ**ச்சில் குளிர் அதிகமிருந்தது. தன்னை கதகதப்பாய் வைத்துக்கொள்ள மேலும் கீழுமாய் நடந்து கொண்டிருந்தார்

டெவ்லின். ரிஸீவர் அவர் கையில் 'ஆன்' செய்யப்பட்டிருந்தது. பனிரெண்டடிக்க பத்து நிமிடம் இருக்கும்... அப்போது, மழைக்காக மரத்தடியில் ஒதுங்கி நின்று கொண்டிருந்த ஜோன்னா க்ரே இவரை நாடி வந்தார்.

''அவங்க இப்ப நெருங்கியிருக்கணும்.''

இதற்கு விடை கொடுப்பதைப்போல போன் அலறியது. பீட்டர் கெர்ரிக்கின் குரலில் துல்லியமான ஒலியில் கேட்டது. ''இது கழுகு... கேட்குதா உங்களுக்கு?''

ஜோன்னா க்ரே, டெவ்லினின் கையை கவ்விக் கொண்டார். அவரை உதிர்த்துவிட்ட டெவ்லின் போனிடம் பேசினார்: ''உரக்க, துல்லியமா இருக்கு.''

''அங்கே கண்டிஷன் எப்படியிருக்குனு சொல்லுங்க.''

''பார்வை மட்டமாத்தானிருக்கு'' என்றார் டெவ்லின். ''நூறிலிருந்து நூற்றைம்பது கெஜம்வரை தெரியும். காற்று புதுசா அடிக்குது.''

''தேங்க் யூ. இன்னும் ஆறு நிமிடங்களுக்குள் வந்து விடுவோம் என்பது கணிப்பு.''

டெவ்லின் போனை ஜோன்னாவிடம் அளித்தார். ''நான் வெளியிலிருக்கும்போது இதை இடைவிடாமல் கவனிங்க.''

தனது உப்பிய தோள்பைக்குள் நிறைய சைக்கிள் விளக்குகளை அவர் வைத்திருந்தார். பீச்சுக்கு விரைந்த அவர், காற்றின் திசையில், அவையனைத்தையும் பதினைந்து அடிக்கு ஒன்றாய் வரிசையாய் வைத்தார். ஒவ்வொன்றாய் ஒளிரவிட்டார். பிறகு திரும்பினார். இருபது கெஜம் தொலைவில் போய் நின்றார்.

ஜோன்னா க்ரேயை வந்தடைந்தபோது மூச்சு வாங்கிற்று அவருக்கு. ஒரு பெரிய மற்றும் சக்திவாய்ந்த ஸ்பாட்லைட்டினை வெளியிலெடுத்துக் கொண்டார்.

கண்களில் வியர்வை வழிவதை தடுக்க நெற்றியிலிருந்த வியர்வையை வழித்தெடுத்தார் அவர்.

"பாழாப்போற பனி" என்றார் ஜோன்னா. "அவங்களால நம்மை பார்க்கவே முடியாது. நிச்சயமா முடியாது."

மிஸஸ் ஜோன்னா க்ரே நொறுங்கிப் போவதை முதன் முறையாய் இப்போதுதான் பார்க்கிறார் டெவ்லின்... அவரது கையில் தனது ஒரு கையை பதித்தார். "நிலைகுலையாதீங்க, மேடம்."

தூரத்தில், அங்கு தொலைதூரத்தில், இன்ஜினின் ஓசை சன்னமாய் உருவானது.

★ ★ ★

**வி**மானம், ஆயிரம் அடிகள் இறங்கி ஆங்காங்கே இடைப்பட்ட பனிமூட்டத்தில் நழுவிக் கொண்டிருந்தது. "ஒரு வாய்ப்புத்தான் எனக்கு அமையும்" என்றார் கெர்ரிக் தனது தோளின் வழியே. "ஆகவே அதை பயன்படுத்திடுங்க, ஸார்."

"நிச்சயமா" என்றார் ஸ்டைனர்.

"பெட்டர் லக். லேண்ட்ஒர்த்ல சில்லுனு ஐஸ்ல ரெண்டு பாட்டில் வாங்கி வெச்சுட்டு வந்திருக்கேன். ஞாயிறு காலைல நாம ரெண்டு பேரும் சேர்ந்து குடிக்கணும்."

அவரது தோளில் தட்டிக்கொடுத்து விட்டு ஸ்டைனர் வெளியே வந்தார். கட்டளைகள் இடப்போகும் ரிட்டரை நோக்கி ஆமோதிப்பாய் தலையசைத்தார். அனைவரும் எழுந்து நின்றார்கள். இடுப்பில் தேவையான அனைத்தையும் கட்டிக்கொண்டு தயாரானார்கள். வெளியேறும் கதவினை திறந்து விட்டார் ப்ராண்டிட். குளிர்க்காற்று உள்ளே பாய்ந்தது. ஒவ்வொருவரின் அருகாமைக்குப் போய் தனிப்பட்ட முறையில் பரிசோதித்துப் பார்த்தார் ஸ்டைனர்.

கொர்ரிக் மிகவும் தாழ்ந்து பறந்தார். வெள்ளை அலைகளின் விளிம்பு தெரியும் அளவுக்கு இறங்கியிருந்தார். வெறும் பனியும் இருளும் மட்டுமே முன்னால் பிரதானமாய் தெரிந்தன. தனது மூடிய உள்ளங்கைகளை கால் முட்டியில் குத்தியபடி "கம் ஆன்!" என்று கிசுகிசுத்தார் போஹ்மர்.

ஏதோ ஒரு இனம்புரியாத சக்தி தனது கைவரிசையை காட்டியதைப் போல, சட்டென்று அடித்த ஒரு கொத்துக்காற்று சாம்பல்நிற பனிப்படலத்தை அகற்றித் தர, கீழே, டெவ்லின் இணையாய் வைத்திருந்த சைக்கிள் விளக்குகள், அந்த இரவில் துல்லியமாய் தெரிந்தன.

கொர்ரிக் ஒப்புதலாய் தலையசைத்தார். போஹ்மர் சுவிட்சை போட ஸ்டைனரின் தலைக்கு மேலிருந்த சிகப்பு விளக்கு ஒளிர்ந்தது. "தயார்!" - கத்தினார் அவர்.

ரிட்டர் நியூமேன் இருளுக்குள் குதித்தார். ப்ராண்டிட் தொடர்ந்து. மற்றவர்கள் ஒருவர் பின் ஒருவராய். காற்றையும் கடலின் உப்பையும் தன் முகத்தில் உணர்ந்தார் ஸ்டைனர். ப்ரஸ்டன் குதிப்பதற்காக காத்திருந்தார். நொடி கூட தாமதம் தராமல் அந்த ஆங்கிலேயன் காற்றுக்குள் குதித்தார். இது நல்ல சகுனம். அவ ்க்கு பின்னால் குதித்தார் ஸ்டைனர்.

காக்பிட்டின் திறந்த கதவு வழியே வெளியே எட்டிப்பார்த்துக் கொண்டிருந்த போஹ்மர், கொர்ரிக்கின் தோள்களில் தட்டிக் கொடுத்தார். "எல்லோரும் போயிட்டாங்க, பீட்டர். நான் போய் கதவை மூடிடறேன்."

தலையை அசைத்த கொர்ரிக் மீண்டும் கடல்நோக்கி பிரயாணமானார். ஐந்து நிமிடங்கள் கடந்தபோது போன் அலற டெவ்லின் துல்லியமாய் சொன்னார்: "இங்கு எல்லாமும் பாதுகாப்பாய் அமைந்து விட்டன."

மைக் அருகே போன கெர்ரிக் சொன்னார்: "தேங்க் யூ. குட் லக்."

"லேண்ட்ஓர்த் பகுதிக்கு உடனடியா செலுத்தணும். கடந்த ஒரு மணிநேரமா வயித்துல நெருப்பைக் கட்டிக்கட்டு இருப்பார், ரேடில்."

★ ★ ★

**த**ன்னுடைய ப்ரின்ஸ் அல்ப்ரெஷ்ட்ஸ்ட்ராஸ் அலுவலகத்தில் ஒரு டேபிள் லைட்டின் ஒளியுடன் தான் மட்டும் தனியாய் உழைத்துக் கொண்டிருந்தார் ஹிம்லர். கணப்பு குறைந்திருந்தது. அறை, குளிர்ச்சியாயிருந்தது. ஆனால் இந்த இரண்டையும் கண்டு கொண்டவராய் தெரியவில்லை அவர். கவனம் சிதையாது எழுதிக் கொண்டிருந்தார். அப்போது கதவு தட்டும் ஓசை தனியாய் கேட்டது. ரோஸ்மேன் உள்ளே வந்தான்.

நிமிர்ந்த ஹிம்லர், "என்ன?" என்றார்.

"லேண்ட்ஓர்த்திலிருக்கும் ரேடிலிடமிருந்து ஜஸ்ட் சேதி வந்தது. கழுகு தரையிறங்கி விட்டது."

என்ன நினைத்தாரோ... ஆனால் எந்தவிதமான உணர்வையும் ஹிம்லரின் முகம் பிரதிபலிக்கவில்லை. "தேங்க் யூ ரோஸ்மேன்" என்றார். "எனக்கு தகவல் தந்துக்கிட்டேயிருங்க."

"யெஸ், சார்."

ரோஸ்மேன் வெளியேறிவிட, தொடர்ந்து எழுதப்படும் ஓசை மட்டுமே அந்த அறையில் ஒலித்துக் கொண்டிருந்தது.

★ ★ ★

**டெ**வ்லின், ஸ்டைனர் மற்றும் ஜோன்னா க்ரே ஆகிய மூவரும் அந்த ஏரியாவின் பெரிய அளவு வரைபடத்தினை

பார்த்துக் கொண்டிருந்தார்கள். "இதோ, இங்கே பாருங்க... செயின்ட் மேரீசுக்குப் பின்னாடி" என்று விளக்கிக் கொண்டிருந்தார் டெவ்லின். "இது சர்ச்சுக்கு சொந்தமான ஒரு சத்திரம். இப்போதைக்கு இது காலியாயிருக்கு."

"இங்கே நாளைக்கு நீங்க குடியேறிடுங்க" என்றார் ஜோன்னா க்ரே. "வெரேக்கரைப் பார்த்து சொல்லிடுங்க. நீங்க எக்ஸர்ஸைஸ்ல ஈடுபட்டிருப்பதாகவும் அந்த இரவை அங்கே கழிக்க விரும்புவதாகவும் சொல்லுங்க."

"அவர் இதுக்கு ஒத்துப்பார்னு நினைக்கிறீங்களா?" - கேட்டார் ஸ்டைனர்.

ஜோன்னா க்ரே ஆமோதிப்பாய் தலையசைத்தார். "அதைபற்றிய சந்தேகமே வேணாம். இப்படி யாராவது அங்கே போய் தங்குவது அடிக்கடி நடக்கும். பயிற்சி மற்றும் எக்ஸர்ஸைஸில் ஈடுபடும் வீரர்கள் வந்து தங்குவாங்க. அப்புறம் போயிடுவாங்க. ஒன்பது மாதங்களுக்கு முன்னால செக்கோஸ்லோவேகியா படைவீரர்கள் வந்திருந்தாங்க. இப்படித்தான் தங்கிட்டுப் போனாங்க."

"இன்னொரு விஷயமும் இருக்கு... துனிஸியாவில் பாராசூட் படையில் இருந்தவர்தான் வெரேக்கர். சிகப்புப் பட்டை அணிந்தவர். அப்படிப்பட்ட பட்டை அணிந்த வீரர்களைக் கண்டால் ஆர்வமா உதவ வருவார்."

"வெரேக்கரைப் பொறுத்தமட்டில் இன்னுமொரு ஸ்ட்ராங்கான பாயிண்ட்டும் இருக்கு" என்று தொடர்ந்தார் ஜோன்னா க்ரே. "பிரைம் மினிஸ்டர் வந்து தங்கப் போகும் விஷயம் அவருக்கு தெரியும். இது நமக்கு சாதகமா அமையப்போகுது."

"இது எப்படி நமக்கு உதவும்?" - ஸ்டைனர் கேட்டார்.

"இட் ஈஸ் ஸிம்பிள்" என்றார் டெவ்லின். "நீங்க ஏதோவொரு பயிற்சிக்காக வந்திருப்பதாக வெரேக்கரிடம்

சொல்லுங்க. அப்படியே அதை அவர் நம்புவார். ஆனா இந்த தடவ சர்ச்சிலும் வந்து தங்கப்போகும் தகவலை நீங்க சொல்லும் சேதியோடு இணைச்சுப் பார்ப்பார். அப்ப என்ன நடக்கும்?''

''அதனால, என்னை ஒரு ஸ்பெஷல் செக்யூரிட்டி ஆளா எடுத்துப்பார்.''

''எக்ஸாக்ட்லி.'' ஜோன்னா க்ரே ஒப்புக்கொண்டார். ''இன்னொரு பாயிண்ட், நமக்கு சாதகமாய். நாளை இரவு பிரதம மந்திரிக்கு ஒரு டின்னர் பார்ட்டியை ஏற்பாடு பண்ணியிருக்கார் சர் ஹென்றி.'' இப்படிச் சொல்லி விட்டு ஒரு சின்ன திருத்தத்தைக் கொண்டு வந்தார் அவர்: ''அதாவது இன்னிக்கு இரவு! ஏழரை மணிக்கு. எட்டுபேர் மொத்தம். நானும் இன்வைட் பண்ணப்பட்டிருக்கேன். அது முடியாதுனு நான் போய் எக்ஸ்க்யூஸ் சொல்லிடப் போறேன். ராத்திரி டியூட்டிக்கு அவசர அழைப்பு வந்திருக்குனு சொல்லிடுவேன். இப்படி இங்கு எனக்கு நடப்பதுண்டு. நானொரு சமூகசேவகி. அடிக்கடி அகாலத்துல நான் பறப்பது வாடிக்கை. ஆகவே சர் ஹென்றியும் அவருடைய மனைவியும் உடனடியா ஒத்துப்பாங்க. எதுக்காக? அருகாமையில் ஏதாவது நடந்தால் அதை பற்றி உங்களுக்கு நான் உடனுக்குடன் தொடர்பு கொண்டு தெரிவிப்பதற்காக.''

''எக்ஸலெண்ட்'' என்றார் ஸ்டைனர். ''இப்போதைக்கு முழு சமாச்சாரமும் அற்புதமா போவதைப் போல இருக்கு.''

''இப்ப நான் கிளம்பணும்'' என்றார் ஜோன்னா க்ரே.

அப்போது கதவு திறந்து ரிட்டர் வந்தார்.

''எல்லாம் அங்கே சரியா போய்க்கிட்டிருக்கா?'' - கேட்டார் ஸ்டைனர்.

''எல்லாரும் படுத்தாச்சு'' என்றார் அவர். ''ஒரு குறையிருக்கு. நோ சிகரெட்ஸ்.''

''ஓ, மறந்துட்டேனே'' என்றார் ஜோன்னா க்ரே. ''கார்லேயே விட்டுட்டேன்... கொண்டு வந்து தரேன்'' என்று ஓடினார் அவர்.

திரும்பி வந்தபோது இரண்டு சிகரெட் பெட்டிகளை டேபிளின் மீது போட்டார் அவர்.

''காட்'' என்றார் டெவ்லின். ''இதிலிருக்கும் ஒற்றுமையை நீங்க எப்பவாவது கவனிச்சதுண்டா? ரெண்டும், ரெண்டு தங்கக்கட்டிகள் போல தெரியுது. எங்கிருந்து வருது இது?''

'WVS ஸ்டோர்ஸ். ஓ கே... நாளை நாம சந்திப்போம். கிராமத்துல. எதிர்பாராமல் சந்திப்பதைப் போல.''

அவர் கிளம்பிப்போன பிறகு ஆளுக்கொரு சிகரெட்டை எடுத்து பற்ற வைத்துக் கொண்டார்கள். அப்போது கதவில் சில கொட்டுக்கள் விழுந்தன. ப்ரஸ்டன் வந்தார்.

''வாங்க'' என்றார் டெவ்லின். ''எப்படியிருக்கீங்க? மறுபடியும் உங்களுடைய பிறந்த மண்ணுக்குப் போவதுலே சந்தோஷமா?''

புன்னகைத்த அவர் ஸ்டைனர் பக்கம் திரும்பி கேட்டார்: ''ஏதாவது மேற்கொண்டு ஆர்டர் இருக்கா?''

அங்கிருந்த இரண்டு சிகரெட் பெட்டிகளை எடுத்து ''இதைக் கொண்டு போய் நம் ஆட்களுக்கு தாங்க. இதுதான் ஆர்டர்'' என்றார் ஸ்டைனர்.

''இதுக்காக உங்களை அவங்க ரொம்பவும் ஆசீர்வதிப்பாங்க'' என்றார் டெவ்லின்.

இதை காற்றில்விட்ட ப்ரஸ்டன் ஸ்டைனரிடம் ''நிச்சயமா சார்'' என்று பதிலளித்தார். அம்சமாய் ஒரு சல்யூட் வைத்துவிட்டு கிளம்பினார்.

★ ★ ★

விண்ணில் வானிலை மிகவும் பொருத்தமாக இருந்தது. திரும்பி வரும்போது பிரயாணம் எவ்விதமான அசம்பாவிதங்களும் இன்றி அமைந்தது. டச்சுக் கடற்கரையிலிருந்து அவர்கள் முப்பது மைல்கள் தள்ளியிருந்தார்கள். கெர்ரிக் அறைக்குள் வந்த போஹ்மர் அவருக்கு ஒரு கப் காபி தந்தார்.

கெர்ரிக் உற்சாகமாய் தலையசைத்தார். பிறகு அச்சிரிப்பு அகன்றது. அவருடைய ஹெட் போனில் பரிட்சயமான ஒரு குரலை கேட்டார். ஹான்ஸ் பெர்கர் - இவருடைய பழைய யூனிட்டின் கட்டுப்பாட்டு அறை அலுவலர்.

போஹ்மர் அவருடைய தோளைத் தொட்டு கேட்டார்: ''பெர்கர்?''

''வேற எவன்?'' என்றார் கெர்ரிக். ''இக்குரலை நீங்களும் பல தடவை கேட்டிருக்கீங்க.''

''எட்டு டிகிரிக்கு திருப்புங்க'' - பெர்கரின் குரல் அமைதியை கிழித்தது.

''ஏதோ ஒரு வாகனத்தை நம்மை கொல்வதற்காக திசை காட்டுவதைப் போல இருக்கு'' - சொன்னார் போஹ்மர். ''நம் திசையை குறிப்பிட்டு போகும்படி இல்லே சொல்றார்...''

''இலக்கு, ஐந்து கிலோ மீட்டர்கள்.''

திடீரென்று பெர்கரின் குரல் சவப்பெட்டியின் மீது அடிக்கப்படும் ஆணியின் கடைசி அடிபோல, தீர்மானமாய், முடிவாய், தெளிவாய் அமைந்தது. கெர்ரிக்கின் குடல் உள்ளே திரும்பியது. அவர் பயப்படவில்லை. பல வருடங்களாய் போரில் பறக்கும்போது அவர் எதிர்பார்த்திருந்த மரணம்தான் இது - இப்போது நிஜமாய், நிதர்சனமாய்.

போஹ்மர் அவரை இறுக்கமாய் பிடித்துக் கொண்டார். "நம்மை குறி வைத்துத்தான் பீட்டர்!" என்றலறினார் அவர். "நாம் அந்த இலக்கு!"

விமானம் பூகம்பம் கண்ட கட்டிடம் போல இப்போது ஆடியது. காக்பிட்டின் தரையை குண்டுகள் துளைத்தன. ஜன்னல்கள் நொறுங்கின. ஒரு குண்டு கெர்ரிக்கின் வலது தொடையைக் கிழித்துவிட ஒரு பேரிடி அவரது இடக்கையில் வீழ்ந்தது. கீழிருந்து தொடுக்கப்படும் குண்டுக்கணைகள்.

விமானம் கீழிறங்க ஆரம்பித்தது. அதை எவ்வளவோ தடுக்க முயன்றும் தோற்றுத்தான் போனார் கெர்ரிக். போஹ்மர் எழுந்திருக்க முயன்றார். முகமெங்கும் ரத்தம்.

"கெட் அவுட்!" - கெர்ரிக் கத்தினார். "இனி என்னால வெகுநேரம் வாகனத்தை காப்பாற்ற முடியாது."

போஹ்மர் பேச முயன்றார். ஆனால் ஆவேசமாய் அவரை பிடித்திழுத்த கெர்ரிக் "கெட் அவுட்!" என்றார் மீண்டும். "இது என் ஆணை."

போஹ்மர் வெளியேறும் பகுதிக்குப் போனார். ப்ளேன் படுமோசமான நிலைக்கு ஆளாகியிருந்தது. எங்கெங்கும் ஓட்டைகள். புகையையும் எரியும் எண்ணெய் வாடையையும் நுகர முடிந்தது அவரால். அங்கு நிலவிய மோசமான நிலைமை அவருக்கு புதிய வேகத்தை தந்தது.

போஹ்மர் குதித்து வெளியேறினார். வாலில் அவரது முகம் பட்டு, தூக்கியெறியப்பட்டார். மெட்டல் பாகத்தில் விழுந்து அந்தரத்தில் நுழைந்தார். பாராசூட் பிறந்து கொண்டது. அவரை அப்படியே இதமாய் இருளுக்குள் கொண்டு போக ஆரம்பித்தது அது.

இன்ஜின் தீப்பற்றிக் கொள்ள இறங்கிக் கொண்டிருந்தது விமானம். ஜ்வாலைகள் பரவியபடி, வாகனத்தின் மெயின்

பகுதிக்கு வந்தன. எப்படியாவது விமானத்தை தனது கட்டுக்குள் கொண்டுவர போராடிக் கொண்டிருந்தார் கெர்ரிக். தனது இடக்கை இரு இடங்களில் உடைந்து போயிருப்பதை இன்னமும் அவர் உணரவில்லை.

அவர் கண்களில் ரத்தம் கசிந்தது. 'எப்படி சாக வேண்டியுள்ளது' என்று சத்தமற்று சிரித்துக் கொண்டார் அவர். அவார்டைக்கூட வாங்க முடியாத துர்லபநிலை. பரவாயில்லை - இறந்த பிறகும் அதை தருவார்களே...

அப்போது சட்டென்று சற்று புகை விலக அவரால் கீழே கடலையும் விட்டுவிட்டு நகரும் பனிமூட்டத்தையும் பார்க்க முடிந்தது. டச்சுக் கடற்கரை வெகு தூரம் இருக்க வாய்ப்பில்லை. ஆஹ், அங்கே ஓரிரு கப்பல்களும் இருக்கின்றன. சில E-படகுகளும் தோன்றுகின்றன. ஆஹ்...

தனது இருக்கையில் நகர முயன்றார் அவர். அப்போது தான் தனது கால்கள் அப்படியே அடியில் மாட்டிக் கொண்டிருப்பதை உணர்ந்தார் எடுக்க முடியவில்லை. அதற்கு அவர் வருந்தவும் இல்லை. இப்போது அவரால் குதிக்க முடியாது. கடலிலிருந்து முன்னூறு அடிகள் உயரத்தில்தான் இவர் இப்போது இருக்கிறார். இது இவருக்கே தெரியும். சில E-படகுகள் கீழே வந்தன. அவை தன்னிடமிருக்கும் அனைத்தையும் விமானத்தின் மீது சுட்டன.

அப்போது சட்டென்று ஒரு பெரிய காற்று அடிக்க, பனிமண்டலம் கலைந்தது. கீழே கடல். வெறும் நூறு அடிதான் இடைவெளி என்பதை உணர்ந்தார் அவர்.

உயிராசை அவரது ஒவ்வோர் அணுவையும் இயக்கியது. அப்போது விமானம் நிற்கத் தொடங்கியது. அதன் இறக்கை துண்டானது. மும்முறை அது குட்டிக்கரணம் போட்டது.

எரியும் பகுதிகள் பெரிய ஹீஸ் ஓசையுடன் அணையுமாறு அது அப்படியே கடலில் வீழ்ந்தது.

கொர்ரிக் அப்படியே உட்கார்ந்தபடியிருந்தார். இப்படி செய்தால் கடலில் விமானத்தை குப்புற வீழ்த்தி விடலாம் என்று எந்த புத்தகத்திலும் படித்தவரல்லர் இவர்... இருந்தாலும் முயன்று பார்த்தார். அனைத்து எதிர்ப்புகளுக்கு இடையே இதோ முடிந்து விட்டது. அவரது கழுத்தை சுற்றிலும் நீர். எழுந்திருக்க முயன்றார். ஆனால் அவருடைய கால் நன்றாய் மாட்டிக் கொண்டிருந்தது. உடைந்த கையும் இப்போது அசைக்க முடியாமல் வலித்தது. என்ன வெல்லாமோ பண்ணி முயற்சித்து காலை விடுவித்தார்.

அப்படியே நீருக்குள் குதித்து விட்டார். லைஃப்-ஜாக்கெட்டை தவறாமல் உடனடியாய் அணிந்துக் கொண்டதால் மிதந்தார்.

E-படகு அவருக்குப் பின்னால் வந்து நின்றபோது திரும்பிப் பார்க்கவும் அவர் எத்தனிக்கவில்லை. ஆனால் விமானம் கடற்தளத்திலிருந்து உள்ளே மூழ்குவதை மட்டும் பார்த்தபடியிருந்தார். ''நீ நிறைய உழைச்சே கண்மணி, உழைச்சே'' என்றார் வாஞ்சையாய்.

ஒரு கயிறு அவருக்கு பின்னால் கடலில் விழ யாரோ ஒருத்தர் பிரெஞ்சில் ''பிடி, பிடி'' என்று கத்தினார். ''நாங்க உங்களை காப்பாத்திடறோம். நீங்க இப்ப பாதுகாப்பா ஆயிட்டீங்க.''

கொர்ரிக் திரும்பி, கத்திக்கொண்டிருந்த இளைய கடற்படை வீரரை பார்த்தார். அவருக்கு பின்னால் அரை டசன் பிரயாணிகளின் துருத்திக் கொண்டு எட்டிப்பார்க்கும் முகங்கள்.



# 15

**வ**யல்வெளி வழியே ஹாப்ஸ் எண்ட் நோக்கி மோலி வண்டியை ஓட்டிச் சென்றபோது காலை பத்து மணி. அது சனிக்கிழமை. முந்தைய நாளின் கனமழை இப்போது தூறலாகியிருந்தது. ஆனால் அப்பகுதி முழுவதும் இன்னமும் பனிமூட்டத்தால் படர்ந்தே கிடந்தது.

அவள் சீக்கிரமே காலையில் எழுந்து விட்டாள். காலை முழுக்க வேலை. லேக்கர் ஒரு சவக்குழி வெட்டப் போயிருந்ததால் பால் கறப்பது முதல் அனைத்து வேலைகளும் இவள் தலையிலேயே விழுந்தன. காட்டேஜ் வீடு வரை ஒருமுறை பார்த்து விட்டு வரலாம் என்ற எண்ணம் அவளுக்குள் திடுமென்று ஒரு விசையாகத்தான் எழுந்தது. தான் வந்து அழைக்கும்வரை இங்கு வரக்கூடாது என்று டெவ்லின் சொல்லியிருந்தாலும், அவருக்கு ஏதாவது ஆகிவிடுமோ என்ற உந்துதலால் வந்திருக்கிறாள். பிளாக் மார்க்கெட்டில் ஈடுபட்டோருக்கு தண்டனை கிடைத்தால் பல வருடங்கள் கம்பி எண்ணும்படி ஆகிவிடலாம்.

வீட்டின் பின்பக்கத்தை அடைந்ததும் குதிரையை நிறுத்தினாள். களிமண் சகதி குதிரையின் வயிறு வரை வருமாறு இருந்தது. அதன் மேல் உட்கார்ந்திருந்த அவளுடைய காலணிகளையும் அது தொட்டது.

விறகு எரிக்கப்படும் வாடையை நிச்சயமாய் நுகர்ந்தாள் அவள். பிறகு கிடங்கும் காட்டேஜும் பனிமூட்டத்துக்கு

நடுவில் தென்பட்டன. புகைப்போக்கியிலிருந்து புகை விடுபட்டுக் கொண்டிருப்பதை, சற்று பனி விலகியபோது அவளால் பார்க்க முடிந்தது.

தயங்கினாள். முடிவெடுக்க முடியவில்லை அவளால். லியாம் வீட்டில்தான் இருக்கிறார். நிர்ணயிக்கப்பட்ட நேரத்துக்கு முன்னாடியே வந்து சேர்ந்திருக்க வேண்டும். ஆனால் இப்போது அவள் உள்ளே போனாள் என்றால், தேவையில்லாமல் மறுபடியும் மறுபடியும் மூக்கை நுழைக்கிறாள் என்று அவர் எரிச்சல் கொள்ளக்கூடும். குதிரையின் வயிற்றில் ஓர் எத்து விட்டாள். அது கிளம்பத் தயாரானது. திருப்பினாள். வெளிப்புறமாய் செலுத்த ஆரம்பித்தாள்.

★ ★ ★

கிடங்கிலிருந்த ஆடவர்கள், தங்களுடைய பொருட்களை எடுத்துக் கொண்டு வெளியேற தயாரானார்கள். ப்ராண்டிட்டும், சர்ஜெண்ட் ஆல்ட்மேனும் ஜீப்பில் வைக்கப்பட்டிருந்த மெஷின் துப்பாக்கியை பரிசோதித்துக் கொண்டிருந்தார்கள். கைகளை பின்னால் கட்டிக்கொண்டு, ஏதோ அந்தப் பகுதியின் முழுக்கட்டுப்பாடும் தனக்குள் இருப்பது போல நின்று கொண்டு நடப்பதை பார்த்துக் கொண்டிருந்தார் ப்ரஸ்டன்.

வெர்னர் ப்ரிகல் மற்றும் க்ளக்ள் ஆகியோர் கதவினை பாதி திறந்து புதர்ப் பகுதியினை நோட்டமிடலானார்கள். பறவைகள் அங்கு உலாவிக் கொண்டிருந்தன. அவற்றை பற்றி விவரித்தபடி க்ளக்ள் தனது பார்வையை செலுத்திக் கொண்டிருந்தபோது துணுக்குற்றார். ‘‘கடவுளே...’’ என்று பதற்றமானார். ‘‘நாம, கண்காணிக்கப்படறோம்.’’ அவரது பார்வையில் மோலி தென்பட்டிருந்தாள்.

இதை கேட்ட அடுத்த நொடியில் ப்ராண்டிட்டும் ப்ரஸ்டனும் அவரருகில் வந்திருந்தார்கள். ''நாங்க போய் அவளை பிடிச்சுக்கிட்டு வரோம்'' - கிளம்பினார் ப்ரஸ்டன்.

ப்ராண்டிட் அவரை பிடித்து நிறுத்த முயன்றார் - ம்ம், அவகாசமில்லை. அவர் ஓட்டமாய் வெளியேறியிருந்தார்.

மோலி திரும்பினாள். கவனித்தாள். ஆரம்பத்தில் அது டெவ்லின் என்றுதான் அவள் நினைத்திருந்தாள். ஆனால் இறுக்கமாய் அவளை ப்ரஸ்டன் கவ்வியபோதுதான் அவள் வியப்பாய் அவரை கவனித்தாள்.

''வா. நீ வேணும்.''

''சீ விடு என்னை'' என்றாள் அவள். ''நான் ஒண்ணும் பண்ணல.''

அவள் முறைத்தாள். திமிறினாள். அவருடைய இறுக்கம் கூடியது. அப்படியே அவளை தூக்கி தோளில் கிடத்திக் கொண்டு அவளுடைய கால் உதை மற்றும் கதறல்களைப் பொருட்படுத்தாமல் தூக்கிக்கொண்டு போனார் அவர்.

முந்தைய இரவு நடவடிக்கைகள் அனைத்தையும் ஒருமுறை பார்ப்பதற்காக சூரியவொளி பூமியில் படர்ந்ததும் உடனே கடற்கரைக்குப் போயிருந்தார் டெவ்லின். காலை சிற்றுண்டி முடிந்ததும் அனைத்தையும் ஸ்டைனருக்கு விளக்குவதற்காக அவருடன் மீண்டும் சென்றிருந்தார். அவர்கள் இருவரும் திரும்பிக் கொண்டிருந்தார்கள். காட்டேஜிலிருந்து முப்பது கெஜ தூரத்தில்தான் அவர்கள் இருந்தார்கள். அப்போது, தோளில் ஒரு பெண்ணுடன் புதர்ப்பகுதியிலிருந்து வெளியேறிக் கொண்டிருந்தார் ப்ரஸ்டன்.

''என்ன நடக்குது அங்கே?' - கேட்டார் ஸ்டைனர்.

''ஓ. அது மோலி ப்ரியர். நான் சொல்லல, அந்தப் பொண்ணு.''

ப்ரஸ்டன் ஓடுவதற்காக எத்தனிக்க, ''அவளை இறக்கி விடு, முட்டாளே!'' என்று கத்தினார் டெவ்லின்.

திரும்பிய ப்ரஸ்டன் ''எனக்கு கட்டளை இட உங்களுக்கு உரிமை கிடையாது'' என்றார்.

டெவ்லினை அமர்த்திய ஸ்டைனர் தற்போது தன் குரலை ஓங்க விட்டார். ''மிஸ்டர் ப்ரஸ்டன்'' - இரும்பு போன்ற குரலெடுத்து அழைத்தார் அவர். ''இந்தப் பொண்ணை இப்ப நீங்க விடுவிக்கிறீங்க.''

ப்ரஸ்டன் தயங்கினார். பிறகு மோலியை இறக்கி விட்டார். விலகி நின்றவள் தாமதிக்காது அவருடைய கன்னத்தில் ஓங்கி அறைந்தாள். ''நாயே, இனி உன் கையை மற்ற பொம்பிளைங்க பக்கம் நீட்டவே கூடாது'' என்றாள் புயலாய்.

ஸ்தலத்திற்கு வந்து சேர்ந்த டெவ்லின் ப்ரஸ்டனை ஒதுக்கினார். ''உனக்கு ஒண்ணும் ஆகலியே, மோலி?''

''லியாம்?'' என்றாள் அவள் பயத்தில். ''என்னது இதெல்லாம்? என்ன நடக்குது இங்கே?''

ஆனால் அப்போது நிலைமையை ஒரு பட்டுத்துணியைப் போல கையாண்டது ஸ்டைனர்தான். ''அவர் ஒரு வீரர் - ப்ரஸ்டன்'' என்றார் தீவிரமாய். ''ப்ரஸ்டன்... இப்ப முதல் வேலையா இப்பெண்கிட்டே நீங்க மன்னிப்பு கேட்கறீங்க.''

ப்ரஸ்டன் தயக்கம் காட்டினார். தான் சொன்னதை ஆணித்தரமாக்கினார் ஸ்டைனர்: ''உடனே, மிஸ்டர்!''

ப்ரஸ்டன் தனது கால்கள் இரண்டையும் இணைத்து அட்டென்ஷன் ஆனார். ''மன்னிக்கணும், மேம். இது என் தவறு.'' திரும்பினார். கிடங்குக்குள் போய்விட்டார்.

ஸ்டைனரும் ''இந்த துரதிர்ஷ்டவசமான நிகழ்வுக்காக நான் எத்தனை வருந்தறேன்னு என்னால விளக்க முடியாது'' என்றார்.

''இது கர்னல் கார்ட்டர், மோலி'' என்று விளக்கினார் டெவ்லின்.

''போலந்து நாட்டின் பாராசூட் படையின் கர்னல்'' என்று சொல்லிக் கொண்டார் ஸ்டைனர். ''இப்பகுதிக்கு பயிற்சிக்காக வந்திருக்கோம். பாதுகாப்பைப் பொறுத்தமட்டில், ப்ரஸ்டன் மிகவும் கறாரானவர். தன்னை மறந்துடுவார்.''

அப்பொழுதைவிட இப்பொழுது மேலும் பயந்திருந்தாள் மோலி. ''ஆனா, இதுல லியாம்?'' என்றாள்.

டெவ்லின் அவளை தன் கையோடு இழுத்துக் கொண்டார். ''என்கூட வா. குதிரையை பூட்டுவோம். உன்னை வீட்டுல விட்டுட்டு வரேன்.'' புதர்ப்பகுதியின் எல்லைக்கு அவளை இழுத்துப் போனார் டெவ்லின். அங்கு குதிரை புல் மேய்ந்துக் கொண்டிருந்தது.

''நீ என்ன பண்ணியிருக்கே, பார்த்தேயில்ல?'' என்று கடிந்துக் கொண்டார் டெவ்லின். ''நான் மதியம் வந்து கூப்பிடும்வரை காத்திருக்கும்படி சொன்னேனா இல்லையா? உனக்கு சம்பந்தப்படாத விஷயங்களில் மூக்கை நுழைப்பதை நீ எப்ப நிறுத்தப் போறே?''

''ஆனா எனக்கு விளங்கல'' - சொன்னாள் அவள். ''பாராசூட் படையினர், இங்கே? நீங்க பெயிண்ட் பண்ணின ட்ரக், ஜீப்பும் இங்கே? என்னப்பா இதெல்லாம்?''

அவளுடைய கையை வெறியாய் பற்றினார் அவர். ''நம்பு மோலி. எல்லாம் பாதுகாப்பு கருதி. செக்யூரிட்டி. கர்னல் சொன்னது உன் காதுல விழல? எதுக்காக உன்கிட்டே

ப்ரஸ்டன் அத்தனை கொடூரமா நடந்துக்கிட்டிருக்கணும்? இங்கே வந்திருப்பதற்கு மிகவும் பிரத்யேகமான ஒரு காரணம் இருக்கு. அவங்க எல்லாத்தையும் முடிச்சுட்டு கிளம்பும்போது அது உனக்கே தெரியும். இப்போதைக்கு அது ஒரு டாப் சீக்ரெட். அதை பற்றி ஒரு ஜீவனிடமும் நீ வாயை திறக்கக்கூடாது. இதுக்கு நீ பண்ணும் சத்தியம், என்னை நீ காதலிப்பதை போன்று தூய்மையானது.''

அவரை நிமிர்ந்து பார்த்தாள் அவள். அப்பார்வையில் ஒரு புரிந்துணர்வு விளைந்திருந்தது. ''என்னனு இப்பத்தான் எனக்கு விளங்குது'' என்றாள் அவள். ''ராத்திரியெல்லாம் நீங்க அடிச்ச ட்ரிப்புகளுக்கான காரணங்கள் - விளங்குது. நான் ஏதோ பிளாக் மார்க்கெட் சம்பந்தப்பட்டதோனு உங்களை கீழ்த்தரமா நினைச்சிருந்தேன். ஆனா நான் நினைச்சதெல்லாம் தப்பு. நீங்க இன்னமும் ராணுவத்துல தான் இருக்கீங்க. அதுதான், இல்லையா?''

''ஆமாம்'' என்றார், உண்மையைப் போல. ''அப்படித்தான்.''

அவளுடைய கண்கள் பிரகாசித்தன. ''உங்களைப் போய் அத்தனை கீழா நான் நினைச்சதுக்கு, ஓ லியாம்... என்னை நீங்க மன்னிப்பீங்களா?''

அப்பாடா என்றானது டெவ்லினுக்கு. அவர் ஒரு நீண்ட பெருமூச்சினை வெளியிட்டாலும் ஒரு சிரிப்பால் அதனை மறைத்து விட்டார். ''அதை பற்றி நான் யோசிக்கிறேன்! நல்ல பொண்ணா நீ இப்ப வீட்டுக்குப் போ. நானா அழைக்கும்வரை காத்திரு. எவ்வளவு காலம் ஆனாலும்.''

''காத்திருப்பேன், லியாம், காத்திருப்பேன்.''

அவர் கழுத்தில் ஒரு கரம் பிடித்து வளைத்து முத்தமிட்டாள் அவள். குதிரை வண்டியில்

ஏறிக்கொண்டாள். ''நினைவிருக்கட்டும்'' என்றார் லியாம். ''மூச்.''

''நீங்க என்னை நம்பலாம்.'' குதிரைக்கு அவள் ஓர் உதைவிட அது கிளம்பி ஓடியது.

டெவ்லின் திரும்ப, காட்டேஜிலிருந்து வந்திருந்த ரிட்டர் அப்போது ஸ்டைனருடன் சேர்ந்திருந்தார். ''என்ன, எல்லாம் சரியா?''

இருவரையும் ஒதுக்கி விட்டு நேராய் கிடங்குக்குப் போனார் டெவ்லின். அங்கு அனைவரும் கூட்டமாய் கூடி ஏதோ செய்து கொண்டிருக்க, தனியாய் ஜன்னலருகே இருந்த ப்ரஸ்டனிடம் ஓடினார் அவர். கடும் வேகமாய் அவரது கன்னத்தில் பளீரென்று ஓர் அறை விட்டார். சுழன்று சுழன்று, அங்கிருந்த யாரோவொருவரின் பாதங்களில் போய் வீழ்ந்தார் ப்ரஸ்டன்.

''கொன்னுடுவேன் உன்னை, நாயே'' என்றார் கோபம் அடங்காமல்.

இருவருக்கும் நடுவில் ஸ்டைனர் வந்து நின்றார். ஐரீஷ்க்காரனின் கோபத்தை கண்களாலேயே நிறுத்தினார். ''நீங்க காட்டேஜுக்குப் போகலாம்'' என்றார். ''இதை நான் பார்த்துக்கறேன்.''

டெவ்லின் மறுபடியும் ப்ரஸ்டனை முறைத்தார். கொலைவெறி மறுபடியும் அவர் முகத்தில் மளமளவென்று படர்ந்தது. பிறகு ஒரே ஓட்டமாய் வெளியேறிவிட்டார் அவர். அங்கு முழு அமைதி நிலவியது.

''ஜாக்கிரதை ப்ரஸ்டன்'' என்று ஆரம்பித்தார் ஸ்டைனர். ''வழியில் குறுக்கிட்டால், கொன்று போட்டுவிடும் ஓர் ஆள்கூட நீங்க இருக்கீங்க. ஞாபகமிருக்கட்டும். மறுபடியும் உங்க எல்லையை நீங்க தாண்டினால், அவர் சுடலேனாலும், நான் சுடுவேன். உங்களை.''

பிறகு டெவ்லினை சந்தித்தபோது "அந்த பொண்ணால ஒண்ணும் பிரச்சினை இல்லியே?" என்றார் ஸ்டைனர்.

"கவலை வேண்டாம். நான் இன்னும் ராணுவத்துல இருக்கேன்னு முழுசா நம்பிட்டா. இது ராணுவ ரகசியம்னும் நம்பறா. ஆல் ரைட்... இப்ப அடுத்து என்ன?"

"கிராமம் வரைக்கும் மதியம் போவோம். இப்போதைக்கு இதிலிருந்து நீங்க முழுக்கவும் விலகியிருக்கணும்னு நான் நினைக்கிறேன். நாம மறுபடியும் சாயங்காலம் இருட்டினதுக்கப்புறம் திட்டத்தை செயல்படுத்தும் கட்டத்தில் சந்திக்கலாம்."

"ஆல் ரைட்" என்றார் டெவ்லின். "மத்தியானத்துல உங்களை ஜோன்னா க்ரே நிச்சயம் தொடர்பு கொள்வாங்க. ஆறரைக்கு அவங்க இடத்துல நான் இருப்பேன்னு சொல்லிடுங்க. E-படகு, ஒன்பதிலிருந்து பத்துக்குள் எந்த நேரத்தில் வேணுமானாலும் வரலாம். ஸ்தலத்திலிருந்து நேரா நீங்க கொய்னிக்குடன் தொடர்பு கொள்ள வசதியாக நான் போனையும் கையோட கொண்டு வந்துடறேன். சூழ்நிலைக்கு ஏற்ப உங்களை அவர் எப்ப பிக்-அப் பண்ணிக்கலாம் என்பதையும் நீங்க பேசி தீர்மானிச்சுக்கலாம்."

"நல்லது" என்றார் ஸ்டைனர். ஏதோ தயங்குவதைப் போல தெரிந்தார். "ஒரு சமாச்சாரமிருக்கு."

"என்னது அது?"

"சர்ச்சிலைப் பற்றிய என் கட்டளைகள். அவங்க தீர்மானமாகவும் வெளிப்படையாகவும் சொல்லிட்டாங்க. அவர் உயிருடன் வேணும்னு சொல்றாங்க. ஆனா ஒரு வேளை அது சாத்தியம் இல்லேனா..."

"ஒரு புல்லட்டை நீங்க அவர் மேல போட வேண்டியிருக்கும். ஸோ, இதிலென்ன பிரச்சினை?"

''உங்களுக்கும் ஒண்ணு இருந்திடுமோனு தெரியல.''

''அப்படியெதுவும் துளியும் நடக்காது'' என்றார் டெவ்லின். ''இப்ப எல்லாரும் ராணுவ வீரர்கள். ஒவ்வொரு வீரரும் அவருடைய வாய்ப்பினை சந்திச்சுத்தான் ஆகணும். இது சர்ச்சிலையும் சேர்த்துத்தான்.''

★ ★ ★

**ல**ண்டனில், லஞ்ச்சினை மனதில் வைத்துக்கொண்டு டேபிளை சரிசெய்துக் கொண்டிருந்தார் ரோகன். க்ரேன்ட், கதவினைத் தட்டி அனுமதியெல்லாம் கேட்காமலேயே நேராய் உள்ளே நுழைந்தார். அவரது முகம் டென்ஷன் கலந்த பரபரப்பில் இருந்தது. ''டெலிபிரிண்டர் சேதி, ஜஸ்ட் வந்தது, ஸார்'' என்றார். அந்த சேதியை ரோகனுக்கு முன்னால் வைத்தார். ''அவனை நாம பிடிச்சுட்டோம்.''

''நார்ஃபால்க், நார்விச்'' - படித்தார் ரோகன்.

''ஆனா அங்கிருந்து கொஞ்சம் தொலைவு இருக்கார் அவர். வட நார்ஃபால்க் கரையோரமாய். ஸ்டட்லே கான்ஸ்டபிள் எனும் பகுதியில். ரொம்பவும் தனிமைப்படுத்தப்பட்ட பகுதி அது.''

''அந்த இடத்தை உங்களுக்கு தெரியுமா?''

''பயிற்சியில் இருந்த காலத்துலே ரெண்டு தடவை போயிருக்கேன்.''

''ஆக, தன்னைத்தானே டெவ்லின்னு சொல்லிக்கிட்டு சர் ஹென்றியின் வீட்டை கவனிச்சுக்கிட்டிருக்கார். அவனுக்கு நிரந்தர ஷாக் கொடுப்போம். ஆங், அவன் இருக்கும் இடம் இங்கிருந்து எத்தனை தூரத்துல இருக்கு?''

''சில நூறு மைல்கள்.'' சொல்லி விட்டு மறுப்பாய் தலையசைத்தபடி ''எதை துரத்திக்கிட்டு அவன் அங்கே தங்கியிருக்கான்?'' என்றார்.

''அதைத்தான் நாம கூடிய சீக்கிரத்துல கண்டுபிடிக்கப் போறோம்.''

''அடுத்த நகர்த்தல் என்ன ஸார்? அவனை பிடிக்குமாறு நார்ஃபால்க் கான்ஸ்டபிள்களிடம் சொல்லிடவா?''

''பைத்தியமா நீங்க?'' என்றார் ஆச்சரியமாய். ''கிராமத்து போலீஸ்கள் எப்படினு தெரியாதா உங்களுக்கு? நோ, இதை நாம மட்டுமே கவனிக்கணும். நீங்களும் நானும் மட்டும், ஃபெர்ஜஸ். நானும் வாரயிறுதிப்பொழுதை அமைதியா கிராமத்துல கழிச்சு கொஞ்ச நாள் ஆகிடுச்சு.''

''அட்டர்னி ஜெனரலை லஞ்சுக்கு அப்புறம் நீங்க பார்க்கணும். முன்பதிவு வாங்கியிருக்கு.''

''அது மூணு மணிக்கு முடிஞ்சுடும். நீங்க மூணரை மணிக்கு ஒரு காரைக் கொண்டு வந்துடுங்க. காத்திருங்க. நான் வந்ததும் நேரா கிளம்பிடலாம்.''

''இதுபற்றி அசிஸ்டெண்ட் கமிஷனர்கிட்டே சொல்லிடணும், இல்லையா?''

எரிச்சலாய் கத்தினார் ரோகன். ''கடவுளே... ஃபெர்ஜஸ், உங்களுக்கு என்னாச்சு? அவர் போர்ட்ஸ்மவுத் போயிருக்கார், இல்லையா? கிளம்புங்க, சாமி.''

எதற்காக தனக்குள் இப்படி விளக்கவொண்ணா மறுதலிப்பு உள்ளது என்பதை புரிந்து கொள்ள முடியாமலேயே ''வெரி வெல், சார்'' என்று விட்டு கிளம்பினார் அவர்.

கதவில் கை வைத்து திறக்கும்முன், ''ஃபெர்ஜஸ்'' என்றழைத்தார் ரோகன்.

''யெஸ், சார்?''

''ஆயுதக்கிடங்குக்குப் போய் ஒரிரு துப்பாக்கிகளை எடுத்துக்குங்க. இவனுங்கள்லாம் முதல்ல சுடுவாங்க. பிறகு எதுக்கு வந்தீங்கன்னு கேட்பாங்க.''

*க்ரேன்ட் கடினமாய் ஆனார். "பண்ணிடறேன் ஸார்" என்றபோது அவருடைய குரல் நடுங்கியது.*

*"இதுக்கும் யாரிடமாவது போய் நீங்க அனுமதி வாங்கணுமா?"*

*இதற்கு அவர் பதில் தரவில்லை.*

★ ★ ★

*நண்பகலுக்கு சற்று முன்பு. பின்பக்கப்படிகள் வழியாய் வந்து ஃபாதர்களுக்கான பகுதியை திறந்தார் வெரேக்கர். பிறகு கீழ்ப்பகுதிக்குள் இறங்கினார். அவரது பாதத்தில் வலி நிறைய இருந்தது. ராத்திரி முழுக்க தூங்க விடவில்லை அது. எல்லாம் இவருடைய தப்பால்தான். டாக்டர் நிறைய வலிநிவாரணி தந்திருந்தார். அடிமையாகிவிடுவோமோ என்ற அச்சத்தால் இவர்தான் அவற்றில் ஒன்றைக்கூட எடுத்துக் கொள்ளவில்லை.*

*ஆகவே அவதிப்பட்டார். நல்லவேளையாக வார இறுதியில் பமீலா வருகிறாள். அவள்தான் போன் பண்ணி சொன்னாள். வரும் தகவலை மட்டுமல்ல... ஹாரி கேன் வந்து அழைத்து வரப்போவதையும் சொல்லத்தான். சற்று நிம்மதி வந்தது அவருக்கு. கடைசியில் யாரோ ஒருத்தன்மீது பமீலாவுக்கு இண்ட்ரஸ்ட் விளைந்ததே.*

*கீழ்ப்பகுதியின் கடைசி படிக்கட்டின் அருகில் ஓர் ஆணியில் பெரிய டார்ச் விளக்கு தொங்கிக் கொண்டிருந்தது. வெரேக்கர் அதனை எடுத்துக் கொண்டு ஒரு பழைய கறுப்பு ஒக் மரக்கதவினை திறந்து அதனுள் நுழைந்தார். உடனே கதவினை மூடினார். டார்ச்சை ஒளிர விட்டார். அவருக்கு முன்னால் ஒரு பெரிய குழாய் போன்ற பாதை நீண்டது.*

இதைபோன்ற அற்புதமான கட்டுமானங்களில் நாட்டில் மிஞ்சியிருக்கும் ஒன்றே ஒன்று இதுதான். பாதிரியாரின் பாதை. அவர்களுடைய அறையையும், சர்ச்சையும் இணைக்கும் பாதை. இப்பாதையின் ரகசியம் ஒரு பாதிரியார் மாற்றி மறுபாதிரியாருக்கு ரகசியக்காப்புப் பிரமாணமாய் வழங்கப்படும். வெரேக்கரைப் பொறுத்தமட்டில் இது ஒரு பிரமாதமான செளகரியம்.

குழாய் போன்ற பாதையின் முடிவில் மேல்நோக்கி நீண்ட படிகளில் ஏறும்போது, காது கொடுத்து கூர்ந்து கேட்டார். யெஸ், தவறு கிடையாது. யாரோ பியானோ வாசித்துக் கொண்டிருக்கின்றார்கள். ரொம்பவும் பிரமாதமாக. மீதிப்படிகளைக் கடந்து மேலேறிய அவர், அங்கிருந்த கதவினை திறந்தார். சர்ச்சுக்குள் நுழைந்தார். கதவினை அடைத்தார்.

உள்நோக்கி நடக்க ஆரம்பித்ததும் பாராசூட் குதிக்கும் வீரனுக்கான உடையை அணிந்திருந்த ஒருவன், அதற்குண்டான சிகப்பு பேட்ஜையும் அணிந்துகொண்டு, அங்கு அமர்ந்து பியானோ வாசிப்பதை ஆச்சரியமாய் பார்த்தார். அவருக்கு மிகவும் பிடித்த ஒரு மெல்லிசையை அந்த வீரன் இசைக்கருவியில் தேனாய் வடித்துத் தந்து கொண்டிருந்தான்.

ஹான்ஸ் ஆல்ட்மேன், தனக்குத்தானே குதூகலித்துக் கொண்டிருந்தார். அற்புதமான கருவி. அழகான சர்ச். அப்போது அவர் நிமிர்ந்தபோது பியானோவின் கண்ணாடியில் பின்னால் வந்துகொண்டிருந்த வெரேக்கரின் பிம்பம் தெரிய, சட்டென்று வாசிப்பதை நிறுத்திக் கொண்டு எழுந்து நின்றார்.

‘‘என்னை மன்னிக்கணும், ஃபாதர்’’ என்றார். ‘‘ஆனால் என்னால் கட்டுப்படுத்த முடியலே.’’ தனது விரல்களை

நொடிப்பொழுது மீண்டும் பியானோவின் கட்டைகளில் பரவ விட்டார். அதுவும் இன்னிசையை பொழிந்தது. ''என்போன்றவர்களுக்கு - அதாவது வீரர்களுக்கு - கலை ஆசையை தணித்துக் கொள்ளும் நல்ல வாய்ப்புகள் அமைவதே கிடையாது.'' பேசிய அவருடைய ஆங்கிலம், எக்ஸலெண்ட்.

வெரேக்கர் கேட்டார்: ''நீங்க யார்?''

''செர்ஜெண்ட் எமில் ஜனோஸ்க்கி, ஃபாதர்.''

''போலந்து?''

''தட்ஸ் ரைட்'' - ஆல்ட்மேன் ஆமோதிப்பாய் தலையசைத்தார். ''என் தளபதியுடன் உங்களை பார்க்கத்தான் நான் வந்திருக்கேன். உங்களை, உங்க அறையில் பார்க்கப் போயிருக்கும் அவர், அதுவரை இங்கே என்னை காத்திருக்க சொன்னார்.''

''நீங்க ரொம்பவும் பிரமாதமா வாசிக்கிறீங்க'' என்றார் வெரேக்கர். ''நீங்க வாசிச்ச மெல்லிசையை உங்க அளவுக்கு அற்புதமா வாசிக்கணும். ப்ச், நான் ஒவ்வொரு முறை உட்காரும்போதும் நானே கசந்துப்போகும் அளவுக்குத்தான் என் வாசிப்பு அமையுது.''

''ஆஹ்... நீங்க வாசிப்பீங்களா?''

''யெஸ். அதிலும் நீங்க வாசிச்ச அந்தப்பாட்டு, என் உயிர்.''

அத்தருணத்தில் காலடி ஓசைகள் கேட்டன. ஸ்டைனர் வந்தார். ''நீங்க, ஃபாதர் வெரேக்கரா?'' என்று கேட்டார்.

''தட்ஸ் ரைட்.''

''கர்னல் ஹோவார்ட் கார்ட்டர். ஸ்பெஷல் விமானப்படை பிரிவின் பாராசூட் வீரர்களுக்கான தலைமை.'' சொல்லிவிட்டு ஆல்ட்மேன் பக்கமாய் திரும்பிய அவர், ''ஒழுங்கா

நடந்துக்கிட்டீங்க இல்லியா, ஜனோஸ்க்கி?'' என்று கேட்டார்.

''கர்னலுக்கே தெரியுமே... பியானோதான் என்னுடைய பெரும் பலஹீனம்!''

ஸ்டைனர் இதற்கு முறைத்துப் பார்த்தார். ''வெளியே போங்க. உடனே. அங்கேயே மற்றவங்களுடன் காத்திருங்க.''

அவர் சென்றதும் திரும்பிய ஸ்டைனர் ''இது ரொம்பவும் அழகானதொரு சர்ச்'' என்றார்.

அப்போது ''நானும் பாராசூட் படையில் இருந்திருக்கேன்'' என அறிமுகம் செய்து கொண்டார் வெரேக்கர். ''முதல் பாராசூட் படைலே.''

''நீங்களா? ஆஹ், கடவுளே! அப்படினா நீங்க துனிஸியாவுல பணியாற்றியிருக்கணும்...''

''யெஸ். அங்கேதான் எனக்கு இது நிரந்தரமா கிடைச்சது.'' தன்னுடைய அலுமினியம் பாதத்தில் ஊன்றுக்கோலை தட்டிக் காட்டினார் அவர். கேட்டார்: ''என்னால என்ன ஆகணும் உங்களுக்கு?''

''இந்த ராத்திரிக்கு தங்க அனுமதி வேணும். இப்படி பயிற்சி வீரர்கள் தங்க பயன்படும்படி இங்கே பக்கத்திலேயே சத்திரம் போல ஒரு கிடங்கு இருக்குனு கேள்விப்பட்டோம்...''

''நீங்க பயிற்சிக்காகவா வந்திருக்கீங்க?''

ஸ்டைனர் சின்னதாய் சிரிக்க வேண்டியதாயிற்று. ''யெஸ், நீங்க அப்படியும் சொல்லலாம். ரொம்பவும் குறைவான எண்ணிக்கைலே வீரர்களை நான் என்னுடன் கூட்டி வந்திருக்கேன். மீதிப் பேரேல்லாம் வட நார்ஃபால்க் பகுதியிலே சிதறியிருக்காங்க. ஒரு குறிப்பிட்ட நேரத்துல, ஏற்கெனவே அறிவிக்கப்பட்ட பாதையை கண்டுபிடிச்சு நாங்க அத்தனை பேரும் விரைந்து ஓடணும். எத்தனை

*சீக்கிரத்துலே மறுபடியும் நாங்க சேருவோம்னு கணக்கு பார்க்க.''*

*''ஆக இன்று மதியமும் இரவும் மட்டுந்தான் நீங்க இங்கே இருப்பீங்க...''*

*''அவ்ளோதான். உங்களுக்கு இடையூறாயில்லாமல் நடந்துக்க முழு ஒத்துழைப்பு தருவோம். சில டெக்னிக்கல் பயிற்சிகள் தருவதற்காக பசங்களை நான் கிராமம் வரை கூட்டிப் போக வேண்டி வரும். அவனுங்களுக்கும் ஏதாவது வேலை தர வேண்டியிருக்கு. யாரும் இதுக்கு ஆட்சேபணை சொல்ல மாட்டாங்களே?''*

*இது, மிகச்சரியாய் டெவ்லின் கணக்கிட்டிருந்ததைப் போல, வேலை செய்தது. பிலிப் வெரேக்கர் புன்னகைத்தார். ''மிலிட்டரி சமாச்சாரங்களுக்காவும் பயிற்சிகளுக்காகவும் இந்த ஸ்டட்லே கான்ஸ்டபிள் பகுதி பலமுறை பயன்படுத்தப்பட்டிருக்கு, கர்னல். எங்களால் முடிந்த வகையில் ராணுவத்துக்கு உதவுவதில் நாங்க நிச்சயம் மகிழ்வோம்.''*

★ ★ ★

*ஆல்ட்மேன் வெளியே வந்ததும் பெட்ஃபோர்ட் நிறுத்தப்பட்டிருந்த இடத்துக்கு விரைந்து போனார். கேட்டுக்கு அருகே ஜீப் காத்திருந்தது. க்ளக்ள் அதனை ஒட்டத் தயாராயிருந்தார். வெர்னர் ப்ரிகெல் மெஷின் கன்னுக்குப் பின்னால்.*

*வெர்னர், ரூக்கெரி எனும் குருவி வகையின்மீது தனது கவனத்தை பதித்திருந்தார். அவை அங்கிருந்த கொழுத்த மரங்களில் உல்லாசித்துக் கொண்டிருந்தன. ''வெரி இண்ட்ரஸ்ட்டிங்'' என்றார் க்ளக்ளிடம். ''கிட்டே போய் பார்க்கலாமே. நீங்களும் வரீங்களா?''*

''போகணுமா?''

''என்ன தப்பு அதுல?''

கேட்டு விட்டு, கிளம்பி விட்டார் அவர். வேண்டா வெறுப்பாய் தொடர்ந்தார் க்ளக்ள். சர்ச்சின் மேற்கு ஓரத்தில் சவக்குழி ஒன்றினை தோண்டிக் கொண்டிருந்தார் ரேக்கர் ஆர்ம்ஸ்பீ. தங்களுக்கான வழியை ஏற்படுத்திக் கொண்டு இருவரும் முன்னேறுவதை பார்த்த லேக்கர் செய்துகொண்டிருந்ததை அப்படியே விட்டுவிட்டு ''ஹல்லோ, யாரது அங்கே?'' என்றார்.

அவர்களிருவரும் நெருங்கினார்கள். தனது பெயரை வெர்னர் என்ற அவர் உடனே அவசரமாய் ''குனிக்கி'' என்று சேர்த்து சொல்லி திருத்தினார்.

''ஓ, அதானே பார்த்தேன்'' என்றார் லேக்கர். ''வெர்னர், ஒரு ஜெர்மானிய பேராத்தான் நான் கேள்விப்பட்டிருக்கேன்.''

தற்போது ''ரூக்கெரி'' என்றார் வெர்னர். ''எத்தனை காலமா இதுங்க இங்கே இருக்குனு தெரியுமா, உங்களுக்கு?''

அவரை வினோதமாய் பார்த்தார் லேக்கர். பிறகு மரங்களை நிமிர்ந்து பார்த்தார். ''இதுங்களா? நான் சின்னப்பயலா இருந்த காலத்திலிருந்து இருக்குங்க. பறவைகளில் இண்ட்ரஸ்ட் இருக்கா என்ன?''

''நிச்சயமா'' என்றார் வெர்னர். ''வாழும் ஜீவராசிகளிலேயே நம்மை முழு வியப்பில் ஆழ்த்தவல்ல படைப்பு. பறவைகள், மனிதர்களைப் போல அடிக்கடி சண்டை போட்டுக்கொள்வது கிடையாது. அவற்றுக்கு எல்லைகள் தெரியாது. முழு உலகமுமே அவற்றின் வீடுதான்.''

அவருக்கு பைத்தியம் பிடித்திருக்குமோ என்று பார்த்த லேக்கர் பிறகு சிரித்தார். ''தொடருங்க. இந்த அழுக்கு

குட்டி மூட்டைங்களைப் போய் யார் இப்படி முக்கியத்துவம் கொடுத்து பேசுவாங்க?''

''அதுங்க அழுக்கு மூட்டையா, மை ஃப்ரண்ட்?'' - வெர்னர் கேட்டார். ''நார்ஃபால்க் பகுதி முழுக்க மிக அதிகமா எங்கெங்கும் பரவிக்கிடக்கும் பறவை, இந்த ரூக்கெரி பறவைகள். ஆனா, மழைக்காலம் மற்றும் இலையுதிர்காலத்தின் முடிவில் ரஷ்யாவிலிருந்து பல ரூக் பறவைகள் வருது.''

''கிளம்புப்பா'' என்றார் லேக்கர்.

''நோ, நிஜமா சொல்றேன். உதாரணத்துக்கு, போருக்கு முன்னால, இங்கிருக்கும் பல ரூக் பறவைகள் லெனின்-க்ராட் பகுதியிலே சுத்திக்கிட்டு இருந்திருக்கும்.''

''ஏய்... என் தலைக்கு மேல உக்காந்துக்கிட்டிருக்கும் இவையெல்லாம் அந்தப் பகுதியிலிருந்து வந்திருக்கும்னா நீங்க சொல்றீங்க?'' - லேக்கர் அதிகாரமாய் கேட்டார்.

''படு நிச்சயமா.''

''வெல், அப்படி நான் நினைச்சதே இல்ல.''

''ஆக, தோழா... இனி எதிர்காலத்துல, தூரதேசங்களிலிருந்து இங்கே வந்து செல்லும் லேடீஸ் அண்ட் ஜென்டில்மேனுக்கு நீங்க தரும் அத்தனை மரியாதையையும் லெனின் - க்ராட்டிலிருந்து வரும் இவற்றுக்கும் தரணும்.''

அப்போது உரத்த குரலில் ''குனிக்கி! மொக்ஸார்!'' என்ற குரலொன்று கேட்டது.

இருவரும் திரும்பியபோது சர்ச் வாசலில் ஃபாதரும் ஸ்டைனரும் நின்று கொண்டிருந்தார்கள்.

''நாங்க கிளம்பறோம்'' என்று, ஸ்டைனரின் குரலுக்கு கல்லறையிலிருந்து ஜீப் நோக்கி ஓட்டமும் நடையுமாய் இருவரும் விரைந்தார்கள்.

*ஃபாதரும் ஸ்டைனரும் பாதையிலிறங்கி ஒன்றாய் நடக்க ஆரம்பித்திருந்தார்கள். குன்றின் எதிர்த்திசையிலிருந்து ஒரு ஹாரன் சத்தம் கேட்க மற்றொரு ஜீப்பில் பமீலா வந்தார். வெர்னரும் க்ளக்லும் அவரை ஆச்சரியமாய் பார்க்க, அந்தப் பக்கத்திலிருந்து ஹார்ரி கேன் இறங்கி வருவதை பார்த்ததும் இருவரும் அட்டென்ஷன் ஆனார்கள்.*

*"சுற்றி வளைச்சு கூட்டிட்டு வந்திருக்கியா, கேனை?" என்று கேட்டார் ஃபாதர். தொடர்ந்தார்: "இது கர்னல் ஹோவார்ட் கார்ட்டர். போலந்து தனிப்படை பாராசூட் தலைவர். இவரும் இவருடைய சகாக்களும் இங்கே எக்ஸர்ஸைஸுக்கு வந்திருக்காங்க. நம்ம கிடங்கை இன்னிக்கு பயன்படுத்திப்பாங்க. ஆங், இது என் சகோதரி பமீலா. இது மேஜர் ஹார்ரி கேன்."*

*"21-வது ஸ்பெஷலிஸ்ட் காலாட்படை" என்று கூடுதல் தகவல் தந்து கைகுலுக்கினார். "உங்க ஆட்களை வரும் வழியில் பார்த்தோம், கர்னல். "இங்கே ரெண்டு மூணு போலந்து ஆட்கள் இருக்காங்க. உதாரணத்துக்கு க்ருக்கௌஸ்கி. சிகாகோவிலிருந்து வந்திருக்கார் இவர். அங்கேயே பிறந்து வளர்ந்திருந்தாலும், ஆங்கிலத்தைப் போலவே இவருடைய போலந்து மொழியும் சரளம். நாமெல்லாம் ஓர் அளவளாவலுக்கு ஏற்பாடுகூட பண்ணலாம்."*

*"சாரி" என்றார் ஸ்டைனர். "நான் சில ஸ்பெஷல் ஆர்டர்களின் பேரில் இயங்கிக்கிட்டிருக்கேன். இன்று மதியமும் மாலையும் பயிற்சிகள். பிறகு என்னுடைய கட்டுப்பாட்டில் வரும் மற்ற யூனிட்டுகளுடன் நாளைக் காலை போய் சேரணும். எத்தனை நெருக்கமான திட்டமிடல் பாருங்க."*

*"விளங்குது" என்றார் கேன். "நானும் அதே நிலையிலே தான் இருக்கேன்." தனது கைக்கடியாரத்தை பார்த்தார் அவர். "இன்னும் இருபது நிமிடங்களில் நான் மெல்த்தான் வீட்டுக்குப் போகலேனா கர்னல் என்னை சுட்டுடுவார்."*

*"உங்களை சந்தித்ததுல மகிழ்கிறேன்" என்றார் ஸ்டைனர். "ஃபாதர் மற்றும் மிஸ் வெரேக்கரை சந்தித்ததிலும் எனக்கு மகிழ்ச்சிதான்." ஜீப்பில் ஏறியவர் க்ளக்கிளை நோக்கி தலையை ஆட்ட அவர் ப்ரேக்கை விலக்கி ஊர்தியை ஓட்டினார்.*

*"இங்கேல்லாம் இடப்பக்கமா ஓட்டணும், நினைவிருக் கட்டும் க்ளக்ள்" என்றார் ஸ்டைனர் சாந்தமாய்.*

*கிடங்கின் சுவர்கள் ஆங்காங்கே மூன்றடி அளவுக்கு கனமாய் அமைக்கப்பட்டிருந்தன. பாரம்பரியமாய் இவ்விடம் ஜமீன்தாரர்களுக்கு சொந்தமாய் இருந்துள்ளது. நிச்சயமாய் அப்படிப்பட்டவர்களுக்கு இவ்வமைப்பு உகந்ததாய் இருந்திருக்கும். வாடிக்கையான பழைய வைக்கோல் மற்றும் பயிர்களின் வாசம் அங்கிருந்தது. ஒரு உடைந்த வண்டி ஓரமாய் நின்றது.*

*பெட்ஃபோர்டை வெளியிலேயே விட்டுவிட்டு ஒருத்தனை அதற்கு காவலுக்கு வைத்தார் ஸ்டைனர். பிறகு ஜீப்பில் ஏறி நின்றுகொள்ள அதுதான் கிடங்குக்குள் செலுத்தப்பட்டது.*

*"இதுவரை எல்லாம் சுபமாய் முடிஞ்சிருக்கு. இப்போதிலிருந்து நடக்கும் ஒவ்வொண்ணும் எத்தனை இயற்கையா இருக்க முடியுமோ அப்படி இருக்குமாறு நாம பார்த்துக்கணும். முதல்ல ஸ்டவ்வை பற்ற வெச்சு சமைக்க ஆரம்பியுங்க" என்று தனது கைக்கடியாரத்தை அவர் பார்த்தார். "இது நம்மை கிட்டத்தட்ட மூணு மணி வரை இழுத்துச் செல்லும். அதுக்கப்புறம் கொஞ்சம் வெளியில் பயிற்சி. அதுக்காக நாம இங்கே வந்திருப்பதே அதை*

பண்ணணும்னுதான் கிராமத்து மக்களும் எதிர்பார்ப்பாங்க. வயல்வெளிகளில், நீரோடை பகுதிகளில்னு தொடரணும். இன்னொரு விஷயம்- ஜெர்மன் மொழி பேசிடக்கூடாது... எச்சரிக்கையா நடந்துக்கங்க. உங்க குரல்களை தணிச்சே வெச்சுக்கங்க... பயிற்சியின்போது எப்பெல்லாம் முடியுமோ அப்பெல்லாம் கைகளால் சமிக்ஞை மட்டும் கொடுத்துக்கங்க. கட்டளைகளை இடும்போது பேசப்படும் ஒரே மொழி - ஆங்கிலமாய் இருக்கட்டும். பயிற்சியின்போது பயன்படுத்தவென்று தரப்பட்டுள்ள டெலிபோன், அவசர தேவைக்கு மட்டும்தான்... மறுபடியும் சொல்றேன்... அவசரதேவைக்கு மட்டும்தான்... அப்படி ஏதாவது அழைப்புகள் வந்தால், அந்தந்த குழுத்தலைவர்களுக்கு தேவையான சமிக்ஞைகளை நியூமேன் தருவார்.''

''மக்கள் எங்ககிட்டே பேச முற்பட்டால்?'' கேட்டார் ப்ராண்ட்.

''ஆங்கிலம் நல்லாவே நமக்கு தெரிஞ்சிருந்தாலும்கூட, அவங்க பேசுவது உங்களுக்குப் புரியாததைப் போல நடிங்க. என்னத்தையாவது சொல்லி சிக்கிக் கொள்வதற்கு பதிலாக இது சிறந்ததுனு சொல்வேன் நான்.''

ஸ்டைனர் தற்போது ரிட்டர் பக்கமாய் திரும்பினார். ''பயிற்சியை அமைக்கும் பொறுப்பை நான் உங்ககிட்டே விட்டுடறேன். ஒவ்வொரு குழுவிலும் நல்லா ஆங்கிலம் பேசும் ஒருத்தர் இருக்கும்படி அமைச்சுக்கங்க.'' அங்கிருந்த வீரர்கள் பக்கமாய் திரும்பினர் அவர். ''ஆறிலிருந்து ஆறரைக்குள்ளே இருட்டிடும் என்பதை நினைவில் வெச்சுக்கங்க. அதுவரை நாம எதையோ பண்ணிக் கிட்டிருப்பதை போல காட்டிக்கிட்டுத்தான் ஆகணும்.''

ஜீப்பிலிருந்து குதித்திறங்கி வெளியே போனார் அவர். பாதையில் நடந்துப்போய் கேட்டில் சாய்ந்தபடி நின்றார்.

ஜோன்னா க்ரே தனது சைக்கிளில் குன்றின் மீது ஏறுவதில் பிரயாசைப்பட்டுக் கொண்டிருந்தார். சைக்கிளின் கைப்பிடியிலிருந்து நிறைய பூக்களைக் கொண்ட கூடையொன்று தொங்கிக் கொண்டிருந்தது. பின்னால் ஓடிவந்தது பேட்ச்.

''குட் ஆஃப்ட்டர்நூன், மேம்'' - சல்யூட் வைத்தார் ஸ்டைனர்.

கீழிறங்கி நெருங்கி வந்தார் அவர். ''எல்லாம் எப்படி முன்னேறிக்கிட்டிருக்கு?''

''ஃபைன்.''

தான் யாரென்று அறிமுகப்படுத்திக் கொள்வதை போல கைகுலுக்கினார் ஜோன்னா. கொஞ்சம் தூரத்திலிருந்து பார்க்கும் எவருக்கும் இதுவொரு, நல்ல அறிமுகக் காட்சியாய் துலங்கும். ''அந்த பிலிப் வெரேக்கர்?''

''அதிகம் உதவியா இல்ல. டெவ்லின் சொன்னது சரியே. அவர் மேலே ஒரு கண்ணை வெக்கத்தான் நாங்களெல்லாம் இங்கே வந்திருக்கோம் என்பது அவருடைய நினைப்பு.''

''இப்ப என்ன நடந்துக்கிட்டிருக்கு?''

''வீரர்கள் எல்லாம் கிராமத்தை சுற்றி பயிற்சியில் ஈடுபட்டுக் கொண்டிருப்பதை நீங்களே பார்க்கலாம். உங்களை ஆறரை மணிக்கு பார்க்க வருவதாய் சொன்னார் டெவ்லின்.''

''குட்.'' மீண்டும் அவர் கைகுலுக்கினார். ''அப்புறம் நான் உங்களை சந்திக்கிறேன்.''

ஸ்டைனர் சல்யூட் வைத்தார். திரும்பி கிடங்குக்குப் போனார். மீண்டும் சைக்கிளில் ஏறிக்கொண்ட ஜோன்னா சர்ச் நோக்கி குன்றின் மேல் ஏறலானார். வெரேக்கர் அவருக்காக வாசலிலேயே காத்திருக்க, சைக்கிளை சுவரில்

நிறுத்திவிட்டு கொத்து மலர்களுடன் அவரிடம் சென்றார் ஜோன்னா.

"அவங்க நல்லா பழகறாங்க" என்றார் வெரேக்கர். "எங்கிருந்து இவங்களை நீங்க பிடிச்சீங்க?"

"ஹோல்ட்டுல இருந்த ஒரு ஃபரண்ட் மூலமா. ஐரீஷ் அவர்." கேட்டார்: "இப்ப நாம இம்மலர்களை அழகாக சர்ச்ல அடுக்குவோமா?"

ஜோன்னாவுக்காக கதவை திறந்து விட்டார் அவர். இருவரும் உள்ளே போனார்கள்.



# 16

**ல**ண்டனில், மணி மூன்று அடித்ததும், கோர்ட்டிலிருந்து வெளியே வந்தார் ரோகன். காரில் எங்கு ஃபெர்ஜஸ் காத்துக் கொண்டிருந்தாரோ அப்பகுதிக்கு விரைந்தார். அடைமழை கொட்டிக் கொண்டிருந்த போதிலும் மேற்கொண்டு இயங்க சுறுசுறுப்பாய் இருந்தார் முதன்மை இன்ஸ்பெக்டர்.

காரின் கதவை அவர் திறந்தபோது ''வாங்கியாச்சில்ல?'' என்றார் ஃபெர்ஜஸிடம்.

''யெஸ், சார்.''

உயர்சக்தி துப்பாக்கியை கண்களாலேயே பாராட்டினார் அவர். அதன் க்ளிப்பை சரிபார்த்தார். அவர் கையில்தான் அது எத்தனை அழகாய் தெரிகின்றது. சரியாய் பொருந்தியது. அதனை குறி பார்த்து சில நொடிகள் பிடித்து விட்டு தனது கோட்டின் உள்பாக்கெட்டில் வைத்துக் கொண்டார்.

''ஆல் ரைட் ஃபெர்ஜஸ். இப்ப நம்முடைய அன்புத் தோழர் டெவ்லினுக்காக.''

★ ★ ★

**அ**தே கணத்தில், வயல்வெளிகளின் வழியாய் செயின்ட் மேரியை நெருங்கிக் கொண்டிருந்தாள் மோலி. தூறல் விடாதபடியால் ரெயின்கோட்டும், மஃப்ளரும் அணிந்திருந்தாள்.

புல்வெளியில் தனது குதிரையை மேய விட்டுவிட்டு பின்கேட்டின் வழியாக கல்லறைக்குள் இறங்கினாள். அவள் முன்னேறும்போது குன்றிலிருந்து உரக்க இடப்படும் கட்டளைகள் கேட்டன. நின்றாள். குனிந்து கிராமத்தை பார்த்தாள். ஓடையோரமிருக்கும் பழைய மில்லினை நோக்கி பாராசூட் படையினர் போய்க் கொண்டிருந்தார்கள். பச்சை பின்னணியில் அவர்களுடைய சிகப்பு யூனிபார்ம் பிரத்யேகமாய் தெரிந்தது. பாலத்தின் அருகே நின்று வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த ஃபாதர் வெரேக்கர், ஜார்ஜ் ஒயில்டின் பையன் க்ரஹம், லிட்டில் ஆசான் ஆகியோரை அவளால் பார்க்க முடிந்தது. இன்னொரு முறை உரக்க இடப்பட்ட கட்டளை கேட்க பாராசூட் பயிற்சியாளர்கள் மளமளவென்று கீழே நோக்கிப் போனார்கள்.

அவர் உள்ளே போனபோது மாடிப்படியின் பித்தளை கைப்பிடிகளை பாலிஷ் போட்டபடியிருந்த பமீலாவைப் பார்த்தாள். ''ஹலோ மோலி'' என்றார் அவர். ''உதவிக்கு வந்தியா?''

''ம்ம். இவ்வாரம் என்னுடைய அம்மாவுடைய டியூட்டி'' என்றாள் மோலி. ''ஆனா செமத்தியான ஜலதோஷம் அவங்களுக்கு. இன்னிக்கு முழுக்க எழுந்திருக்க முடியாதுனு சொல்லிட்டாங்க.''

இன்னொரு உரத்த கட்டளை கிராமத்து பக்கத்திலிருந்து பட்டும்படாமல் கேட்டது. ''இன்னுமா பண்ணிக்கிட்டிருக் காங்க?'' என்றார் பமீலா. ''போதும் போதுமெனும் அளவுக்கு போர் நடக்குது. அதுக்கு மேலேயுமா இப்படி பயிற்சிகள் அவசியம்? என் சகோதரர் அங்கே இருக்காரா?''

''நான் உள்ளே வரும்போது இருந்தார்.''

ஒரு நிழல் பமீலாவின் முகத்தில் படர்ந்தது. ''சில சமயங்களில் நான் நினைப்பதுண்டு. அப்படிப்பட்ட கும்பலிலிருந்து முழுக்க பிடுங்கப்பட்டு விட்டோமேனு அவர் நினைக்கிறாரோ!'' மறுப்பாய் தலையை அசைத்தார் அவர். ''ஆம்பிளைங்க ஒரு விந்தையான படைப்பு.''

★ ★ ★

**ஆ**ங்காங்கே சிம்னியிலிருந்து வந்து கொண்டிருந்த புகைகளைத் தவிர, கிராமத்தில் உயிர்வாழ்க்கை இருப்பதற்கான அறிகுறியே தென்படவில்லை. ஏறத்தாழ அனைவருக்கும் அது வேலைநாள். ரிட்டர் நியூமேன், தாக்க வந்திருக்கும் வீரர்கள் அனைவரையும், குழுவுக்கு ஐந்துபேர் என்ற விகிதத்தில் மூன்று குழுக்களாய் பிரிந்திருந்தார். அனைத்தும், டெலிபோன் இணைப்பால் தொடர்பில் வைக்கப்பட்டன. அவரும் ஹார்வே ப்ரஸ்டனும் தலைமையேற்றிருந்த குழுக்கள் காட்டேஜில் வைக்கப்பட்டன. ப்ரஸ்டன் இந்த ஏற்பாட்டினைக் குதூகலமாய் கொண்டாடிக் கொண்டிருந்தார். கையில் துப்பாக்கியுடனிருந்தார் அவர். ஸ்டேட்லே ஆர்மஸ் பகுதியில் முட்டிபோட்டு அமர்ந்து, உடலையும் நன்றாய் முன்னுக்கு வளைத்து குனிந்து, யாரும் கண்டுபிடிக்காத ஒரு நிலையில் அமர்ந்து கொண்டிருந்த அவர், தனது குழுவினர் மேற்கொண்டு முன்னால் நகருமாறு சமிக்ஞைகள் தந்துகொண்டிருந்தார். சுவரில் சாய்ந்தபடி இதனை கவனித்துக் கொண்டிருந்தார் ஜார்ஜ் ஒயில்ட். வாயிலில் நின்று கொண்டிருந்தார் அவரின் மனைவி பெட்டி.

''என்ன, நீங்களும் போய் கலந்துக்க முடியலியேனு ஆதங்கமா?''

''ம்.''

“இந்த ஆம்பிளைங்களை” என்று வெறுப்பாய் குறிப்பிட்ட அவர் “என்னால் என்னிக்குமே புரிஞ்சுக்க முடிவதில்லை” என்றார்.

வயல்வெளியிலிருந்த அக்குழுவில் ப்ராண்டிட், சொர்ஜெண்ட் ஸ்டர்ன், கார்பொரெல் பெக்கர், ஜேன்ஸன் மற்றும் ஹகிள் ஆகியோரும் இருந்தார்கள். பழைய மில்லுக்கு எதிர்ப்புறத்தில் வரும் பகுதியில் இவர்கள் அமர்த்தப்பட்டிருந்தார்கள். முப்பது வருடங்களுக்கும் மேலாய் இது உபயோகத்தில் இல்லை. கூரையின் மேல் பல ஓடுகள் காணாமல் போயிருந்தன. இதனால் ஓட்டைகள் விளைந்திருந்தன.

வழக்கமாய் அங்கிருந்த மாபெரும் ராட்சஸ நீர் இறைக்கும் சக்கரம் கழலாமலேயேதான் இருக்கும். சக்கரத்தின் வட்ட முனைகளில் பொருத்தப்பட்டு துருத்திக் கொண்டிருக்கும் பேழைகளில் விசையுடன்நீர் வந்து விழும்போது சக்கரம் சுழன்று தன் பணியை ஆற்றும். நீரின் நுழைவினை கட்டுப்படுத்த பெரிய கதவொன்று உண்டு. அதனை மூடிவிட்டால் சக்கரத்துக்கான நீர்வரத்து மறுபக்கத்திலேயே நிறுத்தப்பட்டு விடும். ஆனால் கனமழையாலும், ஓடையில் பெருகியிருந்த கட்டுக்கடங்கா வெள்ளத்தாலும், நீரின் விசை பெரும்பலம் கொண்டிருந்ததால், துரு ஏறியிருந்த கதவின் தாழ்ப் பாள்களால் நீரோட்டத்தை எதிர்த்துக்கொண்டு கதவினை பூட்டி வைக்க இயலவில்லை. தாழ்ப்பாள்கள் அகன்றன. தற்போது அச்சக்கரம் கிறீச்சிட்டுக் கொண்டும் இழுத்தபடியும் உருளத் தொடங்கியது.

சக்கரத்தின் சுழற்சியை சிறு ஈடுபாட்டுடன் கவனித்துக் கொண்டிருந்த ஸ்டைனர், துப்பாக்கி பிடிப்பதில் தவறுகள் செய்த யங் ஜேன்ஸனை திருத்திக் கொண்டிருந்த ப்ராண்டிட்

*பக்கமாய் திரும்பினார். ஆற்றின் நீரோட்டத்தை திசைமாற்ற அமைக்கப்பட்டிருந்த சிறு பாலத்தின் மீதிருந்த வெரேக்கரும் சிறு குழந்தைகளும்கூட இதனை கவனித்துக் கொண்டிருந்தார்கள். ஜார்ஜ் ஒயில்டின் மகன் க்ரஹாமுக்கு வயது 12. பாராசூட் வீரர்களின் செயல்களை பார்த்து அவன் பரபரப்புக்குள்ளாகியிருந்தான்.*

*''அவங்கெளெல்லாம் இப்ப என்ன பண்ணிக்கிட்டிருக் காங்க, ஃபாதர்?'' - கேட்டான் அவன்.*

*''வெல், சுடும்போது நம் கை முட்டிகளை எந்த அளவுக்கு அமைப்பா வெச்சுக்கிறோம் என்பதை பொறுத்தது க்ரஹாம் சுடுவதில் கிடைக்கும் வெற்றி. பார்... துப்பாக்கியை எந்தக் கோணத்தில் பிடிக்கணும்னு அவர் எத்தனை அழகா விளக்கிக்கிட்டிருக்கார்...''*

*ஆசன் டர்னருக்கு நடக்கும் அனைத்தும் போரடித்தன ஐந்து வயது குழந்தைக்கே உரிய மனப்பாங்கினால். நேற்று மாலை அவளுடைய தாத்தா செய்து கொடுத்திருந்த மரப்பொம்மையின் மீது மட்டுமே அவளுடைய கவனம் முழுதும் இருந்தது. அவள் ஒரு அழகு குழந்தை. தகதகக்கும் தங்கக்கேசமும் வெண்முகமும் கால் முளைத்த நிலவாய் அவளை முன்நிறுத்தின. அவளுடைய தாத்தா மற்றும் பாட்டியான டெட் மற்றும் அக்னெஸ் டர்னர் ஆகிய இருவரும் கிராமத்து தபால் அலுவலகத்தையும், சிறு டெலிபோன் எக்ஸ்சேஞ்சையும் நடத்துகிறார்கள். ஒரு வருடமாக இவர்களுடன்தான் இருக்கிறது குழந்தை.*

*கயிறு பாலத்தின் மறுபக்கத்துக்கு போனாள் அவள். நுரை தளும்பிய வெள்ள நீர் அவளுக்கு கீழே இரண்டடி தூரத்தில் கரைபுரண்டு ஓடிக்கொண்டிருந்தது. கழலும்படி அமைக்கப்பட்டிருந்த பொம்மையின் ஒரு கையை மட்டும்*

பிடித்துக் கொண்டு அதனை அப்படியே நீரின் மேற்தளம் வரை தொடும்படி இறக்கினாள். தொங்கிய பொம்மையின் பாதத்தில் நீர்பட்டுத் தெறிப்பதை பெரும் வெற்றியாய் கண்டு சிரித்தாள். பாலத்தின் கயிறு பிடியை ஒரு கையில் மேலே பிடித்தபடி, பொம்மையின் காலை மேலும் நீருக்குள் மூழ்குமாறு செலுத்த குனிந்தது குழந்தை. மக்கிப் போயிருந்த அக்கயிறு அறுந்தது. தலைகுப்புற பெண்குழந்தை வெள்ள நீருக்குள் விழுந்தது.

நின்று கொண்டிருந்த சிறுமியைக் காணவில்லை என்பதை, சரியான தருணத்தில் திரும்பிப் பார்த்த வெரேக்கரும், சிறுவனும் உணர்ந்தார்கள். அவசரமாய் பாதிரியார் நகர்வதற்குள்ளாகவே குழந்தை பாலத்துக்கு அடியில் அடித்துச் செல்லப்பட்டிருந்தது. வீரம் என்றெல்லாம் எதுவும் இல்லாவிட்டாலும் உள்ளுணர்வின் உந்துதால், அவளுக்குப் பின்னாலேயே பட்டென்று நீருக்குள் குதித்து விட்டான் கிரஹாம். வழக்கமாய் இப்பகுதியில் ஒருசில அடி ஆழம்தான் தண்ணீர் இருக்கும். கோடைக்காலங்களில் சிறுவனே கூட இங்கு அமர்ந்து மீன்பிடித்திருக்கின்றான். ஆனால் இப்போது அதெல்லாம் மாறியிருந்தது. ஆசனின் பாவாடையை தற்போது இறுக்கமாய் பிடித்துவிட்டிருந்த அவன் அப்படியே விட்டுவிடாது பிடித்திருந்தான். நீரின் அடிப்பகுதிக்காக அவனுடைய பாதங்கள் அல்லாடின. ஆனால் அப்படியொரு அடிப்பாகமே அகப்படவில்லை. கிரஹாமை பயம் கவ்வியது அவன் அலறினான். பாலத்துக்கு மேலே அங்கிருந்து கீழ்நோக்கி நீர் விழுந்த பகுதிக்கு நீரின் சுழற்சி இரு குழந்தைகளையும் அள்ளிக்கொண்டு போக, அவன் குரல் மேலும் கொடூரமானது.

உறைந்து போயிருந்த வெரேக்கர், வார்த்தைகள் வராமல் அப்படியே சிலையாகி விட்டாலும், கிரஹாமின் ஓலம்

ஸ்டைனர் மற்றும் அவரது ஆட்களை உடனே எச்சரிக்கைக்குள்ளாகியது. திரும்பிய அனைவரும் அரங்கேறியிருந்த பேராபத்தை உணர்ந்து கொண்டு விடுவதற்குள் இரண்டு குழந்தைகளும் நீர்வீழ்ச்சிக்குள் அகப்பட்டு, சக்கரத்துக்கு செல்ல சேமித்து வைக்கப் பட்டிருந்த சிறு குட்டைக்குள் வீசப்பட்டிருந்தார்கள்.

சர்ஜெண்ட் ஸ்டார்ன் ஓடத் துவங்கினார். குட்டையின் விளிம்புக்கு வந்து சேர்ந்தார். தன்னுடனிருந்த உபகரணங்களைப் பிய்த்தெறிந்தார். கனமான ஜாக்கட்டை அவிழ்க்க அவருக்கு அவகாசம் கிடையாது. இரக்கமற்ற நீரின் ஓட்டம், தங்கையையும் இன்னமும் அவளை விடாது பிடித்திருந்த அண்ணனையும் ஒன்று சேர்த்து, சக்கரப் பற்களை நோக்கி மேற்கொண்டு தள்ளிக் கொண்டிருந்தது.

தாமதிக்காமல் சுழன்றுக் கொண்டிருந்த காட்டாற்றுக் குளத்துக்குள் குதித்தார் ஸ்டார்ன். அவர்களை நோக்கி முன்னேறினார். தனது கையால் கிரஹாமைக் கவ்வினார். ப்ராண்டிட் இடுப்பளவு ஆழமுள்ள பகுதியில் ஸ்டார்னுக்குப் பின்னால் குதித்தார். தன்னை நோக்கி கிரஹாமை ஸ்டார்ன் இழுத்த போது எதிர்வந்த நீருக்குள் அவனுடைய முகம் தற்காலிகமாக முங்கியது. அவன் கிலியானான். நீரை எத்தினான், திமிறினான். தங்கையை பிடித்திருந்த இறுக்கத்தை நழுவ விட்டுவிட்டான். ப்ராண்டிட் கைகளில் சரியாய் போய் விழுமாறு சிறுவனை ஓர் அரைவட்டத்தில் சுழற்றி வீசியெறிந்தார் ஸ்டார்ன். இது நடந்தது. பிறகு சூசனுக்குப் பின்னால் விரைந்தார்.

சூசன் போய்ச்சேர்ந்திருந்த பகுதியில் நீர் மேற்கொண்டு போகாதவாறு ஒரு சுழற்கண் உருவாகி ஆவேசமாய் சுற்றிக் கொண்டிருந்தது. அதன் வட்டங்களுக்குள் போய்க் கொண்டிருந்தாள் அவள். தக்க சமயத்தில் அங்கும்

போயிருந்த ஸ்டார்ன், அவள் அணிந்திருந்த துணியைப் பிடித்து விட்டார். அப்படியே தன் பக்கமாய் அவளை இழுத்துவிட முயன்றார். பிடிக்க முடிந்ததும் தன்னுடன் குழந்தையை கட்டிக்கொண்டு நிற்க முயற்சித்தார். முடியவில்லை. அவர் நீரின் அடிப்பகுதிக்கு, எதிர்க்க முடியாமல் இழுக்கப்பட்டார். எப்படியோ முயற்சித்து வெளியே தலையைக் காட்டியபோது, தடுப்புக்கு வழியில்லாமல் தான் சக்கரங்களை நோக்கி மிக வேகமான நீரின் விசையால் இழுத்து செல்லப்படுவதை உணர்ந்து விட்டார்.

நீரின் அசுர ஓசையைக் கடந்தும் அவரால் கதறல்களைக் கேட்க முடிந்தது. அந்த திசை நோக்கி திரும்பியபோது அவருடைய ஆட்கள் சிறுவனை கரையில் வைத்துக் கொண்டிருப்பதை அவர் கவனித்தார். நீருக்குள் மீண்டும் குதித்திருந்த ப்ராண்டிட், ஸ்டார்னை நோக்கி முன்னேறுவதையும் பார்த்தார். தனக்குள் இருந்த அத்தனை சக்தியையும் ஒன்று திரட்டினார். ஒரு சொட்டுத் தெம்பையும் விட்டுவிடாது அனைத்தையும் கைக்குள் அடக்கினார். ஐந்து வயது குழந்தையை தூக்கி ஒரு வட்டமாகச் சுற்றி விசையேற்றி சரியாய் ப்ராண்டிட்டின் கைகளுக்குள் போய் அடங்குமாறு குறி பார்த்து வீசினார். இது நடந்த அடுத்த கணம், நீரின் பேய்ச்சுழற்சி தனது அரக்கக் கைகளால் ஸ்டார்னைத் தூக்கிக் கொண்டு உள்நோக்கி சீறிப்பாய்ந்தது. அதே சமயம் அச்சில் சுழன்று கொண்டிருந்த சக்கரமும் ஒரு கடும்பாறையாய் மேலிருந்து கீழே விழுந்தது. அதன் அடியில் போய் விட்டார் ஸ்டார்ன்.

நதிக்கரையில் குழந்தைகளை விட்டுவிட்டு சென்றிருந்த ஜார்ஜ் ஒயில்ட்டும், அவரது மனைவியும் இப்போது ஓடோடி வந்திருந்தார்கள். நடந்த விபத்தினைத் தொடர்ந்து

ப்ரஸ்டனும் அவருடைய ஆட்களும், இவர்களுக்கு பின்னால் வந்து சேர்ந்தார்கள்.

முழுக்க முழுக்க நனைந்து விட்டிருந்ததை தவிர கிரஹாமுக்கு வேறொன்றும் நேர்ந்திருக்கவில்லை. சூசனுக்கும் இதே நிலைதான். ஆனால் அவள் கடுமையாய் அழுதுக் கொண்டிருந்தாள். குழந்தைகளை தந்தையின் கைகளில் திணித்து விட்டு, சக்கரத்தையும் கடந்து ஸ்டார்ன் தென்படுகிறாரா என்று பதற்றமாய் கவனித்தபடி, நின்று கொண்டிருந்த ஸ்டைனருடன் சேர்வதற்காக கரையோரம் ஓடினார் ப்ராண்டிட். ஒருபக்கம் சாந்தமாயிருந்த நீரின் மேற்தளத்தில் திடுமென்று மிதந்தார் ஸ்டார்ன். அப்பகுதிக்குள் குதித்த ப்ராண்டிட் அவரை நோக்கி போனார்.

முன்நெற்றியில் தசைகளும் நரம்புகளும் பிய்த்தெடுக்கப் பட்டதைப் போல தெரிந்த காயத்தைவிட மற்றபடி எந்தவிதமான அறிகுறிகளும் அவர் உடலில் இல்லை... ஆனால் அவர் கண்கள் முக்கால்வாசி மூடிய நிலையில் இருக்க, உதடுகள் இணையாமல் சற்று திறந்து கிடந்தன. அவரை இழுத்துக் கொண்டு ப்ராண்டிட் கரைக்கு வந்திருந்தார். அனைவரும் அங்கு கூடும்படி ஆனது. வெரேக்கர், பிறகு ஹார்வே ப்ரஸ்டன் மற்றும் அவருடைய சகாக்கள், பிறகு இறுதியாய் மிஸஸ் ஓயில்ட்.

''அவர் நல்லாயிருக்காரா?'' - குரலில் அதிகாரம் தொனிக்க கேட்டார் வெரேக்கர்.

ஸ்டார்னின் மேற்சட்டையை வேகமாய் திறந்து தனது கையை உள்ளே செருகினார் ப்ராண்டிட். இதயத்துடிப்பினை தேடினார். காயம் ஏற்பட்டிருந்த முன்நெற்றியை அவர் மெல்லமாய் தொட, அது உடனே ரத்தத்தினை ஊற்றாய் பீறிட்டது. சதையும் எலும்பும் அங்கொரு கூழாய் ஆகியிருந்தன. தன்னிலையை இப்போது முழுவதுமாய்

உணர்ந்து விட்டாலும் தன்னை ஒரு முழுக்கட்டுப் பாட்டுக்குள் வைத்துக் கொள்ள பெருமுயற்சி மேற்கொண்டார் ப்ராண்டிட்.

நிமிர்ந்து அவர் ஸ்டைனரைப் பார்த்தார் சொன்னார்: ''துயர சேதியை சொல்வதற்கு மன்னிக்கணும் ஸார். அவரது கபாலம் முழுக்க நகர்த்தப்பட்டு விட்டது.''

சில கணங்களுக்கு மில் சக்கரத்தின் துருப்பிடித்த சுழலும் க்ரீச் மட்டுமே அங்கு நிலவிய ஒரே ஓசையாயிருந்தது. நீடித்த அந்த அமைதியை, உடைத்தது, கிரஹாம்தான். ''அவரோட யூனிஃபார்மை கவனிச்சீங்களா, அப்பா?'' என்றான் அவன். ''இது போலந்து வீரர்கள் போடும் யூனிஃபார்ம், இல்ல?''

அவசரத்தில், திருத்த முடியாத ஒரு தவறினை செய்து விட்டார் ப்ராண்டிட். திறக்கப்பட்டிருந்த ஸ்டார்னின் சட்டைக்குள்ளிருந்த ஜாக்கெட்டில் கழுகு பேட்ஜ் போடப்பட்டிருந்தது. அது இப்போது சிறப்பாய் தெரிந்தது. அதை மறைத்து போடப்பட்டிருந்த ஆங்கிலேய பேட்ஜ் நடந்த கலவரத்தில் கிழிக்கப்பட்டிருந்தது.

''அடக்கடவுளே'' - முணுமுணுத்தார் வெரேக்கர்.

அனைத்து ஜெர்மானியர்களும் இறுக்கமான வட்டம் அமைத்துக் கொண்டு நின்றார்கள். ப்ராண்டிட்டுக்கு ஜெர்மன் மொழியில் ஸ்டைனர் சொன்னார்: ''ஸ்டார்னை ஜீப்பில் கொண்டு போய் வைங்க.'' தொலைபேசி ஒன்றினை வைத்துக் கொண்டிருந்த மேன்ஸனைப் பார்த்து சொடுக்குப் போட்டார். ''என்கிட்டே அதை கொடுங்க. கழுகு ஒன்று. கழுகு இரண்டுக்கு'' இவ்வாறு சொன்னார். பிறகு ''உள்ளே வாங்க, ப்ளீஸ்'' என்று கூப்பிட்டார்.

காட்டேஜிலிருந்து தொலைவில் வேலையிலிருந்தார்கள், நியூமேனும் அவரது குழுவினரும் அங்கிருந்த அவர்

*உடனே பதில் தந்தார்: ''கழுகு இரண்டு. நீங்க சொல்வது எனக்கு கேட்கிறது.''*

*''கழுகு, பறந்து விட்டது.'' என்றார் ஸ்டைனர். ''பாலத்தில் வந்து உடனடியாய் என்னை சந்தியுங்க.''*

*ஜேன்ஸனிடமே மீண்டும் தொலைபேசியை தந்தார். பெட்டி ஒயில்ட் மிகுந்த கலவரத்துடன், ''என்ன ஜார்ஜ் இதெல்லாம்?'' என்றார். ''எனக்கு விளங்கலை.''*

*''எல்லோரும் ஜெர்மானியர்கள்'' பதில் தந்தார் ஒயில்ட். ''நார்வேயில் இருந்தபோது இதை போன்ற யூனிஃபார்மை அங்கே பார்த்திருக்கேன்.''*

*''யெஸ்'' என்று ஆமோதித்தார் ஸ்டைனர். ''எங்கள்ல சிலர் அங்கே இருந்திருக்கோம்.''*

*''ஆனா உங்களுக்கெல்லாம் என்ன வேணும்?'' என்றார் ஒயில்ட். ''ஒண்ணும் அர்த்தமாகலே. உங்களுக்கு வேண்டிய எதுவும் இங்கே இல்லே.''*

*''ஏய், முட்டாள்'' என்று ரௌடித்தனமாய் பேசினார் ப்ரஸ்டன். ''இன்னிக்கு ராத்திரி ஸ்டேட்லே க்ரேல ஒரு சிலர் வந்திறங்கப்போவது யார்னு உனக்கு தெரியாது? மிஸ்டர் லார்ட்- காட் - அல்மைட்டி - வின்ஸ்டன் - குரூர - சர்ச்சில்.''*

*வினோதமாய் அவரை பார்த்தார் ஒயில்ட். பிறகு சிரித்தார். ''நீங்க ஒரு வடிகட்டின முட்டாளாயிருக்கணும். இப்படிப்பட்ட ஒரு அடித்தளம் இல்லாத முட்டாப்பய பேச்சை நான் இதுவரை என் வாழ்நாளில் கேட்டது கிடையாது. என்ன ஃபாதர் சொல்றீங்க?''*

*''என்னத்தை சொல்வது? அவர் சொல்வது உண்மைதான்.'' மிகுந்த சிரமத்துக்கிடையே இவ்வார்த்தைகளை வெளிக் கொணர்ந்தார் வெரேக்கர். ''வெரி வெல் கர்னல்... இப்ப*

என்ன பண்ணுவதென்று நீங்க என்னிடம் சொல்லக் கூடாதா? முதல்ல, இந்தக் குழந்தைகளைப் பாருங்க. குளிர்ல உறைஞ்சுடும் போலத் தெரியுது.''

ஸ்டைனர், பெட்டி ஒயில்ட் பக்கமாய் திரும்பினார். ''மிஸஸ் ஒயில்ட்... நீங்க உங்களுடைய பையனையும், சின்னக் குழந்தையையும் இப்ப கூட்டிட்டுப் போகலாம். சூசனை அவங்க பாட்டன்மார்களிடம் கொண்டு போங்க. அவங்க தானே போஸ்ட் ஆபீசையும் ஜெனரல் ஸ்டோர்சையும் நடத்துவது?''

நடப்பவற்றினால் இன்னமும்கூட மூச்சுத்திணறிப் போயிருந்த அவர் கணவனை நடுநடுங்கிப் பார்த்தார். ''யெஸ்'' என்றார். ''தட்ஸ் ரைட்.''

ஸ்டைனர், ப்ரஸ்டனிடம் சொன்னார்: ''கிராமத்துல ஆறு தொலைபேசி இணைப்புகள்தான் இருக்கு. அனைத்து அழைப்புகளும் போஸ்ட் ஆபீசில் இருக்கும் சுவிட்ச் போர்டு வழியாத்தான் வருது. டர்னர் அல்லது அவரது மனைவி இவங்க ரெண்டு பேராலத்தான் இணைப்புகள் தரப்படுது.''

''இணைப்புகளை துண்டிச்சுடலாமா?'' - ஆலோசித்தார் ப்ரஸ்டன்.

''அது தப்பு. தேவையில்லாம மற்றவங்களின் கவனத்தைத் திசைத் திருப்பும். உடனே யாராவது ரிப்பேர் பண்ண ஆசாமிகளை அனுப்பிடலாம். வேணாம். முதல்ல பார்ட்டியை சர்ச்சுக்கு அனுப்பிவிடு. சுவிட்ச் போர்டுல டர்னரை வை. ஏதாவது அழைப்பு வந்தால், யார் அழைக்கப்படுகிறார்களோ, அவர் இல்லேனோ அல்லது அது மாதிரி எதையாவது அவர் சொல்லிடணும். இப்ப இதை செயல்படுத்துங்க.''

ப்ரஸ்டன், பெட்டி ஒயில்ட் பக்கமாய் திரும்பினார். சூசன் இப்போது அழுகையை நிறுத்தியிருந்தாள். அவளை

நோக்கி இருகரங்கள் நீட்டி "வா அழகிய கண்ணு... என் மேல உப்பு மூட்டை ஏறிக்கோ" என்றார் அவர். உடனடியாய் உற்சாகமாய் இயங்கியது குழந்தை. "இந்தப்பக்கம் மேடம், ப்ளீஸ்."

நிராதரவரான பார்வையை தனது கணவன் பக்கம் பார்த்து விட்டு, பையனை ஒரு கையில் பிடித்துக்கொண்டு கிளம்பினார் பெட்டி. ப்ரஸ்டனின் ஏனைய குழுவினர்களான டின்டர், மேயர், ரைடல், பெர்க் ஆகியோர் ஒருசில கெஜங்கள் இடைவெளி விட்டுத் தொடர்ந்தார்கள்.

அடிக்குரலில் ஒயில்ட் சொன்னார்: "என் மனைவிக்கு மட்டும் ஏதாவது ஆச்சுன்னா."

ஸ்டைனர் இதனை மறுதலித்தார். ப்ராண்டிடம் சொன்னார்: "ஃபாதர் வெரேக்கரையும், மிஸ்டர் ஒயில்டையும் சர்ச்சுக்கு கூட்டிட்டுப் போங்க. அங்கேயே ரெண்டு பேரையும் வைச்சிருங்க. பெக்கரும், ஜேன்ஸனும் உங்ககூட வரலாம். ஹா்.ள், நீங்க என்கூட வாங்க."

ரிட்டர் நியூமேனும் அவருடைய குழுவினரும் பாலத்தருகே வந்திருந்தார்கள். அங்கு தற்போது சென்றிருந்த ப்ரஸ்டன் அவரிடம் என்ன நடந்தது என்ற விவரத்தை ஒன்று விடாமல் ெ ானனார்.

பிலிப் வெரேக்கர், "கர்னல்... நீங்க ஒரு முட்டாளா நடந்துக்காதீங்க" என்று சொல்லிக் கொண்டிருந்தார். "இப்ப நான் ஓடலாம்... தப்பிக்கப் பார்க்கலாம். ஆனா அதை நீங்க தடுக்க முடியாது. கத்துவேன். சுடப்பார்த்தால், அது ஒரு பேரோசையாய், அமைதியில் இருக்கும் முழு கிராமத்தையும் தட்டி எழுப்பிவிடும்."

ஸ்டைனர் பாதிரியாரை நேருக்கு நேராய் பார்க்கும்படி நின்று கொண்டார். "ஸ்டட்லே கான்ஸ்டபிள்ல 16 வீடுகள்

அல்லது காட்டேஜ்கள் இருக்கு, ஃபாதர். மொத்தமாய் 47 பேர் இருக்காங்க. அவங்களில் ஏறத்தாழ அனைவருமே இப்ப இங்கே இல்லை. இங்கிருந்து ஐந்து மைல்கள் தள்ளி ஒரு டசன் பண்ணைகள் இருக்கு. அதுல எங்கேயோ அவங்கஎெல்லாம் இப்ப வேலை செஞ்சுக்கிட்டிருப்பாங்க. இதெல்லாம் தவிர...'' என்றவர் ப்ராண்டிட் பக்கமாய் திரும்பினார். ''அவருக்கு ஒரு செய்முறை விளக்கம் காட்டறது...'' என்றார்.

அவரிடமிருந்து துப்பாக்கியை வாங்கிக் கொண்டார் ப்ராண்டிட். அதனை குட்டையின் நீர்தளம் நோக்கி ஒருமுறை சுட்டார். சுண்டப்பட்ட நீர், ஊற்றாய் காற்றில் படர்ந்து வீழ்ந்தது. ஆனால் அப்போது ஒலித்த ஒரேயோசை - விசை சுண்டப்பட்ட அந்த சின்ன க்ளிக்தான்.

''பிரமாதம் - அப்படி நீங்க இப்ப சொல்லணும்.'' என்றார் ஸ்டைனர், ஃபாதரிடம். ''பிரிட்டிஷ் கண்டுபிடிப்பு. ஆனா இதைவிடவும் நிச்சயமா பலன் தரும் இன்னொரு வழியும் இருக்கு, ஃபாதர். உங்க விலா எலும்புகளுக்கு கீழே, மிகவும் துல்லியமா, குத்தின உடனே சாகும்படியாய், கத்தியை வெகுசரியாய் செருகத் தெரியும், பிராண்டிட்டுக்கு. துளிசப்தம் எழுப்ப மாட்டீங்க. அதுக்குள்ளேதான் செத்திருப்பீங்களே. இது அவருக்கு கை வந்த கலை, நம்புங்க. பலமுறை நிகழ்த்தியிருக்கிறார். அப்புறமா உங்களை நாங்க எங்க ஜீப்பிலேயே ஒரு பிரயாணியைப் போல பின்னாடி உட்கார வெச்சு தூக்கிட்டுப் போயிடுவோம். என்ன, இது உங்களுக்கு வசதியாபடுதா?

''நீங்க சொல்றபடி கேட்டு விடுவது நல்லதுனு தெரியுது'' என்றார் வெரேக்கர்.

''அது அழகு.'' ப்ராண்டிட் பக்கம் திரும்பி ஒப்புதலாய் தலையசைத்தார் ஸ்டைனர். ''கிளம்புங்க. நான் சில நிமிடங்களில் வந்திடுவேன்.''

*திரும்ப வேகமாய் பாலத்தை நோக்கிப் போனார். அந்த வேகத்துக்கு ஈடுகொடுக்க ஹக்ள் ஓடவேண்டியதாயிற்று. ரிட்டர் அவரை சந்திக்க அங்கு வந்தார். ''நிலைமை சரியில்ல'' என்றார். ''இப்ப என்ன பண்ணுவது?''*

*''நாங்க கிராமத்தை கட்டுக்குள் கொண்டு வந்துக்கறோம். ப்ரஸ்டனுக்கு சொல்லப்பட்டுள்ள ஆர்டர்கள் தெரியுமில்லையா?''*

*''யெஸ். அவர் சொன்னார். நாங்க என்ன பண்ணணும்னு நினைக்கிறீங்க?''*

*''ட்ரக்கைக் கொண்டு வர ஓர் ஆளை அனுப்பிடுங்க. அப்புறம் கிராமத்தின் ஒரு மூலையிலிருந்து ஆரம்பியுங்க. ஒவ்வொரு வீடா போங்க. எப்படி பண்ணுவீங்கன்னு தெரியாது... ஆனா இன்னும் இருபது இருபத்தைந்து நிமிஷங்களில் கிராமத்திலிருக்கும் அத்தனை ஜீவன்களும் சர்ச்சுக்கு வந்திருக்கணும்.''*

*''அதுக்கப்புறம்?''*

*''கிராமத்தின் இரு நுழைவுப் பகுதிகளின் பாதைகளும் அடைக்கப்பட்டிடணும். அலுவலக நிமித்தமா செய்யப்படுவதைப் போலத்தான் அமையணும்.''*

*''இதை நான் மிஸஸ் க்ரேயிடம் சொல்லவா?''*

*''நோ, இப்போதைக்கு அவங்களை விட்டுடுங்க. ரேடியோ தகவல்கள் நிமித்தமா அவங்களை நாம விட்டு வெக்கணும். அவங்க நம்ம பக்கம் இருக்காங்க என்பது எக்காரணம் கொண்டும் யாருக்கும் தெரிஞ்சுடக் கூடாதுனு இருக்கேன். தவிர்க்க முடியாத சந்தர்ப்பங்கள் தவிர. நானே போய் அவர்களை அப்புறமா சந்திச்சுக்கறேன்'' அவர் சிரித்தார். ''இறுக்கமான சூழ்நிலை. ரிட்டர்.''*

*''இதை நாம முன்கூட்டியே கணக்கிட்டிருக்கணும்.''*

"குட்" என்ற ஸ்டைனர் சல்யூட் வைத்தார், "முன்னேறுங்க." திரும்பிய அவர் குன்று வழியாய் சர்ச்சுக்குப் பயணமானார்.

★ ★ ★

**போ**ஸ்ட் ஆபீஸ் வளாக வரவேற்பறையில் தனது பேத்திக்கான உடையை மாற்றிக் கொண்டிருந்த திருமதி டர்னர் தேம்பினார். கிரஹாமை இறுக்கிக் கட்டிக்கொண்டு அருகில் உட்கார்ந்திருந்தார் பெட்டி. கதவில் இவர்களுக்காக காத்திருந்தார்கள் டின்டரும், பெர்க்கும்.

"என் வயித்தைக் கலக்குது, பெட்டி" என்றார் திருமதி டர்னர். "இவனுங்களைப் பற்றிய பயங்கரமான சேதிகளை யெல்லாம் நான் படிச்சிருக்கேன். நம்மை இவங்க என்ன பண்ணுவாங்களோ?'

அங்கு சுவிட்ச் போர்டருகே உட்கார்ந்திருந்த டர்னர், "என் பொண்டாட்டிக்கு என்னாச்சு?" என்றார்.

"நத்திங்" என்றார் ப்ரஸ்டன். "நீங்க உங்களுக்கு என்ன பண்ணனும்னு சொல்லப்பட்டிருக்கோ அதை மீறி ஒரு இஞ்ச் எதுவும் பண்ணக்கூடாது. ஏதாவது ட்ரிக் பண்ணி, உள்ளே வரும் டெலிபோன் காலரிடம் ஏதாவது சமிக்ஞை தரலாம்னு நினைச்சீங்க..." தன்னுடைய இடுப்புப் பையிலிருந்து ரிவால்வரை எடுத்தார் அவர். "நான் உங்களை சுடமாட்டேன் - உங்க மனைவியை சுட்டுடுவேன். இது சத்தியம்."

"நாயே, நாயே" என்றார் முதியவர், "உன்னைப்போய் ஒரு ஆங்கிலேயன்னு சொல்லிக்கிறியே?"

"உன்னைவிட சிறந்தவன்தான்டா." தனது முஷ்டியால் அவர் முகத்தில் ஒரு குத்து விட்டார்." இதை ஞாபகம் வைச்சுக்க."

தன் இடத்தில் உட்கார்ந்து கொண்டார். சிகரெட் பற்ற வைத்தார். சஞ்சிகையை படிக்கலானார்.

★ ★ ★

**பீ**டத்தில் செய்து கொண்டிருந்த மலர் அலங்காரத்தை மோலியும் பமீலாவும் முடித்திருந்தார்கள். ''கடைசியா என்ன வேணும்னு எனக்கு தெரியும்''என்றார் பமீலா. ''ஐவீ கொடியின் இலைகள். வெளிலே இருக்கு. இதோ போய் கொண்டு வந்துடறேன்.''

கதவைத் திறந்தார் அவர். நடைபாதையில் நடந்து சற்று வெளியேறினார். ஒரு மரத்தின்மீது அடர்ந்து படர்ந்திருந்த ஐவீ கொடியிலிருந்து கை நிறைய இலைகளைப் பறித்துக் கொண்டார். சர்ச்சுக்குள் அவர் திரும்பி நுழையும் கட்டத்தில், ஓடும் ஒரு வாகனத்தின் ப்ரேக்குகள் பிடிக்கப்படும் ஓசை கேட்டது. திரும்பிப் பார்த்தார். ஜீப் வந்து கொண்டிருந்ததைக் கவனித்தார். அவரது சகோதரரும் ஓயில்ட்டும் அதில் இருப்பதை பார்க்க முடிந்தது பமீலாவால். முதலில், பாராசூட் வீரர்கள் வெரேக்கருக்கு லிஃப்ட் கொடுத்திருக்கிறார்கள் என்றுதான் அவர் முடிவு செய்தார். பிறகு தனது சகோதரரையும் ஓயில்டையும் அதிலிருந்த கனமான ஒரு சர்ஜெண்ட் அவர்களது இடுப்புப் பகுதியில் துப்பாக்கியை செருகி அழைத்து வருவதை கவனித்தார். இதையும்கூட சரியான ஒரு கூத்து என்றுதான் பமீலா கருதியிருப்பார், இவர்களுக்குப் பின்னாலேயே போன பெக்கரும் ஜேன்ஸனும் ஸ்டார்னின் உடலை சுமந்து செல்வதை மட்டும் பார்க்காமல் இருந்திருந்தால்.

உள்ளே திரும்பிய அவர் மோலி மீது அப்படியே வந்து விழுந்தார்.

''என்ன ஆச்சு?'' என்றாள் மோலி.

"எனக்கு தெரியாது. ஆனா என்னவோ தப்பு நடந்திருக்கு - பெரிய தப்பு."

அதற்குள் வெளியே ஓசைகள் உருவாகியிருந்தன. வெரேக்கர் இறங்கி நடக்க உதவினார் ஒயில்ட். என்ன நடக்கின்றது என்று விளங்காமல் பமீலாவை கேட்டார் மோலி: "இதுக்கெல்லாம் என்ன அர்த்தம்?"

பமீலா அவரது வாயை அடக்கினார். "சீக்கிரம் உள்ளே வாங்க. இதோ, இங்கே இப்படி." அங்கிருந்த ஒரு கதவினை திறந்தார் அவர். அவர்கள் அதற்குள் நழுவினார்கள். கதவை மூடினார் பமீலா. தாழ்ப்பாளை அதற்கான இடத்தில் பொருத்தினார். அப்போது குரல்களை தெளிவாய் கேட்டார்கள் அவர்கள்.

வெரேக்கர் சொன்னார்: "ஆல் ரைட். அடுத்து என்ன?"

"கர்னல் வரும் வரை காத்திருங்க" என்றார் ப்ராண்டிட். "அதுவரை இந்த புவர் ஸ்டார்னுக்காக நீங்க ஏன் இறுதிக் கடமைகளை செய்யக்கூடாது? இவர் கத்தோலிக்கோ, ப்ரொடெஸ்ன்ட்டோ, ஜெர்மானியரோ, ஆங்கிலேயரோ. மண்ணோடு போகும்போது எல்லோரும் ஒண்ணுதான்."

"உடலை, மாதாவுக்கு முன்னால் கொண்டு வாங்க."

குரலொலிகள் கரைந்து மறைந்தன. இரு பெண்களும் கதவோடு கதவாக ஒட்டிக்கொண்டார்கள். "ஜெர்மானியர்னா சொன்னார்?" என்றார் மோலி. "புரியவில்லையே."

காலடிகள் சன்னமாய் கேட்க, வெளிப்புறக் கதவு கிறீச்சிட்டு திறந்தது. தனது உதடுகளுக்குக் குறுக்காய் பமீலா ஆள்காட்டி விரலை வைத்து அமர்த்த, இருவரும் காத்திருந்தார்கள்.

ஸ்டைனர் வந்தார். சுற்றிலும் பார்த்தார். ஆங்கிலேய தொப்பி இனி தேவையில்லை, ஆகையால் அதை இப்போது

*அவிழ்க்க அவரிடம் தயக்கம் கிடையாது. "ஃபாதர் வெரேக்கர்" என அவர் அழைத்தார். "இங்கே இருக்கேன்."*

*அங்கிருந்த சிறு அறையின் கதவை திறக்க முயற்சித்தார். அது திறக்கவில்லை. உள்பக்கம் பெண்கள் தாளிட்டிருந்தார்கள். "இதை பூட்டியிருக்கீங்க போலிருக்கே? என்ன உள்ளே இருக்கு?"*

*அதன் சாவி பல்லாண்டுகளுக்கு முன்பாகவே தொலைந்து விட்டபடியால், வெரேக்கருக்கு தெரிந்து இக்கதவு பூட்டப்பட்டது கிடையாது. யாரோ உள்பக்கமிருந்து கொண்டு தாளிட்டிருக்கிறார்கள் என்பது ஒன்றுதான் அர்த்தமாக முடியும். அப்போதுதான் இங்கே மலரலங்காரம் பண்ண பமீலாவை மட்டும் விட்டுச் சென்றது அவரது நினைவுக்கு வந்தது. ஏன் தாளிடப்பட்டுள்ளது என்று வெளிப்படையாய் அவருக்கு விளங்கியது.*

*தெளிவாய் பேசினார் அவர்: "இது தனி அறை ஸார். சர்ச் ஆவணங்கள், ரெஜிஸ்டர்கள், என் தட்டுமுட்டு சாமான்கள் இதெல்லாம் இங்கிருக்கும். சாவி, இங்கேயில்ல – பாதிரியார்களின் அறையில இருக்கு. மன்னிக்கணும். நீங்க ஜெர்மன்ல தரும் கட்டளைகளே நல்லாயிருக்கு அதனால்..."*

*"அதுக்காக எனக்கு ஆங்கிலமே தெரியாதுன்னா நினைச்சீங்க. எனக்கு ஓர் அமெரிக்கப் பெண் பணியாளா இருந்திருக்கா. லண்டன்லேயேதான் நான் ஸ்கூல் முடிச்சேன். ம், இப்படிப்பட்ட கலவையினால உங்களுக்கு ஓர் உண்மை தெரியவரணுமே?"*

*"யெஸ், உங்க பேர் கார்ட்டர்னு இருக்க முடியாது."*

*"ஸ்டைனர். கர்ட் ஸ்டைனர்."*

சற்று இடைவெளி பிறக்க, பிறகு வெரேக்கர் கேட்டார்: "ஸோ, இன்னிக்கு ராத்திரி ஸ்டட்லே க்ராசில் வைத்து மிஸ்டர் சர்ச்சிலைக் கொல்ல வந்திருக்கீங்க?"

"அது தேவையென்றால்!" ஸ்டைனர் சொன்னார்: "அவரை கொண்டுப்போகத்தான் நான் விரும்பறேன்."

"இப்ப அந்த திட்டம் கொஞ்சம் சிதைஞ்சிருக்கு, ஆங்? அற்புதமாக வடிவமைக்கப்பட்ட திட்டம்..."

"யெஸ்... திட்டம் கொஞ்சம் அடிபட்டுடுச்சு. அந்நிலையிலும் முன்னேற்றம் கொண்டு வருவது தானே ராணுவ வீரம். ஏன், நீங்களே ஒரு பாராசூட் வீரர்தானே... இதை ஒத்துப்பீங்கதானே?"

தொடர்ந்தார்: "நினைச்சது நடக்கும்வரை முழு கிராமத்தையும் பேசாம வைப்பதுதான் தற்சமயம் எங்க திட்டத்தில் கொண்டு வரப்பட்டுள்ள முன்னேற்றம்."

ஸ்டைனர் பேசிய முறையின் ஆணவம் வெரேக்கரை உசுப்பியது. "அது உங்களால முடியாது."

"அப்படி நினைக்காதீங்க. ஸ்டட்லே கான்ஸ்டபிளில் இருக்கும் ஒவ்வொருத்தரையும் என்னுடைய ஆட்கள் இப்ப ரவுண்ட் கட்டிக்கிட்டிருப்பாங்க. அடுத்த கால் மணி நேரத்துக்குள்ளே அந்த அத்தனை பேரும் இங்கே வந்திருப்பாங்க. டெலிபோன் சிஸ்டம், சாலைகள், எல்லாத்தையும் எங்க கட்டுக்குள்ளே கொண்டு வந்துட்டோம். ஆக யார் புது வரவாய் வந்தாலும் அது எங்களுக்கு தெரிஞ்சுடும்."

"ஆனா இதெல்லாம் நடைமுறையாகாது."

"ஹென்றி இன்னிக்கு காலைல பதினொரு மணிக்கு கிளம்பியாச்சு. கிங்ஸ் லின் பகுதிக்கு. பிரதம மந்திரியுடன்

அங்கே அவர் லஞ்ச் எடுத்துக்கப் போறார். நாலு மிலிட்டிரி எஸ்கார்டுகளுடன் அவங்க கிளம்பப் போவது மூணரை மணிக்கு.'' ஸ்டைனர் தனது கைக்கடிகாரத்தை பார்த்தார். ''அது, இப்பத்தான்! வால்சிங்ஹாம் வழியாகத்தான் பிரயாணிக்கணும் எனும் தனது இண்ட்ரஸ்ட்டை பிரதம மந்திரி வெளிப்படுத்தியிருக்கார். ஓ, இதையெல்லாம் சொல்லி நான் உங்களை போரடிச்சுக்கிட்டிருக்கேன்...''

''எல்லா தகவல்களையும் அருமையா பெற்றிருக்கிறாற் போல தெரியுது...''

''ஓ,யெஸ். ஆக இப்படியே மாலை முடியும் வரை நாம தொங்க வேண்டியதுதான் வேலை. உலக மக்கள் பயப்படவே வேண்டாம் - நாங்க சொன்னபடி அப்படியே பிசகாமல் நடந்து கொள்ளும்வரை.'' தொடர்ந்தார்: ''உங்க கார் சாவி வேணும். அவசரத்துக்கு உதவலாம்.''

''இப்ப என்கிட்டே இல்லியே...''

''என் நேரத்தை வீணாக்காதீங்க ஃபாதர். என் ஆட்களை விட்டு உங்க உடைகள் முழுக்க கழற்றி சோதனை பண்ண வெப்பேன்- தேவைப்பட்டால்.''

வேண்டாவெறுப்பாய் வெரேக்கர் சாவியை எடுத்துத்தர அதனை தன் சட்டைக்குள் நழுவ விட்டுக்கொண்டார் அவர். ''ரைட்... ப்ராண்டிட்... இந்த இடத்தை வெச்சுக்கங்க. ப்ரஸ்டன் வந்ததும் கிராமத்துக்கு வந்து என்கூட சேர்ந்துடுங்க.''

அவர் வெளியேறினார். கதவுக்கு எதிராய் தனது துப்பாக்கியுடன் வந்து நின்று கொண்டார் ஜேன்ஸன். தோள்கள் குனிந்தபடி உட்கார்ந்திருந்த ப்ராண்டிட் மற்றும் ஓயில்டைக் கடந்து சர்ச்சின் உட்புற நடைபாதையில் மெதுவாய் நடக்கலானார் வெரேக்கர். மாதாவின் முன்னால்

ஸ்டர்ன் கிடத்தப்பட்டிருந்தார். அதை பார்த்தபடி பாதிரியார் சில கணங்கள் நின்றார். பிறகு முட்டிபோட்டு அமர்ந்தார். சிலுவைக் குறியை காட்டிவிட்டு ஆன்மா சாந்தியடைய ஜபம் பண்ணலானார்.

"ஆக, இப்ப நமக்கு தெரியும்" - ஸ்டைனர் கதவடைத்து விட்டு வெளியேறிய ஓசைக்குப்பின் சொன்னார் பமீலா.

சுரத்தின்றி கேட்டார் மோலி:"இப்ப நாம என்ன பண்ணுவது?"

"இங்கிருந்து வெளியேறணும். அதுதான் முதல் ஜோலி."

"ஆனா எப்படி?"

அவர்கள் இருந்த அறையின் எதிர்ப்புறம் சென்றாள் பமீலா. அங்கு சுவரிலேயே தள்ளுக்கதவு ஒன்று இருந்தது. அதனை தள்ளித் திறந்தாள். அது பாதிரியாரின் அறைக்கான நுழைவுக்கு இட்டுச் செல்லும் குழாய் பாதையைக் காட்டியது. அவருடைய சகோதரர் டேபிளிலேயே விட்டுச் சென்றிருந்த டார்ச் லைட்டை எடுத்துக் கொண்டார் அவர். இப்படியொரு ஏற்பாடு உள்ளே இருப்பதை பார்த்து வியந்துக் கொண்டிருந்த மோலியிடம் "கம் ஆன்" என்றார் பமீலா பொறுமையின்றி. "நாம வெளியேறிக் கிட்டேயிருக்கணும்."

கதவினை தங்களுக்குப் பின்னால் முடிய பமீலா விறுவிறுவென்று அந்த இருட்டுப்பாதையில் டார்ச் ஒளியில் பிரயாணித்து படிகளேறி அறைக்கு வந்து விட்டார். டார்ச்சை டெலிபோனுக்கு அருகில் டேபிளில் வைத்து பெருமூச்சு விட்டபடி திரும்பியவர் கசப்பாய் மோலி அழுதுக் கொண்டிருப்பதை பார்த்தார்.

அவளுடைய கையை தன்னுடைய கைக்குள் பத்திரப் படுத்திக் கொண்டு "என்னம்மா இது மோலி?" என்று கேட்டார்.

''லியாம் டெவ்லின்'' என்றாள் அவள். ''அவரும் இவங்கல்ல ஒருத்தர். அப்படித்தான் இருக்கணும். அவங்க எல்லாருமே இந்தப் பகுதியில இருந்தாங்க, தெரியுமா? நான் பார்த்தேன்.''

''இது எப்ப நடந்தது?''

''இன்னிக்கு காலைல. இன்னும் அவர் ஆர்மிலதான் இருக்கார் எனும் பதிவை அவர் எனக்குள்ளே நிலை நிறுத்தினார். ஏதோ ரகசிய வேலைனு சொல்லி.'' தனது கையை உருவிக்கொண்டு இரு உள்ளங்களையும் பிசைந்து கொண்டார். ''அவர் என்னை பயன்படுத்தினார். இருந்த வரைக்கும் என்னை பயன்படுத்திக்கிட்டார். தூக்குல தொங்க விடணும் அவரை.''

''மோலி, ஐ ஆம் ஸாரி.'' பமீலா சொன்னார். ''நீங்க சொல்வது நிஜமாயிருந்தால், தப்ப முடியாது அவரால. ஆனா இப்ப நாம இங்கிருந்து வெளியேறிடணும், மோலி.'' டெலிபோனைப் பார்த்தார் அவர். ''போலீஸுடன் தொடர்பு ஏற்படுத்த முடியாது. கிராம எக்ஸ்சேஞ்ஜை கட்டுக்குள் வெச்சிருப்பாங்க அவங்க. அண்ணனுடைய கார் சாவியும் என்கிட்டே இல்ல.''

''மிஸஸ் க்ரேயிடம் கார் இருக்கு.''

''ஆஹா பமீலாவின் கண்களில் பிரகாசம் தட்டியது. ''இப்ப நம்மால அவங்க வீட்டுக்கு மட்டும் போக முடிந்தால்...''

இருவரும் சற்று நேரம் நின்றார்கள். பமீலா சொன்னார்: ''ஆல் ரைட்... யார் கண்ணிலும் படாமல் வயல்களுக்குள் பதுங்கி மிஸஸ் க்ரேயின் வீட்டை அடைய முடியுமான்னு பார்ப்போம்.''

மோலி விவாதம் பண்ணவில்லை. அருகிலிருந்த மரக்காட்டுக்குள் இருவரும் இறங்கினார்கள். அது பல்லாண்டுகளாக இருக்கும் ஒரு மரக்காடு. ஆகவே

மறைந்து செல்ல வசதியாகவே அமைந்தது. ஜோன்னா க்ரே வீட்டின் அருகாமையில் காட்டுப்பகுதி முடியும் வரை இருவரும் பதுங்கியபடியே போய்ச் சேர்ந்தார்கள்.

''வந்தாச்சு'' என்றார் பமீலா. ''நேரா போக வேண்டியதுதான் பாக்கி.''

மோலி, முன்னேறிய அவருடைய கையை பிடித்தார். ''நான் வரல. என் மனசை நான் மாத்திக்கிட்டேன்.''

''என்ன சொல்றீங்க?''

''நீங்க இப்படி முயற்சி செய்யுங்க. நான் என் குதிரை வண்டிக்கே திரும்பி இன்னொரு வழியை பார்க்கிறேன்.''

பமீலா ஆமோதிப்பாய் தலையசைத்தார். ''இதுவும் நல்லாதானிருக்கு. அப்ப நல்லது, மோலி'' - ஒரு வேகமாய் அவளுடைய கன்னங்களில் முத்தமிட்டார் பமீலா.

பமீலாவை சின்னதாய் மோலி தள்ளிவிட, பாதையின் முடிவில் ஆரம்பமான மிஸஸ் க்ரே காட்டேஜின் தோட்டத்துக்குள் மறைந்து போனார் பமீலா. வந்த வழியிலேயே வேகமாய் திரும்பலானாள் மோலி.

ஓ டெல்வின்... நாயே... ச்சே... உன்னை அவங்க சிலுவையில் அறையணும்னு வேண்டிக்கிறேன்.

குதிரையிருந்த பகுதிக்கு வரும் வரை சோகமாய் வலிகொண்ட கண்ணீர்த்துளிகள் அவளுடைய கன்னங்களில் மெதுவாய் வழிந்த வண்ணமிருந்தன. அவளுடைய குதிரை தாவரங்களை மேய்ந்து விட்டு காத்திருந்தது. அதனுடன் இணைத்துக் கொண்டாள். அதனை தடவிக் கொடுத்தாள். அதன் மேல் ஏறி அமர்ந்து ஓர் உதை விட்டாள். அது முன்னேறியது.

★ ★ ★

**பி**ன்பக்கமாய் காட்டேஜுக்குள் பமீலா நுழைந்தபோது மோரீஸ் கார் அங்கேயே நின்று கொண்டிருந்தது. அதன் கதவை திறந்து பார்த்தார். காரின் சாவி தொங்கிக் கொண்டிருந்தது. அவர் துரிதமாக இயங்க நினைத்தபோது ஒரு குரல் கேட்டது: ''பமீலா... அங்கே என்ன பண்ணிக்கிட்டிருக்கீங்க?''

பின்புறக் கதவருகில் ஜோன்னா க்ரே நின்று கொண்டிருந்தார். அவரை நோக்கி ஓடினார் பமீலா. ''மன்னிக்கணும், மேடம். மிகவும் மோசமான சம்பவங்கள் நடந்திருக்கு. இங்கே எக்ஸர்ஸைஸ்னு பண்ணிக்கிட்டிருக்கும் கார்ட்டர் மற்றும் அவருடைய சகாக்கள், நிஜத்துல ஸ்பெஷல் ஏர்சர்வீஸ் ஆட்கள் கிடையாது. அவர் பேர் ஸ்டைனர். அவங்க ஜெர்மன் பாராசூட் வீரர்கள். பிரதம மந்திரியை கிட்நாப் பண்ண வந்திருக்காங்க.''

ஜோன்னா க்ரே அவரைத் தரதரவென்று அடுக்களைக்கு இழுத்து சென்று கதவை மூடினார். பேட்ச் அவரருகில் சென்று வாலாட்டியது. ''அமைதியாகு முதல்ல'' என்றார் ஜோன்னா. ''இது கொஞ்சங்கூட நம்பகத்தன்மை இல்லாத கதை. ப்ரைம் மினிஸ்டர் இங்கே கிடையவே கிடையாது. அப்புறம்தானே கடத்த...''

அங்கு கொக்கியில் தொங்கிக் கொண்டிருந்த கோட் பாக்கெட்டில் எதையோ அவர் துழாவினார்.

''யெஸ். ஆனா இன்னிக்கு சாயங்காலம் அவர் இங்கேயிருப்பார்'' என்றார் பமீலா. ''கிங்ஸ் லின்னிலிருந்து அவரை சர் ஹென்றி அழைச்சுக்கிட்டு வருவார்.''

ஜோன்னா, கையில் ஒரு துப்பாக்கியுடன் திரும்பினார். ''ரொம்ப பிஸியா இருந்திருக்கே நீ, இல்லையா?'' பின்புறம் நடந்துப்போய் அடித்தளப் பகுதிக்கான கதவினை திறந்து விட்டார். ''கீழே இறங்கு நீ.''

பமீலாவின் தலையில் இடியிறங்கியது போலானது. "மிஸஸ் க்ரே... எனக்கு ஒண்ணுமே புரியலே."

"அதை விளக்க இப்ப எனக்கு நேரம் கிடையாது. இந்த விஷயத்தைப் பொறுத்த வரைக்கும் நீங்களும் நானும் எதிரெதிர் பக்கங்களில் இருக்கோம். இத்துடன் நிறுத்திக் கொள்வோம். இப்ப அந்தப் படிகளில் மளமளவென்று இறங்குங்க. சுடணும்னு ஆகிவிட்டால் சுடக்கூட நான் தயங்க மாட்டேன்."

பமீலா, தனது நாய் பின்னால் தொடர இறங்கினார். கீழே ஒரு விளக்கின் சுவிட்சினைப் போட்ட க்ரே எதிரில் இருந்த கதவினைத் திறந்து விட்டார். வேண்டாத பொருட்களெல்லாம் அடைக்கப்பட்டிருந்த ஓர் அறை அது. ஜன்னல்கள் இல்லை. நாற்றமிருந்தது. "உள்ளே போ நீ."

எஜமானியின் காலில் நுழைந்து பேட்ச் உள்ளே போனதால் சற்றுத் தடுமாறி சுவரில் போய் பமீலா மோதிக் கொள்ளும்படியாயிற்று. விழ நேரிட்டது. இந்த சப்தத்தால், உடனே இலக்கின்றி சுட்டார் க்ரே. அவரது தலையின் ஓரத்தை சட்டென்று தொட்டுப்போன சூடான குண்டின் தீண்டலால் பாதி மயக்கமானார். அந்த க்ஷண நேரத்தில் கதவினை ஓங்கித் தள்ளி, அது ஜோன்னா க்ரேயின் முகத்தில் முழுவதுமாய் அறையும்படி செய்ய அவர் தவறவில்லை. உடனே அதன் தாழ்ப்பாளையும் போட்டு விட்டார்.

துப்பாக்கி குண்டின் அதிர்ச்சி, உடலின் மைய நரம்பு மண்டலத்தையே சற்று நேரம் மரத்துப் போகச் செய்துவிடும். மேலே ஏறி கிச்சனுக்கு மீண்டும் வரும்வரை வழிநெடுக இருட்டின் தடுமாற்றமே இருந்தது. அங்கிருந்த ஒரு பீரோவில் தான் விழுந்துவிடாமல் இருக்க சற்று சாய்ந்துக் கொண்டு நின்றபோது அதன் கண்ணாடியில் பமீலாவின் முகம் தெரிந்தது. அவருடைய நெற்றியின்

இடப்புறத்தில் குறுகலாய் கொஞ்சம் சதை பிய்த்தெறியப் பட்டிருந்தது. அக்காயத்தில் எலும்பும் துருத்திக் கொண்டு தெரிந்தது. ரத்தம் அதிகமில்லை. அதனை தொட்டபோது வலி தெரியவில்லை.

''ஹார்ரிகிட்டே நான் போயிடணும்'' - அவர் சப்தமாய் சொன்னார். ''ஹார்ரிகிட்டே நான் போயிடணும்.''

பிறகு, ஏதோ கனவில் நடப்பதைப்போல, மோரீஸ் காரில், ஸ்லோ மோஷனிலும், அவர் போய்க் கொண்டிருந்தார்.

★ ★ ★

**சா**லையில் போய்க் கொண்டிருந்தபோது அவர் போவதை கவனித்தார் ஸ்டைனர். ஜோன்னா க்ரே திட்டத்தின் ஒரு பகுதியை செயல்படுத்திக் கொண்டிருக்கிறார் என்றே நினைத்தார் ஸ்டைனர். பாலத்தில் ஜீப்பினை விட்டு வந்திருந்தார். க்ளக்ள் டிரைவர் சீட்டிலும் மெஷின் கன்னைக் குறிபார்த்து வைத்துக் கொண்டு வெர்னர் ப்ரிகெல்லும் அங்கிருந்தார்கள். அப்பகுதிக்கு சென்றார் ஸ்டைனர். அவர் சென்றடைந்ததும் சர்ச்சிலிருந்து குன்றின் வழி இறங்கி வந்தது பெட்ஃபார்ட். அதில் தொங்கியபடியிருந்த ரிட்டர், குதித்திறங்கினார்.

''27 பேர் இப்ப சர்ச்சுக்குள்ளே வந்தாச்சு ஸார். ரெண்டு குழந்தைகள் உட்பட 5 ஆண்கள் 19 பெண்கள்.''

''10 பிள்ளைகள் கதிரறுக்கும் இடத்துல இருக்காங்க'' என்றார் ஸ்டைனர். ''இங்கிருக்கும் தற்போதைய மக்கட்தொகை 47 என்பது டெவ்லின் பண்ணியிருக்கும் கணக்கு. எக்ஸ்சேஞ்சிலிருக்கும் டர்னர், மிஸஸ் க்ரே இவங்க ரெண்டு பேரையும் கணக்கில் எடுத்துக்கிட்டா, எட்டு பேர் பாக்கி. அவங்க எப்ப வேணும்னாலும் வரலாம்.

அவங்களில் அனைவரும் ஆண்களா இருக்கணும் என்று நினைக்கிறேன். வெரேக்கரின் சகோதரியைப் பார்த்தீங்களா?''

''சர்ச்சுல பாதிரியார்களின் பகுதியிலே அவங்க இல்ல. அவங்க எங்கே என்று நான் பாதிரியாரைக் கேட்டதற்கு நீ பாழாய் போகனு சொன்னார் அவர். சனிக்கிழமைகளில் வீட்டிலிருந்தால் குதிரையேற்றம் போவாங்கனு கேள்விப்பட்டேன்.''

''அப்படின்னா அவங்க மேலேயும் நீங்க ஒரு கண் வெச்சிருக்கணும், ஆங்.''

''நீங்க மிஸஸ் க்ரேயைப் பார்த்தீங்களா?''

''இல்லே, ஸார்'' என்ன நடந்தது என்று விவரித்தார் ஸ்டைனர். ''நான் அங்கே ஒரு பெரிய தப்பு பண்ணிட்டேன். போறேன்னு நீங்க சொன்னபோது அவங்களைப் போய் பார்த்துவர உங்களை நான் அனுமதிச்சிருக்கணும். அவங்க சீக்கிரமா வந்துடுவாங்கன்னு நான் இப்ப நம்பிக்கையா இருக்கணும், அவ்ளோதான்.''

''ஒருவேளை அவங்க டெவ்லினைப் பார்க்க போயிருப்பாங்களோ?''

''அது நல்ல பாயிண்ட். செக் பண்ணிவிடுவது நல்லது. எப்படியும் அவருக்கும் இங்கே என்ன நடந்துக்கிட்டிருக்குனு நாம சொல்ல வேண்டியிருக்கு.''

டர்னரின் கடையில் கண்ணாடி உடையும் சப்தங்கள் கேட்டன. ஜன்னல் வழியே ஒரு நாற்காலி வந்து விழுந்தது. தங்களது துப்பாக்கிகளை சரிபார்த்துக் கொண்ட இருவரும் சாலைக்கு குறுக்காய் ஓடினார்கள்.

★ ★ ★

ஸ்டட்லே கான்ஸ்டபிளின் கிழக்கே ஒரு பண்ணை உள்ளது. நாளின் முழுமைக்கும், அங்குள்ள மரங்களின் அபரிமிதக் கிளைகளை வெட்டிக் கொண்டிருந்தார் ஆர்தூர் ஸேமோர். கிடைக்கும் மரத்துண்டுகளை தன் லாபத்துக்காக அக்கம்பக்கங்களில் விற்று வந்தார். அன்று காலையில் மிஸஸ் டர்னரும் சில ஆர்டர்கள் கொடுத்திருந்தார். கிளை வெட்டி முடிந்ததும் அவற்றை ஒரு மூட்டையாக கட்டி தனது கைவண்டியில் வைத்து கிராமத்துக்குள் எடுத்துப் போனார். அப்போது டர்னர் கடையின் பின்பகுதியை வந்தடைந்தார்.

பின்கதவினை தட்டி, முன்அனுமதி வாங்காமல், கிச்சனுக்குள் போனார் அவர். தோளில் ஒரு பெரிய சாக்கு மூட்டை. கிச்சனை அடைந்ததும், அங்கு டேபிளில் உட்கார்ந்து கொண்டு தேநீர் குடித்துக் கொண்டிருந்த டின்டர் மற்றும் பெர்க் ஆகியோரை நேருக்கு நேர் பார்த்தார் அவர்.

''யார்ப்பா நீங்கனெல்லாம்?'' என்றார் உடனேயே. ''என்ன நடக்குது இங்கே?''

இக்கேள்விகளைக் கேட்டுக் கொண்டிருக்கும்போதே ப்ரஸ்டனும் அங்கு நுழைவாயிலில் வந்து நின்றார்.

தோளில் சாக்கு மூட்டையுடனும் கூன் விழுந்த நிலையிலும் இருந்த ஆர்தூரை ''வாப்பா ஆதி மனிதா!'' என்றார் பெர்க்.

மூட்டையை இறக்கி விட்டு நிமிர்ந்த அவர் ''மூடு வாயை'' என்றார்.

''நான் மூடறேன். இது பேசட்டுமா?'' என்றார் துப்பாக்கியைக் காட்டி.

வாய் வார்த்தை அப்போது கைகலப்பானது. அதன் விளைவை வெளியிலிருந்து பார்த்துத்தான் இப்போது ஸ்டைனரும் ரிட்டரும் ஓடி வந்திருக்கிறார்கள்.

சூறாவளி அடித்த மாதிரி ஆகியிருந்த அறையில் முறைப்பை எதிர்கொள்ள முடியாமல் கீழே விழுந்திருந்த ஆர்தூரை சுட்டிக்காட்டி, ''முதல்ல அவன் கையை கட்டுங்க'' என்றார் ப்ரஸ்டன். ''அடுத்த முறை நாம தப்பிக்க லக் இல்லாமலும் போயிடலாம். எமனா இருக்கான் இவன்.''

ஓல்ட் மிஸ்டர் டர்னர் கதவருகே வந்து நின்றார். வாயிலும் வயிற்றிலும் அடித்துக் கொள்ளாத குறையானார். ''இதுக்கெல்லாம் யார் பணம் தரப் போறாங்க?''

ப்ரஸ்டன் இரக்கமில்லாமல் சொன்னார்: ''பில்லை, வின்ஸ்டன் சர்ச்சிலுக்கு அனுப்பி வை. முடிஞ்சா நான் சிபாரிசு பண்றேன். முகரையைப் பார்.''

பரிதாபப்பட்ட ஜீவனாய் அங்கு நின்றார் பெரியவர்.

ஸ்டைனர் பேசினார்: ''ஆல் ரைட். ப்ரஸ்டன். இனி நீங்க இங்கே தேவையில்லை. சர்ச் வரைக்கும் போங்க. கூடவே கவுண்டர்ல இருக்கும் அந்த ஸ்பெஸிமென்னையும் எடுத்துக்கங்க. ப்ராண்டிட்டை அவுத்து விட்டுடுங்க. நியூமேனை நேரா பார்க்கும்படி. அவரிடம் சொல்லிடுங்க.''

''சுவிட்ச் போர்டு பற்றி?''

''ஆல்ட் மேனை நான் உள்ளே அனுப்பப் போறேன். அவர் நல்ல ஆங்கிலம் பேசுவார். அதுவரை அதுல பெர்க்கும், டின்டரும் ஒரு கண்ணை வெச்சுக்கட்டும்.''

ஸேமோர் கழன்றார். முட்டியால் முன்னேறினார். அப்போதுதான் தனது கைகள் பின்பக்கமாய் கட்டப்பட்டிருப்பதை அவர் உணர்ந்தார். இதை கவனித்து விட்டு அவரை பின்பக்கமாய் எட்டிய ப்ரஸ்டன் ''வசதி

பத்தலையோ?'' என்றார். ''கம் ஆன் ஆதிமனிதா, கம் ஆன்'' என்றார் கிண்டலாய், சற்று தள்ளிப்போய் நின்று கொண்டு.

★ ★ ★

நம் விதி இப்படி ஆகியிருக்க வேண்டுமா என்றெண்ணிக் கொண்டிருந்த ஒவ்வொரு கிராமவாசியும் தணிந்த குரலில் தங்களுக்குள் பேசியபடி இருபக்கங்களிலும் வரிசையாய் போடப்பட்டிருந்த சர்ச் பெஞ்சுகளில் உட்கார்ந்திருந்தார்கள். பெண்களில் அனைவரும் கிலி கொண்டிருந்தார்கள். தன்னால் முடிந்த உளவசதியை ஏற்படுத்தித் தரும் பொருட்டு அவர்களுக்கிடையே நடமாடினார் வெரேக்கர். கையில் துப்பாக்கியுடன் கார்பெரெல் பெக்கர் அங்கு காவலில் இருந்தார். ஜேன்ஸன் நுழைவாயிலில். இருவரும் ஆங்கிலம் பேசிக்கொள்ளவில்லை.

ப்ராண்டிட் கிளம்பிப் போனபிறகு கோயில் மணி அறையில், அக்கோபுரத்துக்குக் கீழே ஒரு பெரிய கயிறை கண்டெடுத்தார் ஹார்வே ப்ரஸ்டன். அதனால் ஆர்தூரின் கையை மேலும் இறுக்கிக் கட்டிய அவர், அவரை தலைக்குப்புற வீழ்த்தி, முகம் தரையில் தேய மாதா சிற்பம் வரை இழுத்து வந்தார். அங்கு ஸ்டார்னுடன் சேர்த்து அவரையும் போட்டார். இழுத்து வந்ததில் அவருடைய முகவாய் தேய்ந்ததால் அங்கு முழுக்க ரத்தம் கசிய ஆரம்பித்திருந்தது. பார்த்த பெண்களிடம் அபாயம் வெகுண்டது.

இதையெல்லாம் ப்ரஸ்டன் பொருட்படுத்தவேயில்லை. அவரது விலாவில் எத்தினார். ''நான் கிளம்புவதற்குள் உனக்கு பண்ண வேண்டிய பூஜைகள் இன்னும் நிறையவே இருக்கு'' என்றார்.

*நொண்டியபடி முன்னேறிய வெரேக்கர், ப்ரஸ்டனின் தோளை கோபத்துடன் பிடித்தார். அப்படியே திருப்பினார். "சீ நகரு. அந்த மனுசனை அப்படியே தனியா விடு. ம்."*

*"மனுசன்?" - அவரைப் பார்த்து கொக்கரித்தார் ப்ரஸ்டன். "இது மனுஷன் கிடையாது. ஒரு பொருள் - அஃறிணை." கீழே குனிந்து ஆர்தூரைத் தொட வெரேக்கர் முயன்ற போது அவரை குத்தி தள்ளினார் ப்ரஸ்டன். தனது ரிவால்வரையும் அவர் உருவிக் கொண்டார். "என்ன சொல்றோமோ அதை மட்டும் பண்ணினால் பத்தாதா, நீங்க?"*

*கூட்டத்திலிருந்த ஒரு பெண்மணி அலறிவிட்டாள். அங்கிருந்த பாதிரி மேஜையை சுத்தியை எடுத்து ப்ரஸ்டன் அடித்தபோது அங்கு முழு அமைதி நிலவியது. வெரேக்கர் சிலுவை இட்டுக் கொண்டார். கர்ஜித்த ப்ரஸ்டன் துப்பாக்கியை இறக்கினார். "அது" என்றார். "சொல்றபடி நடந்துக்கிட்டால் உங்களுக்கு நல்லது."*

*"நீயெல்லாம் ஒரு மனுசனா?" என்றார் வெரேக்கர். "எது உன்னுள்ளிருந்து இப்படியெல்லாம் நடந்துக்கத் தூண்டுது?"*

*"விடை சிம்பிள்" என்றார் ப்ரஸ்டன். பெஞ்சுகளுக் கிடையிலான நடைபாதையில் அவர் நடந்தார். பாதிரியாரின் புனித உயர்மேடை நோக்கிப் போனார். மேலே அணிந்திருந்த தடிமனான ஜாக்கெட்டின் சிப்பினை இழுத்து அதனை அவிழ்த்தார். உள்ளே அணிந்திருந்த ஆடை புலப்பட்டது. அதில், கலரில் மூன்று சிறுத்தைகளும், இடக்கையில் கழுகும், அதனடியில் யுனைடெட் கிங்டமின் கொடிச்சின்னமும், ஜெர்மன் மிலிட்டரிக்கான கறுப்பு-வெள்ளை சின்னமும் இருந்தன.*

ஜார்ஜ் ஒயில்டுக்கு அருகில் உட்கார்ந்திருந்த லேக்கர் ஆர்ம்ஸ்பீதான் அப்போது கத்தினார்: "கவனிங்க... அவருடைய உடைல, தோள்பகுதியில, யுனைடெட் கிங்டமின் யூனியன் ஜாக் சின்னம்."

வெரேக்கர் முகத்தில் கடுகடுப்புடன் முன்னுக்கு நகர்ந்தார். ப்ரஸ்டன் கை நீட்டி தடுத்தார். "யெஸ். அவர் சொல்வது சரிதான். இப்ப இந்த ஜெர்மன் மிலிட்டரிக்கான கறுப்பு-வெள்ளை சின்னத்தைப் படிங்க."

"பிரிட்டிஷ் இலவச படை. அப்படினா?"

"வடிகட்டின முட்டாளே, புரியலை? உங்கள்ல ஒருத்தருக்குமா புரியலை? நானும் உங்களைப் போல ஆங்கிலேயன்தான். ஆனா சரியான இடத்துல நான் இல்ல. அவ்ளோதான்."

சூசன் டர்னர் அழ ஆரம்பித்தாள். ஜார்ஜ் ஒயில்ட் பெஞ்சில் தன்னிடத்திலிருந்து எழுந்தார். நடுவிலிருந்த நடைபாதையில் நடந்தார். வேண்டுமென்றே மெதுவாய். பிறகு ப்ரஸ்டனைப் பார்த்தபடியே நின்றார். ப்ரஸ்டன் குருட்டாம்போக்கில் அவர் நின்ற திசைநோக்கி சுட்டார். உடனே ஒயில்ட் குனிந்துக் கொண்டாலும் முகத்தில் ரத்தம் பீறிட்டது. அவ்விடமே களேபரமானது. பெண்கள் தங்கள் நிலையிழந்து கத்தினார்கள். ப்ரஸ்டன் அடுத்து ஒருமுறை காற்றில் சுட்டார். "எல்லாம் அப்படியப்படியே நில்லுங்க!"

அனைவரும் செயலிழந்த நிலைக்குள்ளானதால் சர்ச்சே உறைந்து போனது. கீழே விழுந்த ஒயில்ட் உறுமிக்கொண்டு தலையை இடவலமாய் ஆட்டிக் கொண்டிருந்தபடியால் அவரை நோக்கி தன் ஒரு கால்முட்டியால் முட்டிப்போட்டு குனிந்தார் வெரேக்கர். தனது பையனுடன் ஓடிவந்த பெட்டி, கணவன் அருகில் விழுந்தார்.

"அவர் சரியாயிடுவார், பெட்டி.. அவருக்கு லக்" என்றார் வெரேக்கர். "முகவாயை உரசிக்கிட்டு போயிடுச்சு குண்டு."

*அக்கணத்தில் சர்ச்சின் மறுமுனை கதவு பளீரென்று திறக்க ரிட்டர் நியூமேன் வந்தார். கையில் துப்பாக்கி. நடைபாதையின் மையம் வரை ஓடிவந்தார். நின்றார். ''என்ன நடக்குது இங்கே?''*

''உங்க தோழரையே கேளுங்க'' என்றார் வெரேக்கர்.

*ப்ரஸ்டனை நோட்டமிட்ட ரிட்டர் பின்னர் ஒயில்ட் பக்கமாய் குனிந்தார். ''அவரை தொடாதே நீ - ஜெர்மன் நாயே'' என்றார் பெட்டி.*

*பயிற்சியின் போது முதலுதவிக்காக தன் பாக்கெட்டில் வைத்திருந்த டிரஸ்ஸிங் துணியை எடுத்து ரிட்டர் நீட்டினார். ''அவர் காயத்துல கட்டுங்க. அவர் சரியாயிடுவார்.'' எழுந்தார். வெரேக்கரிடம் சொன்னார்: ''நாங்கள்லாம் ஜெர்மானிய பாராசூட் வீரர்கள் ஃபாதர். அது குறித்து பெருமைப்படறோம். ஆனா, மாறாக, இந்த ஜென்டில்மேன்...'' சாதாரணமாய் திரும்பிய ரிட்டர் தனது துப்பாக்கியால் ப்ரஸ்டனின் முகத்தில் இடியென அடித்தார். அந்த ஆங்கிலேயன் அலறிப்புடைத்து தரையில் சுருண்டார்.*

*கதவு மீண்டும் திறக்கப்பட ஜோன்னா க்ரே ஓடி வந்தார். ''ஓ, கர்னல் ஸ்டைனர் எங்கே?'' என்றார் சப்தமாய். ''நான் அவரோட பேசியாகணும்.''*

*''ஜோன்னா?'' - சொன்னது வெரேக்கர். அவர் சொன்னதில் கேள்வி தொனித்தது. ஆனால் அதையும்விட, ஓர் உச்சகட்ட அச்சம். அவர் பயந்தது இப்போது தெரியத்தான் போகின்றது என்ற அச்சம்.*

*ஃபாதரை ஜோன்னா பொருட்படுத்தவில்லை. ரிட்டரிடமே பேசினார்: ''இங்கே இப்ப என்ன நடக்குதுனு எனக்கு தெரியாது. ஆனா முக்கால் மணி நேரத்துக்கு முன்னாடி பமீலா வெரேக்கர் என் காட்டேஜ் வரைக்கும் வந்திருந்தாங்க. அவங்களுக்கு எல்லாம் தெரியும். என் கார்*

*வேணும்னாங்க. மெல்த்தாம் ஹவுஸ்ல இருக்கும். பயிற்சியாளர்களைப் பார்க்கன்னு சொன்னாங்க.''*

*''என்ன நடந்தது?''*

*''அவங்களை நான் தடுக்க நினைச்சேன். ஆனா அது கீழறைல நான் அடைபடும்படி முடிஞ்சது. ஐந்து நிமிஷத்துக்கு முன்னாடிதான் உடைச்சுக்கிட்டு வெளியேற முடிஞ்சது. இந்த நிலைல நாம இப்ப என்ன பண்ணப் போறோம்?''*

*ஜோன்னாவின் தோளில் கை வைத்து தன்னை பார்த்து திரும்பும்படியாய் அவரை ஒரு திருப்புத் திருப்பினார் வெரேக்கர். ''நீங்களும் இவங்கள்ல ஒருத்தினா சொல்றீங்க?''*

*''யெஸ்'' என்றார் அவர் பொறுமை இல்லாமல். ''இப்ப நீங்க என்னை கொஞ்சம் தனியா விட முடியுமா?'' என்றார். ''எனக்கு வேலைகள் இருக்கு.'' ரிட்டர் பக்கமாய் திரும்பினார்.*

*வெரேக்கர் விடவில்லை. ''ஆனா, ஏன் இப்படி? நீங்க ஒரு பிரிட்டிஷ்காரி...''*

*ஜோன்னா மீண்டும் திரும்பினார். ''பிரிட்டிஷ்காரி?'' - கத்தினார். ''நிறுத்து. டச்சும் ஜெர்மனும் பேசும் தென்னாப்பிரிக்கர்கள், ஆங்! நான் எப்படி பிரிட்டிஷ்காரியா இருக்க முடியும்? அப்படி சொல்லி என்னை கேவலப்படுத்த வேண்டாம்.''*

*அங்கிருந்த அனைவரது முகங்களிலும் பீதி குடிகொண்டது. மனக்கிலேசத்தால் பிலிப் வெரேக்கர் உணர்ந்த மனவேதனையை அவருடைய கண்களில் அனைவருமே கண்டார்கள். ''ஓ, மை காட்!''*

*ரிட்டர் உடனே ஜோன்னாவை தன்னுடன் இணைத்துக் கொண்டார். ''வேகமா உங்க காட்டேஜுக்கே திரும்புங்க. தொலைபேசியில லேண்ட்ஓர்த் பகுதியை தொடர்பு*

கொள்ளுங்க. என்ன நிலைமையில் இருக்கோம் என்பது ரேடிலுக்குத் தெரியட்டும். தொலைபேசி இணைப்பை சேவைலேயே வைங்க.''

ஒப்புதலாய் தலையசைத்து விட்டு விரைந்து விட்டார் அவர். தனது மிலிட்டரி அனுபவத்திலேயே, முதல்முதலாய் அடுத்து என்ன செய்வது என்றறியாத ஒரு தோல்வியான நிலையில் நின்றார், ரிட்டர் நியூமேன். 'இந்த இக்கட்டான நிலைமையில் நாம் என்ன செய்யப் போறோம்?' - நினைத்துக் கொண்டார் அவர். ஆனால் பதில் இல்லை. இனி ஸ்டைனர் இல்லாமல் எந்த பதிலும் எழாது.

பெக்கரிடம் ''நீங்களும் ஜேம்ஸும் இங்கேயே இருங்க'' என்று சொல்லிவிட்டு வெளியே விரைந்தார் அவர்.

சர்ச்சில் அமைதி நிலவியது. இடைப்பட்ட நடைபாதையிலே முன்னேறி நடந்தார் வெரேக்கர். விளக்க முடியாத அளவுக்கு அசதியாய் உணர்ந்தார் அவர். மேடையில் ஏறி, மற்றவர்களை பார்க்குமாறு திரும்பினார். ''சில சமயங்களில், இதைப் போன்ற எதுவுமே செய்ய முடியாத இறுக்கமான இக்கட்டுகளில், ஒன்றுதான் நம் கைகளில் இருக்கு - அது பிரார்த்தனை'' என்றார் அவர். ''அது நிச்சயமா உதவுது. ப்ளீஸ், அனைவரும் மண்டியிட முடியுமா?''

வலக்கையால் தனக்குத்தானே சிலுவை போட்டுக் கொண்டார். உரத்த, குறிப்பிடும்படியான, நடுக்கமற்ற குரலில், அவர் பிரார்த்தனை செய்ய ஆரம்பித்தார்.



# 17

**மெ**ல்த்தாம் பண்ணைக்குப் பின்னால் நடைபெற்றுக் கொண்டிருந்த பயிற்சியில் போரின்போது கடைப்பிடிக்க வேண்டிய சில தந்திரங்கள் பற்றி விளக்கிக் கொண்டிருந்தார், ஹார்ரி கேன். அப்போது அவர் உடனடியாய் வரவேண்டும் என்றும் கூடவே இக்குழுவின் தலைவரையும் கையுடன் அழைத்து வர வேண்டும் என்றும் ஷாஃப்ட்டோ அறிவுறுத்தியதாக அவருக்கு சேதி வந்தது. பயிற்சியை அங்கிருந்த சர்ஜெண்ட் ஹஸ்ட்லர் என்பவரிடம் அப்படியே ஒப்படைத்து விட்டு கிளம்பினார் ஹார்ரி.

அவர் சென்றடையும்போது, எஸ்டேட்டின் பல பகுதிகளில் பயிற்சியிலிருந்த அனைத்து குழுவினரும் அங்கு வந்து சேர ஆரம்பித்திருந்தார்கள். பின்புறத்தில் மோட்டார் வாகனங்கள் வரிசையாய் வந்து குவியும் ஓசையை அவரால் கேட்க முடிந்தது. பல ஜீப்கள் வீட்டின் முன் வேகமாக குவிந்து வரிசையாய் நின்றன.

குழுவினர் தங்களுடைய மெஷின் கன்களையும் உபகரணங்களையும் ஒருதடவை சரிபார்த்துக் கொண்டார்கள். முதலில் வரவழைக்கப்பட்டிருந்த ஜீப்பிலிருந்து ஓர் அலுவலர் குதித்திறங்கினார். அவர், மெல்லோரி.

''எதுக்காக இப்படி எல்லாரும் வந்திருக்காங்க?'' - அதிகாரமாய் கேட்டார் கேன்.

''எனக்கு கொஞ்சமும் ஐடியா இல்லை'' - மெல்லோரி சொன்னார். ''கட்டளைகள் எனக்கு இடப்படும். அப்படியே கடைப்பிடிச்சுடுவேன். அவருக்கு நீங்க இப்ப அவசரமா தேவைப்படறீங்க, அது எனக்கு தெரியும்.'' அவர் சிரித்தார்.

படிகளில் ஏறி ஓடினார் ஹார்ரி கேன். வாசலில் நின்று கொண்டிருந்த ஆபிஸர் மனக்கிலேசத்தின் மொத்த உருவாய் தோன்றினார், ஷாஃப்ட்டோ. அறையின் வாசலில் இருந்த மாஸ்டர் சர்ஜெண்ட் கார்வே படபடப்பாய் சிகரெட் ஒன்றை புகைத்தபடி மேலும் கீழும் பரபரவென நடந்து கொண்டிருந்தார்.

''நீயாவது சொல்லுப்பா... என்ன கர்மம் நடக்குது இங்கே? இங்கிருந்து கிளம்பிவிடும்படி கட்டளைகள் ஏதாவது வந்திருக்கா? இல்ல...''

''என்னை எதுவும் கேட்காதீங்க, மேஜர். எனக்குத் தெரிஞ்சதெல்லாம் இதுதான்: உங்களுடைய அந்தப் பொம்பிளை ஃப்ரண்ட் ஒரு பத்து நிமிசத்துக்கு முன்னாடி வந்தது. பேய் பிடிச்சா மாதிரியான கோலத்துல வந்தாங்க அவங்க. அவ்ளோதான், அப்போதிலிருந்து நிலைமை முழுசா மாறியாச்சு.''

கேன் கதவை திறந்துக் கொண்டு உள்ளே போனார். உள்ளே வருபவருக்கு முதுகு காட்டிய நிலையில் தனது டேபிளுக்கு முன்னால் திரும்பிய நிலையில் நின்று கொண்டிருந்தார் ஷாஃப்ட்டோ. முழு சீருடையில் அவர் இருந்தார். அவர் திரும்பியபோது அவரது கையில் துப்பாக்கி இருப்பதை கவனித்தார் கேன். அவரிடம் இப்படி தோன்றும் மாறுபாடு, ஓர் அசாதாரணமானது. மின்சாரம் அவருடலிலிருந்து சீறிப்பாய்வதைப் போல இருந்தது. கண்கள் முழு வோல்ட்டேஜில் எரிந்தன. அவரது முகம் பரபரப்பில் துடித்துக் கொண்டிருந்தது.

"வேகமான நடவடிக்கைகள் மேஜர்... அதைத்தான் நான் இப்ப எதிர்பார்க்கிறேன்."

அவர், துப்பாக்கி இணைந்திருந்த பெல்ட்டுக்காக கையை கொண்டு போகும்போது, "என்ன சார் இதெல்லாம்?" என்றார் கேன். "மிஸ் வெரேக்கர் எங்கே?"

"என் படுக்கையறைல. தூக்க மருந்தின் பிடியில வைக்கப்பட்டிருக்காங்க. பயங்கரமான ஷாக்."

"என்ன நடந்தது?"

தனது பெல்ட்டை சீக்கிரமாய் முடுக்கியபடி, "அவங்க தலைல ஒரு குண்டு பாஞ்சிருக்கு" என்றார். "அந்தக் குண்டை சுண்டிவிட்ட துப்பாக்கியிலிருந்த விரல் - மிஸ் வெரேக்கர் சகோதரரின் நண்பரான மிஸஸ் க்ரேயுடையது. இதையெல்லாம் மிஸ் வெரேக்கரிடம் நீங்களே கேட்டுத் தெரிஞ்சுக்கங்க. உங்களுக்கு இதுக்கு நான் மூன்றே மூன்று நிமிடங்கள் மட்டுந்தான் ஒதுக்க முடியும்."

கேன் படுக்கையறையின் கதவினைத் திறந்தார். ஷாஃப்ட்டோ அவரை பின்தொடர்ந்தார். படுக்கையின் திரை சற்றே விலக்கி வைக்கப்பட்டிருந்தது. பமீலா படுத்திருந்தார். போர்வை அவருடைய முகவாய் வரை தூக்கி விடப்பட்டிருந்தது. வெளிறிப் போயும் சக்தி குன்றியும் தோன்றினார் அவர். தலையை சுற்றி பேண்டேஜ் ஒன்று கனமாய் கட்டப்பட்டிருந்தது. அதன் ஓரிடத்தில் ரத்தக்கசிவு இருந்தது.

கேன் அவரை நெருங்கியபோது பமீலாவின் கண்கள் திறந்தன. அப்படியே அவை நிலைகுத்தி நின்றன. "ஹாரி?" என்று சரிபார்த்துக் கொண்டார்.

"ஒண்ணும் கவலைப்படாதே." படுக்கையின் நுனியில் உட்கார்ந்தார் அவர்.

''நோ. நான் பேசறதை மட்டும் நீ முதல்ல கேளு.'' தன்னை விசுக்கென்று எழுப்பிக் கொண்ட அவள், கேனுடைய சட்டைக் காலரின் முன்பகுதியை கெட்டியாய் பிடித்துக் கொண்டார். பேசியபோது அக்குரல் மிகவும் தொலைவில் அந்நியமாய் தெரிந்தது: ''சர் ஹென்றியுடன் கிளம்பி ஸ்டட்லே க்ரேஞ்ஜ் வருவதற்காக வின்ஸ்டன் சர்ச்சில் மூன்றரை மணிக்கு கிங்ஸ் லின்னிலிருந்து கிளம்பறார். வால்சிங்ஹாம் பகுதி வழியா அவங்க வரப்போறாங்க. அவங்களை நீங்க தடுத்து நிறுத்தியாகணும்.''

''எதுக்காக நான் பண்ணணும்?'' - மிருதுவாய் கேட்டார் கேன்.

''ஏன்னா, நீங்க அப்படி பண்ணாவிட்டால், கர்னல் ஸ்டைனரும் அவங்க ஆட்களும் அவரை பிடிச்சுடுவாங்க. அவங்க இப்ப கிராமத்துல காத்திருக்காங்க. அனைத்து கிராமத்தார்களையும் கைதிகளா பிடிச்சு தற்சமயம் சர்ச்சுக்குள்ளே அடைச்சிருக்காங்க.''

''ஸ்டைனரா?''

''உங்களுக்கு கர்னல் கார்ட்டர்னு அறிமுகமாகியிருக்கும் ஆள். மேலும் அவருடைய ஆட்களும், ஹார்ரி. அவங்கள்லாம், அவங்க சொல்லிக் கொள்வதைப்போல போலந்து மக்கள் கிடையாது. அவங்கள்லாம் ஜெர்மானிய பாராசூட் கொலைகாரர்கள்.''

''ஆனா பமீலா...'' என்ற கேன், ''நான் கார்ட்டரை சந்திச்சேன்'' என்றார். ''உன்னைப் போலவே அவரும் ஓர் ஆங்கிலேயர்தான்.''

''பேசுவதை வெச்சு எடை போடறீங்க. அவங்க அம்மா ஓர் அமெரிக்கர். அவரேகூட லண்டன்ல படிச்சிருக்கார்.

இது விளக்கிடுதே - புரியலியா?'' உன்னிடம் எதைச் சொல்லிப் புரிய வைப்பது என்ற சலிப்பு அவர் குரலில் விளைந்திருந்தது. ''அவரும் என்னுடைய சகோதரரும் சர்ச்சுல பேசிக்கிட்டிருந்ததை நான் கேட்க நேர்ந்தது ஹார்ரி. மோலி ப்ரியருடன் சேர்ந்து நான் மறைஞ்சிருந்தேன். அப்புறம் நாங்க வெளியேறினதும் ரெண்டு திசைல பிரிஞ்சுக்கிட்டோம். நான், ஜோன்னா க்ரே வீடு நோக்கி. அவளும் அவங்கள்ல ஒருத்தி. அவங்க என்னை சுட்டுட்டாங்க. நான் - நான் அவங்களை கீழறைல தள்ளிப் பூட்டிட்டேன்.'' பேசுவதில் சிரமம் கொண்டு அவர் முகம் இறுகி கொண்டது. ''அப்புறமா அவங்க காரை நான் எடுத்துக்கிட்டு இங்கே வந்துட்டேன்.''

அவரிடமிருந்து ஒரு திடீர் விடுதலையுணர்வு பிறந்தது, தீவிரமாக. தனது மனோசக்தியால் மட்டுமே இத்தனை நேரமாய் தன்னை முழுதுமாய் இழுத்துப் பிடித்திருந்ததைப் போலவும், இனி கவலையே இல்லை என்பது போலவும் பமீலாவின் நிலைமை ஆனது. தனது தலையணையில் படுத்துக் கொண்டு அவர் கண்களை மூடினார். ''ஆனா நீ எப்படி சர்ச்சிலிருந்து வெளியேறினே, பமீலா?''

''இது ரொம்ப முக்கியமா கேன், இப்ப?'' - அவரது குரல் இப்போது வெறும் முணுமுணுப்பாய் மட்டுமே இருந்தது. ''நான் ரொம்ப டயர்டா இருக்கேன் ஹார்ரி.'' கண்களை மீண்டும் மூடிக்கொண்டார் அவர்.

கேன் எழுந்துகொள்ள மற்றொரு அறைக்கு அவரை இழுத்துப் போனார் ஷாஃப்ட்டோ. தனது தொப்பியை அங்கிருந்த கண்ணாடியில் பார்த்து சரி செய்து கொண்ட அவர், ''இதெல்லாம் என்னன்னு நினைக்கிறீங்க நீங்க?'' என்றார். ''உதாரணத்துக்கு அந்த க்ரே பொம்பிளை. எக்காலத்திலும் இருந்திராத ராட்சஸியா இருக்கணும் அவள்.''

''இப்ப பேசறோமே தவிர, நம்மில் யார் அதை கவனிச்சோம்?'' என கடுகடுப்பானார் ஷாஃப்ட்டோ. ''எத்தனை ஆபீஸர்கள்? எத்தனை ஆபீஸ்கள்? சிறுக்கி எல்லார் கண்லேயும் இல்ல மண்ணைத் தூவி இருக்கா?''

''ஓ கே சார்... இப்ப நாம என்ன பண்ணப் போறோம்?''

ஷாஃப்ட்டோ தன்னுடைய வாட்சைப் பார்த்தார். ''நாலே கால். ப்ரைம் மினிஸ்டர் நெருங்கிக்கிட்டிருக்கணும் என்பதையே இது காட்டுது. அவர் வரும் சாலை எதுன்னு நமக்குத் தெரியும். அவரை நோக்கி ஒரு ஜீப்புல நீங்க இப்ப கிளம்புவது நல்லதாக இருக்கும்னு எனக்கு தோணுது. இவ சொன்னதை வெச்சுப் பார்க்கும்போது வால்சிங்ஹாம் பகுதியின் இந்தப் பக்கத்துல நீங்க அவரைப் பிடிச்சுடலாம்.''

''ஒத்துக்கறேன் சார். குறைந்தபட்சம் அவருக்கு 100 சதவீத பாதுகாப்பையாவது நாம ஏற்படுத்திடலாம்.''

''எக்ஸாக்ட்லி.'' தனது டேபிளுக்கு முன்னால் உட்கார்ந்து கொண்ட ஷாஃப்ட்டோ தொலைபேசியை எடுத்தார். ''இப்ப கிளம்புங்க. கார்வேயை உங்கக் கூட வெச்சுக்கங்க.''

கதவினை கேன் திறந்தபோது ஷாஃப்ட்டோவின் புதுக் கட்டளையொன்று அவர் காதுகளில் கேட்டது: ''கிழக்கு ஏஞ்சிலியா மாகாணத்தின் கமாண்டிங் ஆபிஸரை என்னை வந்து பார்க்கச் சொல்லுங்க. தனியா. வேறு ஒருத்தரும் கூட இல்லாமல்.''

கதவு மூடப்பட்டதும் டெலிபோன் முகவரி புத்தகத்திலிருந்து தனது ஒற்றை விரலை எடுத்தார் ஷாஃப்ட்டோ. ஆபரேட்டரின் குரல் காதுகளில் கரகரத்தபோது ''உடனடியா கேப்டன் மெல்லோரியை இங்கே ஓடி வரச் சொல்லுங்க'' என்றார்.

அடுத்த 45-வது நொடியில் ஷாஃப்ட்டோ உடனிருந்தார் மெல்லோரி. ''கூப்பிட்டீங்களா, கர்னல் சார்?''

''ஆமாம். எனக்கு இன்னும் ஐந்து நிமிடங்கள்ல இங்கிருந்து கிளம்பிவிட வல்ல 40 வீரர்களின் தகவல்கள் வேணும். இதுக்கு எட்டு ஜீப்கள் போதும். சேர்த்துப் பிடிங்க அவங்களை, ஐந்து நிமிஷத்திலே.''

''வெரி வெல், சார்'' என்றவர் தயங்கினார். அவர் செய்யக் கூடாது என்ற ஒரு சட்டத்தை சற்று உடைத்தார். ''கர்னல் எதுக்காக இந்த ஏற்பாட்டை பண்றார்னு கேட்கலாமா?''

''வெல், இதுக்கு பதிலை நாம இப்படி வெச்சுப்பம். இன்னிக்கு நள்ளிரவு நீங்க நான் சொன்னதை முடிச்சாகணும்'' என்றவர் சொன்னார்: ''இல்லை - செத்தாகணும்.''

மெல்லோரி வெளியேறி விட்டார், நெஞ்சுக்குள் ரத்த ஓட்டம் அதிகமாய் பம்ப்படிக்க.

★ ★ ★

**அ**வர் வெளியேறிய மூன்று நிமிடங்களுக்குப் பிறகு ஜீப்புகள் அவற்றில் வீரர்களுடன் வரிசையாய் கொண்டு வந்து நிறுத்தப்பட்டு விட்டன. யூனிட்டின் மிக இளையவரான சால்மர்ஸ் என்பவருடன் பேசியபடி முன்னால் நின்றார் மெல்லோரி. அவர்கள் அட்டென்ஷனுக்கு ஆனார்கள். ஷாஃப்ட்டோ, சற்று நின்று பார்த்து விட்டு படிகளின் உச்சிக்குப் போய் நின்றார்.

''இதெல்லாம் என்ன கூத்துன்னு நீங்கள்லாம் குழம்பிக்கிட்டிருக்கீங்க. நான் விளக்கறேன். இங்கிருந்து எட்டு கல் தொலைவிலே ஸ்டட்லே கான்ஸ்டபிள்னு ஒரு கிராமம் இருக்கு. உங்க மேப்கள்ல இவ்விடம்

குறிப்பிடப்பட்டிருப்பதை நீங்களே கவனிக்கலாம். கிங்ஸ் லின்னுக்கு அருகிலிருக்கும் ராயல் விமானப்படை தளத்தினை சர்ச்சில் இன்னிக்கு வந்து பார்க்கிறார் எனும் சேதியை உங்கள்ல பலரும் கேள்விப்பட்டிருக்கணும். ஆனா இன்னிக்கு ராத்திரிபொழுதை அவர் ஸ்டட்லே க்ராஞ்சில் கழிக்கப் போகிறார் எனும் சேதிதான் உங்க எல்லாருக்கும் தெரியாத ஒன்று. இங்கேதான் இண்ட்ரஸ்டிங்கான கட்டம் ஆரம்பமாகுது. போலந்து தனியார் பாராசூட் நிறுவனத்தின் 16 பாராசூட் கொலைகார வீரர்கள் ஸ்டட்லே கான்ஸ்ட்பிள் வந்து தங்கியிருக்காங்க. சிகப்பு தொப்பியும் சீருடையும் அணிந்திருக்கும் அவங்களை வீரர்கள்னு நீங்க சுலபமா புரிஞ்சுக்கலாம். இந்தக் கட்டத்துல உங்களுக்கு சொல்ல நானொரு முக்கிய செய்தி வெச்சிருக்கேன். அவனுங்க அத்தனை பேரும் க்ரௌட்ஸ் - ஜெர்மானிய வீரர்கள். ஜெர்மன் பாராசூட் வீரர்கள். சர்ச்சில்லைக் கடத்த இங்கே வந்திருக்காங்க. நாம அவங்களை அப்படியே சுவற்றோடு சுவராய் ஆணியடிச்சு தொங்க விடப்போறோம்.'' அங்கு நிலவிய அமைதி, முழுமையானது. ஆமோதிப்பாய் தலையசைத்தார் ஷாஃப்ட்டோ. ''ஒண்ணு சொல்லிக்க விரும்புகிறேன், வீரர்களே. சொல்லி அடிங்க. உங்க பேரும் புகழும் நாளை முதல் விண் தொடும்.''

அங்கு நடவடிக்கைகளுக்கு உயிர்ப்பு பிறந்தது. மோட்டார் இன்ஜின்கள் அனைத்தும் ஒரு சேர உறுமின. படிகளிறங்கிய ஷாஃப்ட்டோ, மெல்லோரியிடம் பேசினார். ''போகும் வழியிலேயே கொடுக்கப்பட்டுள்ள மேப்பை எல்லாரும் ஒரு தடவை கவனமா பார்க்கணும்... இதை நீங்க உறுதி செஞ்சுடுங்க. அங்கே போய்ட்ட பிறகு விளக்குவதெல்லாம் ஆகாது. அவகாசம் இருக்காது.'' மெல்லோரி விரைந்தார். ஷாஃப்ட்டோ, சால்மர்ஸ்

பக்கமாய் திரும்பினார்: "மேஜர் கேன் திரும்பும்வரை இப்பகுதியை கட்டுக்குள் வெச்சுக்கப்பா." அவரை தோளில் தட்டிக் கொடுத்தார். "ரொம்ப விரக்தியா ஆகக்கூடாது. மிஸ்டர் சர்ச்சிலை அவர் தன்னுடன் அழைச்சுக்கிட்டு வந்துடுவார். அவருக்குத் தேவையான வசதிகள் கிடைப்பதை நீ உறுதி செய்யணும்." முன்னால் இருந்த ஜீப்பில் தாவி ஏறினார் அவர். டிரைவருக்கு ஒப்புதல் தந்தார். "ஓ கே சன்... நாம வெளியே போவோம்."

அவர்கள் உறுமலாய் கிளம்பினார்கள். முன் கேட் அகண்டு திறந்தது. சாலையில் திரும்பினார்கள். நூறு கெஜ தூரம் போல பிரயாணித்த பிறகு ஷாஃப்ட்டோ தனது டிரைவரிடம் அருகிலிருக்கும் டெலிபோன் கம்பம் அருகே கொண்டு போய் நிறுத்தும்படி சொன்னார். குஷன் சீட்டிலிருந்து ஜெனரல் ஹஸ்ட்லர் நோக்கி திரும்பினார். "அந்த கன்னை என்கிட்டே குடுங்க."

ஹஸ்ட்லர் கொடுத்தார். ஷாஃப்ட்டோ அதன் குண்டினை தயாராக்கினார். குறி வைத்தார். பிறகு கம்பத்தின் உச்சி நோக்கி சுட்டார். அங்கிருந்த இணைப்புகளை பஸ்மமாக்கினார். அறுந்த டெலிபோன் ஒயர்கள் காற்றில் வேகமாய் ஆடின.

ஷாஃப்ட்டோ துப்பாக்கியை மீண்டும் ஹஸ்ட்லரிடமே தந்தார். "கொஞ்ச நேரத்துக்கு தேவையற்ற போன் கால்கள் வருவதை தடுக்க இது போதும்னு நினைக்கிறேன்." வாகனத்தின் கதவினை ஒருமுறை அடித்தார். "ஓ கே, லெட்ஸ் கோ, லெட்ஸ் கோ, லெட்ஸ் கோ!"

துர்ஆத்மா பிடித்த ஒருவரின் வேகத்தில் ஜீப்பை விரட்டினார் கார்வே. குறுகிய சாலையில், நேரில் ஏதாவது வந்தால் உடனடியாய் அது ஓரங்கட்டிவிடும் வேகத்தில்

பறந்தார். இத்தனையிருந்தும் தங்களுடைய இலக்கினை அவர்கள் ஜஸ்ட் தவற விட்டார்கள். வால்சிங்ஹாம் சாலையில் போய்க் கொண்டிருந்த பிரதம மந்திரியின் சிறு ஊர்வலத்தை அடைவதற்கு முன்பே, அதன் கடைசி ஊர்தி அச்சாலையைக் கடந்து கொண்டிருந்தது. மோட்டார் சைக்கிளில் இரு போலீஸ்காரர்கள் பாதையின் முன்னால் வழிநடத்திச் சென்றார்கள். இரண்டு கார்கள். அவற்றுக்கு பின்னால் மற்றும் இரு மோட்டார் சைக்கிள்கள்.

''அது, அவர்!'' - கத்தினார் கேன்.

ஜீப் மெயின் ரோடுக்குள் வழுக்கியது. பிரதம மந்திரியின் மேற்குறிப்பிட்ட ஊர்வலத்துடன் அவர்களால் ஓரிரு நிமிடங்களில் சேர்ந்துவிட முடிந்தது. அவர்களுடைய வாகனங்கள் பின்னால் ஓசையுடன் நெருங்கும்போது, ஊர்வலத்தின் பின்னால் இருந்த இரு மோட்டார் சைக்கிள் பாதுகாவலர்களும் தங்களது தோள்களின் வழியே திரும்பிப் பார்த்தார்கள். ஒருவர், பின்னால் வருபவர்களை தள்ளி நிற்கும்படி சைகை காட்டினார்.

கேன் கட்டளையிட்டார். ''சர்ஜெண்ட்.... வேகத்தைக் கூட்டி அவங்களுக்கு முன்னால போகப் பாருங்க. ஓவர்-டேக் பண்ணி நிறுத்த முயற்சி செய்யுங்க. அது முடியலேனா, நடுவில் செல்லும் கார்களுக்கு மத்தியில் நீங்கள் நுழைந்துவிட முழு அதிகாரத்தையும் நான் உங்களுக்கு தரேன். கம் ஆன்.''

சொன்னபடி மோட்டார் சைக்கிள்களுக்கு வலப்புறமாய் ஜீப்பை வளைத்து முன்னேறினார். இப்படியே காருக்கு அருகில் வந்து விட்டார்கள். பின்சீட்டில் இருப்பவர்களை போதுமான அளவுக்கு கேனால் பார்க்க முடியவில்லை. பாதுகாப்பு கருதி அக்காரின் ஜன்னல்கள் போதுமான அளவுக்கு திரைச்சீலைகளால் மூடி மறைக்கப்பட்டிருந்தன.

யூனிபார்மில் இருந்த காரின் டிரைவர் பயக்கலவரத்துடன் பக்கவாட்டில் பார்த்துக் கொண்டான். அவனருகில் உட்கார்ந்திருந்த பிரயாணி துரிதமாய் தனது ரிவால்வரை எடுத்துக் கொண்டிருந்தான்.

"முன்னால போற காரைப் பிடிங்க."

கேனின் கட்டளைக்கிணங்க ஹார்னை பிரமாதமாய் அடித்து அலற விட்டபடி முன்காருக்கு சென்றார் சர்ஜெண்ட்.

அதில் நான்கு ஆடவர்கள் இருந்தார்கள். இரண்டு பேர் ராணுவ சீருடையில் இருந்த கர்னல்கள். மூன்றாமவர் கலவரமாகி திரும்பி வெளியே பார்க்க, அது சர் ஹென்றி வில்லோக்பீ என்று உடனே கவனித்துவிட்டார் ஹார்ரி கேன். உடனடியாய் இருவரும் அடையாளம் கண்டுக் கொண்டார்கள். "ஓ கே, இப்ப முன்னாடி கொண்டு போய் வழியை மறிச்சு நிறுத்திடுங்க. அவங்களும் இப்ப நிறுத்துவாங்கன்னு நினைக்கிறேன்."

சிறு ஊர்வலத்தின் முன்னால் பாதுகாப்புக்காக மோட்டார் பைக்கில் இருந்த இரு ராணுவ வீரர்களுக்கும் முன்னால் போகுமாறு வேகத்தைக் கூட்டினார் சர்ஜெண்ட் கார்வே. அப்போது பின்பக்கத்திலிருந்து சரியான இடைவெளி விட்டு மும்முறை ஹார்ன் ஒலித்தது. இது அவர்களுக்குள் ஆபத்தில் தரப்படும் சமிக்ஞை. கேன் திரும்பிப் பார்த்தபோது அவ்வூர்வலம் அப்படியே ஓரங்கட்டியது தெரிந்தது. கார்வே ப்ரேக் போட துள்ளிக் குதித்த ஹார்ரி கேன் திரும்பி பின்பக்கமாய் ஓடினார்.

காரிலிருந்து இறங்கிய ப்ரைம் மினிஸ்டரின் செகரட்டரியும், முன்னால் இருந்த பைக் வீரன் ஒருவரும் தத்தமது துப்பாக்கிகளை ஏந்தியிருந்தார்கள்.

உள்நாட்டுப் பாதுகாப்பு சீருடையிலிருந்த சர் ஹென்றி இப்போது துரிதமாய் இறங்கினார். முன் வந்தார். "மேஜர் கேன்" என்றார் கலவர மிகுதியாய். "இங்கே நீங்க என்னத்தைப் பண்ணிக்கிட்டிருக்கீங்க?"

பணியில் இருந்த கலோனல் வெட்டு ஒன்று துண்டு ரெண்டாய் பேசினார்: "என்பேர் கார்கோரன். கிழக்கு ஏஞ்சலியா மகாணாத்தின் உளவுத்துறை அதிகாரி. நீங்க யார்னு தயவுசெய்து சொல்ல முடியுமா, சார்?"

"ப்ரைம் மினிஸ்டர் இப்ப ஸ்டட்லே க்ராஞ்சுக்குப் போகக்கூடாது" என்றார் கேன். "அந்தக் கிராமமே இப்ப ஜெர்மானிய பாராசூட் கொலைவீரர்களால் கையகப்படுத்தப்பட்டிருக்கு. மேலும்..."

"அடக் கடவுளே" என இடைமறித்தார் சர் ஹென்றி. "இப்படிப்பட்ட முட்டாள்தனமான புரளிகளையெல்லாம் நான் இதுவரை கனவுலகூட கேட்டது கிடையாது..."

அவரை அமைதியாய் வாயைப் பொத்திக் கொள்ளுமாறு சைகையில் உணர்த்தினார் கார்கோரன். "உங்களுடைய இந்த வாதத்துக்கு வலு சேர்க்க முடியுமா, மேஜர்?"

"கடவுளே... நம்புங்க இதை" - கத்தினார் கேன்.

"ஸ்கார்ஸ்னியைக் குதிக்க விட்டு முசோலினியைக் கைப்பற்றியதைப் போல செய்வதற்காக இவனுங்க இப்ப இங்கே முகாமிட்டிருக்காங்க என்பதை, உங்களால சட்டுனு விளங்கிக்க முடியாதா? வேற என்னத்தை சொல்லி உங்களை நாங்க நம்ப வைப்பது? யாராவது நான் சொல்வதற்கு செவி சாய்க்கக் கூடாதா? ப்ளீஸ், இது அர்ஜெண்ட்..."

பின்னாலிருந்து ஒரு குரல், இவருக்கு மிகவும் பழக்கப்பட்ட ஒரு குரல், "நான் கேட்பேன், யங் மேன். உன் கதையை என்னிடம் சொல்லு" என்றது.

*மெதுவாய் திரும்பினார் ஹாரர்ரி கேன். காரின் பின்பக்கத்து ஜன்னல் நோக்கி நன்றாய் குனிந்து உள்ளே பார்த்தார். முடிவில், அந்த மாபெரும் மனிதனுடன், நேருக்கு நேர் நிற்கின்றார்.*

★ ★ ★

**ஹா**ப்ஸ் எண்ட் காட்டேஜின் கதவினை திறக்க தள்ளினார் ஸ்டைனர். ஆனால் அது தாளிடப்பட்டிருந்தது. கிடங்கு வரை போய் பார்த்தார். அங்கும் அந்த ஐரீஷ்காரனின் சலனங்கள் தென்படவில்லை. அப்போது ப்ரிகெல் கத்தினார்: "சார்... அவர் வரார்."

குறுகலான பாதையில் தன்னுடைய பைக்கினை ஓட்டிக்கொண்டு வந்தார் டெவ்லின். அதனை அதற்கான இடத்தில் நிறுத்தி ஆஃப் பண்ணிவிட்டு வந்தார்.

அவரை கையோடு தனியாய் இழுத்துக் கொண்டு போன ஸ்டைனர் சின்னச் சின்ன வாக்கியங்களில் நிலைமையின் தீவிரத்தை சொல்லி முடித்தார். முடிக்கும்போது "நீங்க என்ன நினைக்கிறீங்க?" என்றார்.

"உங்க தாயார் ஐரீஷ் கிடையாது என்பதுல நிச்சயமா இருக்கீங்களா?"

"அவங்க மதர் ஒரு ஐரீஷ்."

டெவ்லின் ஆமோதிப்பாய் தலையசைத்தார். "எனக்கு தெரிஞ்சிருக்கலாம். ஆனாலும், என்ன ஏதுனு யாருக்கு தெரியும்?"

அப்போது ஜீப்புக்குள் குதித்தேறியிருந்தார் ஸ்டைனர். "நான் உங்களுடன் தொடர்புல இருப்பேன்."

சாலையின் அடுத்த மருங்கில் விளிம்பில் குதிரையுடன் நின்று கொண்டிருந்த மோலி சாவி கொண்டு முன்கதவினை திறக்கும் டெவ்லினையே பார்த்துக் கொண்டிருந்தாள். இன்னமும்கூட, தான்தான் அவரை தப்பாக புரிந்துக்

கொண்டிருக்கிறோம் என்று ஒரு நிராதரவான எண்ணத்தில் அவரிடம் ஓடிப்போயிருப்பாள் அவள் - ஆனால் ஸ்டைனரும் ஜீப்பிலிருந்த மற்ற இருவரும் உண்மை எதுவென்பதை அங்கு அவளுக்கு தெள்ளத்தெளிவாக காட்டிக் கொண்டிருந்தார்கள்.

ஸ்டட்லே கான்ஸ்டபிளுக்கு அரை மைல் தூரம் முன்னாடியே தனது படையினரை நிற்கச்செய்த ஷாஃப்ட்டோ அவர்களுக்கு கட்டளைகளை இட ஆரம்பித்தார்: ''முட்டாள்தனமான இயக்கத்துக்கெல்லாம் இப்ப அவகாசமே கிடையாது. அவங்களை நாம தாக்கியாகணும். கடுமையாக - என்ன நடக்குதுனு அவங்க பிரித்தறிஞ்சு கொள்வதற்கு முன்னாடியே. கேப்டன் மெல்லோரி... நீங்க மூன்று ஜீப்புகளையும் பதினைந்து வீரர்களையும் எடுத்துக்கங்க. மேப்ல குறித்துக் கொடுக்கப்பட்டிருக்கிற வயல் வழியா கிராமத்தின் கிழக்குப் பகுதியைக் கடந்துடுங்க. வாட்டர்மில்லின் வடக்குப் பகுதியில் வரும் வரை போங்க. அந்தப் பகுதியை அப்படியே வளைச்சு வெச்சுக்கங்க. சர்ஜெண்ட் ஹஸ்ட்லர்... இது உங்களுக்கு. கிராமத்தின் எல்லையை நாம தொட்ட கணத்துல, நீங்க ஒரு டஸன் ஆட்களுடன் கழண்டுக்கிறீங்க. மரக்காட்டு வழியா கால்நடையாகவே சர்ச்சை அடையறீங்க. மீதி வீரர்கள் என்னுடனே தங்கிடணும். அந்த க்ரே பெண்ணுடைய வீட்டுக்கான சாலையை நாம கவனிச்சுக்கறோம்.''

மெல்லோரி ஆமோதிப்பாய் தலையசைத்தார்.

''எல்லாரும் அவங்கவங்க நிலையிலே நிலையானதும் நான் டெலிபோன்ல தகவல் அனுப்புவேன்... போறோம், விசயத்தை வேகமா முடிக்கறோம்.''

அங்கு அமைதி நிலவியது. சர்ஜெண்ட் ஹஸ்ட்லர்தான் அதனை உடைத்தார். "கர்னல்... சொல்வதற்கு மன்னிக்கணும். தாங்கள் சொன்ன ஆர்டர்ல ஒரு மாற்றத்தை ஆலோசிக்கலாமா?'' சொன்ன பிறகு அவர் சிரிக்க முயற்சித்தார். ''அதாவது, நமக்கு கிடைத்துள்ள தகவல்களின்படி, க்ரௌட் எனும் இந்த ஜெர்மானிய பாராசூட் வீரர்கள் நிஜத்துல இங்கிலாந்துக்காரர்கள் இல்லை போலிருக்கே?''

"ஏய், ஹஸ்ட்லர்'' என்று கத்தி அழைத்தார் ஷாஃப்ட்டோ. ''இனி என்னுடைய ஆணைகள் எதையாவது நீ இப்படி குறுக்கு விசாரணை பண்ணினேனு வெச்சுக்க, மகனே உன் பேரே நினைவில்லாதபடி பண்ணிடுவேன். நான்சென்ஸ்.'' அவருடைய கன்னங்களில் பற்கள் கடுமையாய் எழுந்து அமர்ந்தன. நெற்றிப் பொட்டுகளில் ஆக்ரோஷ நரம்புகள் முடிச்சிட்டன. ''இங்கே வேற எவனுக்காவது கேள்வி கேட்க துணிச்சல் இருக்கா?''

''நாங்கள்லாம் உங்க பின்னாடியே சார்'' என்றார் மெல்லோரி.

''அது நல்லது உங்களுக்கு'' என்றார் ஷாஃப்ட்டோ. ''ஓ.கே. இப்ப நான் அங்கே கிளம்பறேன். வெள்ளைக் கொடியோடு.''

''அதாவது, அவங்களை சரணடைய வைக்கப் போறீங்களா, சார்?''

''சரண்? நான் சொல்லும்போது எல்லாரும் அட்டென்ஷன்ல நின்னு கேட்கணும். அவ்ளோதான். கவனிங்க... நான் அந்த ஒதுக்குப்புறத்துல நுழைஞ்சுட்டப் பிறகு உங்களுக்கு பத்து நிமிஷந்தான் அவகாசம் இருக்கும். ஸோ, நாம இயங்க ஆரம்பிப்போம்.''

★ ★ ★

டெவ்லின் பசியில் இருந்தார். சூப்பைக் கொஞ்சமாய் சுடவைத்தார். வேக வைத்த இரண்டு முட்டைகளையும் வறுத்த ரொட்டிகளுக்கு இடையில் வைத்து ஸாண்டவிச் பண்ணிக் கொண்டார். கணப்புக்கு அருகில் உட்கார்ந்து கொண்டு அதனை அவர் சாப்பிட ஆரம்பித்தபோது குளிர்க்காற்று அவருடைய முகத்தை திடீரென்று வருடிச் சென்றது. வாசற்கதவு திறக்கப்பட்டால்தான் இப்படி காற்றடிக்கும். திரும்பிப் பார்த்தார். கதவு திறந்திருந்தது மோலி வந்திருந்தாள்.

''ஏய், வந்துட்டியா?'' என்றார் உற்சாகமாய். ''உன்னை பார்க்க வர்றதுக்கு முன்னாடி சாப்பிடலாமேனு பார்த்தேன்.'' கையிலிருந்த பதார்த்தத்தைத் தூக்கிக் காட்டினார்.

''சீ, நாயே!'' என்றாள் அவள். ''அநாகரீகமானவன் நீ. உன் ஆசைக்கு என்னை பயன்படுத்தியிருக்கே.''

அவர் மீது சீறிப்பாய்ந்தாள். கைவிரல்களால் அவருடைய முகத்தை அப்படியே பிசைந்தாள். அவளது கையைப் பிடித்து விலக்கி அவளை கட்டுப்படுத்த முயற்சித்தார் டெவ்லின். ''என்ன ஆச்சு?'' - கறாராய்க் கேட்டார். கேட்டபோதிலும், இதற்கான காரணமெல்லாம் அவரது நெஞ்சுக்கும் தெரியும்.

''எனக்கு எல்லாம் தெரியும். கார்ட்டர் கிடையாது அவரோட பேர். ஸ்டைனர் அது. அவரும், அவரோட ஆட்களும் ஜெர்மானியர்கள். சர்ச்சிலைக் கடத்த வந்திருக்காங்க. உன் பேர் என்ன, சொல்லு? டெவ்லின் கிடையாது. இது எனக்கு தெரியும்.''

தன்னிடமிருந்து அவளைத் தள்ளினார். எழுந்து போய் ஒரு கோப்பை மதுரஸம் ஊற்றிக் கொண்டார். ''நோ, மோலி'' என்று ஒப்புக்கொண்டார். ''அது கிடையாது.''

தொடர்ந்தார்: ''எங்களுடைய திட்டத்தில் நீ ஒரு பகுதியா கிடையவே கிடையாது, மை லவ். ஆனா அப்படி ஆகிடுச்சு.''

''சீ நம்பிக்கைத் துரோகி! அமெரிக்கன் இல்லை...''

''மோலி நான் ஐரீஷ்க்காரன். நாம ரெண்டு பேரும் ஆங்கிலம் பேசும் ஒரே காரணத்துக்காக ஒரே நாட்டை சேர்ந்தவங்க கிடையாது. ஆங்கில உச்சரிப்பு ரெண்டு பேருக்கும் இடையே அதிக வித்தியாசமாக இருக்கே, அதை பார்த்தாவது விளங்கிக்கிட்டிருக்கக்கூடாதா? எப்பத்தான் நீங்கள்லாம் திருந்தப் போறீங்களோ?''

இப்போது அவளுடைய கண்களில் ஒரு நிச்சயமற்ற தன்மை விளைந்தது. இருந்தாலும் தொடர்ந்தாள்: ''நம்பிக்கைத் துரோகி!'' தற்போது எப்படியாவது அவரை மோலி காயப்படுத்த வேண்டும். அதற்கான ஆயுதமும் அவளிடமிருந்தது. அதை பிரயோகித்தாள்: ''வெல்... உங்க நண்பர் ஸ்டைனர் இதோ இப்ப காலியாகப் போறார். இப்பவோ, அடுத்த நிமிடத்திலோ! அதுக்கப்புறம் நீங்கதான்.''

''என்ன பேசறே நீ?''

''வெரேக்ரையும் ஜார்ஜையும் அந்த ஸ்டைனர் சர்ச்சுக்குக் கூட்டிட்டு வந்தபோது நானும் பமீலாவும் அங்கேதான் இருந்தோம். நானும் அவங்களும், அந்த ரெண்டு ஆம்பிளைங்களும் பேசிக்கிட்டதை முழுக்கக் கேட்டோம். மெல்த்தாம் வரைக்கும் போயிருக்காங்க அவங்க - ரேஞ்ஜர்ஸைக் கூட்டிவர.''

அவளை அப்படியே கையோடு இழுத்து இறுக்கினார். ''எத்தனை நேரத்துக்கு முன்னாடி நடந்தது இது?''

''தெரியாது. எக்கேடு கெட்டுப்போ!''

''சொல்லுடீனா'' - அவளை அதிரடியாய் குலுக்கினார்.

''இப்ப அவங்கள்லாம் அங்கே போயிருப்பாங்கனு சொல்வேன். இன்னும் கொஞ்ச நேரத்துல குண்டோசையை நீங்க கேட்கலாம். எனவே ஓடிடுங்க. அவ்ளோதான். அதிர்ஷ்டமிருந்தால் தப்பிக்கலாம்.''

அவளை விடுவித்தவர், ''நிச்சயமா நீ சொல்வதுதான் சரியான தீர்வு...'' என்றார். ''ஆனா நான் அப்படி ஓடும் வகை கிடையாது.''

தனது உடைகளை உடனடியாய் களைந்து மாற்றிக் கொண்டார் டெவ்லின். துப்பாக்கியை எடுத்தார்.

மோலி கேட்டாள்: ''நீங்க என்ன பண்ணப் போறீங்க, இப்ப?''

''மரணம் எனும் பள்ளத்தாக்குக்குப் போறேன், மோலி, மை லவ்.'' சொல்லிவிட்டுக் கேட்டார்: ''நான் என்ன அப்படியே தப்பிச்சு ஓடிட்டு ஸ்டைனரை அகப்பட வெப்பேன்னா நீ நினைச்சே?'' மறுப்பாய் தலையசைத்தார். ''என்ன பொண்ணு நீ! என்னை பற்றி தெரிஞ்சு வெச்சிருப்பேன்னுல்ல நினைச்சேன்...''

''அங்கே நீங்க போக முடியாது'' - அவளுடைய குரலில் தற்போது கிலி வந்திருந்தது. ''லியாம்... இதுல போய் நீங்க விஷப்பரீட்சை செய்யக்கூடாது.'' அவருடைய கையை பற்றியிழுத்துக் கொண்டாள். ''ப்ளீஸ், மை லவ்.''

''ஓ, ஆனா நான் போயாகணும், என் கண்ணே.'' அவளது இதழ்களில் மிருதுவாய் முத்தமிட்டு விட்டு அவளை ஓர் ஓரமாய் விட்டார் டெவ்லின். கதவருகே போனதும் திரும்பினார். ''நான் ஒரு கடிதம் எழுதியிருக்கேன். அதிகம் கிடையாது. சின்னது. உனக்கு இண்ட்ரஸ்ட் இருந்தால் படி. அது, அதோ அந்த ஷெல்ஃப்ல இருக்கு.''

வெளியேறியவருக்குப் பின்னால் கதவு மூடி அடைக்கப்பட்டது. மோலி அங்கு சிலையென உறைந்து போய் நின்றாள். எங்கோ வேற்றுலகத்தில் ஓர் இன்ஜின் உசுப்பப்பட்டு - பறந்துப் போய்விட்டது.

கடிதத்தைக் கண்டெடுத்தாள். நடுக்கமாய் பிரித்தாள். "மோலி. என்னுடைய ஒரே உண்மைக் காதலியே. நான் என்னுள் முழுக்கவும் மாறிப்போனேன். யெஸ். நான் இங்கு நார்ஃபால்க்குக்கு வேறு ஒரு வேலையாகத்தான் வந்தேனே ஒழிய அழகு குறைந்த ஒரு பெண்ணிடம் என் வாழ்க்கையின் முதலும் கடைசியுமான காதலில் விழுவதற்காக அல்ல. ஆனால் அப்படித்தான் ஆகிவிட்டது. இப்போது என்னுடைய அழுக்கான மறுபக்கம் உனக்கு தெரிந்திருக்கும். ஆனால் நீ அதை எண்ணிக் கொண்டிருக்காதே. உன்னை விட்டுப் பிரிந்துப் போவதே எனக்கு கிடைத்துள்ள மாபெரும் ஆறாத தண்டனை. அப்படியே விட்டு விடுவோம். லியாம்."

அவளது விழிகளில் கண்ணீர் பெருகியதால் வார்த்தைகள் சரியாகத் தெரியவில்லை. கடிதத்தைத் தனது பாக்கெட்டுக்குள் திணித்துக் கொண்டாள். தடுமாறி வெளியேறினாள். வயல்வெளி வழியாக குறுக்குவழியை தேர்ந்தெடுத்துக் கொண்டு குதிரை வண்டியில் கிராமத்துக்குக் கிளம்பினாள்.

★ ★ ★

**தி**ருப்பத்தில் வந்ததும் ஷாஃப்ட்டோ குழுவில் ஆரம்பத்திலிருந்த ஜீப்பின் இன்ஜினோசை கேட்க ஆரம்பித்தது. அதனுள் நான்கு வீரர்கள் இருந்தார்கள். பின்னாலிருந்த இருவர் நின்றுக்கொண்டு மெஷின்-கன்னைப் பிடித்துக் கொண்டிருந்தார்கள். ஜோன்னா க்ரேயின் காட்டேஜுக்கு அருகிலிருக்கும் தோட்டத்தை

அவர்கள் கடந்தபோது டின்டரும் பெர்க்கும் ஒருசேர எழுந்து நின்று விட்டார்கள். டின்டர் தனது தோளில் ஒரு பவர்ஃபுல் மெஷின் கன்னைப் பொருத்த அதை சுடுவதை பெர்க் மேற்கொண்டார். ஒரு நீண்ட குண்டுச்சுடுதலை மேற்கொண்டார்கள். ஜீப் கவிழ்ந்து உருண்டது. ஓடையில் தலைகீழாய் விழுந்து நின்றுபோனது.

மேலும் ஒருசுற்று குண்டு வெடிப்பினை இவர்கள் மேற்கொண்டு உள்ளே வந்தவர்களை சுருண்டு விழச்செய்தார்கள். இம்மாதிரிச் சந்தர்ப்பங்களின்போது எத்தனை வேகமாய் தாக்குதல் நடத்த முடியுமோ அப்படி செய்து தகர்த்துவிட வேண்டும். பிறகு துரிதமாய் ஓடிவிட வேண்டும். இதனை தெரிந்திருந்த டின்டரும் பெர்க்கும் அங்கிருந்த துருவேறிய ஒரு கேட்டின் வழியாய் வெளியேறி தபால் அலுவலகத்துக்கான பாதையில் ஓடினார்கள்.

இதையெல்லாம் சாலையின் மறுபக்கத்துக் காட்டுப் பகுதியிலிருந்து பார்த்துக் கொண்டிருந்த ஷாஃப்ட்டோவின் பற்கள் நரநரத்தன. பழியுணர்வு கூடியது. அருகிலிருந்த சர்ஜெனிடம் ''சீக்கிரமா தோட்டத்துக்கு ஓடுங்க. அங்கே அவனுங்க மெஷின்-கன்னை விட்டுட்டுப் போயிருக்காங்க. அதை இந்த மூணு வீரர்களுடன் போய் நீங்க கவனிச்சுக்கங்க.''

பின்னால் காத்துக்கொண்டிருந்த க்ருகௌஸ்க்கி துவண்டு போனார். ஐந்து நிமிடங்களுக்கு முன்னால் நாங்கள் பதின்மூன்று பேர். இப்போது அது ஒன்பது. என்ன நினைச்சுக்கிட்டு இப்ப இவர் இப்படியொரு கட்டளையை போடறார்?

கிராமத்தின் மறுபக்கத்திலிருந்து கடும் துப்பாக்கிச்சூடு இடம்பெற்றது. நிமிர்ந்து பார்த்தார் ஷாஃப்ட்டோ. ஆனால் அதிகமாய் ஒன்றும் தெரியவில்லை. ப்ரிட்ஜைத் தாண்டி வளைந்த பாதையும், கடைசியிலிருந்த வீடுகளுக்குப்

பின்னாலிருந்த மில்லின் மேற்பகுதியும் மட்டுமே தெரிந்தன. அவர் ஒரு சொடுக்குப்போட தன்னிடமிருந்த தொலை பேசியை கொடுத்தார் க்ருகௌஸ்க்கி.

மெல்லோரி உடனடியாய் பதிலளித்தார்: ''யெஸ், கர்னல்?''

''இங்கே என்னய்யா நடந்துக்கிட்டிருக்கு? நீங்க அங்கே தயாராக இருப்பீங்கன்னுல்ல நான் நினைச்சுக்கிட்டிருக்கேன்...''

''மில்லின் முதல்தளத்திலே அவங்க ஸ்ட்ராங்கா நிலை கொண்டிருக்காங்க. ஒரு சுற்று துப்பாக்கிச்சூடுக்கு கட்டளை கொடுக்கப்பட்டிருக்குனு நினைக்கிறேன். முதல் ஜீப்பை அவங்க தகர்த்துட்டாங்க. அது இப்ப சாலையை மறிச்சுக்கிட்டு விழுந்து கிடக்கு. நான் ஏற்கெனவே நாலு வீரர்களை இழந்துட்டேன்.''

''அப்ப மேலும் இன்னும் கொஞ்சம் பேரை இழந்துடு, எழவுப் புடிச்சவனே'' - போனில் கத்தினார் ஷாஃப்ட்டோ. ''அந்த ஸ்தலத்துக்குப் போங்க மெல்லோரி. எரிங்க அவனுங்களை.''

துப்பாக்கிச் சூடு தீவிரமாய் இருந்தபடியால் இன்னொரு குழுவினரை முயற்சித்தார் ஷாஃப்ட்டோ.

''கர்னல், இது ஹஸ்ட்லர்.'' அவரது குரல் திராணியற்று ஒலித்தது.

''குன்றேறி, சர்ச்சுக்கு நீங்க இப்ப போயிருக்கணும்னு நான் எதிர்பார்த்தேன்.''

''கஷ்டமாயிருக்கு, கர்னல். நீங்க சொன்னதைப் போலவேதான் முன்னேறினோம். ஆனா மாட்டிக்கிட்டோம். மரக்காட்டின் தெற்குப்பக்கத்தை இப்ப நெருங்கிக் கிட்டிருக்கோம்.''

''வெல்... சீக்கிரம்.''

போனை மறுபடியும் க்ருகௌஸ்க்கியிடமே தந்துவிட்டார். "ஜீஸஸ்!" என்று குறிப்பிட்டார் கசப்பாய் "இனி யாரையும் நம்பி இருக்க முடியாது. ராத்திரி ஆகிடுச்சுன்னா, எது செய்தால் நல்லதுனு எனக்குப்படுதோ அதை நானே இறங்கிப் பண்ணியாகணும்."

சர்ஜெண்ட் தாமஸ் தன்னுடன் கூட்டிச் சென்றிருந்த மூன்று பேருடன் திரும்பியிருந்தார். "சொல்வதற்கு ஒன்றுமில்லை, கர்னல்" என்றார் அவர்.

"அப்படினா என்ன சொல்ல வரீங்க?"

"யாரும் அங்கே இல்லே, சார். ஜஸ்ட் இவைதான்." கைநிறைய சில குண்டுகளை காட்டினார் அவர்.

நீட்டப்பட்ட கையை ஷாஃப்ட்டோ வேகமாய் தட்டிவிட, அக்குண்டுகள் பூமியில் விழுந்து சிதறின. "ஓ கே. எனக்கு இப்ப ரெண்டு ஜீப்புகளும் முன்னால வரணும். ஒவ்வொரு மெஷின் கன்னுக்கும் தலா ரெண்டு பேர். சுடணும். ஒரு புல் தலை தூக்கக்கூடாது."

"ஆனா, கர்னல்..." - தாமஸ் துவங்கினார்.

"நாலு பேரை எடுத்துக்கங்க. காட்டேஜுக்குப் பின்பக்கமா வழி உண்டு பண்ணிக்கிட்டுப் போங்க. ப்ரிட்ஜ்கிட்டேயிருக்கும் தபால் அலுவலகத்தைப் பின்புறத்திலிருந்து நொறுக்கிடுங்க. க்ருகௌஸ்க்கி என்கூட தங்கட்டும்." ஜீப்பின் முன் பேனட்டில் தனது கையை ஓங்கி இறக்கினார். "கிளம்புங்கங்கறேன்!"

★ ★ ★

**வா**ல்ட்டர், மேயர் மற்றும் ரைடல் ஆகியோரை மில்லில் தன்னுடன் வைத்திருந்தார் ஒட்டோ ப்ராண்டிட். ராணுவ அடிப்படையில் பார்க்கும்போது அது ஒரு சரியான இடமாகத்தான் இருந்தது: பழங்காலத்திய சுவர்கள்

கிட்டத்தட்ட மூன்றடி தடிமனுக்கு அமைக்கப்பட்டிருந்தன. கீழே ஓக் மரத்தாலான தளமாய் இருந்தது. அங்கு ஒரு துப்பாக்கியை நிலை நிறுத்தியிருந்தார் ப்ராண்டிட்.

கீழே அடியில், சாலையை மறித்துக் கொண்டு ஒரு ஜீப் அணையாது எரிந்து கொண்டிருந்தது. ஒரு நபர் இன்னும் அதனுள்ளே இருந்தார். இருவர் வெளியில் சுருண்டிருந்தனர். சாலையில் சிறு பாலத்துக்குப் பின்னாலிருந்த அமெரிக்கர்கள் குண்டுகளை மழைபோல கொட்டினாலும், சுவர்களின் தடிமனான அமைப்பினால் அவற்றால் எந்த சேதத்தையும் உண்டு பண்ண முடியவில்லை.

''அங்கே யார் இன்சார்ஜ்னு எனக்குத் தெரியல... ஆனா அவனுக்கு ஒரு மண்ணும் தெரியலனு சொல்வேன்.'' தன் துப்பாக்கிக்குள் மீண்டும் ரவையை நிரப்பிக்கொண்டு குறிப்பிட்டார் வால்ட்டர்.

''வெல், நீங்க அங்கே இருந்திருந்தால் என்ன பண்ணியிருப்பீங்க?'' - ப்ராண்டிட் அவரிடம் கேட்டார்.

''அங்கே ஒரு ஓடை இருக்கு இல்லையா? அந்த திசையைக் காட்டும் ஜன்னல்கள் ஏதும் கிடையாது. பேசாம அந்த பின்பக்கத்து வழியா நுழைய வேண்டியதுதானே...''

ப்ராண்டிட் கையை தூக்கினார். ''எல்லாரும் சுடுவதை நிறுத்துங்க.''

''ஏன்?'' - வால்ட்டர் கறாராய் கேட்டார்.

''ஏன் என்பதை அவங்களும் கவனிக்கல... நீங்களும் கவனிக்கல.''

அங்கு மரண அமைதி நிலவ, ப்ராண்டிட் மிருதுவாய் சொன்னார்: ''நர்ன் நினைப்பது சரியானு ரியலா எனக்கே விளங்கல. ஆனா, தயாராகுங்க.''

ஒரு சில கணங்களில், போர் முழக்கத்தோடு, மெல்லோரியும் எட்டு-ஒன்பது நபர்களும் டெண்ட்டிலிருந்து வெளியேறி அடுத்த பள்ளத்துக்கு ஓடினார்கள். இடுப்பு வழியாய் சுட்டபடி ஓடினார்கள். சிறுபாலத்தின் அடுத்த பக்கத்திலிருந்து தொடர்ந்து குண்டுகள் இவர்களை நோக்கி வீசப்பட்டுக் கொண்டேயிருக்கும் ஒரு நிலையில், இப்படியொரு நடவடிக்கை எதற்கு?

''மை காட்!'' என்றார் ப்ராண்டிட். ''என்ன ஆளுங்க இவனுங்க?''

மெல்லோரியை நோக்கி ஒரு தீவிரமான குண்டினைப் போட்டு அக்கணத்திலேயே அவரைக் கொன்றார் ப்ராண்டிட். அனைத்து ஜெர்மானியர்களும் சுடவே மேலும் மூவர் கீழே ஓடினார்கள். ஒருவன் சுதாரித்துக் கொண்டு தட்டுத்தடுமாறி தன்னைத்தானே இழுத்துக் கொண்டு முதல் பதுங்குப் பகுதிக்கு விரைந்தான்.

பிறகு நிலவிய நிசப்தத்தில், ஒரு சிகரெட்டை எடுத்தார் ப்ராண்டிட். ''அப்ப ஏழு இருக்கும்பேன். ஒளிஞ்சுக் கிட்டவனையும் சேர்த்தால் எட்டு.''

''பைத்தியக்காரனுங்க'' என்றார் வால்ட்டர். ''இப்ப என்ன அவனுங்களுக்கு இத்தனை அவசரம்? அவனுங்க பண்ண வேண்டியதெல்லாம் ஒண்ணுதான் - காத்திருத்தல்.''

★ ★ ★

**கே**னும் கர்னல் கார்கொரனும் சாலையில் கிட்டத்தட்ட இருநூறு கெஜங்கள் தள்ளி மெல்த்தாம் ஹவுஸின் பிரதான நுழைவில் ஜீப்பில் உட்கார்ந்து கொண்டிருந்தார்கள். உருக்குலைந்திருந்த டெலிபோன் கம்பத்தைப் பார்த்தார்கள். ''அடக்கடவுளே!'' என்றார் கார்கொரன். ''இது அநியாயம். அவர் என்னதான் நினைச்சுக்கட்டிருக்கார்?''

கேன் இதற்கு பதில் சொல்லியிருக்க முடியும், ஆனால் கட்டுப்படுத்திக் கொண்டார். ''ஐ டோன்ட் நோ, கர்னல்'' என்றார். ''பாதுகாப்பு என்றால் அவருக்குனு ஒரு விளக்கம் இருக்கணும். அந்த பாராசூட் வீரர்களுடன் ஒரு பிடிப்பை ஏற்படுத்திக் கொள்வதில் அவர் பரபரப்பாய் இருந்தார். ஒரு ஜீப் பிரதான கேட்டிலிருந்து திரும்பி இவர்களை நோக்கி வந்தது. கார்வே ஓட்டிக்கொண்டிருந்தார். வாகனத்தை நிறுத்திய அவரது முகம் சீரியஸாக இருந்தது. ரேடியோ ரூம்ல இப்ப எங்களுக்கு ஜஸ்ட் ஒரு சேதி வந்தது.''

''ஷாஃப்ட்டோவிடமிருந்தா?''

மறுத்து தலையசைத்தார் கார்வே. ''க்ருகௌஸ்க்கி. இத்தனை பேருக்கு மத்தியில் இவர் அனுப்பியிருக்கார். உங்ககூடத் தனியா பேசணும்னு கேட்டார், மேஜர். அங்கே எல்லாம் குளறுபடியா இருக்கு. நேரா அவங்க உள்ளே நுழைஞ்சுட்டதா சொல்றார் அவர். எல்லா இடங்களும் பிணங்கள்.''

கடவுளே என நினைத்துக் கொண்டார் கேன். கார்கொரனிடம் அவர் சொன்னார்: ''நான் நேரா அங்கே போயாகணும்னு நினைக்கிறேன், கர்னல்.''

''நானும் அப்படித்தான் நினைக்கிறேன்'' என்றார் கார்கொரன். ''அதுக்கு முன்னாடி ப்ரைம் மினிஸ்டருக்கு நீங்க போதுமான பாதுகாப்பை வைச்சுட்டுத்தானே போவீங்க...''

கார்வே பக்கமாய் திரும்பினார் கேன். ''மோட்டார்கள்ல நம்மகிட்டே இப்ப மீதியிருப்பது என்ன?''

''ஒரு வெள்ளை ஸ்கவுட் கார். அப்புறம் மூணு ஜீப்புகள்.''

''ஆல் ரைட். நாம அவற்றை எடுத்துப்போம், ப்ளஸ், இருபது நபர்கள் பற்றிய குறிப்புகள். ஐந்து நிமிடங்கள்ல

வெளில கிளம்பும்படி தயாரானால் தேவலாம், செர்ஜெண்ட்.''

கார்வே ஒரு சிறு வட்டமாய் ஜீப்பினை திருப்பிக் கொண்டு ஓட்டிச் சென்றார். ''இது, உங்களுக்கு இருபத்தைந்து பேரை விட்டு வைக்குது, ஸார்'' - கேன், கார்கொரனிடம் சொன்னார். ''அது போதுமா?''

''என்னையும் சேர்த்து 26. ஏதேஷ்டம்.''

கேன் கிளம்பினார்.



# 18

தொலைபேசி தொடர்ந்து அழைத்துக் கொண்டிருப்பதை ஸ்டைனர் கவனித்துக் கொண்டுதானிருந்தார். கிராமம் இன்னும் ஒன்றரை மைல் தூரத்திலிருந்தது.'' யாரோ அவசரமாய் சேனலில் அழைக்கிறார்கள். ''யாரோ கொஞ்சம் நிறுத்திக்க'' என்றார் க்ளக்கிள்ளிடம். ''ஏதோ தப்பு நடந்திருக்கு.''

அரைமைல் கடந்து நெருங்கியபோது கேட்ட சிறு ஆயுதங்களின் தொடர் ஓசைகள், அவருடைய பயக்கலவரத்தை உறுதி செய்தன. அவர் தனது துப்பாக்கியை தயார் செய்து கொண்டு வெர்னரைப் பார்த்தார். ''துப்பாக்கியை பயன்படுத்தத் தயாராய் இருங்க. எந்த சமயத்திலும் தேவைப்படலாம்.''

எல்லை வரை ஜீப்பை ஓட்டிச் சென்றார் க்ளக்கிள். ''வாங்கடா, வாங்க!'' - ஸ்டைனர் கத்தினார்.

கிராமத்தை மேலும் நெருங்கியபோது குரல்கொடுத்து தொலைபேசியில் தொடர்பு கொள்ள முயற்சித்தார் அவர். ''இது கழுகு ஒன்று. உடனே கழுகு இரண்டு தொடர்பு கொள்ளலாம்.''

இதற்கு மறுபதில் இல்லை. மறுபடியும் முயற்சித்தார். வெற்றி இல்லை. ''அவங்க ரொம்ப பிஸியா இருக்கலாம்'' என்றார் க்ளக்கிள்.

சர்ச்சுக்கு மேற்காய் முன்னூறு கெஜ தூரத்திலிருக்கும் புதர் மண்டிய ஒரு குன்றுக்கு அவர்கள் இப்போது நகர்ந்திருந்தார்கள். கீழே நடக்கும் அனைத்தும் அந்த உயரத்திலிருந்து நன்றாய் தெரிந்தன. கண்ணாடியை அணிந்து கொண்ட ஸ்டைனர், மில் பகுதி மற்றும் மெல்லோரியின் நிலைப்பாடுகளைக் கண்காணித்தார். போஸ்ட் ஆபீசுக்குப் பின்னால் வரும் அமெரிக்க ரேஞ்ஜர்ஸைக் கணக்கில் வைத்துக் கொண்டு முன்னேறினார் அவர். ஷாஃப்ட்டோவின் மீதிருந்த இரு ஜீப்புகளிலிருந்து மெஷின் துப்பாக்கிகளின் குண்டுகள் பாலத்தின் பின்பகுதியில் விழுந்து கொண்டிருந்தன. அப்பகுதிக்கு ரிட்டரும் ஹக்கிளும் சென்றார்கள். ஜோன்னா க்ரேயின் தோட்டத்துச் சுவரையொட்டி, சுட்டுக் கொண்டிருக்கும் ஒரு குழு தென்பட்டது. அடுத்த காட்டேஜின் சுவர்ப் பகுதியில் இதேபோல் இயங்கிக் கொண்டிருந்த இன்னொரு ஜீப் இருந்தது.

ஸ்டைனர் மறுபடியும் முயற்சித்தார். ''இது கழுகு ஒன்று. நான் பேசுவது கேட்குதா?''

முதல்தளத்திலிருந்த ரேடலின் காதில் இக்குரல் இப்போது கரகரத்தது. ''லைன்ல கர்னல்'' என்று ப்ராண்டிடம் கூக்குரலாய் சொல்லிவிட்டு, ''இது கழுகு மூன்று'' என்றார் போனில். ''வாட்டர் மில்லில் இருக்கேன். நீங்க எங்கே இருக்கீங்க?''

''சர்ச்சுக்கு மேல வரும் குன்றில்'' என்றார் ஸ்டைனர். ''உங்க நிலைமை என்ன?''

நிறைய குண்டுகள் கண்ணாடிகளற்ற ஜன்னல் வழியே புகுந்து எதிர்ச்சுவரில் மோதி தீர்ந்தன. கீழே துப்பாக்கியுடன் படுத்திருந்த ப்ராண்டிட் ''அதை என்கிட்டே குடுங்க'' என்றார்.

''அவர் குன்றில் இருக்கார்'' என்றார் ரேடில். ''இங்கிருந்து எப்படியாவது நம்மை கொண்டு போகும்படி அவரிடம் சொல்லுங்க.'' சொல்லிவிட்டு அவர் தவழ்ந்தபடி முன்னேறினார்.

''திரும்பி இங்கேயே வந்துடுங்க'' என்றார் ப்ராண்டிட் தொலைபேசியில்.

ரேடில் தவழ்ந்தபடி வெளியே தலையை நீட்டி எட்டிப் பார்த்தார். அவர் முகம் மலர்ந்தது. ''ஹா... என்னால கர்னலைப் பார்க்க முடியுது. அதோ, அதோ...''

வெளியிலிருந்து இப்போது குண்டுமழை வெடித்தது. ரேடிலின் தலை சிதறியதால் சுவரெங்கும் ரத்தமும் தலையின் பிண்டச்சதைகளும் சிதறியடிக்கப்பட்டன.

ப்ராண்டிட் அவ்வறையின் ஓர் ஓரத்துக்கு தன்னைக் கொண்டுபோய் அடைத்துக் கொண்டார். தூக்கியடிக்கப் பட்டிருந்த ரேடில் தண்ணீர் சக்கரத்தில் விழுந்திருந்தார். நீரின் சுழற்சி அவரையும் சுமந்தபடி சுற்றிக் கொண்டேயிருந்தது. ஒரு சுற்றி சுற்றிவிட்டு சக்கரம் மறுபடியும் தென்பட்டபோது, அதில் அவர் காணோம். போய்விட்டார்.

★ ★ ★

**கு**ன்றில், ஸ்டைனரின் தோள்களைத் தொட்டு மெலிதாய் சொன்னார் வெர்னர்: ''கீழே. மரக்காடுகளில். வலப்புறத்தில் போர் வீரர்கள்.''

உயரத்தின் அனுகூலத்தால் கீழே காட்டுக்குள் இடம் பெறுபவை நன்றாகவே தெரிந்தன. சார்ஜெண்ட் ஹஸ்ட்லரும் அவரது சகாக்களும் போய்க் கொண்டிருந்தார்கள்.

ஸ்டைனர் முடிவெடுத்தார். அதனை செயல்படுத்தினார். ''நாம மறுபடியும் ஜெர்மானிய பாராசூட் வீரர்களாகிறோம், பாய்ஸ்.''

தனது சிகப்புத் தொப்பியை அவர் தூர எறிந்தார். பாராசூட் ஜாக்கெட்டை களைந்தார். உள்ளே ஜெர்மனியின் உயர்விருதுகள் கொண்ட சீருடை இருந்தது. க்ளக்கிள்ளும் வெர்னரும் இவரையே உதாரணமாய் கொண்டு மாறினார்கள்.

''ரைட், பாய்ஸ்'' என்றார் ஸ்டைனர். ''மரக்காட்டின் வழியாய், அதோ அந்தப் பாதையிலே இறங்கறோம். அந்த ஜீப்புகளைக் குறிவெச்சு. கொஞ்சம் வேகத்தைக் கூட்டினால் உங்களால் முடியும்னு நினைக்கிறேன், க்ளக்கிள். அதற்கு பிறகு நியூமேனை நோக்கி.'' பிறகு வெர்னரை நிமிர்ந்து பார்த்தார். ''சுடுவதை நிறுத்த வேண்டாம். எக்காரணம் கொண்டும்.''

★ ★ ★

சர்ச்சை நோக்கிய கடைசி திருப்பத்தின்போது ஜீப் ஐம்பதில் போய்க் கொண்டிருந்தது. கார்ப்பொரெல் பெக்கர் வெளியிலிருந்தார். எச்சரிக்கையானதால் அவர் பரபரப்பானார். ஸ்டைனர் கையசைத்தார். பிறகு க்ளக்கிள் வண்டியை திருப்பி மரக்காட்டு வழியில் செலுத்தினார்.

அங்கிருந்த ஒரு சின்ன மேட்டில் ஜீப் எகிறிக் குதிக்க நேரிட்டது. உயரமான இரு சுவர்களுக்கு இடையில் இருந்த வளைவில் கட்டுப்பாடற்ற வேகத்தில் போய் திரும்பியது. அதே பாதையில் இருபது கெஜத் தொலைவில் ஹஸ்ட்லரும் அவர்களது ஆட்களும் இருந்தார்கள். ஜீப் வந்த வேகத்தில் எதிரில் தெரிந்தவர்களின் மீது அது நேராய் சென்று விடுவது ஒன்றுதான் சாத்தியமாயிருந்தது. ஆகவே குறிபார்க்க

அவகாசம் அமையாமல் போகவே, கண்மூடித்தனமாய் சுட்டார் வெர்னர். ஆட்கள் உயிரைக் காத்துக் கொள்ள குதித்தோடினார்கள். சிலர் அருகிலிருந்த ஓடைக்குள் குதித்தனர். ஜீப் யாரோ ஓர் உடலின் மீது ஏறி ஸ்திரமாகி முன்னேறியபோது அதற்கு பின்னால் செர்ஜெண்ட் ஹஸ்ட்லர் உட்பட ஆறேழு பேர் இறந்து கொண்டிருந்தார்கள்.

க்ளக்கிள் ஜீப்பை செலுத்திக் கொண்டிருந்தார்.

ஜோன்னா க்ரேயின் தோட்டத்து சுவரருகே ஒரு ஜீப்பின் மறைவில் இருந்து மெஷின்-கன்னை இயக்கிக் கொண்டிருந்தார்கள் இரண்டு பேர். ஆனால் அதற்கு முன்னமேயே, க்ளக்ளின் ஜீப் அந்த சுவரைப்போய் மோதுமளவுக்கு முன்னேறியிருந்தது. அந்த இருவரும் நிலைதடுமாறி விட்டார்கள்.

அவர்களுடைய கொடூரமான முடிவு, அடுத்து இரண்டாவது ஜீப் மறைவில் நின்றுகொண்டிருந்த வீரர்களுக்கு சிறந்த எச்சரிக்கையை தந்து விட்டது. ஓரிரு நொடிப் பொழுதுகளை சாதகமாய் முன்கூட்டியே அவர்களுக்கு அமைத்து தந்தது - உயிரா மரணமா என்பதை நிர்ணயிக்கும் நொடிகள் அவை.

ஜீப்பை திருப்பி அதைப் பாலம் நோக்கி க்ளக்கிள் செலுத்துமுன், அவர்கள் சுட ஆரம்பித்திருந்தார்கள்.

இப்போது இது ரேஞ்ஜர்ஸின் நேரம். பாய்ந்து வந்த ஒரு குண்டு தன் வேலையை முடித்தபோது க்ளக்கிள் ஒரு பெரிய அலறலை வெளியிட்டார். அப்படியே ஸ்டீரிங்கில் சாய்ந்தார். வெர்னரின் முகத்தில், சிதறிய ஒரு கண்ணாடித் துண்டு வந்து விழுந்ததில் காயம் ஏற்பட்டு ரத்தம் பீறிட்டது. அதனைச் சமாளித்துக் கொண்டு அவர் க்ளக்கிளின் அருகில்

வந்தார். பரிசோதித்தார். ''செத்துட்டார்'' என்று அறிவித்தார். அவர் கண்கள் வெறி கொண்டன.

துப்பாக்கியை எடுத்துக் கொண்டு சீறி நின்றார் அவர். ஸ்டைனர் அவரை கட்டுப்படுத்தினார். ''சாந்தமாகுங்க. அவர் செத்துட்டார். நீங்க உயிரோட இருக்கீங்க.''

வெர்னர் சோகையாய் ஒப்புக்கொண்டார். ''யெஸ், சார்.''

''இப்ப இந்த மெஷின் - கன்னைக் குறி வைத்து அவங்களை நோக்கி இறக்குங்க.''

அப்போது அங்கு தவழ்ந்தபடி கையில் துப்பாக்கியின் முனையை குறி வைத்தபடி வந்த நியூமேனிடம், ''ஹக்கிள் எங்கே?'' என்று கேட்டார் ஸ்டைனர்.

''போயாச்சுனு நினைக்கிறேன்.''

வெர்னர் தனது துப்பாக்கியை சுட ஆரம்பித்திருந்தார்.

ஸ்டைனர் கேட்டார்: ''சொல்லுங்க, நியூமேன்... உங்க மனசுல என்ன திட்டமிருக்கு?''

''இன்னும் ஒரு மணிநேரத்துல இருட்டும்'' என்றார் ரிட்டர். ''அதுவரைக்கும் பொறுமையா இருந்துட்டு அப்புறம் ரெண்டு அல்லது மூணு பேரா நழுவி ஊடுருவலாம்னு நினைச்சிருந்தேன். இருட்டின் ஆதாயத்தால ஹாப்ஸ் எண்ட் புதர்களுக்குள் மறைஞ்சு இருந்துடலாம். ஏற்பாட்டின்படி கொய்னிக் வந்தார்னா, படகும் பயன்படுத்திக்கலாம். இப்போதைக்கு அந்த ஓல்ட் மேனை நம்மால நெருங்கிட முடியாது.'' தயங்கிவிட்டு பிறகு சந்தேகம் தொனிக்க சொன்னார்: ''இது, நாம ஜெயிக்க ஒரு வாய்ப்பை உண்டாக்கித் தருது.''

''இருக்கும் ஒரேயொரு வாய்ப்பு'' என்றார் ஸ்டைனர். ''ஆனா இங்கே பண்ண வேண்டாம். எனக்கென்னவோ

இப்ப நாம எல்லாரும் மறுபடியும் ஒருதடவை இணையணும்னு தோணுது. எல்லாரும் எங்கேயிருக்காங்க?''

பொதுவான நிலைமை பற்றிய குறிப்பினை சுருக்கமாய் ரிட்டர் தெரிவித்து முடிந்ததும் ஒப்புதலாய் தலையசைத்தார் ஸ்டைனர். ''வரும்போது எல்லாரையும் மில்லுல என்னால சேர்க்க முடிஞ்சது. ரேடிலைத் துப்பாக்கியுடன் பிடிச்சேன். ஆல்ட்மேன் மற்றும் அவருடைய குழுவை நீங்க பிடிங்க. ப்ராண்டிட் கிடைக்கிறாரானு நான் பார்க்கறேன்.''

இதற்கிடையில் போஸ்ட் ஆபீஸின் நுழைவில் ஆல்ட்மேன், டின்டர் மற்றும் பெர்க் ஆகியோருடன் நியூமேன் வெளிவந்தபோது மில்லில் துப்பாக்கி சத்தங்கள் நிற்காமல் வெடித்தன.

அவர்களனைவரும் முன்பக்கத்தில் மறைந்துக் கொள்ள ''ப்ராண்டிட்டை என்னால பிடிக்க முடியல'' என்றார் ஸ்டைனர். ''கடவுளுக்குத்தான் என்ன நடக்குது என்பது வெளிச்சம். மீதியனைவரும் உடனடியா சர்ச்சுக்கு போங்க. சீக்கிரமா. போகும்வழி நெடுக உங்களை மறைக்க இருட்டின் உதவியிருக்கும். ரிட்டர், நீங்கதான் இப்ப இன்சார்ஜ்.''

''நீங்க?''

''நான் சுட்டு, துப்பாக்கி சண்டைல கொஞ்ச நேரம் அவனுங்களை நிறுத்தி வெக்கிறேன். அப்புறம் வரேன்.''

''ஆனா, ஸார்...'' - ரிட்டர் ஆரம்பித்தார்.

ஸ்டைனர் அவர் தொடர்வதை தடுத்து விட்டார். ''ஆனாவும் இல்ல, ஆவன்னாவும் இல்ல. இது என் கட்டளை.''

கணநேரம் ரிட்டர் தாங்கினார் - அவ்வளவே. கட்டளையின்படி அவர்கள் முன்னேற, சுடுவதில் இறங்கினார் ஸ்டைனர்.

பாலத்தின் மறுபக்கத்தில் திறந்தவெளி மைதானத்துக்கு முன்னால் அகன்றுபோகும் ஒரு பகுதியிருந்தது. முட்டியால் நகர்ந்து கொண்டிருந்த ரிட்டர் சொன்னார்: "ஒவ்வொருத்தரா போனால் பிரயோசனப்படாது. நம்மில் முதல்ல போறவங்களை எதிரி ஜோக்கர் சுட்டவுடனேயே அடுத்து யாராவது வருவாங்கன்னு அவன் தயாராகிடறான். அதனாலே, இந்தத் தடவை, நான் கட்டளையிட்டதும், அத்தனை பேரும் ஒண்ணா ஓடறோம்."

அடுத்த நொடியில் அவர் எழுந்துக் கொண்டு முன்னேற, ஆல்ட்மேன் தொடர்ந்தார். மற்றவர்கள், பின்னால். ரேஞ்சர்ஸ் படையினை ப்ளீக்கர் என்பவர் வழிநடத்திக் கொண்டிருந்தார். ஜஸ்ட் இப்பொழுது, வலதுக் கண்ணுக்குள் ஒரு கண்ணாடித் துகள் விழுந்துவிட்டபடியால், வலியால் தன்னிலை இழந்திருந்தார் அவர். எரிச்சலில் யார் அகப்பட்டாலும் வாங்கிக் கட்டிக்கொள்வார்கள் என்ற நிலை. அப்போது பார்த்து, ஜெர்மானியர்கள் சாலையைக் கடந்து கொண்டிருப்பதை கவனித்தார். சுட்டார், ஆனால் காலந்தாழ்ந்ததாய் ஆகியது அது. எரிச்சலின் தீவிரத்தால், சுடும்போது பாலப்பகுதியைத் தவற விட்டார்.

ஆயினும் மறுபக்கத்தில் பெர்க் அவுட் ஆனார். விழுந்த அவருக்கு உதவ டின்ட்டர் முன்வந்தார். குண்டுமழை தொடர்ந்தது. வெர்னர் ஓர் அலறலுடன் திரும்ப, அவரை தனது தோளோடு இணைத்துக் கொண்ட ஆல்ட்மேன் அவரை ரிட்டருக்குப் பின்னால் தள்ளினார்.

★ ★ ★

**வா**ட்டர் வீல் பகுதியிலிருந்து ப்ராண்டிட்டும் மேயரும் சமவெளிப் பகுதியில் என்ன நடக்கிறது என்பதை பார்த்தார்கள். "ஒண்ணு சொல்லிக்கறேன்" என்றார் மேயர்.

"நடப்பவற்றை வெச்சுப் பார்க்கும்போது நாம இங்கேயே பர்மனெண்ட்டா இருப்பதைப் போல ஆகியாச்சு."

ரிட்டர், ஆல்ட்மேன் மற்றும் ப்ரிகெல் ஆகியோர் புதர்ப்பகுதியில் தள்ளாடியபடி தவிப்பதையும் கல்லறையின் சுவர்ப்பகுதியில் போய் முட்டிக்கொண்டு நிற்பதையும் கவனித்தார் ப்ராண்டிட். "சேர்ந்துட்டாங்க" என்றார்.

தரையின் நடுவில் ஒரு பெட்டியை வைத்துக் கொண்டிருந்த மேயரை நோக்கி சென்றார் அவர். அவர் வயிற்றில் சுடப்பட்டிருந்தார். வீங்கிய நிலையில் சிறு துளையொன்று அவருடைய தொப்புளுக்குக் கீழே ஏற்பட்டிருந்தது. முகம் முழுக்க வியர்த்திருக்க அவர் சொன்னார்: "நல்லவேளை ரத்தக் கசிவு இல்லை. எனக்கு எப்பவும் பயங்கர அதிர்ஷ்டம் உண்டுனு எங்கம்மா அடிக்கடி சொல்வாங்க."

"நானும் கவனிச்சிருக்கேன்." இப்படி சொன்ன ப்ராண்டிட் ஒரு சிகரெட்டை எடுத்து மேயிரின் வாயில் வைத்தார். ஆனால் அதில் தீயைப் பொருத்துவதற்குள் வெளியே தொடர் குண்டோசை ஆரம்பமாகியிருந்தது.

★ ★ ★

**ஜோ**ன்னா க்ரேயின் முன்தோட்டப் பகுதியில் தரையைப் பிராண்டியபடி தவழ்ந்துப் போய்க்கொண்டிருந்தார் ஷாஃப்ட்டோ. கிடைக்கும் சேதிகளின் ஆழத்தை கணக்கிட்டு, ஹஸ்ட்லர் குழுவைச் சேர்ந்த ஒருவர் இவரை அழைத்து வந்திருந்தார். மழை பெய்து ஓய்ந்ததைப் போலிருந்தது நிலவரம். அரை மணிநேரத்துக்குள் கிட்டத்தட்ட 22 பேர் இறந்திருந்தார்கள் அல்லது படுகாயமடைந்திருந்தார்கள். இவர்களில் பாதிக்கு மேல் இவருடைய ஆட்கள். ஏற்பட்டிருக்கும் விளைவுகள், விவாதங்களுக்கு அப்பாற்பட்டு, பயங்கரமானவை.

ஷாஃப்ட்டோவுக்குப் பின்னால் தவழ்ந்தபடி வந்து கொண்டிருந்த க்ருகௌஸ்க்கி, "நீங்க என்ன பண்ணப் போறீங்க, கர்னல்?" என கேட்டார். அவரிடம் தொலைபேசி இருந்தது.

"நீங்க என்ன பண்ணப்போறீங்கன்னு கேட்டால்...? எனக்கு புரியலை." ஷாஃப்ட்டோ கடுமையாய் கேட்டார். "இக்கட்டான நிலைமை வரும்போது, 'நீங்க என்ன நினைக்கிறீங்க?' இல்ல...! எந்த ஒழுக்கமும் இல்லாமல் வரைமுறையும் இல்லாமல் இருப்பவங்கிட்டே இப்ப விடுங்க. என்ன நடக்குதுனு பார்ப்போம்."

அசதியாய் சுவரில் சாய்ந்தார் அவர். மேலே பார்த்தார். அதே கணத்தில் மாடி படுக்கையறை ஜன்னலின் திரையை விலக்கி எட்டிப் பார்த்தார் ஜோன்னா க்ரே. உடனே அவர் உள்ளுக்குள் தன்னை இழுத்துக் கொண்டாலும் அது காலங்கடந்ததாய் ஆயிற்று. "மை காட்" என தன் தொண்டைக்குள் உறுமினார் ஷாஃப்ட்டோ. "க்ருகௌஸ்க்கி... அந்த பழிகாரப் பொம்பிளை, இன்னும் அந்த வீட்டுக்குள்ளேதானிருக்கு."

வேகமாய் ஓட ஆரம்பித்தபடி அந்தக் குறிப்பிட்ட ஜன்னலை அவர் சுட்டிக்காட்டினார். க்ருகௌஸ்க்கி "எனக்கு யாரையும் தெரியலியே" என்றார்.

"சீக்கிரத்தில் தெரியும், மை டியர் பாய்" என்று கத்தினார் அவர், தனது துப்பாக்கியைத் தயார் படுத்திக் கொண்டு. "கம் ஆன்!"

★ ★ ★

**க**தவினைத் தாளிட்டுவிட்டு மாடிக்கு விரைந்து கொண்டிருந்தார் ஜோன்னா க்ரே. ரேடியோ இருக்கும் பகுதிக்கு சென்று உட்கார்ந்து கொண்டார். லேண்ட்ஓர்த்

பகுதி சேனலைத் தேடிப்பிடித்தார். அப்போது கீழே ஓசைகள் உருவாவதை அவரால் கேட்க முடிந்தது. ஷாஃப்ட்டோ வீட்டையே உருட்டிக் கொண்டிருந்தபடியால் கதவுகள் ஆவேசமாய் திறக்கப்படும் ஓசைகளும் சாமான்களும் மேஜை-சேர்களும் தள்ளப்படும் ஓசைகளும் சப்தமாய் கேட்டன. அவ்வோசைகள் நெருங்கி விட்டன... தற்சமயம் அவர் மிக அருகில் வந்திருந்தார். அவர் கத்தும் ஓசையை ஜோன்னாவால் இப்போது அருகில் துல்லியமாய் கேட்க முடிந்தது.

''அவ இங்கேதான் எங்கேயாவது இருக்கணும்.''

ஒரு குரல் மாடிப்படிகளில் எதிரொலித்தது. ''கர்னல்... அதோ அவளுடைய நாய் கீழறைல கட்டப்பட்டிருக்கு. அது உங்களை குறிவெச்சு காத்துக்கிட்டிருக்கு.''

தனது துப்பாக்கியை எடுத்துக் கொண்டபடி ரேடியோ சேதியை தருவதை தொடர்ந்த வண்ணமிருந்தார் ஜோன்னா க்ரே. அங்குமிங்கும் ஓடி கடைசியில் சாவித்துவாரத்தின் வழியாய் பார்த்து விட்டார் ஷாஃப்ட்டோ. எக்காளமிட்டார்: ''அவ இங்கேயிருக்கா, க்ருகெளஸ்க்கி! அவளை நான் பிடிச்சுட்டேன்!''

துவாரத்தில் இலக்கின்றி மூன்று முறை சுட்டார் அவர். மரத்துண்டுகள் சிதறின. பூட்டு தெறித்தது. கதவு திறந்தது. க்ருகெளஸ்க்கி, துப்பாக்கியின் குறியை தவற விடாது உள்ளே புகுந்தார்.

அவரையும் முந்திக்கொண்டு ''முட்டி மோதி தூள் தூளாக்கிடறேன் பாருங்க நான்'' என்று வெறியாய் உள்ளே ஓடினார் ஷாஃப்ட்டோ. அவர் உள்ளே நுழைந்து நின்றதுதான் தாமதம். அவரது இரு கண்களுக்கு இடைப்பட்ட பகுதி நோக்கி குறி வைத்து சுட்டார் ஜோன்னா க்ரே. சுருண்டு வீழ்ந்தார் அவர். க்ருகெளஸ்க்கியின் கண்கள்

அதிர்ச்சியிலும் ஆவேசத்திலும் அகண்டன. தனது மெஷின்-கன் துப்பாக்கியிலிருந்து எட்டு குண்டுகள் கொண்ட ஒரு சுற்றினை, ஒரு தொடர் குண்டு மழை போல் பொழியுமாறு சுண்டி விட்டார். நாய் கத்தியது. ஓர் உடல், அனைத்தும் அடங்கி விழும் ஓசை கேட்டது. பிறகு அமைதி.

★ ★ ★

ரிட்டர், ஆல்ட்மேன் மற்றும் வெர்னர் ப்ரிகெல் ஆகியோர் கல்லறைகளுக்கு இடையே ஓடி முன்வாசலுக்கு வந்தபோது டெவ்லின் அங்கு வந்து சேர்ந்தார். அவர்கள் வந்த வேகத்தை கவனித்து கேட்டருகிலேயே பிரேக் இட்டார் அவர். ''ஒரே குழறுபடி'' என்றார் ரிட்டர். ''கர்னல், இன்னமும் ப்ரிட்ஜ் அருகிலேயே இருக்கார்.''

சிதிலமடைந்திருந்த ஜீப்பின் பின்னாலிருந்து இன்னும் சுட்டுக்கொண்டிருந்த ஸ்டைனரை இங்கிருந்து பார்த்தார் டெவ்லின். அப்போது அவருடைய கையைப் பிடித்திழுத்த ரிட்டர், ''ஓ காட்! என்ன வருதுனு பாருங்க!'' என்றார்.

ஜோன்னா க்ரேயின் காட்டேஜைத் தாண்டியிருந்த சாலையின் வளைவில் ஒரு வெள்ளை ஸ்கௌட் காரும் மூன்று ஜீப்புகளும் வந்து கொண்டிருந்தன. தனது வாகனத்தின் வேகத்தைக் கூட்டினார் அவர். சிரித்தார். வண்டியை நேராய் குன்றின் அடிப்பாகத்தில் செலுத்தினார். பாலத்தின் மேலேயிருந்த சிறு கயிற்றுபாலத்தைக் தேர்ந்தெடுத்துக் கொண்டு அதை நோக்கி அவர் நேராய் போனார்.

அப்போது அவரது தலைக்குப் பின்னாலிருந்த மரத்தின் ஒரு சில்லைப் பெயர்த்தெடுக்குமளவுக்கு குண்டு ஒன்று பறக்க, சட்டென்று குனிந்து கொண்டார். வெர்னர் மற்றும் ஆல்ட்மேனுடன் சுவரின் மறைவில் ஒதுங்கினார் அவர்.

ஒன்றாய் சேர்ந்திருந்த ஹஸ்ட்லர் குழுவில் எஞ்சியவர்கள், சர்ச்சுக்கு எதிர்ப்புறத்தில் இருந்த மரப்பகுதியை அடைந்திருக்க அவர்களை நோக்கி திருப்பிச் சுட ஆரம்பித்தார் டெவ்லின்.

★ ★ ★

டெவ்லின் கயிற்றுபாலத்தை நோக்கி சுட்டபடி, காட்டுப் பகுதியின் இன்னொரு பாதையில் முன்னேறினார். அச்சாலையில் ஆட்கள் இருப்பார்கள். அவருக்குத் தெரியும். ஆகவே தனது பாக்கெட்டிலிருந்து எறிகுண்டுகளில் ஒன்றை எடுத்தார். பற்களால் அதன் திரியை பிளந்தார். தற்போது அவர் காட்டில் கார் விரைந்து கொண்டிருக்க, அங்கொரு ஜீப் தென்பட்டது. அதனை சுற்றியிருந்த ஆட்கள் கலவரமாய் திரும்பினார்கள்.

தனக்குப் பின்னால் எறிகுண்டை எறிந்தார். இன்னொன்றை வெளியிலெடுத்தார். புதர்களுக்குப் பின்னர் ரேஞ்ஜர்ஸ் வீரர்கள் நிறைய பேர் பதுங்கியிருந்தார்கள். முதல் குண்டு வெடித்தபோது அடுத்ததை அந்த வீரர்களை நோக்கி எறிந்தார். மில்லைக் கடந்து தனது வாகனத்தை செலுத்திக் கொண்டிருந்தார். அங்கொரு திருப்பம் வர அதில் வழுக்கியபடி அவர் திரும்பியபோது இன்னமும் மெஷின்-கன்னுடன் இயங்கிக் கொண்டிருந்த ஸ்டைனரைப் பார்த்தார்.

ஸ்டைனர் ஒரு வார்த்தை சொல்லவில்லை. கையில் துப்பாக்கியை சுமந்தபடி எழுந்து நின்றார். கார்ப்பொரல் ப்ளீக்கர் அங்கிருந்த தோட்டத்து சுவர் நோக்கி அடையும்வரை சுட்டபடியிருந்தார். அதேகணம் பில்லியனில் துள்ளியேறிக் கொண்டார் அவர். மோட்டாரின் வேகத்தைக் கூட்டிய டெவ்லின் அதனை உடனடியாய் திருப்பி குன்றில் நேராய் செலுத்தினார்.

வெள்ளை ஸ்கெளட் கார் அப்போது ஜோன்னா க்ரே காட்டேஜில் மூக்கை நுழைத்தது. நடப்பவற்றை கவனிக்க, கேன் எழுந்து நின்று கொண்டார்.

“என்னது அது?” - கார்வே அதட்டலாய் கேட்டார்.

தனது ஜீப்பிலிருந்த குதித்த ப்ளீக்கர் அவர்களை நோக்கி நொண்டியபடி வந்தார். முகம் முழுக்க ரத்தம். “பக்கத்திலே முதலுதவி இருக்கா, ஸார்? என்னுடைய வலக்கண் போயிடுச்சுனு நினைக்கிறேன். ஒரு மண்ணும் தெரியல.”

யாரோ ஒருத்தர் சரிந்த அவரை பிடித்துக் கொள்ள, நொருங்கிப் போயிருந்த கிராமத்தை பார்க்கலானார் கேன்.

க்ருகௌஸ்க்கி வெளியே வந்தார் சல்யூட் வைத்தார்.

“கர்னல் எங்கே?” - கேன் கேட்டார்.

“செத்துட்டார், ஸார். வீட்டு மாடில. அந்த ராட்சஸப் பொம்பிளை உள்ளேயிருந்தாள் - அவதான் சுட்டா.”

கேன் வேகவேகமாய் இறங்கினார். “அவ எங்கே இப்ப?”

“நான் - நான் கொன்னுட்டேன், ஸார்.” க்ருகௌஸ்க்கி சொன்னார். அவரது கண்களில் நீர் தளும்பியது.

மேற்கொண்டு பேச ஒரு வார்த்தைகூட கேனுக்கு பிடிபடவில்லை. க்ருகௌஸ்க்கியின் தோளைத் தட்டிக் கொடுத்து விட்டு காட்டேஜுக்கான பாதையில் முன்னேறினார்.

★ ★ ★

**ரி**ட்டர் மற்றும் அவருடைய இரண்டு ஆட்கள் சுவருக்குப் பின்னால் மறைந்தபடி ரேஞ்ஜர்ஸை நோக்கி சுட்டுக் கொண்டிருந்த கட்டத்தில், அவ்விடத்துக்கு டெவ்லினும் ஸ்டைனரும் வந்து சேர்ந்தார்கள். பைக்கை

லாகவமாய் ஓட்டி வேகமாய் கேட்டைக் கடந்து வாயிலுக்குப் போனார் டெவ்லின். கல்லறைகளைக் கவசமாய் கொண்டு ரிட்டர், ஆல்ட்மேன் மற்றும் வெர்னர் ஆகியோர் மேற்கொண்டு ஒரு உயிரும் பலியாகாமல் வாயிலை வந்தடைந்தார்கள்.

கார்ப்பொரெல் பெக்கர் கதவினை திறந்து வைத்திருந்தார். அனைவரும் உள்ளே நுழைந்தார்கள். பெக்கர் கதவினை அடைத்து தாளிட்டார். புது உத்வேகத்துடன் துப்பாக்கிச் சூடு வெளியே ஆரம்பமாகியிருந்தது. கிராம மக்கள் டென்ஷனிலும் படபடப்பிலும் ஒன்று கூடியிருந்தார்கள். டெவ்லினைத் திட்டுவதற்காகவே மேடையிலிருந்து இறங்கி வந்தார் வெரேக்கர். ''இன்னொரு நாய்மகன்.''

டெவ்லின் சிரித்தார்.

★ ★ ★

**மி**ல்லில் அனைத்தும் சாந்தமாகியிருந்தன. ''எனக்கு இது பிடிக்கல'' என்று கத்தினார் வால்ட்டர்.

முகத்தை சுளித்துக் கொண்ட ப்ராண்டிட், ''உங்களுக்கு எப்பத்தான் பிடிச்சிருக்கு'' என்றார்.

ஒரு வாகனம் நெருங்கும் ஓசை கேட்டது. சாலையை எட்டிப் பார்க்கப் போனார் ப்ராண்டிட்... ஆனால் உடனே குண்டுகள் தெறித்தன.

உள்ளே வந்தார். கேட்டார்: ''மேயர் எப்படியிருக்கார்?''

''காலமாகிவிட்டார்னு நினைக்கிறேன்.''

வாகனத்தின் ஓசை மேலும் நெருங்கும்போது ஒரு சிகரெட்டை எடுத்துக் கொண்டார் ப்ராண்டிட். ''நினைச்சுப் பாருங்க'' என்றபடி பேசினார்: ''இப்படியே போகும்போது

கடைசியாய் எங்கே போய் சேருது? ஸ்டட்லே கான்ஸ்டபிள்.'' சிகரெட்டைக் பற்ற வைத்தார்.

வெள்ளை ஸ்கௌட் காரைக் கொண்டு போய் மில்லின் கதவில் கார்வே மோதியபோது அது குறைந்தபட்சம் ஐம்பதில் ஓடியிருக்க வேண்டும். ஏற்கெனவே தனது மெஷின்-கன்னுடன் தயாராகியிருந்த கேன், அதனை தொடர்ந்து சுட்டார். அலறல்களும் கூக்குரல்களும் கேட்டாலும், ஒரு பக்கத்திலிருந்து மறுபக்கமாய் துப்பாக்கியைத் திரும்பி சுட்ட வண்ணமிருந்தார் கேன்.

அங்கு, ஒரு கதவருகே, ரத்தம் கொட்டிய கையொன்று தென்பட்டது. சுடுவது நின்றிருக்க, பிரதேசமே அமைதியாகியிருந்தது. தற்போது கைத் துப்பாக்கியை எடுத்துக் கொண்ட கார்வே, விரைந்தார். அதே வேகத்தில் திரும்பினார்.

''அது, மேஜர்.''

ஹார்ரி கேனின் முகம் வெளிறியது. ஆனாலும் தன்னை முழுக் கட்டுப்பாட்டுக்குள் வைத்துக் கொண்டேயிருந்தார். ''ஆல் ரைட்'' என்றார். ''இப்ப சர்ச்சுக்கு.''

ஒரு ஜீப் குன்றின் மீது ஏறிக் கொண்டிருப்பதை சரியாய் பார்க்கும்படி வந்து சேர்ந்தாள் மோலி. அதன் ஏரியலிலிருந்து ஒரு வெள்ளை கைக்குட்டை படபடத்துக் கொண்டிருந்தது. அது கேட்டருகே நின்றபோது அதிலிருந்து கேனும் டெக்ஸ்டர் கார்வேயும் இறங்கினார்கள். இருவரும் கல்லறை வழியே முன்னேறியபோது கேன் மிருதுவாய் சொன்னார்: ''செர்ஜெண்ட், நல்லா கவனிச்சுக்கங்க. மறுபடியும் இங்கே வந்தால் இவ்விடம் நினைவில் மீண்டும் வரும்படி பார்த்துக்கங்க.''

''நிச்சயமா, மேஜர்.''

சர்ச் கதவு திறந்தது. ஸ்டைனர் விலக, டெவ்லின் சிகரெட் ஒன்றை பிடித்தபடி சுவரில் சாய்ந்திருந்தார். ஹார்ரி கேன் சல்யூட் வைத்தார். ''நாம ஏற்கெனவே சந்திச்சிருக்கோம், கர்னல்.''

இதற்கு ஸ்டைனர் பதில் சொல்லுவதற்குள் கதவருகிலிருந்த பெக்கரைப் பிடித்துத் தள்ளி விட்டுவிட்டு நொண்டிக் கொண்டே முன்வந்தார், பிலிப் வெரேக்கர். ''கேன், பமீலா எங்கே? அவ நல்லாயிருக்காளா?''

''அவ நல்லாயிருக்கா, ஃபாதர்'' என்றார் கேன். ''மெல்த்தாம் வீட்டுல அவங்களை மறுபடியும் நான் விட்டுட்டுத்தான் வந்திருக்கேன்.''

ஸ்டைனர் பக்கமாய் திரும்பினார் வெரேக்கர். அவர் கண்களில் வெற்றி முழக்கம் டாலடித்தது. ''அவ இல்லா விட்டால் இதை நீங்க விட்டுட்டு ஓடியிருக்கணும், இல்லையா ஸ்டைனர்?''

''ஒரே விஷயத்தை ஒவ்வொருத்தரும் எப்படி பார்க்கிறாங்க, கவனிச்சீங்களா?'' என்று சாந்தமாய் சொன்னார் ஸ்டைனர். ''கார்ள் ஸ்டைனர் எனும் ஒருத்தர் இரு குழந்தைகளைக் காப்பாற்றுவதற்காக தன்னுடைய இன்னுயிரை தியாகம் செய்ததால் நாங்க தோற்று விட்டோம்னுல்ல நான் நினைச்சுக்கிட்டிருக்கேன்?'' இதற்கு ஒரு பதிலுக்காக அவர் காத்திருக்கவில்லை. கேனிடம் சொன்னார்: ''நான் உங்களுக்கு என்ன காரியம் செய்யணும்?''

''பதில், நிச்சயமா வெளிப்படை. சரண். மேற்கொண்டு ரத்தங்கள் சிந்துவதில் பலன் கிடையாது. நீங்க மில்லில் விட்டு வைத்திருந்த அத்தனை ஆட்களும் மரணமடைஞ்சாச்சு. மிஸஸ் க்ரேயும்.''

வெரேக்கர் அவரின் கைகளைப் பிடித்திழுத்தார். "மிஸஸ் க்ரே இறந்துட்டாங்களா? எப்படி?"

"அவங்களை கைது பண்ண ஷாஃப்ட்டோ முயன்றபோது அவரை மேடம் கொன்னிருக்காங்க. அதுக்கு பதிலடியா குண்டு பாய்ந்திருக்கு. செத்துட்டாங்க." முழுதுமாய் நொறுங்கிப் போய் திரும்பிக் கொண்டார் வெரேக்கர். கேன் தற்போது ஸ்டைனரிடம் சொன்னார்: "நீங்க இப்ப தனியாளா நிக்கறீங்க. நாம் வாழ்க்கைலேயே பார்க்க முடியாத அளவுக்கு பாதுகாப்புடன் ப்ரைம் மினிஸ்டர் தற்போது மெல்த்தாம் ஹவுஸ்ல இருக்கார். எல்லாம் இப்ப முடிஞ்சாச்சு."

ப்ராண்டிட், வால்ட்டர், மேயர், க்ளக்கிள், டின்ட்டர், பெர்க் என்று ஒருத்தர் மாற்றி ஒருத்தராய் எண்ணிப் பார்த்தார் ஸ்டைனர். ஒப்புதலாய் தலையசைத்துக் கொண்டார்.

வெரேக்கர் கத்தினார்; "இவனுங்க அத்தனை பேரும் இங்கே பிரிட்டிஷ் யூனிபார்ம் போட்டுக்கிட்டு வந்தானுங்கன்னு நான் உங்களுக்கு நினைவுபடுத்தணுமா, மேஜர்?"

"ஆனா அதை போட்டுக்கிட்டு சண்டை போடலே" என வெட்டினார் ஸ்டைனர். "நாங்க ஜெர்மானிய போர் வீரர்களா, ஜெர்மான் சீருடையிலதான் சண்டையிட்டோம்."

"இப்படி உடை மாற்றி வருபவர்களுக்கு மரண தண்டனை உண்டு" - நினைவூட்டினார் வெரேக்கர்.

கேனின் பார்வையை பார்த்த ஸ்டைனர் மிருதுவாய் சிரித்தார்: "கவலைப்படாதீங்க மேஜர். உங்க தப்பு எதுவும் கிடையாது." ஃபாதர் பக்கமாய் இப்போது திரும்பி பேசினார்: "வெல், ஃபாதர். விடமாட்டீங்க போலிருக்கு. என் கல்லறையில ஆடிட்டுத்தான் ஓய்வீங்களா?"

''கொன்னுடுவேன் ஸ்டைனர்!'' - வெரேக்கர் தன்னுடைய கையிலிருந்த ஊன்றுகோலால் அவரை தாக்க முன்வந்தார். அப்போது கால்தடுக்கி விழுந்து விட்டார். கல்லறை ஒன்றின் நுனி அவரது தலையை பதம் பார்க்கும் படியானது.

அவரருகில் சட்டென்று மண்டியிட்டு பரிசோதித்தார் கார்வே. ''டாக்டர் ஒருத்தர் பார்த்தால் நல்லது. கிராமத்துல ஒரு டாக்டர் இருக்கார், இல்ல?''

''இருக்கலாம். உடனடியா இவரை கூட்டிட்டுப் போங்க'' என்ற ஸ்டைனர் தொடர்ந்தார்: ''எல்லாரையும் கூட்டிட்டுக் கிளம்புங்க.''

கார்வே ஓரக்கண்ணால் கேனைப் பார்த்தார். பிறகு வெரேக்கரை எழுப்பிக் கொண்டு அவரை ஜீப் வரை கொண்டு சென்றார். ''கிராமத்துவாசிகளை விட்டுலாம்னு சொல்றீங்களா?'' கேட்டார் கேன்.

''இதுதான் இப்போதைக்கு செய்யத்தக்கது. மனத்தால் அடிவாங்கியிருக்கும் அவங்களுடைய கோபம் வெடிக்கும் காலம் வந்தாச்சு.'' ஸ்டைனர் கொஞ்சமாய் ஆச்சரியப் பட்டவராய் தெரிந்தார். ''வேற என்ன நினைக்கிறீங்க? கிராமம் முழுவதையும் நமக்கு கீழ் பிணைக் கைதிகளா விடாமல் பிடிச்சு வெச்சிருக்கணும்னு நினைக்கிறீங்களா என்ன? பெண்களை நமக்கு முன்னாடி ஒரு கவசம் போல அனுப்பிக்கிட்டு போரிடும் முறை, ஆங்!? மன்னிக்கணும், இதுக்கு நான் ஒப்புக்க மாட்டேன்'' பேசிவிட்டு அவர் திரும்பினார். ''எல்லாரையும் விட்டுடுங்க பெக்கர். அத்தனை பேரையும்.''

கதவு கிறீச்சிடும் ஓசையுடன் திறக்கப்பட்டது. கிராமத்தார்கள் உடனே வெளியே வந்து கொண்டனர்.

லேக்கர் ஆர்ம்ஸ்பீ கூட்டி வந்து வெளியே விட்டார். கடந்துபோன பெண்கள் அனைவருமே கிறுக்குப் பிடித்ததைப் போல கதறிக் கொண்டே போனார்கள்.

பெட்டி ஒயில்ட், தனது மகன் கிராஹாமுடன் நேராய் ரிட்டர் நியூ மேனிடம் வந்தார். தன் குழந்தைகளுக்காக போராடிய வீரர்களுக்கு நன்றியையும் அதில் மரண மடைந்தோருக்கு அஞ்சலிகளையும் மனமார அவர் தெரிவித்தார்.

''அவன் ஒரு வீரன். தைரியசாலி'' என்றார் ஸ்டைனர் சிறுவனை பார்த்து, ''கொஞ்சங்கூட தயங்கலை அவன். நேரா... உள்ளே குதிச்சுட்டான்! அதுதான் துணிச்சல். துணிச்சல் எப்பவும் திசைமாறுவது கிடையாது.''

பையன் நிமிர்ந்து அவரை முறைத்து பார்த்தான். ''நீங்க ஏன் ஜெர்மானியரா இருக்கீங்க?'' என்று அதிகாரமாய் கேட்டான். ''நீங்க ஏன் எங்க பக்கத்துல இருக்கக்கூடாது?''

ஸ்டைனர் மனம்விட்டு, வாய்விட்டு, சப்தமாகவே சிரித்தார். ''கிளம்புங்க. இவனை இங்கிருந்து கிளப்புங்க முதல்ல'' என்றார் மிஸஸ் பெட்டியிடம். ''என் மனசை அவன் முழுக்க மாற்றி விடுவதற்குள்.''

அவர்கள் கிளம்பிய அதே கணத்தில் வெள்ளை ஸ்கௌட் கார் மரக்காட்டிலிருந்து வெளியேறி வந்தது. அதனுள்ளிருந்த துருத்திய துப்பாக்கிகள் வராண்டா நோக்கிய குறியிலிருந்தன.

வறட்சியாய் சிரித்தார் ஸ்டைனர். ''ஸோ, மேஜர், இறுதிக்கட்டம்! போர் இடம்பெறட்டும்.'' வராண்டாவில், இந்த நீண்ட உரையாடல் முழுக்க ஒரு வார்த்தை பேசாமல் நின்றுகொண்டிருந்த டெவ்லினுடன் போய் இணைந்துக் கொண்டார் ஸ்டைனர்.

''இத்தனை தூரத்துக்கு நீளமாய் நீங்க அமைதியாய் இருந்து உங்களை இதுவரை நான் பார்த்ததே இல்ல'' என்றார் ஸ்டைனர்.

டெவ்லின் சிரித்தார். ''உதவி வேணும் எனும் ஒரேயொரு வார்த்தையை தவிர எனக்கு வேற எதுவும் பேசவே வரல. நான் இப்ப உள்ளே போய் பிரார்த்தனை செய்யலாமா?''

★ ★ ★

புதர்களுக்கிடையிலிருந்து, ஸ்டைனருடன் இணைந்து டெவ்லின் உள்ளே போய்விடுவதை மோலி கவனித்தாள். அவளது இருதயம் பாறாங்கல்லாய்க் கனத்துப் போனது. ஓ காட் என்றாள். நான் ஏதாவது செய்தாகணும் என்றெண்ணிக் கொண்டாள். அவள் ஓட ஆரம்பித்தாள்... அதே கணத்தில் சர்ச்சிலிருந்து தள்ளியிருந்த மரக்காட்டுப்பகுதியிலிருந்து ரேஞ்ஜர்ஸ் படையினர் சாலைக்கு குறுக்கே வந்தார்கள். இப்பகுதியில் இவர்கள் கூடுவதை சர்ச்சிலிருந்து பார்த்தால் தெரியாது. அனைத்து வீரர்களும் சுவருக்குப் பின்பகுதியில் மறைந்து ஓடினார்கள். கேட்டின் வழியாய் சர்ச் தோட்டத்துக்குள் நுழைந்தார்கள்.

ஆனால் அவர்கள் உள்ளே போகவில்லை. கல்லறைக்குள் நழுவினார்கள். வராண்டா பகுதிக்கு பாதையமைத்துக் கொண்டு முன்னேறினார்கள். தடிமனான தலைமை சர்ஜெண்ட், தோளிலிருந்த கயிறால் கிட்டத்தட்ட பதினைந்தடி உயரத்தை ஏறினார். மேலேறியதும் அதே கயிறினை கீழே அனுப்பி, ஒவ்வொரு வீரராக மேலே ஏற்றிக்கொண்டார்.

சட்டென்று உருவான தீர்மானத்துடன் ஓடிப்போய் தனது குதிரையின் மீதேறிக் கொண்டாள் மோலி. அதனை

புதர்களுக்கிடையே விரட்டினாள். சர்ச்சின் பின்பகுதி மரக்காட்டுக்குள் திரும்பி அதனுள் மறைந்தாள்.

★ ★ ★

சர்ச்சுக்குள் குளிர் கடுமையாயிருந்தது. அது ஒரு குளிர்ந்த பகுதி. துடிதுடித்துக் கொண்டிருந்த மெழுகுவர்த்தி ஒளி மட்டும் இருந்தது. டெவ்லின், ஸ்டைனர் மற்றும் ரிட்டர் உட்பட எட்டு பேர் மட்டுமே விட்டு வைக்கப்பட்டிருந்தார்கள். வெர்னர் ப்ரிகெல், ஆல்ட்மேன், ஜேன்ஸன், கார்ப்பொரல் பெக்கர் மற்றும் ப்ரஸ்டன். இவர்கள் ஒருவருக்கும் தெரியாமல் ஆர்தூர் ஸேமோரும் இருந்தார். மாதாவின் நிழலில் கைகளும் கால்களும் கட்டுண்ட நிலையில் இன்னும் அவர் கிடந்தார். எப்படியோ முயன்றெழுந்து சுவரில் சாய்ந்து உட்கார்ந்திருந்தார் அவர். அவரது அந்நியமான கண்கள் ப்ரஸ்டன் மீது பதிந்து கிடக்க, தனது மணிக்கட்டில் இருக்கும் கட்டினைக் களைய அவர் முயன்று கொண்டிருந்தார்.

ஸ்டைனர் கோபுரக் கதவினையும் மரச்சாமான்களைப் போட்டு வைக்க உதவும் அறையினையும் திறக்க முயற்சித்தார். அவை பூட்டப்பட்டிருந்தன. கோபுர உச்சியிலிருந்து மாதா கோயில் மணியினைக் கட்டியிருந்த கயிறு, தொங்கிக் கொண்டிருந்தது. அது, 1939 க்குப் பிறகு பயன்படுத்தப்படவேயில்லை.

திரும்பிய அவர் நேரே மேடையேறினார். அனைவரையும் பார்க்கும்படி திரும்பி நின்றுகொண்டார். "வெல், இப்போதைக்கு உங்களுக்கு என்னால் தரமுடிந்தது ஒன்றுதான்: அது, மற்றொரு சண்டை."

ப்ரஸ்டன் பேசினார்: "இது ஒரு முட்டாள்தனமான பேச்சு. நாமிருக்கும் நிலைமை ஒரு அனாதையான

நிலைமை. எப்படி சண்டை போடுவது? அவங்களுக்கு ஆட்கள் இருக்காங்க. கருவிகள் இருக்கு. அவங்க முன்னேற ஆரம்பித்தால், இந்த இடத்தை நம்மால பத்து நிமிஷம்கூட தக்க வெச்சுக்க முடியாது.''

''விசயம் ரொம்ப ஸிம்பிள்'' என்றார் ஸ்டைனர். ''நமக்கு வேற வாய்ப்புகளே கிடையாது, சண்டையை தவிர. ஜெனீவா போரை நினைச்சுப் பாருங்க. இப்படிப்பட்ட கட்டத்துக்குத்தான் நாம தள்ளப்பட்டோம். ஆனா பிரிட்டிஷ் யூனிஃபார்மைப் போட்டுக்கிட்டு சண்டை எனும் ரிஸ்க்கைத்தான் செஞ்சோம்.''

''நாம ஜெர்மானிய வீரர்களா போர் புரிஞ்சிருக்கோம்'' என்று சுட்டிக்காட்டினார் ப்ரஸ்டன். ''ஜெர்மானிய சீருடையில. நீங்களே இதை இப்ப குறிப்பிட்டீங்க.''

''அப்பழுக்கற்ற பாயிண்ட்'' என்றார் ஸ்டைனர்.

ப்ரஸ்டன் அங்கிருந்த பெஞ்ச் ஒன்றில் தலையில் கை வைத்தபடி உட்கார்ந்து கொண்டார்.

ப்யானோ தனது இன்னிசையை தவழ விட ஆரம்பித்தது. உயர் ஸ்டூலில் உட்கார்ந்திருந்த ஹன்ஸ் ஆல்ட்மேனின் கலைநயம்மிக்க விரல்கள் ப்யானோவைத் தேனாக்கி உருகி ஓடவிட்டன. அவர் பாடியபடி இசைக்கருவியின் உயிர் நாடியைப் படம்பிடித்துக் காட்டிக்கொண்டிருந்தபோது, உயரேயிருந்த ஒரு ஜன்னல் வெடித்துச் சிதறியது.

அடுத்து வந்த குண்டு வெடிப்பு ஆல்ட்மேனை அவரது இருக்கையினின்றும் தூக்கி எறிந்தது. படுத்துக்கொண்ட வெர்னர் துப்பாக்கியை தயாராக்கிக் கொண்டார். ரேஞ்ஜர் வீரனொருவன் உள்ளே வந்து இரண்டு பெஞ்சுகளுக்கு இடையே நின்றான். அதே கணம், நிறைய குண்டுகள் சர்ச் நோக்கி எறியப்பட்டதால் அதன் பல ஜன்னல்கள்

தூள்தூளாகிச் சிதறின. வெர்னரின் தலையில் அடிபட்டது. ஒரு அலறல் வெளிப்படாமல் அவர் வீழ்ந்தார். யாரோ முன்னும் பின்னுமாய் துப்பாக்கியை பயன்படுத்திக் கொண்டிருந்தார்கள்...

ஸ்டைனர் தவழ்ந்தபடி வெர்னரை நெருங்கினார். அவரை திரும்பிப் போட்டு பார்த்தார். பிறகு ஆல்ட்மேனை பரிசோதிக்க முன்னுக்குப் போனார். விட்டுவிட்டு குண்டுகள் சர்ச்சின் மீது விழுந்துக்கொண்டிருந்தன.

டெவ்லின், தவழ்ந்தபடி ஸ்டைனரைப் பார்க்க வந்தார். "அங்கே நிலைமை எப்படியிருக்கு?"

"ஆல்ட்மேன் மற்றும் ப்ரிகெல்-ரெண்டு பேரும் போயிட்டாங்க."

"ரத்தக்களறியாயிருக்கு" என்றார் ஐரீஷ்க்காரன். "இனி நமக்கு வாய்ப்பே கிடையாது. ரிட்டருக்குக் காலிலே அடிபட்டிருக்கு. ஜேன்ஸன், காலமாகிவிட்டார்."

அவருடன் சேர்ந்து தவழ்ந்தபடி சர்ச்சின் பின்பக்கத்துக்குப் போனார் ஸ்டைனர். அங்கு தனது ஒரு தொடையில் கட்டுப்போட்ட நிலையில் காணப்பட்டார் ரிட்டர். அவரருகே ப்ரஸ்டனும் பெக்கரும் இருந்தார்கள்.

"நீங்க நல்லாயிருக்கீங்களா, ரிட்டர்?" என்றார் ஸ்டைனர்.

பதிலுக்கு அவர் சிரித்தார். ஆனால் வலியின் தீவிரம் அதிகமாகவே இருந்தது அவருக்கு.

தொடர்ந்து இன்னும் அவர்கள் வெளியிலிருந்து சுட்டுக் கொண்டிருந்தார்கள். பெக்கரிடம் ஸ்டைனர் சொன்னார்: "நாம இங்கே ரொம்ப நேரம் இருக்க முடியாது. அந்தக் கதவை திறக்க முடியுமானு கொஞ்சம் பாருங்க..."

பெக்கர் ஒப்புக்கொண்டார். இருட்டில் மேலும் குனிந்துகொண்ட அவர், தான் இருப்பது தெரியாவண்ணம் போனார். சைலன்சர் பொருத்திய தனது துப்பாக்கியால் கதவின் பூட்டை ஒருமுறை சுட்டார். வெறும் ட்ரிக்கரை அமுக்கும் க்ளிக் சப்தம் மட்டுமே கேட்டது. கதவு திறந்தது.

துப்பாக்கி சுடுவது தற்போது நின்றுப் போயிருக்க ஹார்வே உயர்ந்தகுரலில் பேசினார்: ''பட்டது போதாதா, கர்னல்? தண்ணிக்கு அடியிலிருக்கும் மீனைச் சுடுவதற்கு சமம், நீங்க பண்ணுவது. தேவைப்பட்டால் உங்களை சவப்பெட்டியிலே வெச்சு எடுத்துப் போகக்கூட நாங்க தயங்க மாட்டோம்.''

ப்ரஸ்டன் துள்ளினார். சட்டென்று ஓடிய அவர், ''யெஸ், நானும் வரேன்! நானும்தான் நிறையப் பட்டாச்சு!'' என்றபடி திறந்தவெளிப் பகுதிக்குள் நுழைந்தார்.

''நாய் மகனே'' கத்திக்கொண்டு ஓடிவந்து பெக்கர் தனது ரைஃபிள்ளின் பின்பக்கத்தை ப்ரஸ்டனின் மண்டையில் ஓங்கியறைந்தார். துப்பாக்கியொன்று அப்போது வெடிக்க அதன் ஒரு சுற்று குண்டு பெக்கரின் முதுகைப் பதம் பார்த்தது. தலைக்குப்புற விழுந்தார் அவர். அப்படி விழும்போது மாதா கோயில் கோபுரத்தின் கயிறினை அவர் பிடித்துக்கொள்ள, இத்தனை காலம் இல்லாமல் இப்போது மணியோசை விண்ணில் தெறித்தது.

பிறகு மீண்டும் அமைதி. கார்வே அழைத்தார்: ''வாங்க, கர்னல்.''

தணிந்த குரலில் டெவ்லினிடம் ஸ்டைனர் சொன்னார்: ''நாம போய்க்கிட்டேயிருப்போம். இங்கேயிருப்பதைவிட உள்ளே இருப்பது நல்லது.''

அப்போது, அங்கு வாசலில் யாரோ ஒருத்தர் நின்று கொண்டிருப்பதை கவனித்தார் டெவ்லின். உடைந்த கதவு

தொங்கிக்கொண்டிருந்தது. அவருக்கு பரிச்சயமான குரல் ரகசியமாய் அழைத்தது. ''லியாம்?''

''மை காட்'' என்றார் டெவ்லின். ''இது மோலி. எங்கேயிருந்து இவ இப்ப ஊற்றெடுத்திருக்கா?'' அவளிடம் மெல்ல குனிந்தபடி போன அவர், அதே வேகத்தில் திரும்பினார். ரிட்டரின் இடக்கையை பிடித்தபடி, ''கம் ஆன்!'' என்று அறிவித்தார். ''என்னுடைய லிட்டில் டார்லிங் நாம வெளியேற ஒரு வழி வெச்சிருக்கா. நமக்காக அந்த பயலுங்க அங்கே குன்றின் மேல காத்திருக்கும்போதே நாம கிளம்பிடுவோம்.''

அவர்கள் தங்களுக்கு இடையே ரிட்டரை வைத்துக் கொண்டு இருட்டில் கரைந்தார்கள். மோலி ரகசிய வழியருகே காத்திருந்தாள். அவர்கள் வந்ததும் அதன் கதவைச் சாத்திவிட்டு படிகளிறங்க வழிகாட்டியபடியே குழாய்ப் பாதைக்குள் நுழைந்தாள்.

பாதிரியார்களின் அறைக்குள் வந்து விழும்வரை வழிநெடுகிலும் பூரண அமைதியே இருந்தது. ''இனி என்ன?'' என்றார் டெவ்லின். ''ரிட்டரை இந்த நிலைமைலே வெச்சுக்கிட்டு நாம வெகுதூரம் போய்க்கிட்டிருக்க முடியாது.''

''ஃபாதர் வெரேக்கரின் கார் பின்னாலே இருக்கு'' என்றாள் மோலி.

ஸ்டைனர் ஏதோ நினைவு வந்தவராய் கையை பாக்கெட்டில் போட்டார். ''ம், அதன் சாவியிருக்கு.''

''முட்டாள்தனமா பேசறீங்க'' என்றார் ரிட்டர். ''மோட்டரை உசுப்பின மறு நொடி அதன் சப்தத்தைக் கேட்டுட்டு ரேஞ்ஜர்ஸ் ஆளுங்க சுட்டுத் தீர்த்துடுவாங்க.''

''பின்னால, ஒரு கேட் இருக்கு'' என்றாள் மோலி. ''வயல்ல, சிறு பாலத்தை ஒட்டி பாதையிருக்கு. அதுல, அந்த

காரை நாம சில கெஜ தூரம் தள்ளிக்கிட்டே போயிடலாம்.''

இதன்படி நூற்றைம்பது அடிகள் அவர்கள் சென்றிருந்தபோது மறுபடியும் சர்ச்சில் குண்டு ஓசைகள் துவங்கியிருந்தன. அப்புறம்தான் ஸ்டைனர் மோட்டாரை உசுப்பி, மோலி காட்டிய வழிதனில், கடற்கரை பகுதியை குறிவைத்து பிரயாணிக்க ஆரம்பித்தார்.

★ ★ ★

**அ**றையின் கதவு அறைந்து மூடப்பட்டதும், மாதாவின் அருகே சிறு சலசலப்பு விளைந்தது. ஆர்தூர் எழுந்து நின்றார். துளி ஓசையெழுப்பாமல் மேடையின் வடக்கு திசை நோக்கிப் போனார் அவர். அவருடைய காலை ப்ரஸ்டன் கட்ட பயன்படுத்தியிருந்த கயிற்றினை தனது இடக்கையில் பிடித்தபடி முன்னேறினார்.

முழுக்க கருமையாயிருந்தது. மேடையிலிருந்த ஓரிரு மெழுகுவர்த்திகள் மாத்திரமே ஒளி தந்தன. ப்ரஸ்டன் இன்னமும் சுவாசித்துக் கொண்டிருக்கிறார் என்று திருப்திப்படுத்திக் கொள்ள ஒரு முறை குனிந்தார். அவரை தூக்கி தன் பெரிய தோளில் சுமந்து கொண்டார்.

கார்வே கவலையில் இருந்தார். எதையுமே கண்களால் பார்க்க முடியாத அளவுக்கு மையிருட்டு கட்டியிருந்தது. தொலைபேசி ஒன்றுக்காக சொடுக்குப் போட்டு கேட்ட அவர், வெள்ளை ஸ்கெளட் காருடன் கேட்டிலிருந்த கேனுடன் பேசினார். ''கல்லறை மாதிரி இங்கு அமைதி, மேஜர். இது எனக்கு பிடிக்கலே.''

''ஒரு குண்டு வெடிங்களேன். என்னதான் ஆகுதுனு பாப்போம்'' என்றார் மேன்.

அப்படியே சுட்டுப் பார்த்தார் கார்வே. அதற்கு பதில் ஏதும் கிடைக்கவில்லை. அப்போது அவருக்கு வலப்புறத்தில் இருந்தவர் அவருடைய தோளைத் தொட்டார். "கீழே அங்கே சர்ஜெண்ட்... பாதிரியார் நின்று பேசும் அந்தப் பகுதியைப் பாருங்க... யாரோ நகர்வதைப் போல தெரியலே?"

இந்த வாய்ப்பை பயன்படுத்திக் கொள்ள நினைத்த கார்வே டார்ச்சை அடித்துப் பார்த்தார். வலப்புறத்தில் இருந்த இளைய வீரன் கிலியில் அலறினான். "எனக்கு என்ன நடக்குதுனே விளங்கலே மேஜர்" என்றார் போனில். "நீங்க உள்ளே போய் பார்த்து விடுவது நல்லதுனு படுது."

சில கணத்துக்குப் பிறகு துப்பாக்கியின் ஒரு குண்டு மெயின் கதவின் பூட்டினை உடைத்தெறிந்தது. ஹார்ரி கேனும் ஒரு டசன் ரேஞ்ஜர்ஸ் வீரர்களும் உள்ளே புகுந்தனர். ஆனால் அங்கு ஸ்டைனர் இல்லை. டெவ்லின் இல்லை. தனது தோளில் குருதி வழிந்து கொண்டிருந்த ப்ரஸ்டனுடன் முதல் பெஞ்ச் வரிசையில் குனிந்த நிலையில் இருந்த ஆர்தூர் மட்டுமே கண்களில் பட்டார்.



# 19

**மெ**ல்த்தாம் ஹவுஸில், டெரஸ்ஸினை நோக்கியிருக்கும் விசாலமான லைப்ரரி அறையை தனது பிரத்தியேக உபயோகத்திற்காக ப்ரைம் மினிஸ்டர் தேர்ந்தெடுத்துக் கொண்டார். ஹார்ரி கேன் ஏழரை மணிக்கு வெளியே வந்தபோது கார்கோரன் காத்திருந்தார்.

''ரொம்ப ஈடுபாடா ஆகிட்டார்'' என்றார் கேன். ''நடந்து முடிந்துள்ள தொடர் சம்பவங்கள் மற்றும் போர் பற்றி வார்த்தை விடாமல் ஒரு கட்டுரை வேணும்னு கேட்கிறார். ஸ்டைனர் குறித்து ரொம்ப வியந்திருக்கார் அவர்.''

''நாம மட்டும் வியக்கலையா என்ன! எனக்கு இப்ப என்ன தெரியணும்னா, அந்த நாசமாப் போற ஆள் எங்கேயிருக்கான் என்பதுதான். அந்த ஐரீஷ்க்கார ரௌடியும் எங்கே போய்த் தொலைஞ்சான்?''

''காட்டேஜ் பக்கத்துலே எந்த ஒரு இடத்திலும் அவர் கிடையாது. இது நிச்சயம். நான் இப்ப உள்ளே போவதற்கு முன்னாலே கார்வேயிடமிருந்து ஒரு ரேடியோ மெஸேஜ் வந்தது எனக்கு. டெவ்லினை காட்டேஜுக்குள்ளே தேடுவதற்காக இவங்க போனபோது அவருக்காக அங்கே ரெண்டு ஸ்பெஷல் ப்ராஞ்ச் போலீஸ் இன்ஸ்பெக்டர்கள் காத்திருந்தாங்களாம்.''

''அடக்கடவுளே'' என்றார் கார்கோன். ''அவரை எப்படி துல்லியமா குறிவெச்சு போலீஸ் வந்தது?''

''போலீசுக்கு உளவு கிடைச்சிருக்கும். இல்லேன்னா வேற ஏதாவது துப்புத் துலக்கியிருப்பாங்க. எப்படியிருந்தாலும் மறுபடியும் அவர் அங்கேயே தங்கியிருக்கார். கடலோரப் பகுதிகளிலே சாலையை ஆங்காங்கே அவர் மறிச்சிருக்கார். ஆனா நமக்கு மேலும் ஆட்கள் வந்து சேரும்வரை நம்மாலே ஒண்ணும் பண்ண முடியாது.''

''வராங்க சார். வராங்க'' கார்கோரன் சொன்னார். ''தொலைபேசிகளை மறுபடியும் உங்க ஆட்கள் சீர்செஞ்சுட்டதால நான் லண்டனுடன் தொடர்பு கொண்டு நிறைய பேசியிருக்கேன். இன்னும் சில மணி நேரங்களிலே முழு வட நார்ஃபால்க் பகுதியும் சீல் பண்ணப்பட்டிருக்கும். காலைக்குள் இதன் அனைத்து பகுதியும் மிலிட்டிரியின் கட்டுப்பாட்டுக்குள் வந்திருக்கும். ஸ்டைனர் பிடிபடும்வரை இதே நிலையே தொடரப்படும்.''

கேன் ஒப்புதலாய் தலையசைத்தார். ''ப்ரைம் மினிஸ்டரை அவர் நெருங்குவார் என்பதற்கு வழியே கிடையாது. அவர் அறை வாசலில் ஆள் போட்டிருக்கேன். வெளியிலிருக்கும் டெரஸிலும் ஒரிருவர். டசன் காவலர்கள் தோட்டத்தில், துப்பாக்கிகளுடன். யாராவது கண்ல பட்டால், முதலில் அவங்க சுடுவாங்க. விபத்து நடந்துடுச்சு அது இதுன்னு நாம பிறகு வாதிச்சுக்கலாம்.''

ஒரு அதிகாரி, கையில் சில தாள்களுடன் உள்ளே வந்தான். ''இறுதிப் பட்டியல் வெச்சிருக்கேன், சார் ஒருமுறை பார்க்கணுமா?''

தந்துவிட்டு அவன் வெளியேறிவிட முதல் தாளைப் பார்த்தார் மேஜர் கேன். ''ஃபாதர் வெரேக்கர் மற்றும் சில லோக்கல் கிராமவாசிகளை அழைச்சிக்கிட்டுப் போய்

ஜெர்மன் பாடிகளைக் காட்டி அடையாளம் கேட்டிருக்காங்க.''

''அவர் எப்படியிருக்கார்?''

''சுயநினைவு இழந்திருக்கார். மற்றபடி ஓ.கே. காட்டப்பட்ட அடையாளங்களைப் பொறுத்தவரை ஏறத்தாழ அனைவருமே அடையாளம் காணப்பட்டாச்சு, ஸ்டைனர், அவருக்கு அடுத்த நியூமேன், அஃப்கொர்ஸ் அந்த ஐரீஷ்மேன் தவிர. மீதி 14 பேரும் செத்தாச்சு.''

''ஆனா அந்த ராட்சஸனுங்க எந்த வழியிலே தப்பிச்சுப் போனாங்க? அதுதான் எனக்கு தெரியணும்.''

''கார்வே கூட்டம் சுடும் பாதையிலிருந்து விலக, சர்ச்சின் ஒதுக்குப்புறமான அறையை பயன்படுத்தியிருக் காங்க. இந்த பமீலாவும் மோலி பொண்ணும் பாதிரியாரின் இரகசிய குழாய்ப் பாதைலே வெளியேறினப்போ அவசரத்தில் அந்தப் பாதையை சரியா அடைக்காம போயிருக்காங்க. இதுதான் என் ஊகம்.''

''இந்த ரௌடிப்பய டெவ்லின் மேல் அந்த அற்புதமான மோலிப் பொண்ணு உயிரையே வெச்சிருக்குனு கேள்விப்பட்டேன்'' என்றார் கார்கோரன். ''இதுல அவளும் ஏதாவது ஒருவகைல ஈடுபட்டிருக்கலாம்னு தோணல?''

''அப்படி எனக்கு தோணல. இந்த முழு சமாச்சாரமும் நடந்திருக்கவே வேண்டாமேனுதான் அந்தப் பொண்ணு கருதுவதா பமீலா சொல்றாங்க.''

''இருக்கலாம்'' என்றார் கார்கோரன். ''இதிருக்கட்டும்... நம்ம பக்கம் உயிரை விட்டவங்க?''

கேன், அடுத்த பட்டியலை கவனித்தார். ''ஷாஃப்ட்டோ மற்றும் கேப்டன் மெல்லோரி உட்பட, 22 பேர் காலி. எட்டு பேருக்கு காயங்கள்.'' மறுப்பாய் அவர் தலையை

அசைத்தார். "இது, நம்மில் இருந்த மொத்த கூட்டுத் தொகையான நாற்பதிலே."

"இந்த விஷயத்துல விளம்பரங்களே இருக்கக்கூடாதுனு லண்டன் விரும்புது. பெண்டகனின் நிலைப்பாடும் இதுதான். பிரதம மந்திரியைக் கையகப்படுத்த ஜெர்மனி பாராசூட் வீரர்கள் முயற்சித்தார்கள் எனும் முக்கிய தலைப்புச் செய்தியை சொல்லிடக்கூடாதுன்னு எத்தனை வாய்களைத்தான் நம்மால பொத்தி வெச்சுட முடியும்?" என்று கார்கோரன் விசனப்பட்டுக் கொண்டிருந்தபோது கதவு திறந்தது. அந்த இளைய அதிகாரி உள்ளே பார்த்தார். "மீண்டும் லண்டன் போன்ல, கர்னல்."

கார்கோரன் வேகமாய் வெளியேற, கேன் அவரை தொடர்ந்தார். வெளியே இருளாகவும் கடும் மழையாகவும் இருந்தது. அப்படியே படிகளிறங்கினர். அக்கணத்தில் ஒரு கரம் அவர் தொண்டையில் அழுத்தியதை எதிர்கொண்டார். "நீங்க யார்?" என்று கேட்டது ஒரு குரல்.

"கேப்டன் கேன்."

ஒரு டார்ச் அணைந்தணைந்து எரிந்தது. "ஓ சாரி, சார் கார்ப்பொரல் ப்ளீக்கர்."

"நீங்க பெட்ல இருக்கணும், ப்ளீக்கர்? கண் எப்படியிருக்கு?"

"ஐந்து தையல்கள், மேஜர். ஆனா சரியாயிடும் உங்க அனுமதியுடன் நான் கிளம்பறேன் சார்."

அவர் மறைய இருளையே முறைத்தபடி நின்றார் கேன். "என்னுடனேயே பழகும் மனிதர்களைக்கூட...." என்று மிருதுவாய் சொன்ன அவர் பின்வருமாறு மிருதுவாய் முடித்தார்: "... என் கடைசி மூச்சின்போது கூட என்னால முழுசா புரிஞ்சுக்க முடியாதுனு நினைக்கிறேன்."

★ ★ ★

**வ**டக்கு கடற்பகுதியில், காற்றிருந்தது. மழையும் ஆங்காங்கே பெய்தது. காலைவரை மூடுபனி துளைத்தது. படகுகள் கிளம்ப ஆயத்தமாகி எட்டு மணிவாக்கில் கடற்கரை ஷிப்பிங் வளாகத்துக்குள் வந்திருந்தன.

முல்லர் படகினை செலுத்த தயாராயிருந்தார். கடைசிக்கட்ட நடவடிக்கைகளை மிகுந்த சிரத்தையுடன் அவர்கள் குறித்திருந்த வரைபடத்தின் மீது கவிழ்ந்திருந்தார் கொய்னிக். ''கிழக்கு ப்ளாக்கெனி பாயிண்ட் வழியாக, பத்து மைல்கள், எரிச்''

இருண்டுகிடந்த முன்பகுதியை கவனித்தபடி ஒப்புதலாய் தலையசைத்தார் முல்லர். ''இந்தப் பனி ஆதரவா தெரியல.''

கதவு ஓசையுடன் திறக்கப்பட தந்திகளைப் படித்தறியும் டூஸென் என்பவர் வந்தார். மெலிதான சமிக்ஞை தாளினை அவர் தூக்கிப் பிடித்திருந்தார். ''லேண்ட்ஓர்த் பகுதியிலிருந்து சேதி, சார்.''

அதை வாங்கிய கொய்னிக் வரைபட மேஜை விளக்கின் ஒளியில் படித்தார். சில கணங்கள் அதனை முறைத்து பார்த்தார். பிறகு அதனை வலக்கையில் ஒரு சிறு உருண்டையாக கசக்கினார்.

''என்னது அது?'' கேட்டார் முல்லர்.

''கழுகு, அழிக்கப்பட்டு விட்டது.''

இங்கு ஒரு சிறு இடைவெளி விளைந்தது. ஜன்னலில் அறைந்தது மழை. முல்லர் கேட்டார்: ''அப்ப நமக்கிடப்பட்ட கட்டளைகள்?''

''என் முடிவுக்கு.'' கொய்னிக் தனது தலையை மறுப்பாய் அசைத்தார். ''கொஞ்சம் நினைச்சுப் பாருங்க. கர்னல் ஸ்டைனர், ரிட்டர் நியூமேன் அந்த அற்புதமான மனிதர்கள் அனைவரையும்.''

*சிறுவனாயிருந்த காலந்தொட்டு இப்போதுதான் முதல்முறையாக அழத் தோன்றியது அவருக்கு. கதவை திறந்த அவர் வெளியே நிலவிய இருட்டையே முறைத்துப் பார்த்தார். மழை அவருடைய ம்கத்தில் சாட்டையடியாய் விழுந்தது. "அஃப்கொர்ஸ்... அவங்கல்ல யாராவது நிச்சயமா சாதிப்பாங்க" என்றார் முல்லர் எச்சரிக்கையாய். "இப்படிப்பட்ட திட்டங்களெல்லாம் எப்படியெல்லாம் திருப்பங்கள் காணும்னு உங்களுக்கே தெரியுமே..."*

*கொய்னிக் கதவை ஓசையாய் மூடினார். "நீங்க அங்கே போக இன்னும் விரும்பறீங்களா?" முல்லர் இதற்கு பதில்தர விரும்பவில்லை. டூஸென் பக்கமாய் திரும்பி கேட்டார்: "நீங்களுமா?"*

*"நாம ரொம்ப காலமா இணைந்தேயிருக்கோம்,சார்" என்றார் அவர். "நாம எங்கே போறோம்னு இதுவரைக்கும் பிரயாணத்துக்கு முன்னால உங்களைக் கேட்டதே கிடையாது."*

*கொய்னிக் மனம் பூராவும் பெருமையால் பூரித்தார். அவருடைய முதுகை தட்டித் தந்தார். "ஆல் ரைட். அப்ப சிக்னலை அனுப்புங்க."*

★ ★ ★

**ரே**டிலின் நிலைமை மோசமடைந்து கொண்டிருந்தது. மத்தியானப் பொழுதிலிருந்து அவருடைய உடல்நிலை தொடர்ந்து குன்றியபோதிலும், மருத்துவரின் தீவிர ஆலோசனையையும் தவிர்த்து, படுக்கையில் இருக்க அவர் மறுத்துவிட்டார். ஜோன்னா க்ரேயின் கடைசி ரேடியோ சம்பாஷணைக்குப் பிறகு தகவல் தொடர்பு அறையிலேயே தான் இருப்பேன் என்று சொல்லி விட்டார் ரேடில். ஆப்ரேட்டர் கொய்னிக்கைப் பிடிக்க முயற்சித்துக் கொண்டிருந்தபோது, தரப்பட்ட கை வைத்த நாற்காலியில்

சாய்ந்து கிடந்தார். அவருடைய நெஞ்சின் வலி தாளமுடியாமல் பிசைந்தது மட்டுமல்ல... அது அப்படியே இறங்கி கைகளிலும் பரவிற்று. இது என்ன என்று அறிந்துக்கொள்ள முடியாத முட்டாள் கிடையாது அவர். இதன் அர்த்தம் அவருக்கு தெரியும். ஆனால் இது ஒன்றும் அவருக்கு முக்கியம் கிடையாது. இப்போது எதுவுமே அவருக்கு முக்கியம் கிடையாது.

எட்டடிக்க ஐந்து நிமிடங்கள் இருந்தபோது, வெற்றிச் சிரிப்புடன் திரும்பினார் ஆபரேட்டர். ''அவங்களைப் பிடிச்சுட்டேன், சார். சேதி கிடைச்சுடுச்சு. அர்த்தம் விளங்கிடுச்சு.''

''நன்றி கடவுளே'' என்றார் ரேடில். தனது சிகரெட் பெட்டியை திறக்க அவர் தடுமாறியபோது திடுமென்று விரல்கள் இறுகிப் போயின. இதற்கு டாக்டர் விட் உதவும்படி ஆனது.

பிரத்தியேகமான ரஷ்யன் சிகரெட்டை உள்ளிருந்து எடுத்தபோது, ''ஒண்ணேஒண்ணு தான் பாக்கியிருக்கு, ஸார்'' என்றார் அவர். அதனை அவருடைய வாயில் வைத்து பொருத்தினார்.

ஆபரேட்டர் தனது எழுதும் அட்டையில் வேகவேகமாய் எழுதிக்கொண்டிருந்தார். அதனை எடுத்துக்கொடுத்து, ''ரிப்ளே, சார்'' என்று சொன்னார்.

விளங்க முடியாத ஏதோவொரு வகை மயக்கம் ஏற்பட்டது ரேடிலுக்கு. அவர் கண்பார்வை நன்றாய் மங்கியது. ''நீங்களே படிங்க, விட்'' என்றார்.

''இருந்தாலும் கூட்டினை சென்று பார்ப்போம். முதிர்ச்சியற்ற சில குஞ்சுப் பறவைகளுக்கு உதவி தேவைப்படலாம். குட் லக்'' படித்து முடித்து விட்டு, பயக்கலவரம் கொண்டார். ''எதுக்காக இப்படியொரு கடைசி வார்த்தை, சார்?''

''ஏன்னா அவருக்கு உள்ளார்ந்த உணர்வுகள் அதிகம்'' மெதுவாய் தனது தலையை மறுத்து அசைத்தார் அவர். ''இந்த பயலுங்க அத்தனை பேரையும் நாம் எங்கேயிருந்து கொண்டு வந்தோம், ஆங்? இத்தனை தைரியமும், தியாகமும் எதுக்காக? எவற்றுக்காக?''

விட், அசௌகரியமானார். ''சார், ப்ளீஸ்.''

ரேடில் சிரித்தார். ''என்னுடைய இந்த கடைசி ரஷ்யன் சிகரெட்டைப் போலவே, அனைத்து நல்ல விசயங்களும் உடனேயோ அல்லது சற்று காலந்தாழ்த்தியோ ஒரு முடிவுக்கு வந்துதான் ஆகணும்.'' டெலிபோன் ஆபரேட்டர் பக்கமாய் திரும்பிய அவர், இரண்டு மணிநேரங்களுக்கு முன்னாலேயே பண்ணியிருக்க வேண்டிய ஒரு விஷயத்தை இப்போது பண்ணும்படி சொன்னார்: ''பெர்லினுக்கு இப்ப எனக்கு இணைப்பு ஏற்படுத்திக் கொடுங்க.''

★ ★ ★

**ஹா**ப்ஸ் எண்ட் அருகேயுள்ள காட்டு பகுதியின் பின்னால் ஒரு சிதிலமடைந்த காட்டேஜ் இருந்தது. அது மோரீஸ் காரினை மறைத்து வைக்க உதவியாய் அமைந்தது.

ரிட்டரை கவனித்துக் கொள்ளும்படி மோலியிடம் சொல்லி விட்டு ஸ்டைனரும் டெவ்லினும் கிளம்பியபோது மணி ஏழேகால். காட்டுவழியே எச்சரிக்கையாய் சென்று எதிரிகள் பற்றிய தகவல்களை அறிய இருவரும் போனார்கள். காட்டேஜ் நோக்கி கார்வேயும் அவருடைய ஆட்களும் போவதை சரியான தருணத்தில் பார்த்தார்கள் இவர்கள். நிலைமையை பற்றி ஆராய வேகமாய் இரண்டு பேரும் திரும்பினார்கள்.

''ஆதாயமா இல்லை'' என்றார் டெவ்லின்.

"நீங்க காட்டேஜுக்கு இப்ப போக வேணாம். இந்த சதுப்புப் பகுதி வழியாகவே பிரயாணிச்சு சிறிது நேரத்துல பீச்சை அடைய முடியும்" என்று சுட்டிக்காட்டினார் ஸ்டைனர்.

"எதுக்காக?" என்று பெருமூச்செறிந்தார் டெவ்லின். "ஒரு அவசர சமாச்சாரத்தை நான் சொல்லணும், கர்னல். நான் ஓடிடணும் எனும் ஒரே குறிக்கோளுடன் அவசரமா போனதுல என்னுடைய போனை காட்டேஜுலேயே விட்டுட்டேன். அது இப்ப கிச்சன் கதவுல தொங்கிக்கிட்டிருக்கும்."

ஸ்டைனர் மெலிதாய் சிரித்துக்கொண்டார். "உங்களை மாதிரி இன்னொருத்தர படைச்சிருக்கவே முடியாது, டெவ்லின். உங்களை படைச்ச அக்கணமே உங்க அந்த அச்சை ஆண்டவன் உடைச்சிருக்கணும்!"

"இருக்கட்டும்" என்றார் டெவ்லின். "ஆனா, இப்ப இருக்கிற நிலமையிலே, என்னாலே கொய்னிக்குடன் தொடர்பேற்படுத்த முடியாது."

"உங்க சமிக்ஞை இல்லாமல் அவர் இங்கே வர மாட்டாரா என்ன?"

"சமிக்ஞை தரப்படும் என்பதுதான் ஏற்பாடு. ஒன்பதிலிருந்து பத்துக்குள். ஜோன்னா க்ரேக்கு என்ன நடந்திருந்தாலும், அதைப் பற்றிய சமாச்சாரத்தை அவங்க லாண்ட்ஸ்லூர்ட் பகுதிக்கு சேதியா அனுப்பியிருப்பாங்க என்பதும் நிச்சயம். அந்த சேதில எதையாவது ரேடில் உடனடியா கொய்க்னிக்கு அனுப்பியிருந்தால், அவங்க வராமல் திரும்பிடலாம். இத்தனை இருக்கு இதுல."

"நோ" என்றார் ஸ்டைனர். "இப்படியெல்லாம் எதுவும் எனக்கு தோணல. கொய்னிக் வருவார். உங்க சமிக்ஞை போய்ச் சேராவிட்டாலும் அவர் பீச்சுக்கு வருவார்."

''எதுக்காக?''

''ஏன்னா, தான் வருவேன்னு அவர் என்னிடம் சொல்லியிருக்கார்.'' அமரிக்கையாய் சொன்னார் ஸ்டைனர். ''ஆக, உங்க போன் இல்லாமலே நிலைமையைக் கையாள முடியும்னு தெரியுதா? ரேஞ்ஜர்ஸ் தேடுதல்ல ஈடுபட்டாலும் அவங்க பீச்சை பற்றி பொருட்படுத்த மாட்டாங்க. ஏன்னா அது சுரங்கப் பகுதியா மாறியிருக்குனு குறிப்பு இருக்கு.''

''சரி... ரிட்டரை இந்த நிலைல விட்டுட்டு நான் கிளம்புவதா?''

''அவருக்கு தேவையானதெல்லாம் ஒரு ஊன்றுகோலும் தாங்கிக்க ஒரு தோளும். அவ்வளவுதான். ஒரு தடவை, ரஷ்யாவுல கால்ல குண்டுடன் கொட்டும் பனியில எண்பது மைல் நடந்திருக்கார் இவர். இருக்கும் இடத்திலேயே இருந்தால் மரணம் நிச்சயம்னு தெரிந்துவிட்டால், வேற இடத்துக்கு தானாகவே மனசு விரட்டியடிச்சுடும். உடம்புக்கு எத்தனை உபாதைகள் இருந்தாலும். கிளம்புங்க. நேரம் மிச்சமாகும். வழியிலேயே நீங்க கொய்னிக்கை சந்திங்க.''

''எங்ககூட நீங்க வரல'' இது ஒரு கேள்வியாய் இல்லாமல் நிதர்சனமாய் சொல்லப்பட்டது.

''நான் எங்கே போகணும்னு, மை ஃப்ரண்ட், உங்களுக்கே தெரியும்னு நினைக்கிறேன்.''

டெவ்லின் பெருமூச்செறிந்தார். ''எவன் எக்கேடு கெட்டுப் போனாலும் துளி கவலைப்படாத ஒரு ஜென்மம் நான். ஆனா உங்க விசயத்துல மட்டும் நான் விதிவிலக்கு. நீங்க எதிரிகளிடம் போகக்கூடாது. இனிப்பை ரீங்காரமிடும் ஈக்கூட்டத்தைவிட அதிக ஆட்கள் இப்ப வேவுல இருப்பாங்க. உங்களுக்காக.''

"அப்படியே ஆனாலும், நான் முயற்சிக்கப் போறேன்."

"ஏன்? ஏன்னா, அது உங்க அப்பாவை மறுபடியும் வீட்டுக்குக் கொண்டு வரும் கேஸுக்கு உதவலாம் என்பதாலா? இது ஒரு கானல். இந்த கேஸ்ல நிஜத்தை எதிர் கொள்ளுங்க. வேற மாதிரியான ஒரு முடிவுல அந்த ப்ரின்ஸ் அல்ப்ரெஷ்ட்ஸ்ட்ராஸ்ல இருக்கும் கிழப்பய இருந்தால், நீங்க பண்ணும் எதுவும் அவனை மாற்றாது."

"யெஸ். நீங்க சொல்வது சரிதான். நானும் பல தடவை இப்படி நினைச்சுப் பார்த்ததுண்டு."

"அப்புறம் எதுக்கு?"

"ஏன்னா, வேற எதையும் செய்வது இப்போதைக்கு இம்பாஸிபிள் என்பதால்."

"எனக்கு விளங்கல."

"உங்களுக்கு விளங்குதுனு நினைக்கிறேன் நான். விடுங்க. இப்போதைய நிலையை பொறுத்தவரை, நாம மற்றவர்களுடன் போய் உடனே சேர்த்துடணும்னு நான் நினைக்கிறேன்."

"ஆல் ரைட்" என்றார் டெவ்லின் பிடிப்பில்லாமல்.

இருட்டில் பின்பக்கமாய் நகர்ந்து சிதிலமடைந்த அந்த காட்டேஜுக்குப் போனார்கள். ரிட்டரின் தொடைக்கு பேண்டேஜ் போட்டுக்கொண்டிருந்தாள் மோலி. அவரிடம் "எப்படியிருக்கு இப்ப?" என்று கேட்டார் ஸ்டைனர்.

"ஃபைன்" என்றார் ரிட்டர். ஆனால் ஸ்டைனர் அவருடைய நெற்றியில் கைபதித்து பார்த்தபோது அது முழுக்கவும் வியர்வையில் ஊறிப்போயிருந்தது.

மழைக்காக சுவரோரமாய் ஒதுங்கி சிகரெட் பிடித்துக் கொண்டிருந்த டெவ்லினிடம் போனாள் மோலி. "அவர்

மோசமா இருக்கார்'' என்றாள். ''என்னைக் கேட்டால், உடனடியா ஒரு டாக்டரிடம் கூட்டிப் போகணும்பேன்.''

''அவரை பற்றி கவலைப்பட வேண்டாம். இதுபோல பல அனுபவங்கள் உண்டு'' என்றார் டெவ்லின். ''என் கவலையெல்லாம் உன்மேலத்தான். இன்னிக்கு ராத்திரி பண்ணின இந்த வேலைகளால் நீதான் இனி ரொம்பவும் ஆபத்துல சிக்குவே.''

விளக்க முடியாதபடி வித்தியாசமானாள் அவள். ''சர்ச்சிலிருந்து நான் வெளியேறியதை யாரும் பார்க்கல. அப்படி நான் செஞ்சேன்னு யாராலும் நிரூபிக்க முடியாது. அவங்க எல்லாரையும் பொறுத்தவரை நான் வயல்வெளி ஓரமா உட்கார்ந்துக்கிட்டு என் காதல் பற்றிய உண்மை தெரிய வந்ததால் மனம் திறந்து ஒனு அழுதுக்கிட்டிருந்கேன். அவ்ளோதான்.''

''வேணாம், மோலி, ப்ளீஸ்.''

''பாவம் அவ-இப்படி சொல்லுவாங்க. அட்ரஸ் தெரியாத ஓர் அந்நியனை நம்பி தன்னை சுட்டுக்கிட்டா; வேணும் நல்லா... இப்படியும் சொல்வாங்க.''

சம்பந்தமில்லாமல் அவர் சொன்னார்: ''நான் உனக்கு நன்றி தெரிவிக்கலே.''

''பரவாயில்ல. நான் உங்களுக்காக பண்ணல. எனக்காக பண்ணினேன்.'' பல வகைகளில் அவள் ஒரு சிம்பிள் கேர்ள். அப்படியேயிருக்க விரும்புபவள் அவள். இருந்தாலும் இப்பொழுது, அவளுடைய வாழ்க்கையில் முன்னெப்போதும் இல்லாத அளவுக்கு, தன்னை பற்றி முழுக்கவும் விளக்கிவிட வேண்டும் என்று தீர்மானமாயிருந்தாள். ''ஐ லவ் யூ. அதுக்காக, நீங்க எப்படியிருக்கீங்களோ அதை நான் விரும்பறேன்னோ அல்லது நீங்க என்னெல்லாம் பண்ணினீங்களோ அதெல்லாம் எனக்கு ரொம்ப பிடிச்சதுன்னோ அல்லது

உங்களை புரிஞ்சுக்கிட்டேன்னோ அர்த்தம் கிடையாது. இதெல்லாம் வேற. காதல் ஒரு தனிப்பட்ட சமாச்சாரம். அது, அதற்கென்ற ஒரு தனிமை கம்பார்ட்மெண்ட்டுல மட்டுந்தான் இருக்கும். அதனாலதான் இன்னிக்கு ராத்திரி சர்ச்சிலிருந்து உங்களை நான் வெளில கூட்டிட்டு வந்தேன். இப்படி நான் பண்ணினது தப்பு அல்லது ரைட் இதெல்லாம் தேவையில்ல எனக்கு. ஆனா உங்களை அப்படியே உள்ளேயே விட்டுட்டு நீங்க சாவதை பார்த்துக்கிட்டு நான் உயிரோட இருந்திருக்க மாட்டேன்.'' அவள் தன்னை அப்படியே விடுவித்துக்கொண்டாள்.

அவள் காரை நோக்கி நடந்தாள். உமிழ்நீரை தொண்டைக்குள் விழுங்க முடியாமல் ஆனார் டெவ்லின். இது ஒரு விநோதமான அனுபவம் அல்லவா? அவர் வாழ்க்கையில் கேட்டிராத ஒரு துணிச்சலான உரை. உச்சியிலிருந்து குதிக்க இங்கொரு பெண் உற்சாகமாய் தயாராகிவிட, ஆனால் ஓர் ஆணோ அனைத்தும் பாழாகி விட்டதே என்று கூக்குரலிட்டு அழ ஆரம்பித்தான்.

★ ★ ★

**ப**த்து இருபதுக்கு டெவ்லினும் ஸ்டைனரும் மீண்டும் மரங்களுக்கு இடையே சென்றார்கள். புதருக்கிடையில் அங்கிருந்த காட்டேஜ் இருளில் மூழ்கிக் கிடந்தது. ஆனால் மெயின் ரோடில் ஓசையின்றி பேசப்படும் குரல்களும் ஒரு வாகனத்தின் மங்கலான பிம்பமும் இருந்தன. ''இன்னும் கொஞ்சம் நெருக்கமா போவோம்'' முணுமுணுத்தார் ஸ்டைனர்.

இருவரும் ஓசைப்படாமல் முன்னேறினார்கள். அப்போது மழை கனமாகியிருந்தது. ரோட்டின் இருபக்கங்களிலும் ஒவ்வொரு ஜீப்புகள் இருந்தன. மரங்களுக்கு அடியில்

பற்பல ரேஞ்ஜர்ஸ் வீரர்கள் இருந்தார்கள். கார்வேயின் கையில் ஒரு தீக்குச்சி பற்றியது. அதில் அவருடைய முகத்தை அது கொஞ்சமாய் வெளிச்சமிட்டுக் காட்டியது.

ஸ்டைனரும் டெவ்லினும் மறைந்து நின்றுக் கொண்டார்கள். ''அவந்தான் தலைவன்'' என்றார் ஸ்டைனர். ''மாஸ்டர் செர்ஜெண்ட். உங்க தலை தென்படுதானு பார்த்துக் கிட்டிருக்காங்க.''

''காட்டேஜ்லேயே தேடலாமே?''

''அங்கும் ஆட்களை அவர் போட்டு வெச்சிருக்கலாம். இங்கே, சாலையையும் கவர் பண்ணிடறாரே.''

''கவலையில்லை'' சொன்னார் டெவ்லின். ''நாம் சாலையைக் கடந்து போவோம். நீங்க சொன்னதைப் போலவே நடந்தே பீச்சுக்குப் போயிடலாம்.''

''மாற்று ஏற்பாடு இருந்தால் சுலபமா முடியும்.''

''அதாவது?''

''சாலையை அவங்க மறித்திருக்கும் வழியிலே நான் அந்த திருட்டுக் கார்ல போயிடறேன். உங்க மழை கோட்டைத் தந்தீங்கன்னா, அதை உடுத்திக்கிட்டு நழுவிடுவேன்.''

அவரது முகத்தை டெவ்லினால் இருட்டில் பார்க்க முடியவில்லை. திடுமென்று, அப்படி பார்க்க வேண்டாம் என்று தோன்றியது அவருக்கு. ''நீங்க ரொம்ப மோசமானவர் ஸ்டைனர்'' என்று கூறி விட்டார். ''எக்கேடு கெட்டுப் போங்க.'' தனது துப்பாக்கியை மட்டும் உருவிக் கொண்டு தனது கோட்டினை அவிழ்த்து அவரிடம் தந்தார். ''வலப்பக்க பாக்கெட்டிலே சைலன்ஸர் பொருத்தப்பட்ட கன் இருக்கு. ரெண்டு குண்டுகளும் எக்ஸ்ட்ரா இருக்கு.''

''தேங்க் யூ'' தனது சீருடைய அவிழ்த்து மறைத்தார். டெவ்லினின் கோர்ட்டினை அணிந்துகொண்டார். ''ஆக, இறுதிக் கட்டத்துக்கு வந்திருக்கோம். இங்கே நாம குட்பை சொல்லிக்கலாம்னு நினைக்கிறேன்.''

''ஒரு விசயத்தை மட்டும் சொல்லுங்க'' என்றார் டெவ்லின். ''இத்தனை பண்ணினது-எதுக்காவது உதவுமா? பைசா பெறுமா?''

''ஓ. நோ'' என சிரித்தார். ஸ்டைனர். ''தத்துவங்கள் வேண்டாம். ப்ளீஸ் நீங்க எதை தேடிக்கிட்டிருக்கீங்களோ, அது உங்களுக்கு கிடைச்சிடுச்சா, ஃப்ரண்ட்?''

''என் கைகளிலே ஏற்கெனவே அது இருந்தது. ஆனா தேடறேன் பேர்வழினு அதை நான் தொலைச்சுட்டு நிக்கறேன்'' என்றார் டெவ்லின்.

''நாம இப்ப இருப்பது ஓர் ஆபத்தான கட்டத்துல'' என்றார் ஸ்டைனர். ''நீங்களே உங்களை பத்திரமா பாதுகாத்துக்கணும்.'' சொல்லிவிட்டு திரும்பியவர் அந்த சிதிலமடைந்த காட்டேஜ் திசையில் சென்றார்.

ரிட்டரைக் காரிலிருந்து இறக்கினார்கள். அதனைச் சாலையிலிருந்து மறுபக்கத்தில் திருப்பினார்கள். அந்த திசையில் பயணிக்குமாறு அதனை நிறுத்தினார்கள்.

''இதெப்படி?'' என்றார் ஸ்டைனர்.

''ஃபைன்'' என்றார் ரிட்டர் தைரியமாய். ''இப்ப நாம கிளம்பறோமா?''

''கிளம்பறீங்க. நான் வரல. சாலையின் கோடில ரேஞ்ஜர்ஸ் வீரர்கள் இருக்காங்க. சிறுசா ஒரு மாற்று வழிய தேர்ந்தெடுத்துக்கலாம்னு நினைக்கிறேன். உங்களோட நான் பிறகு சேர்ந்துக்கறேன்.''

ரிட்டர் அவருடைய கையை இறுக்கமாகப் பிடித்தார். ''நோ, சார் வேடிக்கை வினையாயிடும்.''

"நியூமேன்... நானறிந்த வீரர்களில் நீங்க சந்தேகத்துக்கு அப்பாற்பட்ட ஒரு சுத்த வீரன். நீங்க உங்க கடமையிலிருந்து சிறிதும் விலகியது கிடையாது. என் கட்டளைகளையும் ஒரு கணம்கூட நீங்க அவமதித்தது கிடையாது."

விறைப்பானார் ரிட்டர். "நீங்கள் இடும் கட்டளைபடியே ஆகட்டும், சார்"

"குட்" என்றார் ஸ்டைனர். "நீங்க கிளம்புங்க இப்ப. ப்ளீஸ் மிஸ்டர் டெவ்லின் நீங்களும். குட்லக்."

அவர் கார் கதவை திறக்க, "சார்" என்றார் ரிட்டர் தழுதழுப்பாய்.

"யெஸ்?"

"உங்களுடன் பணியாற்றியது, எனக்கு ஒரு பெருமை" என்றார் அவர்.

"தேங்க் யூ, நியூமேன்."

மோரீஸுக்குள் ஏறினார் ஸ்டைனர். ப்ரேக்கினை இளக்கினார். அது பாதையில் உருள ஆரம்பித்தது.

★ ★ ★

**டெ**வ்விலினும், மோலியும் மரங்களுக்குள் நடந்தார்கள். அவர்களுடன் ரிட்டரும். "நீ கிளம்ப வேண்டிய நேரம், பெண்ணே" என்றார் டெவ்லின் முணுமுணுப்பாய்.

"நான் உங்களுடன் பீச் வரைக்கும் வரேன், லியாம்" என்றாள் அவள் தீர்மானமாய்.

விவாதிக்க அவருக்கு வாய்ப்பு இல்லை. ஏனென்றால் நாற்பது கெஜ தொலைவில் காரின் என்ஜின் உசுப்பப்பட்டிருக்க, அதன் ஹெட் லைட்டுகள் பிரகாசிக்க ஆரம்பித்திருந்தன. ரேஞ்சர்களில் ஒரு வீரன் தனது சிகப்பு விளக்கினை ஆட்ட ஆரம்பித்திருந்தான். ஜெர்மானிய நண்பன் அப்படியே வேகமாய் நிறுத்தாமல் ஓட்டிக்

கொண்டு விரைந்து விடுவார் என்றுதான் டெவ்லின் நினைத்தார்... ஆனால் அவருடைய ஆச்சரியத்துக்கு தீனி போடும் விதமாய் அவர் வாகனத்தின் வேகத்தினை குறைத்தார். எதையோ கணக்கிட்டுத்தான் ஸ்டைனர் அந்தக் கடைசி நொடி நாடகத்தை அரங்கேற்றினார். ஒவ்வொரு வீரனையும் தன்பால் இழுத்து விடும் இலக்குடன் அதை நிறைவேற்ற அவருக்கு ஒரேயொரு வழிதான் இருந்தது. கார்வே நெருங்கி வரும்வரை காத்திருந்தார் அவர். அவரது இடக்கை ஸ்டீரிங்கில். வலக்கையில் துப்பாக்கி.

''மன்னிக்கணும்'' என்றார் நெருங்கி வந்த கார்வே. ''நீங்க யார் எனும் அடையாளம் காட்டணும்.''

ஸ்டைனரின் முகத்தினை பார்க்க அவர் டார்ச்சினை எரிய விட்டார். இருட்டில் தோராயமாக ஒரு முறை சுட்டார் ஸ்டைனர். ஆனால் அது இரண்டங்குலம் போல திசைமாறி சென்றது. அதேசமயம் ஆக்ஸிலேரேட்டரில் அவர் அமுக்கிய அழுத்தம் காரை சிறப்பானதொரு தூரத்துக்கு விரட்டியிருந்தது.

''கடவுளே! அது ஸ்டைனரேதான்!'' கார்வே கதறினார். ''அவரை பின்தொடருங்க!''

எல்லோரும் வாகனத்துக்குள் ஏற நடத்திய முயற்சியில் அங்கொரு முண்டியடித்தலே நடந்தது. கார்வேயின் ஜீப் முதலில் பாய்ந்தது. அடுத்தது பின்னால். அங்கு, இரவு அதிர்ந்தது.

டெவ்லின் ''அப்ப நாம கிளம்புவோம்'' என்றார். மோலியுடனும் ரிட்டருடனும் அவர்கள் சாலைக்கு குறுக்கே நடந்தார்கள்.

★ ★ ★

**வெ**ரேக்கருக்கு மட்டுமே ஏற்ற கார் அது. ஆகவே தன் பலம் முழுதையும் காரின் ஆக்ஸிலேட்டரில் கொடுத்து அழுத்தினாலும், அதை குறிக்கும் முள் என்னவோ நாற்பதை விட்டு தாண்டவேயில்லை.

கார்வேயின் அதிவேக ஜீப் நெருங்கியிருந்தது. காட்டுப்பகுதி அருகில் அவருடைய கார் விரைந்து கொண்டிருந்தது. எனவே அப்படியே காரை நிறுத்தி விட்டு இருட்டுக்குள் ஓடிவிடலாம் என்று அவர் ஒரு நிமிடத்துக்குள் முடிவெடுத்தார். ஆனால் அதுவே நீண்ட அவகாசமாய் ஆகியது.

முன் ஜீப்பில் வந்துகொண்டிருந்த கார்வே தனது துப்பாக்கியால் ஒருமுறை சுட்டார். அது ஸ்டைனரின் உடலை துளையிட்டது. வாகனத்தின் முன் கண்ணாடி உடைந்து ஒரு பெரும் கண்ணாடித் துகள்களின் மழையாய் அது நொறுங்கிப் போனது.

தனது நேர்ப் பாதையை விட்டு நழுவியது மோரீஸ். சில மரத்தடுப்புகளை அது உடைத்தெறிந்து திரும்பியது. பிரேக் பிடிக்கப் போட்ட முயற்சிகளில் தோற்றார் ஸ்டைனர். திசைமாறிய காரின் கதவினை திறந்து தடுமாறி வெளியே விழுந்தார் ஸ்டைனர். மோரீஸ் அங்கிருந்த நீரோடையில் கவிழ்ந்து அப்படியே அதனுள் மூழ்கத் துவங்கிய அதே கணத்தில், காட்டின் இருட்டுக்குள் புகுந்து கரைந்திருந்தார் ஸ்டைனர்.

சாலையில் ஓர் எகிறு எகிறி நின்றது ஜீப். கார்வே முதலில் இறங்கினார். கையில் தயாராய் ஒளி தந்த டார்ச்சுடன் கரை நோக்கி ஓடினார். களிமண் கொண்ட சேறு அப்படியே காரை விழுங்கும் தருணத்தில் சரியாய் கரையை அடைந்திருந்தார்.

தனது ஹெல்மெட்டைக் கழற்றிய அவர் அப்படியே இடுப்பு பெல்ட்டையும் அவிழ்த்தார். பின்னாலேயே

நின்றுகொண்டிருந்த க்ருகௌஸ்க்கி, ''கொடுமையான பகுதியிது'' என்றார். ''இங்கே ஓடுவது வெறும் தண்ணீர் கிடையாது. இதிலிருக்கும் சேறு, ஒரு ஆளையே அப்படியே கபளீகரம் பண்ணிவிடவல்ல பலம் கொண்டது.''

கார்வே மெதுவாக ஆமோதித்தார். ''யெஸ். நீங்க சொல்வது சரின்னே நினைக்கிறேன்'' முட்டைகள் வெடித்துக்கொண்டிருந்த சேற்றுப் பகுதியில் டார்ச்சின் வெளிச்சத்தை சிறிது நேரம் அடித்த கார்வே, பிறகு திரும்பி சென்றார் ரேடியோ சேதி அனுப்ப.

★ ★ ★

**கே**னும் கார்கோரனும் சாப்பிட்டுக் கொண்டிருந்த நேரம். ரேடியோ சமிக்ஞை வந்திருப்பதாய் வந்து தந்தான் ஒரு சிப்பாய். அதனை சுருக்கமாய் பார்த்து விட்டு பாலிஷ் பண்ணப்பட்ட அந்த சாப்பாட்டு மேஜையில் நழுவ விட்டார் கேன்.

''மை காட்... அவர் இந்த திசை நோக்கித்தான் வந்திருந்தார்... இதை கவனிச்சீங்களா, நீங்க?'' கார்கோரனின் முகம் கோணியது. ''எப்படியாப்பட்ட மனுஷன்... ஆனா என்ன மாதிரி உயிரை விட்டிருக்கார் அவர்?''

கேன் ஆமோதித்தார். இச்செய்தியால் அவர் சந்தோசம் அடைந்திருக்க வேண்டும்... அதே சமயம் விளக்கவொண்ணா கவலையும் அடைந்தார். அவர் சிப்பாயிடம் ''கார்வே எங்கேயிருக்காரோ அங்கேயே இருக்கும்படி அவரிடம் சொல்லிவிடு. அப்புறம் ஒரு மோட்டார் படகை ஏற்பாடு பண்ணி உடனடியா சில நிவாரண ஆட்களோடு அதை அங்கே அனுப்பு எனக்கு ஸ்டைனருடைய உடல் வந்தாகணும்.''

சிப்பாய் போனான். கார்கோரன் கேட்டார்: ''அந்த இன்னொருத்தன் மற்றும் ஐரிஷ்காரனுங்க என்னான்னுங்க?''

''எதுக்கு அதெல்லாம்? இது முழுக்க முழுக்க ஸ்டைனரின் ஆட்டம்.''

கார்கோரன் இரண்டு பெரிய கோப்பைகளில் விஸ்கியை ஊற்றினார். ஒன்றை கேனிடம் தந்தார். ''ஆனா, சியர்ஸ் சொல்ல மாட்டேன்'' என்றார். ''நீங்க எப்படி உணர்றீங்கன்னு எனக்குத் தெரியும். ஒருவித, தனிப்பட்ட இழப்பு.''

''எக்ஸாக்ட்லி.''

''ஆங்... விஷயத்தை நீங்க பிரதம மந்திரியிடம் சொல்றீங்களா, இல்ல நான் சொல்லட்டுமா?''

''உங்களுடைய பெருமையா அது இருக்கட்டும், சார்.'' கேன் முயன்றார். ''நான் ஏனைய வீரர்களுக்கு தெரிவிக்கறேன்.''

அவர் வெளியே வந்தபோது மழை வெளுத்துக் கட்டிக் கொண்டிருந்தது. மேலே நின்றபடி ''கார்பெரல் ப்ளீக்கர்'' என்று கத்தினார் அவர்.

இருட்டுப் பகுதியிலிருந்து ஓரிரு நொடிகளில் ஓடிவந்த ப்ளீக்கர் படிகளேறி மேலே வந்தார்.

''கார்வேயும் அவருடைய சகாக்களும் ஸ்டைனரைக் கடற்கரையோரமாய் பிடிச்சிருக்காங்க. இதை பரப்புங்க.''

''செஞ்சுடறேன், சார்''

ப்ளீக்கர் இறங்கி இருட்டில் கரைந்தார். அங்கேயே மேஜர் சற்று நேரம் நின்றார். பிறகு முன்னுக்குச் சென்று மழையில் நனைந்தபடி நடந்தார். பிறகு இறுதியாய் திரும்பி அறைக்குள் வந்தார்.

★ ★ ★

**ஹா**ப்ஸ் எண்ட்டின் காட்டேஜை ரிட்டர், டெவ்லின் மற்றும் மோலி ஆகியோர் நெருங்கியபோது அது முழு இருளில் மூழ்கிக் கிடந்தது. அங்கு சுவரையொட்டி அவர்கள் நின்றார்கள். ''எனக்கென்னவோ காட்டேஜ் முழுதும் அமைதியின் உச்சத்தில் இருப்பதாத்தான் படுது'' என முணுமுணுத்தார் டெவ்லின்.

''அதுக்காக ரிஸ்க் எடுக்க வேண்டாம்'' என்று பதிலுக்கு முணுமுணுப்பாய் சொன்னார் ரிட்டர்.

ஆனால் தன்னுடைய போனை மனதில் வைத்துக் கொண்டு, அழுத்தமாய் டெவ்லின் சொன்னார்: ''உள்ளே யாரும் இருக்க மாட்டாங்க. இது உறுதி. நீங்க அப்படியே நடந்துக்கிட்டிருங்க. நான் வந்து இணைஞ்சுக்கறேன்.''

இருவரும் இம்முடிவை தடுத்துப் போவதற்குள் இருட்டில் நழுவியிருந்தார் டெவ்லின். ஜன்னலருகே போயிருந்த அவர் உன்னிப்பாய் கவனித்தார். அனைத்தும் அமைதியில் இருந்தன. வெறும் மழை மட்டும் பெய்துக் கொண்டிருந்தது. ஒரு துளி வெளிச்சம்கூட எங்கும் இல்லை. முன்கதவை அவர் தொட அது சிறு கிறீச் ஓசையுடன் திறந்துக்கொண்டது. கையில் துப்பாக்கியை ஏந்திக்கொண்டு அவர் உள்ளே போனார்.

உள்ளே வரவேற்பறைக் கதவு ஒருக்களித்திருந்தது. கணப்பிலிருந்து சிறு பொறிகள் எகிறிக் கொண்டிருந்தன. அதனுள்ளே அவர் காலடி எடுத்து வைத்த கணமே, தான் ஒரு பெரும் தவறினை செய்து விட்டதை அவர் சட்டென விளங்கிக் கொண்டார். அக்கதவு உடனடியாய் அறைந்து மூடப்பட, அவரது கழுத்தில் துப்பாக்கியின் முனை பதிந்து அழுத்தியது. டெவ்லினின் துப்பாக்கியும் பறிக்கப்பட்டது.

''பேசாம நில்லு'' என்றார் ஜேக் ரோகன். ''கவனி. நான் இன்ஸ்பெக்டர் ரோகன். அது இன்ஸ்பெக்டர் ஃபெர்ஜல்...''

"ஐரீஷ் பிரிவு?"

"ஆமாண்டா. நீ ரொம்பவும் ரௌடித்தனமானவன்னு எனக்குத் தெரியும். அயர்லாந்துலேயே எதையாச்சும் பண்ண வேண்டியதுதானே. அப்படியே அமுக்கியிருப்பேனே... இவ்ளோதூரம் வந்து கூத்தடிக்கிறியா நீ?"

"சிந்திக்கறேன்."

அப்போது திரைச்சீலை போடப்பட்டிருந்த எதிர்ப்புற ஜன்னலில் ஒரு கல் வந்து விழுந்து அதனை உடைத்தெறிந்தது. இரு போலீஸ்காரர்களும் எச்சரிக்கையாக, தங்களுடைய கவனத்தை அதன்புறம் திருப்பிய கணத்தை பயன்படுத்திக் கொண்டார் டெவ்லின். தனது துப்பாக்கியின் மீது கையினை கொண்டு போய் இயக்கினார். ஒரு குண்டு ரோகனின் மண்டையைப் பிளந்தது. அப்படியே சாய்ந்தார் அவர். ஆனால் அதற்குள் சுதாரித்திருந்தார் க்ரேண்ட். இன்ஸ்பெக்டர் சுட்ட குண்டு டெவ்லினின் வலத்தோளினைத் துளைத்தெடுத்தது. அருகிலிருந்த சேரில் விழுந்தபடி சுட்டுக் கொண்டு இருந்தார் அவர். இதனால் இன்ஸ்பெக்டரின் வலக்கையில் குண்டு பாய்ந்து அவரை நிலைகுலையச் செய்தது.

சுவரில் மோதி தரையில் வழுக்கினார் இன்ஸ்பெக்டர். முழு அதிர்வுக்குள்ளானார் அவர். டேபிள் அருகில் விழுந்து கிடந்து விளங்காமல் பார்த்தார். உடனடியாய் தற்போது தனது கைப்பைக்கு சென்று அதனை எடுத்துக் கொண்டார் டெவ்லின்.

"என்னையும் ஏன் நீ கொன்றிருக்கக்கூடாது?" சத்தற்று முனகினார் க்ரேண்ட்.

"நீங்க, அவரைவிட கொஞ்சம் நல்லவர்."

சொன்ன ஐரீஷ் இளைஞன், சீக்கிரமாய் வெளியேறினார். மோலி வெளியே நின்றுகொண்டிருந்தாள். "மை காட்!"

என்று அலறிய அவள் வாயில் ஒருவிரல் பதித்து பேசாமல் இருக்க சைகை தந்த டெவ்லின், ரிட்டர் இருந்த இடத்துக்கு விரைந்தார்கள். அங்கு ''என்னாச்சு?'' என்றாள் அவள்.

''ஒரு ஆளை நான் கொன்னுட்டேன். இன்னொருத்தனைக் காயப்படுத்திட்டேன். இதுதான் நடந்தது.'' கூடுதலாய் டெவ்வின் சொன்னார்: ''ரெண்டு பேரும் ஸ்பெஷல் டிடெக்டிவ்ஸ்.''

''இப்பவாவது நீ கிளம்பிடக் கூடாதா, மோலி?''

அவரிடமிருந்து கிளம்பிய அவள் சட்டென்று எதிர்த்திசையில் ஓட ஆரம்பித்தாள். டெவ்லின் தயங்கினார். பிறகு தன்னை கட்டுப்படுத்த முடியாதவராய் ஆகி அவரும் அவள் பின்னால் மிகவேகமாய் ஓடி அவள் கரம்பிடித்திழுத்தார். அவள் கைகள் அவனது கழுத்துக்குப் பின்னால் சென்றன. அவனை அப்படியே விழுங்கிவிடும் வேகத்தில் இதழ் முத்தம் ஒன்று தந்தாள். அவளை பிறகு தள்ளி விட்டார் அவர். ''நீ கிளம்பலாம். பெண்ணே. ஓ, கடவுளே... இவளுக்கு துணையாய்ப் போ.''

திரும்பிய அவர் தனது கைப்பையிலிருந்து போனை எடுத்தார். ''இது கழுகு. இது கழுகு'' என்று சேதி சொன்னார்.

படகின் உச்சியில் இந்த போனின் ரிஸீவர் வைக்கப் பட்டிருந்த இடத்தில் இச்சேதி துல்லியமாய் ஒலித்தது. இருதயம் துடிதுடிக்க அதனருகே ஓடினார் கொய்னிக். ''சொல்லுங்க, சொல்லுங்க. உங்க நிலைமை என்ன?''

''இங்கே இதோ ரெண்டு கழுகுக் குஞ்சுகள் இன்னும் இருக்கின்றன. உடனடியாய் வந்து உதவ முடியுமா?''

''வந்துக்கிட்டேயிருக்கோம்'' என்றார் கொய்னிக். ரிஸீவரை வைத்தார் அவர். முல்லரிடம் சொன்னார்: ''நாம உள்ளே போயிக்கிட்டிருக்கோம். ஓசையே கூடாது.''

டெவ்லினும் ரிட்டரும் காட்டுக்குள் இறங்கியபோது, கார் ஒன்றின் ஹெட்லைட் ஒளியைக் கவனித்தார் டெவ்லின். அது திரும்பி காட்டேஜ் பக்கம் சென்றது. "அது யாராயிருக்கும்னு நினைக்கிறீங்க?" என்றார் ரிட்டர்.

"கடவுளுக்குத் தான் வெளிச்சம்."

சற்று தள்ளி ஒரு ஜீப்புடன் நின்று கொண்டிருந்த கார்வே, தனது இன்னொரு ஜீப்பினை அனுப்பி டிடெக்டிவ் இன்ஸ்பெக்டர்கள் என்ன செய்துகொண்டிருக்கிறார்கள் என்று அறிய நினைத்தார்.

ரிட்டரின் கையை அழுத்திய டெவ்லின், "கம் ஆன்... இந்த எல்லையிலிருந்து நாம கிளம்பிடணும்" என்றார். தனது தோளில் திடுமென கூட ஆரம்பித்த வலியை அவர் சபித்தார்.

ரிட்டர் ஊன்றுகோலின் துணையோடு சமாளித்தார். அவர்களுக்கு முன்னால் மணல் ஒரு சமதளமாய் எல்லையற்று நீண்டது. காற்று முழுதும் மூடுபனி. கடற்கரையில் சிறு குட்டை போல உருவாக்கப்பட்டிருந்த பகுதி நோக்கி நடந்ததும் தண்ணீர் அவர்களது கணுக்கால் வரை தொட்டது.

மேற்கொண்டு சென்றபோது அலைகளில் சீற்றம் அதிகமிருந்ததால் தண்ணீரின் ஆழமும் கூடியது. முதலில் கால்முட்டி வரையிலும் பிறகு இப்போது தொடை வரையிலும் தண்ணீர் வெகுண்டது. இந்நிலையில் தனது ஊன்றுகோலை தவறவிட்ட ரிட்டர் அப்படியே மடிந்து சரிந்தார். "இனி பிரயோஜனமில்ல, டெவ்லின். எனக்கிது போதும். இப்படிப்பட்ட ஒரு கடும் வலியை நான் அனுபவசிச்சதே கிடையாது."

டெவ்லின் அவரை கைத்தாங்கலாய் பிடித்துக்கொண்டு தன்னுடைய போனை உயிர்ப்பித்தார். "இது கழுகு.

கரையின் வளைகுடாவில் உனக்காக நாங்கள் காத்திருக்கிறோம். இதோ, சமிக்ஞை காட்டப் போறேன்.''

தனதுபையிலிருந்து ஒளி கொண்ட ஒரு பந்தினை எடுத்தார் அவர். வலக்கையின் உள்ளங்கை பகுதியில் அதனைப் பிடித்தார். கடற்கரையை ஒருமுறை நோட்டம் பிடித்தார். பனி மூடியிருந்தது. அங்கிருந்த அனைத்தையும் வெளியே தெரியாதபடி ஒரு போர்வையாய் அந்தப் பனிமூட்டம் மறைத்தது.

★ ★ ★

இருபது நிமிடங்கள் கடந்ததும் தண்ணீர் அவர்களது நெஞ்சுவரை மிகுந்திருந்தது. அவரது வாழ்க்கையில் இந்த அளவுக்கு டெவ்லின் இதுவரை இருந்ததே கிடையாது. ஒரு கையில் ரிட்டரையும் மறுகையில் ஒளி உமிழும் விளக்கினையும் தாங்கிக்கொண்டு கால்களை அகட்டியபடி நின்று கொண்டிருந்தார் அவர். அவர்களை அலைகள் சூழ்ந்தன.

''பிரயோஜனம் இல்லை'' என்றார் ரிட்டர். ''என்னாலே எதையும் உணர முடியலே. மரத்துடுச்சு. அவ்ளோதான், நான் போயாச்சு. இனி என்னாலே ஒண்ணும் முடியாது.''

''ஓஹ்'' என்ற டெவ்லின், ''இப்ப ஸ்டைனர் இருந்தால் என்ன சொல்வார்?'' என்றார்.

''ஸ்டைனர்?'' என்று கேட்டார் டெவ்லின். அப்போது முகவாயைத் தாண்டி கொஞ்சம் உப்புநீர் அவரது வாய்க்குள் நுழைந்துவிட, இருமினார். ''அவர் ஒரே குதிகுதிச்சு உள்ளே நீந்திப் போயிருப்பாரே...'' சொல்லிவிட்டு சிரித்தார்.

''அது!'' என்றார் டெவ்லின். ''அப்படியே சிரிங்க.''

அப்போது ஒரலை வெகுண்டு வந்து அவர்கள் இருவரையும் மூழ்கடித்தது. இரு கைகளிலும் பிடித்திருந்தவற்றை நழுவவிடாமல் சமாளித்தார் டெவ்லின்.

சமிக்ஞை விளக்கினை முதலில் பார்த்தது, டூஸென். உடனடியாய் அவர் இயங்கினார். மூன்று நிமிடங்களில் ஒரு E- படகு வந்திருக்க, யாரோ ஒருவன் இருவர் மீதும் டார்ச் அடித்தான். ஒரு வலை வீசப்பட, அதன் வழி வந்து நான்கு மீனவர்களின் உதவிக்கரங்கள் ரிட்டரை நோக்கி நீண்டன.

''அவரை கவனிங்க'' என்று கெஞ்சலாய் சொன்னார் டெவ்லின். ''ரொம்ப மோசமான கண்டிஷன்ல இருக்கார் அவர்.''

இருளில் சிரித்தார் கொய்னிக். ''உங்களை மறுபடியும் பார்ப்பது சந்தோஷம், மிஸ்டர் டெவ்லின். இது ஒரு மிராக்கிள்.''

சில நொடிகளில் படகு ஒரு சுற்று திரும்பி, முன்நோக்கி பாய்ந்தது.

பண்ணையிலிருந்த தன் வீட்டில் திடீரென எழுந்த மோலி நிமிர்ந்தமர்ந்தாள். அறைக்கு குறுக்காய் நடந்து போய் ஜன்னலின் திரைச்சீலைகளை விலக்கினாள். ஜன்னல் கதவுகளைத் திறந்து, வெளியில் கொட்டிய மழைக்கு தன் தலையைத் தந்தாள். உற்சாகம் உருண்டது. பெரும் சுதந்திர உணர்வு அவளை நிறைத்தது. E-படகு அப்பகுதியிலிருந்து விலகி கடலுக்குள் தனது பிரயாணத்தை ஆரம்பித்திருந்தது.

★ ★ ★

தனது ப்ரின்ஸ் அல்ப்ரெஷ்ட்ஸ்ட்ராஸ் அலுவலகத்தில், தீரவே தீராமல் நீண்டுக்கொண்டிருந்த கோப்புகளுடன் சிறு

மேஜை விளக்கின் ஒளியில் உழைத்துக்கொண்டிருந்தார் ஹிம்லர். அறைக்கதவில் ஒரு கொட்டு விழுந்தது. ரோஸ்மேன் வந்தார்.

''வெல்?'' கேட்டார் ஹிம்லர்.

''தொந்தரவுக்கு மன்னிக்கணும் சார். நமக்கு லேண்ட்ஓர்த் பகுதியிலிருந்து சேதி வந்திருக்கு. கழுகு, பறந்திருச்சு.''

என்ன உணர்ந்திருந்தாலும், எவ்விதமான உணர்வினையும் ஹிம்லர் வெளிக்காட்டவில்லை. அவர் ஜாக்கிரதையாய் தனது பேனாவைக் கீழே வைத்து விட்டு கைகளை நெட்டி முறித்தார். ''நான் பார்க்கிறேன்.'' ரோஸ்மேன் சேதியை தர அதனை அவர் பார்த்தார். சிறிது நேரத்துக்குப் பிறகு அவர் நிமிர்ந்து பார்த்தார். ''ஒரு குறிப்பிட்ட வேலையை உடனடியா நீ முடிக்கணும்.''

''சொல்லுங்க ஸார்.''

''உன் நம்பிக்கைக்கு உகந்த ரெண்டு ஆட்களைக் கூட்டிக்கோ. லேண்ட்ஓர்த்துக்கு உடனடியா பற. ரேடிலைக் கைது செய். நீ கிளம்புவதற்கு முன்னாலேயே இதை நடத்த உனக்கு தேவைப்படும் அனைத்து அதிகாரங்களும் தரப்பட்டுவிடும். இதை நான் கவனிச்சுக்கறேன்.''

''அஃப்கோர்ஸ், சார். இதற்கான காரணம்?''

''நாட்டுக்கு எதிராய் நடந்துக்கொண்டது. ராஜதுரோகம். துவக்கமாய் இது போதும். திரும்பினதும் முதல்ல என்னிடம் வா'' தனது பேனாவை எடுத்துக்கொண்ட ஹிம்லர் மறுபடியும் எழுத ஆரம்பித்தார். ரோஸ்மேன் கிளம்பினான்.

★ ★ ★

**ஒ**ன்பது மணியையொட்டிய நேரத்தில் மிலிட்டரி போலீஸான கார்ப்பொரெல் ஜார்ஜ் வாட்ஸன், மெல்த்தாம்

ஹவுஸின் தெற்கு திசைக்கு வந்தார். ஹவுஸின் சில மைல்களுக்கு முன்னாலேயே தன்னுடைய மோட்டார் பைக்கை அணைத்து நிறுத்தினார். நார்விச்சிலிருந்து கொட்டிய அடைமழையில் நனைந்து வந்திருந்ததால், ரைன் கோட்டையெல்லாம் கடந்து அவர் உள்வரை நனைந்திருந்தார்.

செல்ல வேண்டிய திசை தேடி மேப்பினை அவர் பார்த்துக் கொண்டிருந்தார். தன் சிறு டார்ச் லைட் வெளிச்சத்தில் அவர் வரைபடத்தை படித்துக் கொண்டிருந்த போது, அவரருகில் ஒருத்தர் வந்தார். வந்தவர் ''ஹலோ'' என்றார். ''வழி தெரியலியா?'' என்று கேட்டார்.

''மெல்த்தாம் ஹவுஸ் எங்கேனு பார்த்துக்கிட்டிருக்கேன்'' என்றார் வாட்ஸன். ''நார்விச்சிலிருந்து நனைஞ்சுக்கிட்டே வந்து சேர்ந்தாச்சு. கிராமங்கள் எல்லாம் ஒரே மாதிரிதானிருக்கு. ஒரு போர்ட் இருக்கா?''

''காட்டுங்க... அதுல நான் வழி சொல்றேன்.'' ஸ்டைனர் வரைபடத்தின் மீது கவிழ்ந்தார். அதே சமயம் அவரது நெற்றியில் துப்பாக்கியின் முனை அழுத்தியது. குழம்பினார் வாட்ஸன். அப்போது அவருடைய பெட்டியை துளாவிய ஸ்டைனர் அதிலிருந்த 'முக்கியம்' என போடப்பட்டிருந்த உறை ஒன்றை உருவியெடுத்துக் கொண்டார். அது 'கர்னல் வில்லியம் கார்கோரன், மெல்த்தாம் ஹவுஸ்' என்று போடப்பட்டிருந்தது.

வாட்ஸனைக் கையோடு பிடித்திழுத்துக் கொண்டு இருளுக்குப் போனார் ஸ்டைனர். சற்றுநேரத்தில் அவர் மறுபடியும் வந்தபோது தபால்காரனின் நீண்ட ரைன் கோட்டும் கண்ணாடியும் லெதர் பையும் அணிந்திருந்தார். பையை தோளுக்குக் குறுக்காய் போட்டுக் கொண்டு மோட்டார் சைக்கிளை இயக்கினார். அது உயிர் பெற்றது. சாலையில் விரட்டினார்.

★ ★ ★

மோரீஸ் கார் சகதியிலிருந்து வெளிக் கொண்டுவரப் பட்டது. அங்கு கரையிலேயே கார்வே காத்துக் கொண்டிருந்தார்.

இந்த நிவாரண நடவடிக்கையின் இன்சார்ஜ் கார்ப்பொரேல் கார்க் கதவினைத் திறந்து விட்டார். அதனுள் தலையை நுழைத்து அவர் எட்டிப்பார்த்தார். "உள்ளே ஒண்ணுமில்லை."

"என்ன உளர்றீங்க?" என்றபடி மரங்களுக்கிடையே வேகமாய் இறங்கி வந்தார் கார்வே.

மோரீஸ் காருக்குள் அவரும் எட்டிப் பார்த்தார். யெஸ், இன்சார்ஜ் சொன்னது சரியே. உள்ளே காரெங்கும் ஒட்டிக் கொண்டு நிறைய களிமண்ணும் வடியாத தண்ணீரும் இருந்தன. ஆனால் ஸ்டைனர் இல்லை. இதன் முழு அர்த்தமும் சரியாய் அர்த்தமானபோது, "ஓ, மை காட்" என்றார் கார்வே. திரும்பிய அவர் வேகமாய் மேடேறி ரேடியோவின் மைக்கைப் பிடித்தார்.

★ ★ ★

மெல்த்தாம் ஹவுஸ் கேட்டருகே திரும்பினார் ஸ்டைனர். கேட், மூடப்பட்டிருந்தது. அங்கிருந்த ரேஞ்ஜர்ஸ் காவல்காரன் வந்தான். ஸ்டைனரைப் பார்த்ததும், ஸெர்ஜெண்ட்டுக்காக குரல் தந்தான்.

ஸெர்ஜெண்ட் தாம்ஸன் உள்ளேயிருந்து வந்தார். அங்கிருந்த கல் ஒன்றில் தலையில் தொப்பியுடனும் மூக்குக் கண்ணாடியுடனும் உட்கார்ந்திருந்தார் ஸ்டைனர். "என்ன விஷயம்?" என்றார் வந்தவர்.

கடிதத்தின் எடுத்து கையில் வைத்துக் கொண்டு, "நார்விச்சிலிருந்து கர்னல் கார்கோரனுக்கு ஒரு கடிதம்" என்றார்.

தாம்ஸன் ஆமோதிப்பாய் தலையசைக்க, காவல்காரன் கேட்டினைத் திறந்து விட்டான். "வாசலுக்குப் போங்க.

அங்கிருக்கும் காவல்காரன் உங்களை உள்ளே அழைச்சுட்டுப் போவான்''.

மோட்டாரைக் கிளப்பிக் கொண்டு முன்பக்க வாசலை அடைந்த ஸ்டைனர், அப்படியே பைக்கை உருட்டிக் கொண்டு பின்பக்கம் போய்ச் சேர்ந்தார். அங்கு நிறுத்தி வைக்கப்பட்டிருந்த ட்ரக்குக்கு அருகில் நின்றார். இன்ஜினை அணைத்துவிட்டு பைக்கை அதனிடத்தில் வைத்தார். பிறகு தோட்டம் வரை நீண்ட பாதையில் சுற்றிப் போனார். நூறு கெஜம் போல நடந்ததும் ஒரு செடிப்புதருக்குள் மறைந்தார் அவர்.

தனது ரைன்கோட் தொப்பி போன்றவற்றைக் களைந்து ஜெர்மானிய வீரரானார். தோட்டத்து வழியாய் டெரஸை அடைந்தார். ஆங்காங்கே விளக்குகள் எரிந்து கொண்டிருந்தபடியால் காரிருள் அமையவில்லை. ஓரடி எடுத்து அவர் வைத்தபோது யாரோ ''ப்ளீக்கரா அது?'' என்ற குரல் கேட்டது.

ஸ்டைனர் விக்கித்தார். மங்கலான ஓர் உருவம் முன்னால் போனது. ஸ்டைனரின் துப்பாக்கி ஓசையின்றி ஒரு முறை சிணுங்க, அந்த ரேஞ்ஜர் வீரன் தரையில் சாய்ந்தான். அந்த கணம், மேலிருந்த ஓர் அறையின் திரைச்சீலை விலக்கப்பட சிறப்பாய் ஒளிக்கீற்று வந்து கீழே டெரசெங்கும் படர்ந்தது.

அது வந்த திசை நோக்கி ஸ்டைனர் நிமிர்ந்தபோது அங்கு சுருட்டு பிடித்தபடி நின்றுகொண்டிருந்த பிரதம மந்திரியை பார்த்தார் அவர்.

★ ★ ★

**கா**ர்கோரன் பிரதம மந்திரியின் அறையை விட்டு வெளியே வந்தபோது அங்கு கேன் காத்திருப்பதை கவனித்தார். ''அவர் எப்படியிருக்கார்?'' கேட்டார் கேன்.

''ஃபைன். ஒரு சுருட்டு பிடிக்க டெரஸ் போயிருக்கார். இப்ப படுத்துடுவார்.''

அவர்களிருவரும் முன்னறைக்கு வந்தார்கள். ''என் சேதியைக் கேட்டால், அவர் ஒழுங்கா தூங்கக்கூட மாட்டார். ஆக, நாளை காலை வரை சொல்லாம வெச்சுடறேன்'' என்றார் கேன். ''குழியிலிருந்து மோரீஸை எடுத்துட்டாங்க. அதுல ஸ்டைனர் இல்ல.''

''மூழ்கியிருப்பார்னா சொல்றீங்க?'' என கேட்டார் கார்கோரன். ''அங்கேயே எங்கேயாவது அவர் இல்லேனு உங்களுக்கு எப்படி தெரியும்? விழும்போது எகிறிக் குதிச்சிருக்கலாம்...''

''சாத்தியமே'' என்றார் கேன். ''இருந்தாலும் நான் பாதுகாப்பை இங்கே பலப்படுத்தறேன்.''

முன்கதவு திறக்கப்பட்டது. தாம்ஸன் நுழைந்தார். ''கூப்டீங்களா, மேஜர்?''

''யெஸ்'' என்றார் கேன். ''அவங்க காரை வெளியே எடுத்தபோது அதுல ஸ்டைனர் இல்ல. நாம ஜாக்கிரதையா இருந்தாகணும். அதனாலே பாதுகாப்பை இரட்டிப்பாக்கணும்.''

''காருக்கான நிவாரண நடவடிக்கைகள் தொடங்கியதிலிருந்து ஒரு கொசுகூட உள்ளே நுழையல சார், அந்த மிலிட்டரி தபால்காரனைத் தவிர. கர்னல் கார்கோரனுக்கான சேதியை நார்விச்சிலிருந்து கொண்டு வந்தான் அவன்.''

முகஞ்சுளித்த கார்கோரன், ஸெர்ஜெண்ட்டை முறைத்தார். ''இப்படி எனக்கு சேதி வருது என்பதே இப்பத்தான் நான் முதலில் கேள்விப்படறேன். எப்ப நடந்தது இது?''

''பத்து நிமிஷங்களுக்கு முன்னாடி, சார்''

''ஓ. மை காட்!'' என்றார் கேன். ''அவன் இங்கேயா இருக்கான்! அந்த நாய்மகன் இங்கேயா நுழைஞ்சிருக்கான்!''

கத்தியவர் திரும்பினார். தன் பையிலிருந்த துப்பாக்கியை சரி பார்த்துக் கொண்டே மேலேயிருக்கும் விசாலமான லைப்ரரி நோக்கி பறந்தார்.

★ ★ ★

டெரஸ் வரை மெதுவாய் போனார் ஸ்டைனர். செண்ட் போடப்பட்டிருந்த சுருட்டின் புகை இரவை வாசனையாக்கியிருந்தது. மேட்டில் கால் பதித்ததும் சரளைகள் வழுக்கிவிட சப்தம் விளைந்தது. பிரதம மந்திரி கூர்மையாய் திரும்பினார். அவரை பார்த்தார்.

தனது வாயிலிருந்த சுருட்டை அவர் அகற்றினார். அந்த விளங்கிக்கொள்ள முடியாத முகம் எவ்விதமான ரியாக்ஷனையும் காட்டாது. "ஜெர்மனியின் கர்ட் ஸ்டைனர் என்று நினைக்கிறேன்" என்று கேட்டது, அவர் குரல்.

"மிஸ்டர் சர்ச்சில்" ஸ்டைனர் தயங்கினார். "இதற்கு நான் வருந்தறேன். ஆனா நான் என் கடமையை செய்யணும். சார்"

"அப்ப எதுக்காக நீங்க காத்திருக்கீங்க?" பிரதம மந்திரி சாந்தமாய் சொன்னார்.

ஸ்டைனர் துப்பாக்கியை உயர்த்தினார். அங்கிருந்த ஜன்னலின் திரைச்சீலை விலக அதன்வழி அடித்துப் பிடித்துக் கொண்டு உள்ளே விழுந்தார் கேன். உடனடியாய் சுட்ட அவரது முதல் குண்டு ஸ்டைனரின் வலத்தோளைக் கிழித்தது. அடுத்த குண்டு அவரது நெஞ்சின் மையத்தைத் துளையிட்டது. ஸ்தலத்திலேயே அவரைக் கொன்றன குண்டுகள். அப்படியே பின்னால் சரிந்து விழுந்தார் ஸ்டைனர்.

சற்று நேரங்கழித்து கையில் துப்பாக்கியுடன் டெரஸ் வந்தடைந்தார் கார்கோரன். இருளிலிருந்து பல ரேஞ்ஜர்

சிப்பாய்கள் ஓடோடி வந்தார்கள். இன்னமும் துப்பாக்கியை இறுக்கிப் பிடித்திருந்த நிலையில் தனது ஜெர்மானிய க்ராஸ் மார்மீது படர்ந்திருந்தவாறு இயற்கை எய்தியிருந்தார் ஸ்டைனர்.

"புரியவில்லை" என்றார் பிரதம மந்திரி. "ட்ரிக்கரில் கை பதித்து தயாரான பிறகும் அவர் தயங்கினார். ஏன்னு எனக்கு புரியவில்லை."

"அவர் பாதி அமெரிக்கர் சார்-அதனாலே இருக்குமோ?" ஹார்ரி கேன் சொன்னார்.

பிரதம மந்திரி கடைசியாய் சொன்னார்: "யார் என்ன சொன்னாலும், இவர் ஒரு அற்புதமான ராணுவத்தான். தைரியமான வீரன். அவரை கவனிக்கணும், மேஜர்."

திரும்பிய அவர், மீண்டும் உள்ளே போய்விட்டார்.



# 20

ஆச்சரியமான அந்தக் கண்டுபிடிப்பினை நான் ஸ்டட்லே கான்ஸ்டபிள் சர்ச் வளாகத்தில் செய்து இன்றுடன் ஒரு வருடம் பூர்த்தியாகின்றது. இதோ மீண்டும் அதே சர்ச் கல்லறைக்கு வந்திருக்கிறேன். ஆனால் இம்முறை ஃபாதர் பிலிப் வெரேக்கரின் பிரத்யேக அழைப்பின் பேரில் நான் இங்கிருக்கிறேன்.

கைப்பிடி வைத்து அகலமாய் தயாராகியிருந்த ஒரு பெரிய குசன் நாற்காலியில் உட்கார்ந்திருந்தார் வெரேக்கர். எதிரே கணப்பு. அவரது கால் முட்டிகளுக்கு ஒரு பெரிய தலையணை. நான் இதுவரை பார்த்திராத மரணித்துக் கொண்டிருக்கும் ஒரு மனிதன். அவர் முகத்தில் தோல் முழுதும் வற்றி விட்டதைப் போலிருந்தது. முக எலும்புகள் அனைத்தும் துருத்திக்கொண்டிருக்க வாடி வதங்கிய இலையாய் முகம் தென்பட்டது. கண்களில் வலியின் தீவிரம். ''நீங்க வந்தது ரொம்ப நல்லதா போச்சு.''

''இத்தனை சுகவீனமா உங்களை நான் பார்ப்பேன்னு எதிர்பார்க்கலை. மனம் வருந்துது.''

''வயிற்று புற்றுநோய் வந்திருக்கு. எதுவும் பண்ணுவதற்கில்ல. என் வாழ்க்கையை இங்கேயே முடிக்க எனக்கு அனுமதி அளிச்சிருக்கார், கருணைமிகு பிஷப் ஃபாதர். டாமினினையும் ஒத்தாசைக்கு தந்திருக்கார். ஆனா உங்களை நான் வரச்சொல்லி ஆளனுப்பியது இதுக்காக

இல்லை. போன வருடம் முழுக்க நீங்க படு பிசியா இருந்ததா நான் கேள்விப்பட்டேன்.''

''நீங்க என்ன சொல்றீங்கன்னு எனக்கு புரியலே'' என்றேன் நான். ''நான் இங்கே முன்னாடி வந்தப்ப நீங்க ஒரு வார்த்தை என்கூட பேசலே. விரட்டி அனுப்பினீங்க.''

''அது ரொம்ப சிம்பிளான காரணத்துக்காக. இத்தனை வருடங்களாக, கதையின் பாதி மட்டுந்தான் எனக்கே தெரியும். இப்ப திடீர்னு ஓர் அடக்க முடியாத ஆவல் எனக்குள்ளே. எல்லாம் முடிவதற்குள்ளே அந்த மீதி என்ன என்பதையும் தெரிஞ்சுக்க ஒரு பரபரப்பு.''

அந்த மீதியை ஏன் சொல்லக்கூடாது என்பதற்கு என்னிடம் எந்தவொரு சிறந்த காரணமும் இல்லாததால், நான் சொன்னேன். அத்தனையையும் நான் சொல்லி முடிக்கும்போது அந்தி சாய்ந்திருந்தது. இருள் கவ்வ ஆரம்பித்திருந்தது.

''ரிமார்க்கபிள்'' என்றார் வெரேக்கர். ''எப்படி உங்களாலே இத்தனையையும் கலெக்ட் பண்ண முடிஞ்சது?''

''எந்த அரசாங்க ஆட்களும் எனக்கு உதவலை-யெஸ். ஜஸ்ட், மக்களுடன் பேசுவதால் சேகரித்தேன். இன்னும் உயிருடன் இருக்கும், மற்றும் அனுபவங்களைப் பேசி பகிர்ந்துக் கொள்ள விரும்பும் ஆட்களாகத் தேடிப்போனேன். இதுல ஒரு மாபெரும் லக் என்னன்னா-இந்த முழு சமாச்சாரத்துக்கும் பொறுப்பான கர்னலுடைய குறிப்பிடும்படியான டைரிக் குறிப்பினை படிக்கும் சந்தர்ப்பம் எனக்குக் கிடைச்சதைத்தான் சொல்லணும். கர்னல் மேக்ஸ் ரேடிலுடையது அது. அவருடைய விதவை மனைவி இன்னும் பவேரியால இருக்காங்க. ஆங்... இங்கே, அதுக்கப்புறமா என்ன நடந்ததுனு நான் தெரிஞ்சுக்க விரும்பறேன்.''

"முழு செக்யூரிட்டி கட்டுப்பாடு போடப்பட்டது. உளவு மற்றும் பாதுகாப்பு ஆசாமிகளால் இதில் ஈடுபட்டிருந்த ஒவ்வொரு கிராமத்தானும் விசாரிக்கப்பட்டார்கள். அரசாங்க பாதுகாப்பு சட்டம் அமலாகியது. அதெல்லாம் தேவையே இல்லை. ஆனா இவங்கதான் விசித்திரமான ஆளுங்களாச்சே. ஏதோ நடந்ததை கையாளுவது இவனுங்களோட ஜோலி மட்டுந்தான்... மத்தவனுங்களுடையது கிடையாது என்பதை போல நடந்துக்கிட்டாங்க."

"ஸே மோர் வேற இருக்கார்."

"எக்ஸாக்ட்லி. அவர் போன பிப்ரவரியிலே கொல்லப்பட்ட சமாச்சாரம் தெரியுமா, உங்களுக்கு?"

"நோ."

"ராத்திரியில குடிச்சுட்டு வண்டி ஓட்டியிருக்கான். சாலையிலிருந்து விலகி ஓடைக்குள்ளே விழுந்துட்டான். அவனுக்கு இங்கே நிறைய உறவுகள் இருந்திருக்கு. ஜார்ஜ் ஒயில்டுடைய மனைவி பெட்டி, இவருடைய சகோதரி."

"காட்!" என்றேன் நான். "நான் கனவுல கூட நினைச்சுப் பார்க்கலே. ஆங், கல்லறைகள்?"

"கிராமத்தை சுத்தம் பண்ணி, சிதிலங்களை சீர்பண்ண அனுப்பப்பட்ட மிலிட்டரி ஆட்கள், அனைத்து சடலங்களையும் ஒரு பெரிய குழிக்குள் போட்டு கல்லறை கட்டிட்டாங்க. அதுல எதுவும் எழுதல. அப்படியேதான் இருக்கணும்னு சொல்லிட்டோம் நாங்க."

"ஆனா நீங்க வேறமாதிரி நினைச்சிருந்தீங்க?"

"நான் மட்டுமில்ல. எங்கள்ல எல்லாருமே. அப்போ, போர்க்கால சேதிகள் எல்லாமே, அது எவ்ளோதான் முக்கியமானதாக இருந்தாலும்கூட, அது சம்பந்தமா நாங்க படிச்ச எந்தவொரு புத்தகமானாலும், படிச்ச ஒவ்வொரு

தினசரியும், ஜெர்மனிய வீரர்களை இரக்கமற்றவர்களாகத் தான் வர்ணித்தன. கொரில்லாக்களாக காட்டப்பட்டாங்க. ஆனா இவங்க அப்படி கிடையாது. க்ரஹாம் ஒயில்ட் இப்ப உயிரோட இருக்கார். சூசன் டர்னர் மூணு குழந்தைகளோட கல்யாணம் கட்டிக்கிட்டாங்க. ஏன்னா, ஸ்டைனரின் ஒரு ஆள்தான் இவங்க உயிரைக்காப்பாத்த தன்னையே தியாகம் பண்ணினார். மேலும், முக்கியமா கவனிச்சுக்கங்க: சர்ச்சிலிருந்தவர்களை விடுவிச்சார்.''

''ஆக, ஒரு ரகசிய நினைவுச்சின்னம் உருவாக்க முடிவாச்சா?''

''தட்ஸ் ரைட். அதை ஏற்பாடு பண்ணுவது சுலபமா இருந்தது. ஓல்ட் டெட் டர்னர், ஒரு ஓய்வுபெற்ற நினைவுச் சின்ன மேஸ்திரி. அது அமைக்கப்பட்டது. என்னால அர்ப்பணிக்கப்பட்டது. அதே சமயம் சராசரி மனிதர்களின் கண்களுக்குப் படாமல் அப்படியே மறைக்கவும் பட்டது. அதுல எதுவும் எழுதப்படலே, கவனிச்சீங்களா! அந்த ஆசாமி ப்ரஸ்டன் இங்கே இருக்கார். ஆனா அவர் நினைவுச் சின்னத்துல சேர்க்கப்படலே.''

''நீங்க எல்லாரும் இதுக்கு ஒத்துக்கிட்டீங்க?''

அவருக்கே உரிய வறட்சியான சிரிப்பினால் சமாளித்தார். ''ஒருவகையான தனிப்பட்ட பிராயச்சித்தம்னு சொல்லிக்கலாம். ஸ்டைனர் இருந்தால், சாத்தான்களின் நடனம்னு சொல்லியிருப்பார். அன்னிக்கு அவரை நான் அத்தனை வெறுத்தேன். நானேகூட அவரை கொன்னிருக்கலாம். யெஸ்.''

''எதுக்காக அப்படி?'' கேட்டேன் நான். ''உங்க காலை ஊனமாக்கியது ஒரு ஜெர்மன் குண்டு என்பதாலா?''

''அப்படித்தான் நினைத்திருந்தேன் - ஒருநாள் நான் ஆண்டவனின் முன் மண்டியிட்டு உண்மையை, சத்தியத்தை,

தர்மத்தை எதிர்கொள்ளும் திராணியை எனக்குதான்னு வேண்டிக் கேட்கும் வரை.''

''ஜோன்னா க்ரே?'' நான் மிருதுவாய் எடுத்துக் கொடுத்தேன்.

அவர் முகம் முழுதும் திரையொன்று படர்ந்தது. அவருடைய முகபாவத்தை என்னால் கண்கொண்டு பார்க்க முடியவில்லை. ''யெஸ். உங்க கணிப்பு சரி. நான் ஜோன்னா க்ரேயை பூஜித்தேன். ஓ, இது செக்ஸ் சம்பந்தப்பட்ட எந்த சஷைப்பித்தும் கிடையாது. என் வாழ்க்கையிலே இப்படியொரு ஒண்டர்ஃபுல் பெண்மணியை நான் பார்த்ததே கிடையாது. இதுல அவங்களுடைய உண்மையான பாத்திரம் என்ன என்பதை நான் அறிந்தபோது அடைந்த அதிர்ச்சியை விவரிக்க வார்த்தைகளே கிடையாது.''

''எதனால நீங்க ஸ்டைனரை துச்சமா நினைச்சீங்க?''

''சூழ்நிலையின் மனோநிலையாலேன்னு சொல்லலாம்.'' அவர் பெருமூச்செறிந்தார். ''ரொம்ப காலங்களுக்கு முன்னால. 1943ல உங்க வயசு என்ன? பனிரெண்டு, பதின்மூன்று? அக்காலகட்டம் எப்படியாப்பட்டதுனு உங்களால நினைவுபடுத்த முடியுதா?''

''நாட் ரியலி-நீங்க குறிப்பிடும் வகைல, நோ.''

''போர் முடியாத அளவுக்கு முற்றுப் பெறாமலே போனதால, மக்கள் வெறுத்திருந்தாங்க. ஸ்டைனர் மற்றும் அவருடைய சகாக்களின் கதை மற்றும் இங்கு என்னவெல்லாம் நடந்தது என்பது ட்ற்றிய படைப்பு எழுதப்பட்டு வெளியானால், அது நாட்டின் இறையாண்மையின் மீது என்ன மாதிரியான ஒரு பேரிடியை உண்டாக்கும்னு உங்களால சிந்திச்சுப் பார்க்க முடியலியா? ஜெர்மானிய பாராசூட் வீரர்கள் இங்கிலாந்துக்குள் நுழைந்து ப்ரைம் மினிஸ்டரையே சூறையாடலாம் என்பது தெரிந்தால்?''

''துப்பாக்கியின் ட்ரிக்கரை அழுத்தி தலையைத் துளைப்பதைப் போல ஆகிவிடும்.''

ஒப்புதலாய் அவர் தலையசைத்தார். ''இன்னும் பிரசுரிச்சுத்தான் தீரணும்னு நீங்க நினைக்கிறீங்களா?''

''ஏன் அப்படி பண்ணக்கூடாது? எனக்கு காரணம் ஒண்ணும் தெரியல...''

''சாட்சி? ஒரு கல்வெட்டு? இப்படித்தான் நடந்ததுனு உங்களுக்கு சொல்ல ஒரு சாட்சியம்? நடந்த சம்பவங்களில் ஏதேனும் ஒன்றுக்காவது உங்களாலே உறுதியான ஆவணம் தரமுடியுமா? அரசு சார்ந்த நிரூபணம்?''

''கிடையாது'' என்றேன் நான். ''ஆனா நான் பலருடன் பேசினேனே. அவங்க அத்தனை பேரும் ஒட்டுமொத்தமா சொன்னதிலிருந்துதான், ஏற்றுக்கொள்ளும்படியான ஒரு ஒட்டுமொத்த கதை கிடைச்சது.''

''இருக்கலாம்'' என்று பலஹீனமாய் சிரித்தார் அவர். ''ஒரு முக்கியமான பாயிண்ட்டை மட்டும் நீங்க மிஸ் பண்ணாம இருந்திருந்தால்...''

''அது என்ன?''

''கடைசி போர் பற்றி சிறந்த 24 புத்தகங்கள் வந்திருக்கு. அவற்றில், ஏதேனும் ஒன்றை படிங்க. நம் கையிலிருக்கும் அந்த வார இறுதி நாட்களில் சர்ச்சில் உண்மையா என்னதான் பண்ணிக்கிட்டிருந்தார் என்பதை பற்றி குறிப்பா தேடியெடுத்து படிங்க. அதற்கான விடை, ரொம்ப சிம்பிள். ரொம்பவும் வெளிப்படையானதும்.''

''ஆல் ரைட். நீங்களே அதை சொல்லுங்க.''

"HMS renown கப்பல்ல டெஹ்ரான்ல நடைபெற்ற ஒரு கருத்தரங்குக்கு போக அவர் தயாராகிக்கிட்டிருந்தார். வழில அல்ஜீரியாவுக்கு வர அழைக்கப்பட்டிருந்தார். என்

*நினைவுக்கு உட்பட்டு, நவம்பர் 17 அன்று மால்ட்டா வந்து சேர்ந்திருக்கார்.''*

*அங்கு எல்லாம் சட்டென்று அமைதியாகிப் போயின. ''அப்ப அது யார்?'' கேட்டேன் நான்.*

*''அவர் பேர் ஜார்ஜ் ஹேராவார்ட் ஃபாஸ்டர். அவரோட துறைல பொதுவா க்ரேட் ஃபாஸ்டர்னு அறியப்பட்டவர்.''*

*''அவரோட துறை?''*

*''மேடை. அவர் ஒரு மேடை நடிகர். இசை எனும் இயக்கத்துடன் கலந்தவர். அவர் பிரதம மந்திரியைப் போல அப்படியே அச்சு அசலா நடிச்சுக் காட்டுபவர் மட்டுமல்ல. அவரைப் போலவே இருப்பார். அச்செடுத்தாற்போல. ரசிகர்கள் அவரை விரும்பினாங்க.''*

*''இவரை உளவுத்துறை தனக்குள் இழுத்ததா?''*

*''அவ்வப்போது. அன்னிக்கு ராத்திரி தன்னுடைய திறமை முழுவதையும் வெளிப்படுத்தினார் இவர். கார்கோரனுக்கு மட்டுமே உண்மை தெரியும்.''*

*''ஆல் ரைட்'' என்றேன் நான். ''இப்ப ஃபாஸ்டர் எங்கிருக்கார்?''*

*''நூற்றியெட்டு பேர்களுடன் சேர்த்து, கொல்லப்பட்டு விட்டார். ஒரு குண்டு திரையரங்கில் வந்து விழுந்து, அத்தனை அருமை உயிர்களையும் குடிச்சிடுச்சு. பிப்ரவரி 1942 ல். ஆக, எல்லாமே வீணாப் போயிருக்கு.''*

தொடர் இருமல் அவரை ஆட்கொண்டது. அவருடைய உடம்பே அப்போது குலுங்கியது. கதவு திறக்கப்பட்டு ஒரு சேவகி உள்ளே வந்தார். அவர் முன் குனிந்து முணுமுணுத்தார். ''ஐ ஆம் ஸாரி'' என்றார் வெரேக்கர். ''ரொம்ப பேசிட்டோம். நான் ஓய்வெடுக்கணும். அழைப்புக்கு வந்து இடைவெளிகளை நிரப்பினதுக்கு ரொம்ப நன்றி.''

அவர் மறுபடியும் இடைவிடாது இரும ஆரம்பிக்க, எத்தனை விரைவாய் முடியுமோ அத்தனை விரைவாய் வெளியேறி விட்டேன் நான். என்னை வழியனுப்பி ஃபாதர் டாமியனிடம், "அவர் நிலைமை மோசமானால்..." என்று தயங்கிய நான் சொன்னேன்: "நான் என்ன சொல்ல வரேன்னு உங்களுக்கு புரிஞ்சிருக்கும்... உடனே உங்ககிட்டேயிருந்து தக்வல் வந்தால் சந்தோஷப்படுவேன்."

நான் ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்துக்கொண்டு கல்லறையின் கேட்டருகே இருந்த ஒரு சுவரில் சாய்ந்து நின்றுகொண்டேன். கேட்டவற்றின் நம்பகத்தன்மையை நான் பரிசோதிப்பேன். ஆனால் வெரேக்கர் உண்மையைத் தான் பேசினார். இதில் எனக்கு கிஞ்சித்தும் சந்தேகம் கிடையாது. அவ்வுண்மைகள் எதையாவது மாற்றுகின்றனவா? நான், ஸ்டைனர் வந்து நின்ற அந்த முன்பகுதியை இப்போது நிமிர்ந்து பார்த்தேன்... அவர் கேனை எதிர்த்தது, மெல்த்தாம் ஹவுஸ் டெரஸில் முன்னேறியது, நிறைவாய் அந்த ஆபத்தான முடிவு... ஒருவேளை அவர் அந்த துப்பாக்கியின் ட்ரிக்கரை அழுத்தி குண்டினை வெளியிட்டிருந்தாலும், அதனால் எந்த பிரயோஜனமும் விளைந்திருக்கப் போவதில்லை.

ஆஹ்... கடைசியாய், அந்த துர்பாக்கியமான இரவில் அற்புதமாய் நடித்த அந்த மனிதரை பற்றி மேலும் உயர்த்திப் பேச எனக்கு ஒரு வார்த்தைகூட கிடைக்க வில்லை என்பதே, இந்த நீண்ட ஆராய்ச்சியின் முடிவு.

யார் என்ன சொன்னாலும், இவர் ஒரு அற்புதமான ராணுவத்தான். தைரியமான வீரன். அப்படியே முடியட்டும். திரும்பிய நான் மழையில் நனைந்தபடி நடக்க ஆரம்பித்தேன்.

**(முடிந்தது)**



TOP SECRET

நவம்பர் 6, 1943
சனிக்கிழமை.

சரியாய் பகல் ஒரு மணிக்கு, ஜெர்மனியின் ராணுவத் தலைமைக்கு ஒரு சிறு தகவல் வந்து சேர்ந்தது.
'கழுகு, தரையிறங்கிவிட்டது'.

எதிரி நாடுகளுக்குள் பாராசூட் கொண்டு இறங்கி சண்டை செய்ய பழக்கப்படுத்தப்பட்ட ஒரு ஜெர்மானிய வீரர்கள் குழு கர்னல் ஸ்டைனர் தலைமையில் இங்கிலாந்து நாட்டுக்குள் பத்திரமாக தரையிறங்கி விட்டது என்பதே இதற்கு அர்த்தம்.

கடற்கரையோரமாய் வார இறுதி நாட்களை அமைதியாக கழித்துக் கொண்டிருக்கும் இங்கிலாந்து பிரதமர் வின்ஸ்டன் சர்ச்சிலை ஜெர்மனிக்கு கடத்திக்கொண்டு செல்ல, ரகசியத் திட்டத்துடன் வந்து இறங்கிய கூட்டமாகும்.

நாம் மறந்துபோன, ஆச்சரியமிக்க ராணுவ ரகசியங்கள் மற்றும் உலகப் போரின் சரித்திர சம்பவங்களின் பின்னணியில் எழுதப்பட்ட இந்த நாவல் மீண்டுமொருமுறை உங்களை 1943க்கே அழைத்துச்செல்லும்.

இந்த பரபரப்பான உண்மை நிகழ்வுகளை அடிப்படையாகக் கொண்டு எடுக்கப்பட்ட ஆங்கிலத் திரைப்படம் மிகப் பெரிய வரவேற்பை பெற்றது.

இப்போது அதே ராணுவ நாட்களின் பரபரப்பு ...
புத்தக வடிவில்...உங்கள் கைகளில்...



கதாபதி


ISBN 978-81-8402-670-2